# சமுதாயவியல் நோக்கில்
# அறிஞர் அண்ணாவின் படைப்புகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**வ.பாவரசன்**

பதிவு எண் : 0830

நெறியாளர்

**முனைவர் சு.இராசாராம்**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தரமதிப்பீட்டுக்குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 3.64 தரப்புள்ளிகளுடன் ‘A+’ தகுதி பெற்றது)

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**

**அக்டோபர்- 2017**

# சமுதாயவியல் நோக்கில்
# அறிஞர் அண்ணாவின் படைப்புகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**வ.பாவரசன்**

பதிவு எண் : 0830

நெறியாளர்

**முனைவர் சு.இராசாராம்**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தரமதிப்பீட்டுக்குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 3.64 தரப்புள்ளிகளுடன் 'A+' தகுதி பெற்றது)

**காரைக்குடி - 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**


**அக்டோபர் - 2017**

**முனைவர் சு.இராசாராம்**

பேராசிரியர்,

தமிழ்த்துறை,

அழகப்பா பல்கலைக்கழகம்,

காரைக்குடி - 3

நாள் :

## நெறியாளர் சான்றிதழ்

"**சமுதாயவியல் நோக்கில் அறிஞர் அண்ணாவின் படைப்புகள்**" என்னும் தலைப்பில் வ.பாவரசன் அவர்கள் முழுநேர முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அவர் அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக இதற்கு முன்வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

**(சு.இராசாராம்)**

நெறியாளர்

**வ.பாவரசன்**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
தமிழ்த்துறை,
காரைக்குடி - 3

நாள் :

## ஆய்வாளர் உறுதிமொழி

"**சமுதாயவியல் நோக்கில் அறிஞர் அண்ணாவின் படைப்புகள்**" என்னும் தலைப்பில் அழகப்பா பல்கலைக்கழகத்தில் எழுதப்பெற்ற இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியால் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கின்றேன்.

**(வ.பாவரசன்)**
ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்

**முனைவர் சு.இராசாராம்**
பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 3

# நன்றியுரை

"**சமுதாயவியல் நோக்கில் அறிஞர் அண்ணாவின் படைப்புகள்**" என்னும் தலைப்பில் முனைவர் (பி.எச்.டி.,) பட்டத்திற்கு ஆய்வு செய்ய வாய்ப்பாக அமைந்த அழகப்பா பல்கலைக் கழகத்திற்கும் வள்ளல் அழகப்பருக்கும், இவ்வாய்விற்கு அனுமதி அளித்த, துறைத்தலைவர் **முனைவர் மு.பாண்டி** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அழகப்பா பல்கலைக்கழகம் அறிஞர் அண்ணா ஆய்வு இருக்கை நிதி நல்கையின்படி முனைவர் பட்டம் பெற என்னைத் தேர்ந்தெடுத்த அறிஞர் அண்ணா ஆய்வு இருக்கை ஒருங்கிணைப்பாளரும், என் ஆய்வுக்கு வழிகாட்டியாக இருந்து, இவ்வாய்வேடு சிறப்பாக அமையத் துணை புரிந்து ஆய்வு நெறிகளை வழிப்படுத்தி உதவிய எனது ஆய்வு நெறியாளருமான **முனைவர் சு.இராசாராம்** அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வாய்வுக்குத் தேவையான ஆலோசனைகளை வழங்கி எனக்கு ஊக்கம் அளித்த ஞானாலயா கிருஷ்ணமூர்த்தி ஐயா அவர்களுக்கும், தஞ்சை அறிஞர் அண்ணா பேரவையின் செயலாளர் திரு.செம்பியன் அவர்களுக்கும் என் நன்றி என்றுமுள.

ஆய்வுத் தொடர்பாக எனக்குப் பல நூல்களையும் தந்து சிறப்பான வழிமுறைகளைக் காட்டிய அனைத்துப் பேராசிரியர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்த ஆய்விற்குத் தேவையான நூல்களை வழங்கிய நம் பல்கலைக்கழக நூலகத்திற்கும் என் நன்றி.

ஆய்விற்குப் பல்வேறு வகையில் உதவி புரிந்த முனைவர் பட்ட ஆய்வாளர்களுக்கும் எனது தோழர் தோழிகளுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன். இவ்வாய்வேட்டினைச் சிறப்பாக நூற்கட்டு செய்த அச்சகத்திற்கும் இவ்வாய்வேடு சிறப்பாக அமையக் காரணமாக இருந்த அனைவருக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| ப.ஆ | - | பதிப்பாசிரியர் |
| தொ.ஆ | - | தொகுப்பாசிரியர் |
| மொ.ஆ | - | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| தொ | - | தொகுதி |
| மு.ப | - | முதற்பதிப்பு |
| ம.ப | - | மறுபதிப்பு |
| இ.ப | - | இரண்டாம் பதிப்பு |
| மூ.ப | - | மூன்றாம் பதிப்பு |
| குறள் | - | திருக்குறள் |
| புறம் | - | புறநானூறு |
| அகம் | - | அகநானூறு |
| மேலது | - | மேலே குறிப்பிடப்பட்டது |

# பொருளடக்கம்

# முன்னுரை

காலந்தோறும் பல்வேறு எழுத்தாளர்கள் தங்கள் எண்ணங்களையும் சிந்தனைகளையும் தமது படைப்பின் வாயிலாக வெளிப்படுத்தி வருகின்றனர். அவ்வகையில் இருபதாம் நூற்றாண்டின் தலைசிறந்த இலக்கியவாதியாகவும், அரசியல்வாதியாகவும் திகழ்ந்து தமிழுக்கும் தமிழருக்கும் தமிழ் நாட்டுக்கும் அரும்பெரும் தொண்டாற்றிப் பேரறிஞராக வலம் வந்தவர் அறிஞர் அண்ணா ஆவார். இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்களான சிறுகதை, புதினம், நாடகம், திரைக்கதை, வசனம் முதலிய கதை தழுவிய படைப்புகளிலும், கவிதைகள், கடிதங்கள், கட்டுரைகள் முதலிய அனைத்துத் தளங்களிலும் தடம் பதித்தவர் அறிஞர் அண்ணா. அவரது படைப்புகள் அனைத்தும் முற்போக்குச் சிந்தனையுடன் சமுதாயத்தைச் சீர்தூக்குவதாகவும், சமுதாயத்தை மேம்படுத்துவதாகவும், மாற்றங்களைப் பதிவு செய்வதாகவும் அமைந்தவையாகும். அவ்வகையில் அறிஞர் அண்ணாவின் படைப்புகளைச் சமுதாயவியல் நோக்கில் ஆராயும் முகமாக இவ்வாய்வு அமைகிறது.

## ஆய்வுத்தலைப்பு

**“சமுதாயவியல் நோக்கில் அறிஞர் அண்ணாவின் படைப்புகள்”** என்பது ஆய்வின் தலைப்பாகும்.

## ஆய்வு நோக்கம்

தற்காலப் படைப்புகளாகிய சிறுகதை, நாடகம், புதினம், கவிதை, கட்டுரை இலக்கியங்கள் அனைத்தும் மனித வாழ்வின் நிகழ்வுகளையும், சமுதாயச் சீர்கேடுகளையும், அவலங்களையும் உயிரோட்டத்துடன் வெளிக்கொணர்வதாய் விளங்குகின்றன. அவ்வகையில் பேரறிஞர் அண்ணாவின் படைப்பாற்றல், அவரது சமுதாயப் பார்வை, அவரது படைப்புகளில் இடம்பெற்றுள்ள சமுதாயக் கூறுகள் ஆகியவற்றை ஆராய்ந்து அண்ணாவின் சமுதாயக் கொள்கைகளை வெளிப்படுத்துவது இவ்வாய்வின் நோக்கங்களாகும்.

## கருதுகோள்

இருபதாம் நூற்றாண்டின் சமுதாயப் புரட்சியாளர்களுள் ஒருவராக விளங்கியவர் தந்தை பெரியார். அவர் வலியுறுத்திய பகுத்தறிவு, சுயமரியாதைக் கொள்கைகள், சமுதாய முன்னேற்றக் கருத்துக்கள், திராவிட இயக்கக் கொள்கைகள் போன்றவற்றை வேகமாக மக்களிடத்திலும் அன்றைய இளைய சமுதாயத்தினரிடமும் கொண்டு சேர்த்த பெருமைக்குரியவர் பேரறிஞர் அண்ணா ஆவார். தமிழ்ச் சமுதாய மறுமலர்ச்சியில் பெரியாருக்கு அடுத்து, பெரும்பங்கு வகித்தவர் பேரறிஞர் அண்ணா. தமிழ்ச் சமுதாயத்தையும் அண்ணாவையும் பிரித்து எண்ணுதற்கு இடமில்லாதவாறு அவரது படைப்புகள் திகழ்கின்றன. சமுதாய முன்னேற்றத்தையே அடிப்படைக் கொள்கையாகக் கொண்ட பெரியாரின்கீழ் செயல்பட்ட அண்ணாவின் படைப்புகள் சித்திரிக்கும் சமுதாயம் அவர்காலச் சமுதாயத்தைப் பிரதிபலிக்கும் என்பதோடு, சமுதாயச் சீர்கேடுகளை அகற்றும் கருத்துக்கள் அடங்கிய பகுத்தறிவுக் கருவூலமாக விளங்கக்கூடும் என்பது இவ்வாய்வின் கருதுகோள் ஆகும்.

## ஆய்வு எல்லை

அறிஞர் அண்ணாவின் புனைகதைகளில் சமுதாயத்தைப் பிரதிபலிப்பனவாகவும், சமுதாயச் சிக்கல்கள், சமுதாய மாற்றங்கள் ஆகியவற்றைப் படம்பிடித்துக் காட்டுவனவாயும், சமுதாயக் கொள்கைகளை விளக்குவனவாயும் அமைகின்ற படைப்புகள் இவ்வாய்வின் எல்லையாகும்.

## ஆய்வு அணுகுமுறை

படைப்பாளரின் படைப்புகளைத் தொகுத்தும், பகுத்தும் விளக்கும் வகையில் விளக்கவியல் அணுகுமுறையும், அவர் காலச் சூழலை எடுத்தியம்பும் வகையில் வரலாற்றியல் அணுகுமுறையும், படைப்பாளரின் படைப்பாக்கச் சிறப்புகளை விளக்கும் நிலையில் அழகியல் அணுகுமுறையும், படைப்பாளரின் சமுதாயப் பார்வையை எடுத்தியம்பும் நிலையில் சமுதாயவியல் அணுகுமுறையும் இவ்வாய்வின் அணுகுமுறைகளாக மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு மூலம்

அறிஞர் அண்ணாவின் புனைகதைகளான சிறுகதை, புதினம், நாடகம் ஆகியவை முதன்மை ஆதாரங்களாகவும், அவரின் பிற படைப்புகள், அவரது படைப்புகள் தொடர்பாக வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாகவும் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வுப்பகுப்பு

**"சமுதாயவியல் நோக்கில் அறிஞர் அண்ணாவின் படைப்புகள்"** என்னும் தலைப்பிலான இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவையாவன,

1. அறிஞர் அண்ணாவின் இலக்கியப் படைப்பாக்கச் சூழலும் பின்புலமும்.
2. அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் சமுதாய மதிப்புகள்.
3. அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் சமுதாயச் சிக்கல்கள்.
4. அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் சமுதாய மாற்றங்கள்.
5. அறிஞர்அண்ணாவின் படைப்புகளில் சமுதாயக் கொள்கைகள்.

என்பனவாகும்.

## இயல் ஒன்று:

**"அறிஞர் அண்ணாவின் இலக்கியப் படைப்பாக்கச் சூழலும் பின்புலமும்"** என்னும் முதலாம் இயலில் அவரது படைப்புகளின் காலப்பின்னணியும், படைப்பாளரின் காலப் பின்புலமும் ஆராயப்பெற்றுள்ளன. அக்காலக்கட்டத்தில் நிலவிய சாதிய ஏற்றத்தாழ்வு, தீண்டாமை, கல்வி நிலை, பெண்கள் நிலை, குழந்தை மணம், கைம்மை நிலை, பணி வாய்ப்பு போன்ற சமுதாயச் சூழல்கள் ஆராயப்பட்டுள்ளன. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோற்றுவிக்கப்பட்ட பிராமணரல்லாதார் சங்கம் தென்னிந்திய நல உரிமைச் சங்கமாக மாறி, பின்னர் நீதிக்கட்சி என்ற பெயரில் சென்னை மாகாண ஆட்சியைப் பிடித்தது முதல் அண்ணா இறப்பு வரையிலும் நிகழ்ந்த அரசியல் சூழல்கள் விளக்கப்பட்டுள்ளன. இக்கால

இலக்கியங்களில் சிறுகதை, புதினம், நாடகம் ஆகியவற்றின் வளர்ச்சி பற்றியும் இவ்விலக்கியங்களில் அறிஞர் அண்ணாவின் பங்கு பற்றியும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

## இயல் இரண்டு:

**"அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் சமுதாய மதிப்புகள்"** என்னும் இரண்டாம் இயலில் அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் காணப்படும் சமுதாய மதிப்புகள் விளக்கப்பட்டுள்ளன. அவ்வகையில் அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் திருமணம், ஒழுக்கம், நேர்மை, கடமை, நாட்டுப்பற்று, இரக்கம், கொடை ஆகியன நேர்மதிப்புகளாகக் காணப்படுகின்றன. ஊழல், திருட்டு, சூதாட்டம், மதுப்பழக்கம், கொலை, துரோகம் ஆகியன எதிர்மதிப்புகளாக உள்ளன. சாதியப்பாகுபாடு, கடவுள், காதல், கலப்புமணம், கைம்பெண் திருமணம், பொருந்தா மணம், பலதாரமுறை, வைப்பாட்டிமுறை, தாசிமுறை ஆகியன மதிப்புப் போராட்டங்களாகவும், இரட்டை மனமுடைய மனிதர்களின் செயல்பாடுகள் இரட்டை மதிப்புகளாகவும், மூட நம்பிக்கைகள், மடாதிபதிகளின் போலித்தன்மை, உயிர்ப்பலியிடுதல் ஆகியன மதிப்புப் போலிகளாகவும் காணப்படுகின்றன. காலங்காலமாக சமுதாய மதிப்புகளாகக் கருதப்பட்டு வரும் மதிப்புகளை மாற்றி புதிய சமுதாய மதிப்புகளை உருவாக்கும் வகையிலான அறிஞர் அண்ணாவின் சிந்தனைகள் ஆராயப்பெற்றுள்ளன.

## இயல் மூன்று:

**"அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் சமுதாயச் சிக்கல்கள்"** என்னும் மூன்றாம் இயலில் தனிமனிதனுக்கு உண்டாகும் சிக்கல்கள், சமயம் ஏற்படுத்தும் சிக்கல்கள், போலிச் சாமியார்களால் உண்டாகும் சிக்கல்கள், சாதி, தீண்டாமை போன்றவை சமுதாயத்தில் ஏற்படுத்தும் சிக்கல்கள், அரசியல் மோசடி, முதலாளித்துவம், ஏழை பணக்காரன் நிலை, வறுமை, மூடநம்பிக்கைகள், ஆணாதிக்கம், பெண்ணியச் சிக்கல்களான வரதட்சணைக் கொடுமை, பொருந்தாமணம், விலைமகளிர் அவலம், கைம்பெண் கொடுமை, கல்வியில் உள்ள சிக்கல்கள், சட்டத்தில் உள்ள சிக்கல்கள், நீதித்துறையில் இருக்கும் சிக்கல்கள், ஏமாற்றுதல், சூதாட்டம், போலி விளம்பரம், சோதிடம், முதியோரின் சிக்கல், உளவியல் சிக்கல் போன்ற சமுதாயச் சிக்கல்கள் விளக்கப்பட்டுள்ளன. இத்தகைய சிக்கல்களுக்கு அறிஞர் அண்ணா தம் படைப்புகளில் சுட்டிக்காட்டும் தீர்வுகளும் கண்டறியப்பட்டுள்ளன.

## இயல் நான்கு:

**"அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் சமுதாய மாற்றங்கள்"** என்னும் நான்காம் இயலில் அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் காணப்படும் சமுதாய மாற்றங்கள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. சமுதாய மாற்றத்திற்கு எதிராக இருக்கும் தடைகள், சமய விழிப்புணர்வு, சாதி ஒழிப்பு, கலப்பு மணம், பகுத்தறிவுச் சிந்தனைகள், மூடநம்பிக்கை ஒழித்தல், போலிச் சாமியார்களை இனங்கண்டறிதல், மக்கள் புரட்சி, முதலாளித்துவம் ஒழிதல், அரசியல் மாற்றங்கள், நீதித்துறையில் மாற்றங்கள், பெண் விழிப்புணர்வு, சொத்துரிமை, கைம்பெண் மறுவாழ்வு, கைம்பெண் மறுமணம், விலைமகளிர் மறுவாழ்வு, சுயமரியாதைத் திருமணம் போன்ற சமுதாய மாற்றங்கள் ஆராயப்பட்டுள்ளன.

## இயல் ஐந்து:

**"அறிஞர் அண்ணாவின் சமுதாயக் கொள்கைகள்"** என்னும் ஐந்தாம் இயலில் அண்ணாவின் படைப்புகளின் வழி அவரது சமுதாயப் பார்வையை ஆராய்ந்து அதில் இடம்பெற்றுள்ள சமுதாயக் கொள்கைகள் விளக்கப்பட்டுள்ளன. சமுதாயத்தில் சாதிய, பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை அகற்றுதல், ஆண் பெண் வேறுபாடுகளைக் களைதல், பெண் விடுதலை, கைம்மை மறுமணம், வரதட்சணை ஒழிப்பு, விபச்சார ஒழிப்பு, மூடநம்பிக்கை ஒழிப்பு, கடவுள் மறுப்பு, காங்கிரசு எதிர்ப்பு, திராவிடப் பற்று, ஆரிய எதிர்ப்பு, சாதி எதிர்ப்பு, நாட்டு விடுதலை, பொருந்தா மணம் எதிர்ப்பு, தமிழ்மொழிப்பற்று, இந்தி எதிர்ப்பு, சமத்துவம் காணுதல் போன்ற அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் காணப்படும் அவரது கொள்கைகள் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

ஆய்வில் கண்ட முடிவுகள் முடிவுரையில் இடம்பெற்றுள்ளன. ஆய்வுக்குத் துணைநின்ற நூல்கள், துணைநூற்பட்டியலில் அகரவரிசைப்படுத்தப்பட்டுள்ளன. அறிஞர் அண்ணாவின் வாழ்க்கைக் குறிப்புகள், அவரின் படைப்புகள் ஆகியன பின்னிணைப்பாக இடம்பெற்றுள்ளன.

# இயல் - 1

# அறிஞர் அண்ணாவின் இலக்கியப் படைப்பாக்கச் சூழலும் பின்புலமும்

ஒரு சமுதாயச் சிந்தனையாளனின் சிந்தனை வன்மைக்கும், வெளிப்பாட்டு மென்மைக்கும் அவன் வாழும் சமுதாயத்தின் நிலை, காலம், சூழல், மனஉணர்வு, வரலாறு, கல்வி, இயக்கங்கள் ஆகியவை காரணங்களாக அமைகின்றன. இவை மட்டுமின்றி மொழி, பண்பாடு, இலக்கியங்கள் என்பனவும் ஒரு சமுதாயச் சிந்தனையாளன் இன எழுச்சிக்கு வாயிலாக அமையும் என்பதனை அறிஞர் அண்ணா அவர்களின் பொதுவாழ்வுக் கோட்பாடுகள் உணர்த்துகின்றன. தமிழ்ச் சமுதாயத்தின் நிலையும், நீதிக்கட்சியின் இனநலப் பணியும், பெரியாரின் பகுத்தறிவுச் சிந்தனையும், மேனாட்டுக் கல்வியால் பெற்ற உலகப் பார்வையும் அண்ணாவின் இலக்கியப் படைப்புகளுக்குப் பின்னணியாகவும், வடிவமைத்துக் கொடுத்த வாயில்களாகவும் அமைந்துள்ளன. அண்ணா பங்கேற்ற இயக்கங்களின் வரலாறு என்பது அண்ணாவின் சிந்தனைப் போக்கின் அடித்தளங்கள் மட்டுமல்ல; படிநிலைகளும் ஆகும். அண்ணாவின் இயக்க வரலாறும், எழுத்தின் வரலாறும் ஒன்றிணைந்தவை. நீதிக்கட்சி, தன்மான இயக்கம், திராவிடர் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம் போன்ற இயக்கங்களின் நோக்கங்கள், கொள்கைகள் ஆகியவற்றின் எதிரொலிகளாகவே அவரின் படைப்பிலக்கியங்கள் காணப்படுகின்றன.

'முப்பது கோடி ஜனங்களில் சங்கம் முழுமைக்கும் பொது உடைமை, ஒப்பிலாத சமுதாயம் உலகுக்கோர் புதுமை' என்று பாரதி இந்திய நாடு சமத்துவ நாடாக விளங்க வேண்டும் என்ற வேட்கையில் பாடினார். ஆனால் அவர் பிறந்த இந்நாட்டில் சமத்துவம் நிகழவில்லை. இந்து சமயம் உருவாக்கிய சாதியின் பெயரால் ஏற்றத்தாழ்வுகளும் கொடுமைகளும் அடக்குமுறைகளும் அதிகமாக நடைபெற்றன. பார்ப்பனரல்லாத பெரும்பான்மை மக்கள் சமுதாயவியல், பொருளியல், வாழ்வியல் ஆகிய மூன்று நிலைகளிலும் தாழ்ந்து கிடந்தனர். அவர்களுடைய நல்வாழ்வுக்குப் போராடியது நீதிக்கட்சி என்பதற்கு மாற்றுக்கருத்து இல்லை. நீண்ட நெடிய வரலாற்றைக் கொண்டது நீதிக்கட்சியின் வரலாறு. அது பெரியாரால் மேலும் பேணப்பட்டு சமுதாய விழிப்புணர்வு இயக்கமாகத் தன்னை ஆக்கிக்கொண்டது. அதில் இருந்து பிரிந்து சென்று அறிஞர் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் என்ற இயக்கத்தைத் தோற்றுவித்து தமிழகத்தின் ஆட்சியைக் கைப்பற்றியது போன்ற இருபதாம் நூற்றாண்டில் நடைபெற்ற அரசியல் சமுதாய விழிப்புணர்வு நிகழ்வுகளை விளக்குவதும் அவற்றின் அடிப்படையில் அறிஞர் அண்ணா அவர்களின் காலச்சூழலை ஆராய்வதும் இவ்வியலின் நோக்கமாகும்.

## சமுதாயச் சூழல்

மொழி, இனம், நாடு இவற்றால் தனித்துக் காணப்படும் தமிழகம் தன்னாட்சி எனும் நிலையில் இயங்கி வந்ததைச் சங்க இலக்கியம் காட்டுகிறது. பிற இனத்தவரின் கலப்பு அக்காலத்து அதிகமாக இல்லை. தமிழக வரலாற்றில் களப்பிரர் காலத்திலிருந்தே பிற இனத்தவர் கலப்பு, குறிப்பாக ஆரியர் கலப்பு வேரோட முனைந்துள்ளது. ஆரியர் தென்னாட்டில் எப்பொழுது புகுந்தனர் எனத் தெளிவாகக் கூறமுடியாது என்றாலும் காப்பியக் காலங்களிலேயே அவர்கள் தென்னாட்டில் ஆதிக்கம் பெற்றுவிட்டனர் என்பது தெளிவு. அவர்கள் தென்னாட்டில் இடம்பெற்றது முதல் ஆரிய சித்தாந்தங்களையும் பரப்பத்

தொடங்கினார்கள். பல்லவ, சோழ அரசர்கள் கலை, இறை உணர்வுகளுக்கே தலைமை இடம் தந்ததால் கோயில்கள் பெருகின. ஆரியர் செல்வாக்குப் பெற்றனர். கோயில்களில் தலைமை இடம்பெற்றனர். அதனால் தமிழ்ச் சமுதாயத்திலும் தலைமை இடம்பெற்றனர். சிவநெறி, மால்நெறி என்னும் இரண்டும் இணைந்து இந்துநெறி தோற்றம் பெற்றது. இந்து சமயம் பிற சமுதாயத்தினரின் செல்வாக்கு வேரூன்ற வாயிலாக அமைந்துவிட்டது. தொடர்ந்து விசயநகர, நாயக்கர் காலங்களிலும் பிராமணர்களே தலைமை ஏற்றனர். தமிழகத்தில் முகம்மதியர் நுழைவு மதக்கலப்புக்கு வழி வகுத்ததே தவிர, ஆரியர் பெற்றிருந்த செல்வாக்குக்குக் கேடு ஒன்றையும் விளைவிக்கவில்லை. மக்களை அடிமைப்படுத்த சமயத்தை மிகத் தந்திரமாகப் பயன்படுத்திக் கொண்டனர். பிராமணர்களைப் போற்றுவதும் அவர்களுக்குத் தானங்கள் வழங்கித் தொண்டு செய்வதுமே சிறந்த மோட்சத்திற்கான வழியெனப் பெருநில மன்னர்களும், குறுநில மன்னர்களும் நம்பினர். பிராமணர்களால் நம்ப வைக்கப்பட்டனர் என்பதே உண்மை. இதனால் மன்னர்கள் இவர்களுக்கு மானியங்களாக நிலங்களை வழங்கினர். மன்னர்களால் போற்றப்பட்டவர்களைப் பாமர மக்கள் போற்றியதில் வியப்பு ஒன்றும் இல்லை. ஆகவே பிராமணரைத் தென்னாட்டில் தேவரைப் போலப் போற்றினர். தமிழ் மூவேந்தர்கள் மறைந்து பல்லவர்கள், நாயக்கர்கள், ஆந்திரர், மராட்டியர், முகம்மதியர் போன்றோர் ஆட்சி தென்னாட்டில் தோன்றிய காலத்தும் பிராமணர் ஆதிக்கம் குறையவில்லை. மாறாக வளர்ந்து வந்து கொண்டே இருந்தது என்றே சொல்ல வேண்டும். ஆங்கிலேயர் ஆட்சி நிலைபெற்ற போது பிராமணரல்லாதாரே முதன்முதலில் செல்வாக்குப் பெற்றிருந்தனர். கிழக்கிந்தியக் கம்பெனியார் தென்னாட்டில் வர்த்தக சாலைகள் அமைத்த போது அவர்களிடம் முதன்முதல் பழகியவர்கள் பிராமணரல்லாதாரே. ஆங்கில வர்த்தகர்களின் நட்பைப் பெற்ற இவர்கள் தான் துபாஷ்களாகவும் (மொழி பெயர்ப்பாளர்), தரகர்களாகவும் செல்வாக்குப் பெற்றிருந்தனர். வர்த்தகர்களாக இருந்த ஆங்கிலேயரின் தேச நிர்வாகத்தில் பிராமணரல்லாதாரே நிர்வாக அலுவலர்களாக இருந்தனர்.

"ஆதிகாலத்தில் அரசியல் துறையில் முதலியார், நாயுடு, நாயக்கர், செட்டி, பிள்ளை போன்றவர்களே இடம் பெற்றிருந்தனர். அவ்வாறு இடம் பெற்றிருந்தவர்கள் பிற்காலத்துப் பல பிராமணச் சிறுவர்களுக்கு உதவிபுரிந்து உயரிய நிலைமைக்குக் கொண்டு வந்துமுள்ளார்கள். ஒரு நாயக்கர் தாசில்தார் உதவியால் காலஞ்சென்ற சர்.டி.முத்துசாமி ஐயர் உயர்நிலைக்கு வந்ததை ஓர் உதாரணமாகச் சொல்லலாம்."[1]

பிராமணரல்லாதார் இயல்பாகவே நிர்வாகத்திறமை பெற்று இருந்தனர். இதனால் ஆங்கிலேயரின் நன்மதிப்பை எளிதில் பெற்றனர். அதுவரையில் ஆங்கிலேயர்களை மிலேச்சர்கள் என்றும் ஆங்கிலம் மிலேச்சமொழி என்றும் கருதி ஒதுங்கியிருந்த பிராமணர்கள் அரசியலில் பிராமணரல்லாதார் ஆதிக்கமும் சமுதாய வாழ்வில் மதிப்பும் பெற்று வருவது கண்டு மேலும் ஒதுங்கியிருந்தால் தமது சமூகம் வீழ்ச்சியடைவது உறுதியென உணர்ந்தனர். அதன் காரணமாக ஆங்கிலம் கற்கவும், ஆங்கிலேயர் நட்பைப் பெறவும் அவர்கள் முன்வந்தனர். ஆங்கிலப் பயிற்சியில் தீவிரமாக ஈடுபடலாயினர். ஓதலையும் ஓதுவித்தலையும் குலத்தொழிலாகக் கொண்ட பிராமணர்கள் ஆங்கிலக் கல்விப் பயிற்சியில் வெகு விரைவாக முன்னேற்றம் அடைந்தனர். ஆங்கிலேய சர்க்காரும் அவர்களுக்குப் பல சலுகைகளைக் காட்டத் தொடங்கினார்கள். சென்னை மாகாண அரசுக் கல்லூரி தொடங்கப்பட்ட போது பிராமணர்களே ஆதிக்கம் வகித்தனர். அன்று முதல் அரசியலிலும், பொது வாழ்விலும் பிராமண ஆதிக்கம் பெருகலாயிற்று. தமது சமூக நலனைக் காத்துக்கொள்ளும் விதத்தில் சொந்தமாகப் பத்திரிகைகளைத் தொடங்கினார்கள். பிராமணரல்லாதார் நிலைமை சீர்குலையத் தொடங்கிற்று.

## சாதிய ஏற்றத்தாழ்வு

சாதி என்பது ஏற்றத்தாழ்வுகளின் பிறப்பிடமாகவும், சமத்துவத்தின் எதிரியாகவும் இச்சமுதாயத்தில் விளங்குகிறது. மனு சாத்திரத்தை வேதமாகக் கொண்ட வைதீகச் சமயத்தைச் சார்ந்தோர் சூத்திரர்களை அடிமையாக்கினர். அவ்வடிமைத் தனத்திலிருந்து அவர்கள் மீள இருக்கும் வழிகளும் வாய்ப்புகளும் மறுக்கப்பட்டன. உண்ண, உடுத்த, பேச என மனிதர்களின் அடிப்படை நிகழ்வுகளில் கூட சாதி அடிப்படையில் வேறுபாடுகள் காட்டப்பட்டன. மனிதர்களைப் பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் எனப் பிறப்பின் அடிப்படையில் நான்கு வருணங்களாகப் பிரித்து வைத்துள்ள இந்த அமைப்பில் சூத்திரர்களின் நிலை அடிமை நிலையாகவே இருந்தது. நான்கு வருணங்களாக இருந்த ஏற்றத்தாழ்வு சாதிகளாக மாறிய பின்னர் நிலைமை இன்னும் மோசமானது. ஒவ்வொரு சாதியினருக்கும் தனித்தனியான குடியிருப்புகள் தோன்றின. சாதியில் உயர்ந்த நிலையில் இருந்தவர்கள் உயர்ந்த மாளிகையுடன் வீடுகள் கட்டிக்கொண்டனர். பார்ப்பனர்களுக்கு என்று கட்டப்பட்ட குடியிருப்புகள் அக்கிரகாரங்கள் என அழைக்கப்பட்டன. தாழ்த்தப்பட்ட மக்கள் வீடுகள் அமைத்து வாழவேண்டிய இடத்தையும், வாழும் முறையினையும் மனுதருமம், "சங்கர சாதியர் ஊருக்குப் புறம்பே மலை, மலைச்சரிவு, தோப்பு, சுடுகாட்டின் பக்கம் இவ்விடங்களில் வாழ வேண்டும். அங்கே பலர்அறியத் தம் தொழில்களைச் செய்யவேண்டும். சண்டாளர்களும் (கலப்பு மணம் செய்து கொண்ட பெற்றோர்க்குப் பிறந்தவர்கள்) ஊருக்கு வெளியே வாழவேண்டும். உலோகப் பாத்திரங்களைப் பயன்படுத்தக் கூடாது. இவர்கள் தொட்ட பாத்திரங்களை எவ்வளவு கழுவினாலும் தூய்மை ஆகாது. இரும்பும் பித்தளையுமே இவர்களின் நகை. உடைந்த சட்டியிலேயே உணவுண்ண வேண்டும். எவரும் இவருக்கு நேரே உணவு பரிமாறக்கூடாது. பணியாளரை ஏவித்தான் உணவிட வேண்டும். பிணத்தின் மீது போடப்படும் ஆடைதான் இவர்கட்கு உடை. இவர்கள் தம் சாதியிலேயே பெண் கொள்ளவும் கொடுக்கவும் வேண்டும்."[2] என்கிறது. இப்படிப்பட்ட சூழலில் தான் தாழ்த்தப்பட்ட மக்கள் தங்கள் வாழ்வைக் கழித்து வந்துள்ளனர். 1901ஆம் ஆண்டு நடைபெற்ற மக்கள் கணக்கெடுப்பு அறிக்கை சென்னை மாகாணத்தில் அன்று நிலவிய சாதியம் குறித்துக் கூறுகின்றது. அதில், "ஒரு மனிதனின் சாதி அவனது வாழ்வை ஆரம்பம் முதல் இறுதிவரை பாதிக்கிறது. அவனது வேலையை இதுவே அடிக்கடி தீர்மானிக்கிறது. அதுவே அவனது இருப்பிடத்தைத் தீர்மானிக்கிறது. பல கிராமங்களில் சாதிவாரியாகத் தெருக்கள் அமைந்துள்ளன. அவனது நண்பர்கள் வட்டத்தையும், திருமணம் புரியக்கூடிய எல்லையை நிர்ணயிக்கக்கூடிய சமூக அந்தஸ்தினையும் அவனது பானத்தை, அவனது பெயரை, அவனும் அவனது குடும்பப் பெண்மணிகளும் அணியக்கூடிய உடையைக் கூட அவனது சாதி தீர்மானிக்கிறது"[3] எனக் கூறப்பட்டுள்ள தகவல் சாதி ஏற்றத்தாழ்வின் கோர முகத்தைத் தெளிவாகக் காட்டுகிறது.

## தீண்டாமை

மக்களிடையே பிரிவினையை ஏற்படுத்திய சாதி, தீண்டாமைக்கு வழிவகுத்தது. இந்துக்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பினரைத் தீண்டத்தகாதவர்களாக நடத்தினர். உயர்சாதி இந்துக்கள், தம்மைக் காட்டிலும் தாழ்ந்த சாதியினரைத் தீண்டத்தகாதவர்களாகக் கருதினர். சமுதாயத்தில் பார்ப்பனர், பார்ப்பனரல்லாதார், தீண்டத்தகாதோர் என மக்கள் பிரிந்து கிடந்தனர். பார்ப்பனரால் பார்ப்பனரல்லாதாரும் தீண்டத்தகாதவராகக் கருதப்பட்டனர். இந்து சமயத்தைச் சார்ந்த மிகவும் தாழ்த்தப்பட்டவர்களுக்கு ஆலயங்களுக்குள் சென்று வழிபடும் உரிமை மறுக்கப்பட்டிருந்தது. அதுமட்டுமல்லாமல் பொதுக் குளத்தில் குளிக்கக் கூடாது; நீர் எடுக்கக் கூடாது; பொது இடத்தில் நடக்கக் கூடாது; செருப்பு அணியக் கூடாது; உயர்குடி

மக்கள் வசிக்கும் தெருவுக்குள் செல்லக் கூடாது; மேலாடை அணியக்கூடாது; துண்டைத் தோளில் போடக் கூடாது; தேநீர்க் கடைகளில் தனிக்குவளை; வீட்டிற்குள் நுழையக் கூடாது; கீழ்சாதியான் மேல்சாதியான் கண்ணில் படக்கூடாது; அவன் நிழல்கூடப் படக் கூடாது; எந்தப் பொருளையும் தொடக் கூடாது போன்ற எழுதப்படாத கட்டுப்பாடுகள் பின்பற்றப்பட்டன. இதனை மீறுவோருக்குக் கடுமையான தண்டனைகள் விதிக்கப்பட்டன. இத்தகைய தீண்டாமை ஒடுக்கப்பட்ட மக்கள் கல்வி நிலையங்களில் நுழைய முடியாதபடியும் பொது இடங்களில் செல்ல முடியாதபடியும் தடுத்துக் கொண்டிருந்தது.

1923ஆம் ஆண்டு நீதிக்கட்சியின் ஆட்சியில் பனகல் அரசர் முதலமைச்சராக இருந்த பொழுது, பொதுப் பள்ளிகளில் தாழ்த்தப்பட்ட ஆதிதிராவிடப் பிள்ளைகளையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். அப்படிச் சேர்த்துக் கொள்ளாவிட்டால் அரசின் உதவித்தொகை கிடைக்காது என அரசாணை வெளியிடப்பட்டது. இந்த அரசாணை, பள்ளிகளில் தாழ்த்தப்பட்ட குழந்தைகள் சேர முடியாத சூழல் இருந்ததை வெளிப்படுத்துகிறது. அதேபோல் பேருந்துப் பயணச்சீட்டில் ஒடுக்கப்பட்ட மக்களுக்குப் பயணச்சீட்டு வழங்கப்படமாட்டாது என அச்சிட்டிருந்தனர். சென்னையில் நாடக விளம்பரத்திற்கு வழங்கப்பட்ட துண்டுச் சீட்டில் ‘பஞ்சமர்களுக்கு இடமில்லை’ என்று அச்சிட்டு வழங்கினர். இதுபோன்ற நிலைகளில் தீண்டாமை இச்சமுதாயத்தில் பரவிக்கிடந்தது.

## கல்வி நிலை

எண்ணையும் எழுத்தையும் கண்போன்று போற்றி வாழ்ந்த சமுதாயம் பிற்காலத்தில் கல்வியின் உரிமைக்காகப் போராட வேண்டிய நிலைக்கு உள்ளானது. இந்நாட்டில் பண்டைக் காலந்தொட்டே கல்வி நிலையங்கள் இருந்தன. அவை நாட்டுக் கல்வியை அளித்தன. பெரும்பாலும் திண்ணைகளில் கல்வி கற்றுக் கொடுக்கும் முறை இருந்ததால் திண்ணைப் பள்ளிகள் என்று அழைக்கப்பட்டன. வைதீகர்களுக்கு வேதப்பள்ளிகளும், இசுலாமியர்களுக்கு மதர்சாக்களுமிருந்தன. மடங்கள் உயர்குடி மக்களின் கல்விக்கு உதவின. இவை சமயம் சார்ந்த கல்வியை அளித்தன. பொதுக்கல்வியும் அறிவியல் கல்வியும் புறக்கணிக்கப்பட்டிருந்தன. ஐரோப்பியர்களின் வரவால் மேல்நாட்டுக் கல்வி முறை உருவானது. அவர்கள் மேல்நாட்டுக் கல்விமுறையைக் கொண்ட கல்வி நிலையங்களைத் தோற்றுவித்தனர். ஆங்கிலக் கம்பெனியார் கல்வியில் குறுக்கிடாக் கொள்கை வைத்திருந்தனர். ஆனால் பதினெட்டாம் நூற்றாண்டுகளில் கல்வியை மேம்படுத்தும் நோக்கில் கல்வி நிறுவனங்களுக்கு நிதி நல்கி ஊக்கமளித்ததோடு புதிய பள்ளிகளையும் துவக்கினர். இந்தியச் சமூக அமைப்பின் குறையாலும், மேல் மட்டத்தில் கல்வி பெற்றோரின் சுயநலப் போக்காலும் கல்வி அடித்தட்டு மக்களுக்குச் சென்று சேராமலேயே இருந்தது. சமுதாயத்தில் உயர்மட்டத்தில் இருந்தவர்கள் மேல்நாட்டுக் கல்வி பெற்று, அரசியலிலும், அரசுப் பணியிலும் ஆதிக்கம் பெற்றனர். சமுதாயத்தில் இருந்த தீண்டாமைக் கொடுமை, அடக்குமுறைக் கொடுமை, கல்வி நிலையங்களின் நுழைவுச் சிரமங்கள், கடுமையான கல்விக்கட்டணம் முதலியவற்றால் பெரும்பாலான மக்கள் மேல்நாட்டுக் கல்விமுறையைப் பெறமுடியாத சூழல் இருந்தது.

## பெண்கள் நிலை

வரலாற்று நோக்கில் பெண்களின் நிலையை ஆராயும் போது தொடக்க காலச் சமுதாயத்தில் பெண் உயர்ந்தவளாகத் தலைமைத் தகுதியுடன் விளங்கியுள்ளமை தெரியவருகின்றது. ஏனெனில் சமுதாயத்தின் ஆரம்பக் காலக்கட்டங்களில் தாய் வழிச்

சமூகம் வழக்கில் இருந்தது என்ற செய்தி இக்கருத்துக்குச் சிறந்த சான்றாய் அமைகின்றது. இதன்வழி ஆரம்பக் காலக்கட்டங்களில் பெண் மேம்பட்ட நிலையில் இருந்தாள் என அறியலாம். ஆனால் காலம் செல்லச் செல்ல பெண்களின் நிலை வீழ்ச்சிக்குட்பட்டது. வருண அடிப்படையில் மனிதர்களைப் பிரித்ததைப் போல பால் அடிப்படையிலும் பிரித்துப் பெண்களுக்கு நயவஞ்சகம் செய்தது மனுசாத்திரம். பெண்கள் எப்பொழுதும் ஒருவருடைய அரவணைப்பில் இருந்து வர வேண்டும். தனியாக எதுவும் செய்யக்கூடாது. கணவன் எப்படிப்பட்டவனாக இருந்தாலும் அவனுடனேயே வாழ வேண்டும். கணவனை இழந்த பெண் மீண்டும் மறுமணம் செய்து கொள்ளக் கூடாது. ஆனால் மனைவியை இழந்த ஆண் மறுமணம் செய்து கொள்ள உரிமையுண்டு போன்ற கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டிருந்தனர் பெண்கள். பெண்களை இளக்காரமாக நினைத்ததால் பெண்களுக்கான உரிமைகள் அனைத்தும் மறுக்கப்பட்டன. அவர்களின் கல்வி புறக்கணிக்கப்பட்டது. தேவதாசிகள் மற்றும் பொதுமகளிர் ஆகியோருக்கு மட்டும் கல்வி, நடனம், சங்கீதம் போன்றவை கற்றுக்கொடுக்கப்பட்டன. திருமண முறைகளும், சமுதாயக் கட்டுப்பாடுகளும் பெண்களுக்கு எதிரானவைகளாக இருந்தன. கணவனை இழந்த பெண் உடன்கட்டை ஏறல் என்ற சடங்கின் மூலம் கணவனை எரிக்கின்ற நெருப்பில் தானும் விழுந்து உயிர்துறக்க வேண்டும். கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமையும் பெண்களுக்கு இல்லை. குழந்தைத் திருமண முறையாலும் வயோதிகத் திருமண முறையினாலும் மிக அதிகமான பெண்கள் விதவை நிலையை அடைந்தனர். பெண்களைத் தனிமைப்படுத்தும் விதமாக வீட்டை விட்டு வெளியே வரக் கூடாது; ஆண்கள் எதிரில் வரக் கூடாது போன்ற கட்டுப்பாடுகள் பின்பற்றப்பட்டன.

பெண்களுக்கு வீடே உலகம் என்ற நிலை இருந்ததால் அவர்களுக்குக் கல்வியறிவு மறுக்கப்பட்டது. அதோடு சிறுவயதிலேயே திருமணங்கள் நடைபெற்றதால் குடும்ப வாழ்க்கையே அவர்களின் முக்கிய நோக்கமாக இருந்தது. அதனால் அவர்களுக்குக் கல்வி தேவையற்ற ஒன்றாகவே கருதப்பட்டது. வீட்டுக்குள்ளே இருக்க வேண்டும் என்ற கட்டுப்பாடு பெண்கள் கல்விச்சாலைக்குச் சென்று கல்வி பயிலத் தடையாக இருந்தது. இத்தகைய சமுதாயக் கட்டுப்பாடுகள் பெண்கள் கல்வியறிவு பெற பெரும் தடையாக விளங்கின. இந்தியாவில் முதல் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு 1871-ல் எடுக்கப்பட்டது. அதில் கல்வியறிவு பெற்ற பெண்கள் 0.5 சதவீதமே இருந்தனர் என்ற புள்ளிவிவரம் பெண்கல்வி குறித்த அன்றைய நிலையை விளக்கிக்காட்டுவதாக உள்ளது.

## குழந்தை மணம்

இருபதாம் நூற்றாண்டில் பெண்களின் நிலை மிகவும் மோசமாக இருந்தது. குறிப்பாக குழந்தை மணத்தால் பெண் குழந்தைகளின் வாழ்வு கருகியது. 1911 ஆம் ஆண்டு மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி, "சென்னை மாகாணத்தின் இந்துக்கள் மத்தியில் 5 வயதிற்கும் கீழே 673 விதவைகள் இருந்தனர். அவர்களில் 31 பேருக்கு இன்னும் ஒரு வயதுகூட ஆகவில்லை. 5 வயதிற்கும் 10 வயதிற்கும் இடையில் 4072 விதவைகள் இருந்தனர். 10 வயதிற்கும் 15 வயதிற்கும் இடையில் 18,323 விதவைகள் இருந்தனர். மொத்தத்தில் 15 வயதுக்குக் கீழே 23,068 விதவைகள் இருந்தனர். அன்றைக்கு சென்னை மாகாணத்தில் 15 வயதுக்குக் கீழே இருந்த மொத்த விதவைகள் 24,447 பேர். அதில் இந்துக்கள் மட்டும் 23,068."[4] ஆவர். இந்த அறிக்கை குழந்தை மணத்தினால் ஏற்பட்ட விளைவுகளைக் கூறுகின்றது. இத்தகைய நிலையில் சமுதாயச் சீர்திருத்தத்தை வலியுறுத்திய தலைவர்கள் குழந்தை மணத்தை எதிர்த்தனர். இலக்கியவாதிகள் குழந்தை மணத்தை எதிர்க்கும் விதமாகப் படைப்புகளைப் படைத்தனர்.

## கைம்மை நிலை

இந்தியாவில் பெண்களுக்கென்று தனிப்பட்ட வாழ்க்கை கிடையாது. கணவனை அண்டி வாழ வேண்டிய நிலைமை பெண்ணுக்கு இருந்தது. அக்கணவன் இறந்து விட்டால் அப்பெண் சமுதாயத்தில் வாழத் தகுதியற்றவளாகக் கருதப்பட்டாள். நல்ல ஆடைகள் அணியக் கூடாது; நல்ல உணவுகள் உண்ணக் கூடாது; அணிகலன்கள் அணியக் கூடாது போன்ற கட்டுப்பாடுகள் பெண்களுக்கு மிகுந்த துன்பங்களைத் தந்தன. இவ்வாறான கொடுமைகளைக் கணவனுடன் வாழ்ந்து, பின் கணவனை இழந்த பெண்கள் மட்டுமல்லாது, கன்னி விதவைகளும் இளம் குழந்தை விதவைகளும் அனுபவித்து வந்தனர். இளம் வயதுத் திருமணத்தால் இளம் விதவைகளும், கன்னி விதவைகளும் அதிகமாகக் காணப்பட்டனர். 1891 ஆம் ஆண்டு மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி இந்தியாவின் மொத்த மக்கட்தொகை இருபத்தெட்டுக் கோடியே எழுபது இலட்சம் பேர். இதில் பதினாலு கோடி பேர் பெண்கள். அதில் இரண்டு கோடியே முப்பது லட்சம் பேர் விதவைகள். 1931 ஆம் ஆண்டு எடுக்கப்பட்ட மக்கட்தொகைக் கணக்குப்படி வெவ்வேறு வயதுக்குட்பட்ட விதவைகளின் எண்ணிக்கை கீழ்க்காணுமாறு இருந்தது.

| **விதவைகளின் வயது** | **விதவைகளின் எண்ணிக்கை** |
|---|---|
| 0-1 | 597 |
| 1-2 | 492 |
| 2-3 | 1257 |
| 3-4 | 2837 |
| 4-5 | 6707 |
| 5-10 | 85937 |
| 10-15 | 232147 |
| 15-20 | 396162 |
| 20-25 | 742820 |
| 25-30 | 1163720 |
| **மொத்தம்** | **2631788** |

## தேவதாசிமுறை

தமிழகக் கோவில்களில் திருப்பணிக்காகவும், நடனமாடவும் பெண்களை அமர்த்தினர். இப்பெண்கள் தாசிகள் அல்லது தேவதாசிகள் என்று அழைக்கப்பட்டனர். குறிப்பாக இசைவேளாளர் குலத்தைச் சேர்ந்த பெண்கள்தான் இதில் அதிகமாக ஈடுபடுத்தப்பட்டனர். நாளடைவில் இக்குலப் பெண்களுக்கு இதுவே தொழிலாக மாறிய நிலை ஏற்பட்டது. இசைவேளாளர் சமூகத்தில் இருந்து தான் இசைமேதைகளும், நாட்டியப் பேரொளிகளும், நாடகமணிகளும் உருவாகினர். அப்படிப்பட்ட சமூகத்தில் பெண்களைச் சாத்திரத்தின் பெயரால் சாக்கடையில் தள்ளினர். இப்பெண்கள் கடவுளைக் கணவனாக ஏற்றுக்கொள்ள வேண்டும். அதற்காகக் கடவுளின் பெயரால் பொட்டுக் (தாலி) கட்டிக்கொண்ட பெண்களைத் தேவதாசி என்று அழைத்தனர். இப்பெண்கள் தனது

வாழ்நாள் முழுவதும் திருமணம் செய்துகொள்ளாமல் திருப்பணியாற்றிட வேண்டும். கோயில்களில் நாட்டியம், பாடல் போன்ற வேலைகளில் இவர்கள் ஈடுபட்டனர். ஆனால் நாளடைவில் இவர்கள் மிட்டாமிராசுகள், மேட்டுக்குடிச் சீமான்கள், தர்மகர்த்தாக்கள், அர்ச்சகர் போன்றோரின் ஆசை தீர்க்கும் நாயகிகளாக ஆக்கப்பட்டனர். 1912-ல் இந்தக் கொடுமையை ஒழிக்க ஆங்கிலேய அரசு மூன்று மசோதாக்கள் கொண்டு வந்தது. ஆனால் முறையான தொடர் நடவடிக்கைகள் எடுக்கப்படாததால் அந்தப் பெண்களுக்கு எந்தப்பயனும் எற்படவில்லை. இந்தப் பெண்களின் இருள் சூழ்ந்த வாழ்வை வெளிச்சத்திற்குக் கொண்டுவர மூவலூர் இராமாமிர்தம் அம்மையார், டாக்டர் முத்துலெட்சுமி போன்றோர் அரும்பாடுபட்டனர். 1929-ம் ஆண்டு டாக்டர் முத்துலெட்சுமி தேவதாசிமுறை ஒழிப்புச் சட்ட மசோதாவைக் கொண்டுவர மூவலூர் இராமாமிர்த அம்மையாரின் செயல்பாடுகள் முக்கியக் காரணமாக இருந்தன.

## வாக்களிக்கும் உரிமை

அரசிற்கு வரி செலுத்துபவர்கள், சொத்து இருப்பவர்கள், எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் ஆகியோர் மட்டுமே வாக்களிக்கத் தகுதி உடையவர்களாகக் கருதப்பட்டனர். பத்து ரூபாயை நிலவரியாகக் கட்டுபவர்களுக்குக் கிராமப்புறங்களில் வாக்களிக்க உரிமை வழங்கப்பட்டது. நகராட்சிக்கு மூன்று ரூபாயை வரியாகச் செலுத்துபவர்கள் நகர்ப்புறங்களில் வாக்களிக்கலாம்; பெண்கள் வாக்களிக்கத் தகுதியற்றவர்களாகக் கருதப்பட்டனர். ஆங்கிலேயக் குடியுரிமைப் பெறாதவர்கள், 21 வயதுக்குக் கீழே இருப்பவர்கள், மனநலம் பாதிக்கப்பட்டோர் ஆகியோர் தேர்தலில் வாக்களிக்க அனுமதியில்லை.

## பணிவாய்ப்புகள்

ஐ.சி.எஸ் பணியாளர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு இங்கிலாந்திலும் இந்தியாவிலும் ஒரே நேரத்தில் தேர்வுகள் நடத்த வேண்டுமென்று பார்ப்பனர்கள் கிளர்ச்சி செய்தனர். அப்பொழுது 1916ல் சென்னை நிர்வாக சபை உறுப்பினராக இருந்த சர்.அலெக்ஸாண்டர் கார்ட்யூ என்பவர் 1913-ல் பொதுப்பணித் தேர்வாணையம் முன் தந்த சான்று அன்றைய நிலையை விளக்கும். அதில் அவர், "அவ்வாறு ஏக காலத்தில் பரீட்சைகள் நடத்தினால் கடுமையான வகுப்புணர்ச்சியுடைய ஒரு சிறு சமூகத்தைச் சேர்ந்த பிராமணர்களே அப்பரீட்சையில் அதிகமாக வெற்றி பெறுவார்கள். சிவில் சர்வீஸ் பிராமண மயமாகிவிடும். . . . . மாகாண சிவில் சர்வீஸுக்கு 1892 முதல் 1904 வரை நடத்திய போட்டியில் பரீட்சையில் வெற்றியடைந்த 16 பேரில் 15 பேர் பிராமணர்."[5] என்று கூறினார்.

இவர் அளித்த அறிக்கையோடு அன்றைய காலச் சூழலில் இருந்த அரசுப்பணியாளர்கள் குறித்த விவரங்களையும், தேர்ச்சி பெற்றவர்களின் விவரங்களையும் ஆராயும் பட்சத்தில் பிராமணர்கள் அரசுப் பணிகளிலும் சமுதாயத்திலும் எத்தகைய செல்வாக்கையும், கல்வி அறிவையும் பெற்றிருந்தனர் என்பதை அறிய இயலும். அக்காலத்தில் உதவிப் பொறியாளர் வேலைக்கு நடத்தப்பட்ட போட்டித் தேர்வில் வெற்றி பெற்ற 21 பேரில் 17 பேர் பிராமணர்கள். அதுமட்டுமல்லாமல் அக்காலத்தில் 140 உதவி மாவட்ட ஆட்சித்தலைவர்களில் (Deputy Collector) 77 பேர் பிராமணர்கள். 30 பேர் பிராமணரல்லாத இந்துக்கள். மீதிபேர் இசுலாமியர்கள், இந்தியக் கிறித்தவர், ஐரோப்பியர், ஆங்கிலோ இந்தியர். 1913-ல் பணியில் இருந்த 128 மாவட்ட நகராட்சி ஆணையர்களில் (முன்சீப்புகளில்) 93 பேர் பிராமணர்கள், 25 பேர் பிராமணரல்லாத இந்துக்கள், மீதிபேர்

இசுலாமியர்கள், இந்தியக் கிறித்தவர், ஐரோப்பியர், ஆங்கிலோ இந்தியர்கள். இவ்வாறு எல்லாத்துறைகளும் பிராமண மயமாகவே இருந்தன.

ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்திலேயே பிராமணர்கள் ஆதிக்கம் இந்தளவுக்கு இருந்தது என்றால் ஆங்கிலேயர் ஆட்சி மறைந்த சுதந்திர இந்தியாவில் அதுவும் பிராமணர்களின் கூடாரமாக விளங்கும் காங்கிரசின் கோரிக்கைப்படி தன்னாட்சி (சுயராஜ்யம்) ஏற்பட்டால் பிராமணரல்லாதாரின் நிலைமை என்னவாகும் என எண்ணிப்பார்க்க வேண்டும். இதைக் கருத்தில் கொண்டே பெரியார் ஆகஸ்டு 15ஆம் நாளான சுதந்திர தினத்தை, துக்க தினமாக அனுசரிக்க வேண்டும் என்றார்.

## அரசியல் சூழல்

விடுதலை நோக்கத்துடனும், இந்தியர்களின் கோரிக்கைகளையும் குறைபாடுகளையும் ஆங்கிலேயருக்குத் தெரிவித்து உதவவும், ஆள்வோருக்கும் ஆளப்படுவோருக்கும் ஒருவிதத் தொடர்பை உண்டு பண்ணவும் இந்திய நலன் விரும்பும் பெரியோர்களால் 'முதல் இந்திய தேசிய காங்கிரஸ்' என்னும் தேசிய மகாசபை தோற்றுவிக்கப்பட்டது. ஆரம்ப காலத்தில் ஓரளவு உண்மையான பிரதிநிதித்துவம் வாய்ந்த மகாசபையாகவே இருந்தது. சென்னையிலுள்ள பிராமணரல்லாதாரும் இச்சபையை ஆதரித்து வந்துள்ளார்கள்.

பின்னாளில் அக்காங்கிரசின் கொள்கைகளும் அக்கொள்கைகளை வகுக்கும் நிர்வாகிகளும் வகுப்புவாதிகளாக இருந்ததனால் காங்கிரசு ஒரு குறிப்பிட்ட சமூகத்தாரின் நலம் விரும்பும் இயக்கமாக மாறியது. இதனைப் பிராமணரல்லாதாரும் முஸ்லீம்களும் விரும்பவில்லை. பலர் இதை எதிர்த்து வெளிவந்தனர். "சமீபத்தில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டித்தேர்தலில் திருவாளர்கள் எஸ்.இராமநாதனும், பி.ரத்தினவேலு தேவரும் தோல்வி அடைந்தாலும், திருவாளர்கள் வி.இராஜகோபாலச்சாரியார், டாக்டர். எஸ்.எஸ்.ராஜன், எஸ்.சத்தியமூர்த்தி, திருவாட்டி.ருக்குமணி லட்சுமிபதி ஆகிய நால்வரும் வெற்றியுற்றதும் எதைக் காட்டுகின்றன? காங்கிரஸ் ஓர் அக்கிரகாரம் என்பதைக் காட்டவில்லையா?"[6] என நீதிக்கட்சி வரலாறு எனும் நூலில் பண்டித எஸ்.முத்துச்சாமிப்பிள்ளை அவர்கள் கூறும் கூற்று இதனை உறுதிப்படுத்துகின்றது. ஏனெனில் வெற்றி பெற்ற நால்வரும் பிராமணர்கள், தோல்வியடைந்த இருவரும் பிராமணரல்லாதார் ஆவர். இந்நிலையில் தான் காங்கிரசு பேரியக்கம் அக்காலத்தில் செயல்பட்டுக் கொண்டிருந்தது.

## ஹோம் ரூல் இயக்கம் (தன்னாட்சி இயக்கம்)

"நீதிக்கட்சி தோன்றுவதற்குத் தூண்டுகோலாக இருந்தது அன்னிபெசன்ட் துவக்கிய ஹோம்ரூல் இயக்கம் தான்"[7] என்று யூஜின் இர்ஷா கூறுகிறார். 1915 ஆம் ஆண்டு அன்னிபெசன்ட் அம்மையார் அவர்களால் தொடங்கப்பட்ட இயக்கம் ஹோம்ரூல் என்கிற சுயாட்சி இயக்கம் ஆகும். இதன் நோக்கம் 'பிரிட்டிஷ் ஆட்சிக்கு விசுவாசம் கொண்ட, சுயாட்சி பெற்ற சுதந்திர இந்தியா' என்பதாகும்.

1893 ஆம் ஆண்டு இந்தியாவிற்கு வந்த அன்னிபெசன்ட் அம்மையார் 1907 ஆம் ஆண்டு வேதாந்த சங்கத்தின் தலைவரானார். அச்சங்கத்தின் தலைமையிடம் சென்னை அடையாறில் இருந்தது. அதன் தலைவர் என்கிற முறையில் அவர் இந்தியா முழுவதும் சுற்றுப்பயணம் செய்து இந்தியாவின் பழம்பெருமைகளையும், இந்து சமயத்தின் அருமை பெருமைகளையும் பேசினார். அவரது வேதாந்த சங்கம் முழுக்க முழுக்க பிராமணியக்

கருத்துக்களைப் பரப்பி வந்த காரணத்தாலும் அவரது பிராமணர் தொடர்புகளாலும் ஜஸ்டிஸ் ஏடு அன்னிபெசன்ட் அம்மையாரை 'ஐரிஷ் பிராமணி' என்று வருணித்துச் செய்தி வெளியிட்டது குறிப்பிடத்தக்கது. ஏனெனில் அவரது செயல்பாடுகள் அனைத்தும் அவ்விதமாகவே அமைந்திருந்தன. அதன்பின் அவரது கவனம் இந்திய அரசியலுக்குத் திரும்பியது.

அன்னிபெசன்ட் அம்மையார் 1914 ஆம் ஆண்டு காங்கிரசில் சேர்ந்தார். அதே ஆண்டு சென்னையிலுள்ள 'மெட்ராஸ் ஸ்டாண்டர்டு' (Madras standard) எனும் பத்திரிகையை வாங்கி, அதற்கு 'நியூ இந்தியா' என்னும் பெயரிட்டு நடத்தினார்.

1914 ஆம் ஆண்டில் முதல் உலகப்போர் தொடங்கியது. உலகப் போருக்குப் பின் இந்தியாவிற்குக் கூடுதல் அதிகாரம் அல்லது சுயாட்சி அதிகாரம் வழங்கப்படலாம் எனப் பல தலைவர்கள் எண்ணியிருந்தனர். அன்னிபெசன்ட் அம்மையாரும் அதை எண்ணி 'ஹோம்ரூல்' இயக்கத்தைத் தொடங்கினார். சுயாட்சி இந்தியாவிற்கு உடனடித் தேவை என்று வற்புறுத்தப்பட்டது. ஆங்கிலேய அரசோ இந்நிலையைப் படிப்படியாக அளிப்பதாகக் கூறியது. 1915 ஆம் ஆண்டு ஹோம்ரூல் இயக்கம் துவக்கப்பட்டது. இதற்காக ஆங்காங்கே ஹோம்ரூல் லீக் இயக்கக் கிளைகள் தோற்றுவிக்கப்பட்டன. காங்கிரசு இயக்கத்தையே ஹோம்ரூல் இயக்கமாக மாற்றவேண்டும் என அன்னிபெசன்ட் அம்மையார் வலியுறுத்தினார். காங்கிரசில் அதற்கு ஒப்புதல் இல்லை. மாற்றாக, காங்கிரசின் ஆதரவோடு ஹோம்ரூல் இயக்கம் இயங்க ஒப்புதல் அளித்தது. காங்கிரசின் உறுப்பினர்களே ஹோம்ரூல் லீக்கின் உறுப்பினர்களாகவும் இருந்தனர். உதாரணமாக பண்டித ஜவர்ஹலால் நேரு இரண்டிலும் உறுப்பினராக இருந்தார்.

ஹோம்ரூல் இயக்கம் பற்றிய கருத்துக்களையும், கட்டுரைகளையும் அன்னிபெசன்ட் அம்மையார் தனது நியூ இந்தியா பத்திரிகையில் தொடர்ந்து எழுதினார். இதனால் ஹோம்ரூல் இயக்கமும் அவரது கொள்கைகளும் மிக விரைவாகப் பிரபலமடைந்தன. இருப்பினும் காங்கிரசைப் போலவே ஹோம்ரூல் இயக்கமும் பிராமணர்களின் கூடாரமாகத் திகழ்ந்தது. அன்னிபெசன்ட் அம்மையாரின் பேச்சுக்களும் எழுத்துகளும் பிராமணர்களை வெகுவாகக் கவர்ந்திழுத்தது. இதனால் அம்மையார் மீது பிராமணர்கள் மிகுந்த ஈடுபாடு கொண்டு செயலாற்றினர்.

1916 பிப்ரவரி 24 ஆம் நாள் நியூ இந்தியா ஏட்டில் ஒரு வாசகர் எழுதியிருந்த கடிதம், ஹோம்ரூல் இயக்கத்தில் முன்னனியில் இருந்த பிராமணர் எப்படித் தங்கள் சாதி உணர்வு காரணமாகப் பிராமணரல்லாதாரை ஒன்றுபடுத்தி வெறுப்பு உணர்வு மேலோங்கக் காரணமாயிருந்தார்கள் என்பதை விளக்கும் விதமாக அமைந்தது. மதுரையில் ராவ் பகதூர் பட்டம் பெற்ற ஒருவருக்குப் பாராட்டு விழா நடத்தவும் அவ்விழாவில் விருந்துக்கும் பிராமணர்களால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அவ்விருந்துக்குப் பிராமணரல்லாதாருக்குத் தனிப்பந்தி போடப்பட்டிருந்தது. இதைச் சுட்டிக்காட்டி அந்த வாசகர், "மக்கள் தொகையில் அதிகமானவர்களான பிராமணரல்லாதார் மீது பிராமணர் அனுதாபத்தையும் தோழமையையும் காட்டாமல் இவ்வாறு வெறுப்பைக் காட்டினால், ஹோம்ரூல் என்றும் சுயாட்சி என்றும் கோரிக்கை எழுப்புவதற்குக் காரணமாயிருக்கின்ற பிராமணர்கள் தங்களது பிராமணரல்லாத சகோதரர்கள்பால் இரக்கம் கொண்டு அவர்களுக்கு ஆதரவாகச் சட்டம் செய்வார்கள் என்று எவ்வாறு எதிர்பார்க்க முடியும்."[8] எனக் கேட்டிருந்தார்.

பிராமணர்கள் அரசியலில் முதன்மை பெற்றிருந்ததும், அவர்கள் அன்னிபெசன்ட் இயக்கத்தில் ஓரணியில் திரண்டதும், இனியும் எதிரணி அமைக்காவிடில் புதிய அரசியல்

சீர்திருத்தங்களில் உரிய பங்கு கிடைக்காது என்கின்ற எச்சரிக்கை உணர்வும் பிராமணரல்லாதாரை எதிரணி அமைக்கத் தூண்டிற்று.

அன்னிபெசன்ட் தெரிந்தோ தெரியாமலோ செய்த செயல்களின் எதிரொலி மற்றும் அவரை மையமாக வைத்து ஒன்று திரண்ட சக்திகளுக்கு விடுக்கபட்ட அறைகூவல்தான் தென்னிந்திய நல உரிமைச் சங்கம் தோன்றுவதற்கான உடனடிக் காரணமென்று கூடக் கூற இயலும்.

## தென்னிந்திய நல உரிமைச் சங்கம்

பாதிப்புக்கு உள்ளாகும் அத்தனை பேரும் பிராமணரல்லாத மக்கள் என்பதால் அவர்கள் அத்தனை பேரையும் ஒற்றைக் குடையின் கீழ் திரட்டி, அவர்கள் உரிமைகளைப் பெறவேண்டும் என்ற நோக்கில் சென்னையைச் சேர்ந்த வழக்கறிஞர்கள் பி.சுப்பிரமணியம், எம்.புருசோத்தமநாயுடு ஆகியோர் சென்னை பிராமணர் அல்லாதார் சங்கம் (The Madras Non-Brahmin Association) ஒன்றை உருவாக்கினர்.

சங்கம் தொடங்கிய நிலையில் பல எதிர்ப்புகளையும், கண்டனங்களையும் தாங்கிச் செயல்பட்டு வந்தது. எனினும் பொருளாதாரப் பிடியின் காரணமாக அதன் வளர்ச்சி தடைபட்டது. மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர் மீண்டும் ஓர் எழுச்சி பெற்றது. அரசு வேலைகளில் இருந்த பிராமணரல்லாத பணியாளர்கள் இதில் முக்கியப் பங்காற்றினர். அவர்களும் பிராமணர் அல்லாத பிற பிரமுகர்களும் இணைந்து 1912-ல் சென்னை ஐக்கியக் கழகம் என்ற புதிய இயக்கத்தை உருவாக்கினர். இவ்வியக்கத்தை வழிநடத்தும் செயலாளர் பொறுப்பை டாக்டர் சி.நடேசனார் ஏற்றுக்கொண்டார். கழகத்தின் கூட்டங்கள் பெரும்பாலும் நடேசனார் அவர்களின் வீட்டிலேயே நடைபெற்றன. கழகம் தொடங்கிய ஓராண்டில் ஓரளவுக்கு வளர்ந்திருந்தது. ஆனால் வேகம் தான் எதிர்பார்த்த அளவுக்கு இல்லை. வளர்ச்சியின் வேகத்தை அதிகரிக்க வேண்டும். இயக்கம் முன்பைக் காட்டிலும் வேகமாக வளர்ச்சி அடைய வேண்டும் என்று எண்ணிய இயக்கத்தார் இயக்கத்தின் பெயரை மாற்றலாம் என்று முடிவு செய்து பல பெயர்களையும் பரிந்துரை செய்து இறுதியில் சென்னை திராவிடர் சங்கம் எனப் பெயரிட்டனர். திராவிடர் என்பது ஓர் இனத்தைக் குறிக்கும் பெயர். சென்னை, கேரளம், கர்நாடகம், ஆந்திரம் ஆகிய இந்தியாவின் தென்பகுதியைச் சேர்ந்த பிராமணர் அல்லாத மக்களுக்கான பொதுப் பெயராகத் திராவிடர் என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. திராவிடர் சங்கத்துக்குத் தலைவர் பதவி உருவாக்கப்படவில்லை. சிறப்புச் செயலாளர் பதவியே தலைமைப் பதவி. டாக்டர்.சி.நடேசனார் அந்தப் பொறுப்பை ஏற்றுச் செயலாற்றினார்.

திராவிடர் சங்கத்தின் முதல் ஆண்டு விழாவில் சர்.பிட்டி.தியாகராயர், ராமராயநிங்கார் உள்ளிட்ட பிராமணர் அல்லாத பிரபல மனிதர்கள் பலர் கலந்து கொண்டனர். இவர்களில் முக்கியமானவர்கள் சர்.பிட்டி.தியாகராயரும் மற்றும் தரவாத் மாதவன் நாயர் என்கிற டி.எம்.நாயரும் ஆவர்.

## இயக்கத்தின் முன்னோடிகள்

டி.எம்.நாயர் ஒரு மருத்துவர். இங்கிலாந்தில் படிப்பை முடித்த பிறகு இந்தியாவிற்கு வந்து மருத்துவப் பணிகளைச் செய்து கொண்டிருந்தார். ஆண்ட்டி செப்டிக் என்ற மருத்துவப் பத்திரிகை ஒன்றையும் நடத்தினார். அரசியல் ஆர்வம் உண்டானது. இதனால் அவர் காங்கிரசில் இணைந்தார். சென்னை நகராட்சி மன்ற உறுப்பினராக ஆனார். டி.எம்.நாயர் என்ற பெயருடன் அரசியல் வட்டாரத்தில் பிரபலமடையத் தொடங்கினார். 1904-ல் சென்னை

சட்டமன்றத்துக்குச் சென்னை மாநகராட்சியின் சார்பில் தேர்வு செய்யப்பட்டார். காங்கிரசு கட்சியில் இருந்த போதே பிராமணர் அல்லாத மக்களின் வாழ்க்கை நிலை குறித்துப் பேசியும் எழுதியும் வந்தார். இந்த நிலையில், சென்னை திராவிடர் சங்கம் நடத்திய முதலாம் ஆண்டு விழாவில் கலந்து கொண்டு ஆற்றிய உரை தமிழக வரலாற்றில் மிகவும் முக்கியமானதாகும். அவ்விழாவில் அவர், 'விழி, எழு, இன்றேல் வீழ்ந்துபட்டோர் ஆவீர்' என்று உரத்த குரலில் பேசினார்.

டி.எம்.நாயரின் அரசியல் வாழ்வில் திருப்பத்தை ஏற்படுத்திய டில்லி சட்டசபைத் தேர்தல் வந்தது. அதில் இரண்டு இடங்களுக்கான தேர்தலில் ஏழுபேர் போட்டியிட்டனர். சென்னை மாகாண சட்டசபையில் இருக்கும் அதிகாரிகள் அல்லாத உறுப்பினர்கள் வாக்களித்துத் தேர்வு செய்யப்படுபவரே டில்லி சட்டசபைக்குச் செல்ல முடியும். பிராமணரல்லாத உறுப்பினர்கள் தான் சென்னை மாகாண சட்டமன்றத்தில் பெரும்பான்மையாக இருந்தனர். எனவே டி.எம்.நாயர் தேர்தலில் எளிதில் வெற்றி பெறுவார் என எதிர்பார்க்கப்பட்டது. மாறாக டி.எம்.நாயர் தேர்தலில் தோல்வியடைந்தார். நாயரை எதிர்த்துப் போட்டியிட்ட சீனிவாச சாஸ்திரி என்ற பிராமணர் வெற்றி பெற்றார். மற்றொரு இடத்திற்கு பி.என்.சர்மா தேர்ந்தெடுக்கப்பட்டார்.

டில்லி சட்டசபைத் தேர்தல் தோல்வி டி.எம்.நாயரை வெகுவாகப் பாதித்தது. பிராமணர்கள் தன்னைத் திட்டமிட்டுத் தோற்கடித்துவிட்டனர் எனக் கருதினார். இத்தோல்வி பிராமணர்களிடம் பிராமணரல்லாதார் அடைந்த தோல்வியாகவே கருதப்பட்டது. டி.எம்.நாயரின் தோல்வி காங்கிரசில் இருக்கும் பிராமணரல்லாத தலைவர்களுக்கான எச்சரிக்கை மணி என்றுதான் பிராமணர்கள் நினைத்தனர். ஆனால் அந்தத் தோல்வி திராவிட இயக்கத்தின் புதிய அத்தியாயத்திற்கான ஓசை மணியாக அமைந்தது.

சென்னை நகரில் காங்கிரசின் மற்றொரு முக்கியப் பிரமுகர் சர்.பிட்டி.தியாகராயர். இவர் பெரும் பணக்காரர். பொதுநலத்தில் அக்கறை கொண்டவர் என்பதுடன், பல நல்ல செயல்களுக்கும் பணம் தரக்கூடிய வள்ளல். சென்னை நகராட்சியின் 40 ஆண்டுகால உறுப்பினர். சென்னை மாநகராட்சியின் முதல் தலைவர். அப்போது மேயர் என்கிற பதவி கிடையாது. பிரசிடெண்ட் என்று பெயர். அவர் மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோவில் திருப்பணிக்காக ஐந்தாயிரம் ரூபாய் நிதி வழங்கினார். அன்றைக்கு அது மிகப் பெரிய தொகை. ஒரு பவுன் தங்கம் 10 ரூபாய்க்கும் குறைவாக விற்ற காலம். அப்படியென்றால் 500 பவுன் மதிப்பிற்கான தொகையை வழங்கினார். திருப்பணி முடிந்து திருவிழா நடந்த நாளில், கபாலீஸ்வரர் கோயிலுக்குச் சென்றார் தியாகராயர். ஆனால் அவரைக் கோவிலின் குறிப்பிட்ட பகுதியைத் தாண்டி அனுமதிக்கவில்லை. பிராமணர்கள் மட்டுமே அங்கே செல்ல முடியும் எனச் சொல்லி அவரைத் தடுத்து நிறுத்தினார்கள். திருப்பணிக்காகப் பெருந்தொகையை நன்கொடையாகக் கொடுத்திருந்தாலும், சாதியில் பிராமணர்களுக்குக் கீழான சூத்திரர் என்பதால் அவருக்கு அனுமதி மறுக்கப்பட்டது. நீங்கள் இதற்கு மேல் வரமுடியாது என்பதை அவரிடம் குமாஸ்தாவாக வேலை பார்த்துவந்த பிராமணர் ஒருவரே கண்டிப்பான முறையில் சொல்லி, தியாகராயரைத் தடுத்துவிட்டார். அந்தக் குமாஸ்தா கோபுரத்தின் உச்சி வரை செல்லும் தகுதி உடையவராக இருந்தார். இந்த நிகழ்ச்சி தியாகராயருக்குப் பெரும் அவமானமாகிவிட்டது.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் அன்னிபெசன்ட் அம்மையாரின் ஹோம்ரூல் இயக்கமும் பிராமணர்களுக்கு வலுசேர்த்துக் கொண்டிருந்தது. இவற்றை உன்னிப்பாகக் கவனித்த டாக்டர்.சி.நடேசனார் பிராமணர்களின் தாக்குதல் தொடங்கு முன் பிராமணரல்லாதாரைத் தயார்ப்படுத்த வேண்டும் என எண்ணினார். அப்போது அவர் நினைவுக்கு வந்தவர்கள்

இரண்டு பேர். டி.எம்.நாயர் மற்றும் பிட்டி.தியாகராயர். இருவருமே மிகச் சிறந்த செயல்திறன் மிக்க தலைவர்கள். இவர்களை இணைத்துப் புதிய தடத்தை உருவாக்கினார் சி.நடேசனார். 1916 நவம்பர் 20 சென்னை வேப்பேரியில் இருக்கும் வழக்கறிஞர் டி.எத்திராஜுலு முதலியார் இல்லத்தில் பிராமணரல்லாத தலைவர்கள் மற்றும் பிரமுகர்கள் கூட்டம் கூடியது. சென்னை மாகாணத்தின் பல்வேறு பகுதிகளில் இருந்தும் பலரும் கலந்து கொண்டனர். பிராமணர் அல்லாதாரின் பிரச்சினைகள் குறித்துப் பேசினர். கூட்டத்தில் பல விவாதங்களுக்குப் பிறகு ஆலோசனைகள் முன்வைக்கப்பட்டன. பிராமணரல்லாத மக்களுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்தப் பத்திரிகைகள் தொடங்குவது முதல் பணி என முடிவு செய்யப்பட்டது. தமிழ், தெலுங்கு, ஆங்கிலம் என்ற மூன்று மொழிகளில் பத்திரிகைகள் தொடங்கலாம். அம்மூன்றையும் தென்னிந்திய மக்கள் சங்கம் என்ற கூட்டுப்பங்கு நிறுவனம் மூலம் நிர்வகிக்கலாம் எனத் தீர்மானிக்கப்பட்டது.

மேலும் பிராமணர் அல்லாத மக்களின் உரிமைகளைப் பாதுகாக்க ஓர் இயக்கம் தொடங்க வேண்டும் எனவும் முடிவு செய்யப்பட்டது. ஏற்கனவே சென்னை திராவிடர் சங்கம் இயங்கி வருகிறது என்றாலும் இன்றைய நிலையில் எதிரிகள் அதிகரித்துள்ளனர். இக்கூட்டத்திற்குப் புதிய பிரதிநிதிகள் பலரும் வந்திருக்கிறார்கள். புதிய சிந்தனைகள் வந்திருக்கின்றன. ஆகவே அனைவரின் கருத்தையும் பெற்று அனைவரையும் ஒருங்கிணைக்கும் புதிய இயக்கத்தைத் தொடங்குவதுதான் சரியாக இருக்கும் எனக் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

1916 நவம்பர் 20-இல் **தென்னிந்திய நல உரிமைச் சங்கம்** (South Indian Liberal federation) என்ற இயக்கம் தொடங்கப்பட்டது. புதிய இயக்கத்தின் கொள்கைகளை விவரிக்கவும், பிராமணரல்லாத மக்களுக்கான விழிப்புணர்வை ஏற்படுத்தவும் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது போல பத்திரிகை தொடங்க வேலைகள் ஆரம்பிக்கப்பட்டன. தென்னிந்திய மக்கள் சங்கம் என்ற அமைப்பு இதை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டது. மொத்தம் மூன்று பத்திரிகைகள். ஆங்கிலத்தில் ஜஸ்டிஸ் (JUSTICE), தமிழில் திராவிடன், தெலுங்கில் ஆந்திர பிரகாசினி. 26 பிப்ரவரி 1917-இல் ஜஸ்டிஸ் ஆங்கில நாளேடு டி.எம்.நாயரை ஆசியரியராகக் கொண்டு செயல்படத்துவங்கியது. திராவிடனுக்குப் பக்தவச்சலம் பிள்ளையும், ஆந்திர பிரகாசினிக்கு எச்.பார்த்தசாரதி நாயுடுவும் ஆசிரியர்களாக நியமிக்கப்பட்டனர். பத்திரிகை தொடங்கப்பட்டதன் நோக்கம் பற்றி டி.எம்.நாயர் குறிப்பிடுகையில், "தேசியத் திராவிடர்களாகிய நம்மனோர் முன்னுக்கு வருவதற்குத் தடையாக உள்ள தப்பான அபிப்ராயங்களையும், விபரீதக் கொள்கைகளையும் பேத்தெறிந்து உண்மையைச் சாதித்து நிலை நிறுத்துவதே திராவிடனாகிய இப்பத்திரிக்கையின் திருத்தமுள்ளதொரு நோக்கமாகும்"[9] என்கிறார்.

தென்னிந்திய நல உரிமைச் சங்கத்துக்கு எனக் கொடியை உருவாக்கும் வேலைகள் தொடங்கிய போது தலைவர்களுக்குத் தோன்றிய சின்னம் தராசு. சிவப்பு நிறக் கொடியின் நடுவில் வெள்ளை நிறத்தில் தராசுச் சின்னம் பொறிக்கப்பட்ட கொடி உருவாக்கப்பட்டது. சமூகநீதியை சமத்துவ அடிப்படையில் நிறைவேற்ற வேண்டும் என்பதற்கான அடையாளமாகத் தராசு சின்னத்தைத் தென்னிந்திய நல உரிமைச் சங்கத்தினர் உருவாக்கினர்.

தென்னிந்திய நல உரிமைச் சங்கத்தின் கொள்கை அறிக்கை பிட்டி.தியாகராயர், டி.எம்.நாயர் ஆகிய தலைவர்களால் விளக்கி வெளியிடப்பட்டது. இது பிராமணரல்லாதாரின் அரசியல் சாசனமாகக் கருதப்பட்டது. இக்கொள்கை அறிக்கை தென்னிந்திய நல உரிமைச்

சங்கம் தோன்றக் காரணம் என்ன? பிராமணர் எதிர்ப்பு ஏன்? ஹோம்ரூல் இயக்கத்தை எதிர்ப்பது ஏன்? ஆங்கிலேயருக்கு இணக்கமாகச் செல்வது ஏன்? போன்ற பல்வேறு கேள்விகளுக்குப் பதிலளிக்கும் விதமாக அமைந்திருந்தது.

தென்னிந்திய நல உரிமைச்சங்கம் மெல்ல மெல்ல தனது வளர்ச்சியை எய்தி வந்து கொண்டிருந்தது. அதன் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்த பிராமணர்களும், சென்னை மாகாணச் சங்கத்தினரும் பல்வேறு வகையில் எடுத்த முயற்சிகளுக்கு இடையிலும் அது சீரான வளர்ச்சி கண்டது. தென்னிந்திய நல உரிமைச் சங்கம் நடத்திய பத்திரிகைகளில் ஒன்றான ஜஸ்டிஸ் நாளேட்டின் பெயரே இச்சங்கத்தின் பெயராக மக்கள் மத்தியில் பிரபலமடைந்து, நாளடைவில் தென்னிந்திய நல உரிமைச் சங்கம் ஜஸ்டிஸ் கட்சி எனவும் நீதிக்கட்சி எனவும் வழங்கலாயிற்று.

## இரட்டை ஆட்சிமுறை

"தற்போது நடைபெற்று வரும் பிரிட்டிஷ் ஆட்சி முறை மக்களின் எதிர்பார்ப்புகளை நிறைவேற்றும் திறமை கொண்டதாக இல்லை. அதற்கு சுயாட்சி அமைவதுதான் ஒரே தீர்வு. அதற்கான ஆணையை பிரிட்டிஷ் அரசு வெளியிட வேண்டும். பிரிட்டிஷாரின் அடிமை என்ற நிலையில் இருந்து பிரிட்டிஷாருக்கு சமமான நாடு என்ற நிலைக்கு இந்தியா வர வேண்டும்"[10] என மாண்டேகு-செம்ஸ்போர்டு தூதுக்குழுவிடம் இந்திய தேசியக் காங்கிரஸ் முன் வைத்த கோரிக்கை இது. இதே கோரிக்கையையே பல அரசியல் அமைப்புகளும் முன்வைத்தன. இவற்றிலிருந்து தென்னிந்திய நல உரிமைச்சங்கம் விலகி நின்றது. சென்னை மாகாணத்தில் நிலவும் அரசியல் சூழலையும், அது எவ்வாறு பிராமணர்களின் பிடியில் சிக்கியுள்ளது, அவர்களின் அதிகாரப் போக்கு பிராமணரல்லாத மக்களை எந்நிலையில் வைத்துள்ளது என்பது போன்ற விளக்கங்களைத் தென்னிந்திய நல உரிமைச் சங்கம் தூதுக்குழுவிடம் எடுத்துக்கூறியது. மேலும், "சுயாட்சிக்கு இந்தியா பக்குவம் அடையவில்லை. சென்னை மாகாணக் குடிகள் 4 கோடியே 65 இலட்சம் பேரில் 4 கோடி பேர் அரசியல் உணர்வு அற்றவர்களாக இருக்கிறார்கள். தற்கால நிலையில் அனைத்து சமூகங்களுக்கும் சமநீதி வழங்க பிரிட்டிஷார் இன்னும் கொஞ்ச காலத்துக்கு இருந்தே தீர வேண்டும்"[11] எனவும் வலியுறுத்தியது. பல்வேறு தரப்பினரின் சாட்சியங்களையும் பெற்றுக்கொண்ட மாண்டேகு பிரபு முடிவெடுக்க லண்டன் புறப்பட்டுச் சென்றார். 2 ஜுலை 1918-இல் எட்வின் மாண்டேகுவும் லார்டு செம்ஸ்போர்டும் கையெழுத்திட்ட மாண்ட்போர்டு அறிக்கை வெளியானது. இவ்வறிக்கை நீதிக்கட்சித் தலைவர்களுக்குப் பெருத்த ஏமாற்றத்தைத் தந்தது.

இந்தியாவில் வாழும் உழைக்கும் மக்களின் நிலையைப் பிரிட்டிஷாருக்கு விரிவாக எடுத்துக்கூற டி.எம்.நாயர் லண்டன் சென்றார். இங்கிலாந்து நாடாளுமன்ற உறுப்பினர்களின் சிறப்புக் கூட்டத்தில் டி.எம்.நாயர் பேசினார். முக்கியமாக, "மாண்டேகு - செம்ஸ்போர்டு அறிக்கையில் இருக்கும் பல அம்சங்கள் வரவேற்கக் கூடியதுதான். இருப்பினும் தென்னிந்தியாவில் வாழும் பிற்படுத்தப்பட்ட சமூகங்களுக்கு வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவ அடிப்படையில் சமூகநீதி வழங்க மாண்டேகு செம்ஸ்போர்டு அறிக்கை தவறிவிட்டது. அந்த அறிக்கை பிராமணர்களுக்குச் சாதகமாகவே இருக்கிறது."[12] என்ற தனது வாதத்தைப் பதிவு செய்தார். பின்னர் இங்கிலாந்தில் மேடைகளிலும், பத்திரிகைகளிலும் பிராமணர் அல்லாதாரின் உரிமைகள் குறித்தும் பிராமணர்களின் ஆக்கிரமிப்புகள் குறித்தும் முழங்கிய டி.எம்.நாயர் லண்டன் பயணத்தை முடித்துக் கொண்டு இந்தியா திரும்பினார்.

டி.எம்.நாயரின் லண்டன் பயணத்தாலும், சென்னை மாகாண அரசிடம் நீதிக்கட்சி சார்பில் அளிக்கப்பட்ட மனுவாலும் எந்தப் பலனும் இல்லை. மாண்டேகு - செம்ஸ்போர்டு அறிக்கையை நடைமுறைக்குக் கொண்டு வருவதற்கான பணிகள் தொடங்கின. தொகுதிகளைப் பற்றியும், வாக்குரிமை பற்றியும் நிர்ணயிப்பதற்காக சௌத்ப்ரோ குழுவில் சர்.பிராங்ஸ்லை, சாகேப் சதாசுஃப்தாப் அகமதுகான், டபிள்யு.எம்.ஹெய்லி, சுரேந்திரநாத் பானர்ஜி, வி.எஸ்.சீனிவாச சாஸ்திரி, மால்கம் என்.காக் ஆகியோர் உறுப்பினர்களாக இருந்தனர். மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த குழுவில் சுரேந்திரநாத் பானர்ஜி, வி.எஸ்.சீனிவாச சாஸ்திரி ஆகிய இரண்டு பிராமணர்கள் இடம்பெற்றது நீதிக்கட்சித் தலைவர்களைக் கோபம் கொள்ளச் செய்தது. தனது எதிர்ப்பைப் பல்வேறு விதமாக நீதிக்கட்சி வெளிப்படுத்தியது. இறுதியில் சௌத்பரோ குழுவைப் புறக்கணிக்க நீதிக்கட்சி முடிவு எடுத்தது.

1919 அக்டோபர் 5 அன்று சௌத்பரோ குழு அறிக்கையை வெளியிட்டது. இவ்வறிக்கையை நீதிக்கட்சியும், சென்னை மாகாண அரசும் ஏற்கவில்லை. ‘கல்வி, சமுதாயம், சமயம் என்ற மூன்று விசயங்களில் ஆதிக்கம் செலுத்துவோருக்கு முன்னால் எண்ணிக்கை பலம் ஒன்றுமே இல்லை’ என்றது சென்னை மாகாண அரசு. இதை சௌத்பரோ குழு உணர்ந்து கொள்ளத் தவறிவிட்டது என்றும் குற்றம் சாட்டியது.

இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்வுகள் நடந்து கொண்டிருக்கையில் நீதிக்கட்சிக்கும், பிராமணரல்லாதாருக்கும் மிகப்பெரிய அடி விழுந்தது. அது டி.எம்.நாயர் அவர்களின் மரணம். மாண்டேகு-செம்ஸ்போர்டு குழுவின் அறிக்கையில் உள்ள குறைகளை எடுத்துக்கூற லண்டன் சென்ற டி.எம்.நாயர் உடல் நலக் குறைவால் 1919ஆம் ஆண்டு ஜுலை 17ஆம் நாள் மரணம் அடைந்தார். இறுதிக் காரியங்கள் அனைத்தும் லண்டனிலேயே நடந்து முடிந்தன.

நாயரின் திடீர் மறைவால் அதிர்ந்து போன நீதிக்கட்சித் தலைவர்கள் மீண்டு எழுவதற்குச் சிலகாலம் ஆயிற்று. கூட்டுப் பொறுப்புக் குழுவிடம் டி.எம்.நாயர் கொடுக்க வேண்டிய அறிக்கையை அவருக்குப் பதிலாக மற்ற பிரதிநிதிகள் கூட்டுப்பொறுப்புக் குழுத் தலைவர் செல்போர்ன் பிரபுவிடம் கொடுத்தனர். “வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ அடிப்படையில் சட்டமன்றப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பை அரசியல் சீர்திருத்தம் மூலம் அளித்து சமூகநீதி நிலவிட வழிவகுக்க வேண்டும்”[13] என்பது பிராமணர் அல்லாதார் அளித்த அறிக்கையின் சுருக்கம் ஆகும்.

பல்வேறு கட்டப் பேச்சுவார்த்தைகள் மூலமும் பல குழுக்கள் மூலமும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ பிரச்சினைக்குத் தீர்வு காண முயன்றனர் ஆங்கிலேயர்கள். இதற்காக மாண்டேகு, வெலிங்டன் பிரபு, மெஸ்டன் போன்றோர் பேச்சுவார்த்தைகள் நடத்தினர். அவை அனைத்தும் தோல்வியடைந்தன. ஏனெனில் ஆங்கிலேயர் பிராமணர் அல்லாதாருக்குத் தனிப்பிரதிநிதித்துவம் அளிக்க முன்வரவில்லை. அவ்வாறு முன்வந்தாலும் குறைந்த அளவு கொண்ட தொகுதிகளையே பிராமணர் அல்லாதாருக்கு வழங்க முடியும் என்று தெரிவித்திருந்தனர். ஆனால் நீதிக்கட்சி மொத்தமுள்ள இடங்களில் எழுபத்தைந்து சதவீத இடங்களைப் பிராமணரல்லாதாருக்கு வழங்கவேண்டும் என வாதாடியது. ஆங்கிலேய அரசு அதற்குத் தயாராக இல்லை. இதற்குப் பின்னணியில் இருந்து செயலாற்றியவர்கள் பிராமணர்கள். பிராமணரல்லாதாருக்குத் தனிப் பிரதிநிதித்துவம் அளிக்க முடியாது என்பதற்கு ஆங்கிலேய அரசு பிராமணரல்லாத மக்களின் எண்ணிக்கையைக் காரணம் காட்டிற்று. அதோடு அச்சமயத்தில் நடந்து முடிந்த சென்னை மாநகராட்சித் தேர்தலில் வந்திருந்த முடிவுகளும் அதில் பிராமணரல்லாத உறுப்பினர்கள் பெற்ற வெற்றியும்

ஆங்கிலேயரைச் சிந்திக்க வைத்தது. பிராமணரல்லாத மக்கள் இவ்வளவு பெரிய வெற்றியைப் பெற்றிருக்கும் போது எதற்காக இவர்களுக்குத் தனித் தொகுதி வழங்கவேண்டும் என்ற கேள்வியின் விளைவாக நீதிக்கட்சித் தலைவர்களின் கோரிக்கை நிராகரிக்கப்பட்டது.

இறுதியாக, இப்பிரச்சினை குறித்து மெஸ்டன் குழு விசாரித்து முடிவு செய்யும் என ஆங்கிலேய அரசு அறிவித்தது. மெஸ்டன் குழு இரு தரப்புகளையும் விசாரித்தது. மொத்தமுள்ள 66 தொகுதிகளில் 42 தொகுதிகள் பிராமணரல்லாத மக்களுக்கு ஒதுக்க வேண்டும் என்றது நீதிக்கட்சி. 66 தொகுதிகளில் 25 தொகுதிகள் மட்டுமே பிராமணரல்லாதாருக்கு ஒதுக்க வேண்டும் என்றும் தாங்களே சிறுபான்மையினர் ஆகவே தங்களுக்குத்தான் தனித் தொகுதி வேண்டும் என்றும் கூறினர் பிராமணத் தலைவர்கள். 1920 மார்ச் 18 அன்று மெஸ்டன் தனது தீர்ப்பை அளித்தார். அதில் மொத்தமுள்ள 65 பொதுத் தொகுதிகளில் 28 தொகுதிகள் மட்டுமே பிராமணரல்லாத மக்களுக்கு ஒதுக்கப்படும் என்று அறிவித்தார். பிராமணர்கள், பிராமணரல்லாதவர்கள் என்ற இருதரப்பு வாதங்களையும் பெயரளவில் மட்டுமே கேட்டு, பிராமணர்களின் கோரிக்கையை மட்டுமே ஏற்றுக்கொண்டார் என்பது அவருடைய தீர்ப்பின் மூலம் தெளிவாகத் தெரிந்தது. மிகப் பெரிய ஏமாற்றத்தை அடைந்தனர் பிராமணரல்லாத தலைவர்கள். மெஸ்டனின் தீர்ப்பு பிராமணர்களுக்குச் சாமரம் வீசும் தீர்ப்பு என்று விமர்சனம் செய்யப்பட்டது.

## தேர்தல் வேலை

மெஸ்டனின் தீர்ப்புக்குப் பிறகு சென்னை மாகாண சட்ட சபைக்குத் தேர்தல் நடத்தப்படுவதற்கான வேலைகள் தொடங்கப்பட்டன. மாகாண சட்டசபையின் ஆயுட்காலம் மூன்று ஆண்டுகள். ஆளுநர் விரும்பினால் காலத்தை மேலும் இரண்டு ஆண்டுகள் நீட்டிக்கலாம் அல்லது மூன்று ஆண்டுகளுக்குள் சட்டசபையைக் கலைக்கலாம். அதற்கான உரிமை ஆளுநருக்கு வழங்கப்பட்டிருந்தது. 1920 செப்டம்பர் மாதம் தேர்தல் என அறிவிக்கப்பட்டது. அதற்காகத் தன்னைத் தயார்படுத்திக் கொண்டது நீதிக்கட்சி.

## சென்னை மாகாணத் தேர்தல்

இந்திய தேசியக் காங்கிரசுக்கும் ஆங்கிலேயருக்கும் இடையே ஏற்பட்ட கருத்து வேறுபாட்டால் தேர்தலில் போட்டியிடவில்லை என அறிவித்தார் காந்தி. இந்திய தேசியக் காங்கிரசு போட்டியிடாவிட்டாலும் அதன் உறுப்பினர்கள் காங்கிரசின் ஆதரவோடு சுயேட்சைகளாகக் களம் இறங்கினர். ஹோம் ரூல் இயக்கமும் தேர்தலில் போட்டியிட்டது.

## ஆட்சியைப் பிடித்தது நீதிக்கட்சி

1920 நவம்பர் 30-ல் தேர்தல் நடைபெற்றது. தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட 98 இடங்களில் 63 இடங்களை நீதிக்கட்சி கைப்பற்றி சென்னை மாகாண ஆட்சியைப் பிடித்தது. நீதிக்கட்சித் தலைவர் பிட்டி.தியாகராயர் மற்றொரு தலைவரான ஏ.சுப்பராயலுவை முதல்வர் பதவியில் அமரச் செய்தார். 1920 டிசம்பர் 17 அன்று ஏ.சுப்பராயலு தனது அமைச்சர்களுடன் சென்னை மாகாண ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். சிறிது காலமே முதல்வராக இருந்த ஏ.சுப்பராயலு உடல்நலமின்மை காரணமாகப் பதவி விலகினார். பி.ராமராய நிங்கார் அவருக்குப் பதிலாக முதல்வர் பதவியில் அமர்ந்தார். பனகல் அரசர் எனப்பட்ட பி.ராமராய நிங்கார் ஆட்சியின் கீழ் பல்வேறு நலத்திட்டங்களை நீதிக்கட்சி செய்தது. அவர்களின் முக்கியக் கொள்கையான வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம் கல்வியிலும், வேலைவாய்ப்பிலும்

பிராமணரல்லாத மக்களுக்குக் கிடைக்க மசோதா 1921 ஆகஸ்டு 5ஆம் நாள் கொண்டுவரப்பட்டது. அரசுத் துறைப்பணிகளில் ஒருசாரார் மட்டுமே ஆதிக்கம் செலுத்தி வந்த நிலையில் இம்மசோதா முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகக் கருதப்பட்டது. இதன்மூலம் அனைத்துச் சமூகத்தினருக்கும் அரசுப்பணிகளில் வாய்ப்பளிக்கவேண்டும் என்ற ஆணை 1921 ஆகஸ்டு 16 அன்று பிறப்பிக்கப்பட்டது. ஆனால் இந்தச் சட்டம் நடைமுறைக்கு வரவில்லை. அதற்குக்காரணம் அப்போது இருந்த அதிகார அமைப்பு; இரட்டையாட்சி முறை. இதன் காரணமாக எல்லாவற்றையுமே அமைச்சரவை செய்ய முடியாது. ஏராளமான அதிகாரங்கள் ஆளுநரின் கட்டுப்பாட்டில் இருந்தன. அதனால் ஆளுநரின் ஒப்புதல் இல்லாமல் எந்தச் சட்டமும் நடைமுறைக்கு வர இயலாது.

வேலைவாய்ப்புத் துறையைப் போல கல்வித்துறையில் இருந்த சீர்கேடுகளையும் சீரமைக்க எண்ணியது நீதிக்கட்சி அரசு. எல்லாக் கல்வி நிறுவனங்களும் எல்லாச் சமூகத்தைச் சேர்ந்த மாணவர்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் எனக் கூறி அதற்கு எனக் குழு ஒன்று நியமிக்கப்பட்டது. அனைத்துக் கல்லூரிகளிலும் அந்தக் குழு ஆய்வு நடத்தி மாணவர்களைச் சேர்த்தது. இதனால் பிராமணரல்லாத மாணவர்களின் எண்ணிக்கை உயர்ந்தது.

1920 தேர்தலில் பெண்களுக்கு வாக்குரிமை இல்லை. பெண்களுக்கு வாக்குரிமை அமைப்பது குறித்து மாகாண அரசுகள் முடிவு செய்து கொள்ளலாம் எனத் தேர்தலுக்கு முன் அரசு கூறியிருந்தது. இதன்படி நீதிக்கட்சி, சென்னை மாகாணப் பெண்களுக்கு வாக்களிக்கும் உரிமை வழங்கப்பட வேண்டும் என்ற மசோதாவைக் கொண்டுவந்து அதனை நிறைவேற்றியது. பஞ்சமர் என்ற சொல்லுக்குப் பதிலாக ஆதிதிராவிடர் என்ற சொல்லைப் பயன்படுத்த வேண்டும் என்ற ஆணையைப் பிறப்பித்தது. மக்களுக்கு வீட்டுமனை வழங்கக் கடனுதவி தரப்பட்டது. பொது அற நிலையங்களின் நிர்வாக முறைகளில் நடந்து கொண்டிருக்கும் சீர்கேடுகளைச் சரிசெய்ய அறநிலையத்துறை மசோதா கொண்டு வரப்பட்டது. இவ்வாறு பல்வேறு திட்டங்களையும், சட்டங்களையும் நீதிக்கட்சி இயற்றியது.

1923 ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தலிலும் மீண்டும் நீதிக்கட்சி ஆட்சியைப் பிடித்தது. மீண்டும் பி.ராமராய நிங்கார் முதல் அமைச்சராகப் பொறுப்பேற்றுக் கொண்டார். நீதிக்கட்சி இரண்டாவது முறையாக ஆட்சி அமைத்த பிறகும் பல முக்கியத்துவம் வாய்ந்த தீர்மானங்கள், சட்டங்கள் கொண்டுவரப்பட்டு நிறைவேற்றப்பட்டன. அவற்றில் முக்கியமானது இந்து அறநிலையங்கள் பாதுகாப்புச் சட்டம் ஆகும். 1926-ல் நிறைவேற்றப்பட்ட இந்தச் சட்டத்தின் மூலம் இந்து சமயக்கோயில்களுக்குச் சொந்தமான நகைகள், நிலங்கள், சொத்துக்கள், அவற்றை நிர்வகிப்பவர்கள், கணக்கு வழக்குகள், போன்ற விவரங்களை அனைவரும் அறிந்து கொள்ளும் சூழல் உருவானது. இம்மசோதாவிற்குப் பிராமணர்கள் தரப்பில் இருந்து கடும் எதிர்ப்புகள் எழுந்தன. பிராமணர்களுக்கு ஆதரவாக இருந்த பத்திரிகைகளான இந்து, சுதேசமித்திரன் போன்ற பத்திரிகைகள் இம்மசோதாவைக் கடுமையாக எதிர்த்தன. இருப்பினும் யாருடைய எதிர்ப்பையும் பொருட்படுத்தாத நீதிக்கட்சி அரசு இம்மசோதாவை நிறைவேற்றியது.

தெலுங்கர்கள் அதிகமாக வசித்த பகுதியில் ஆந்திரப் பல்கலைக்கழகத்தையும், தமிழர் பகுதியில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தையும் நிறுவினர். இவ்வாறு நீதிக்கட்சி ஆட்சியில் பல்வேறு நல்ல திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இந்நிலையில் பிட்டி.தியாகராயர் உடல்நலக்குறைவால் திடீரென மரணம் அடைந்தார். டி.எம்.நாயரின் மறைவுக்குப் பின் மிகத்திறம்பட வழிநடத்திய பிட்டி.தியாகராயரும் இறக்க நீதிக்கட்சி மிகுந்த நெருக்கடிக்கு

உள்ளாகியது. இத்தகைய சூழலில் காங்கிரசில் இருந்து ஈரோடு ராமசாமி என்கின்ற பெரியார் அக்கட்சியை விட்டு வெளியேறி இருந்தார்.

## பெரியார்

திராவிட இயக்க வரலாற்றில் தவிர்க்க முடியாத சக்தி ஈ.வெ.ராமசாமி என்கின்ற பெரியார். நீதிக்கட்சிக்கு எதிர்க்கட்சியான காங்கிரசுப் பேரியக்கத்தில் இருந்து நீதிக்கட்சிக்கு எதிராகப் பணியாற்றிய பெரியார் நீதிக்கட்சியின் தலைமைப் பொறுப்பை ஏற்றது மிகப்பெரிய வரலாறு. காந்தியக் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டு காங்கிரசுப் பேரியக்கத்தில் இணைந்து பணியாற்றி வந்த பெரியார் காங்கிரசில் இருந்து வெளியேற முக்கியக் காரணம் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை அவ்வியக்கம் ஏற்காததே ஆகும். நீதிக்கட்சியின் கொள்கைகளுள் ஒன்று வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் ஆகும். எனவே இக்கொள்கையே நீதிக்கட்சி - பெரியார் என்ற இரு துருவத்தையும் நேர்க்கோட்டுப் பாதையில் பயணிக்கச் செய்தது.

காங்கிரசு இயக்கத்தில் இருந்த பொழுது பெரியார் பல பொதுக் காரியங்களில் தன்னை ஈடுபடுத்திச் செயலாற்றி வந்தார். அவற்றுள் கதர், மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு போன்றவை குறிப்பிடத்தக்கனவாகும். இவைகளைத் தனது கொள்கைகளாகவே வகுத்துக்கொண்டார். கள்ளுக்கடைக்கு எதிரான போராட்டத்தில் கள்ளுக்குக் காரணமாக இருக்கும் தென்னை மரங்களை எல்லாம் வெட்டி வீழ்த்த வேண்டும் என்ற காந்தியின் கருத்துக்கிணங்க, தனக்குச் சொந்தமான 500 தென்னை மரங்களை அடியோடு வெட்டி வீழ்த்தினார் பெரியார். ஒத்துழையாமை இயக்கத்தின் விளைவாக, தான் வகித்து வந்த நகராட்சிப் பதவிகள் அனைத்தையும் ராஜினாமா செய்தார். தீண்டாமையையும் தீண்டாமையை உருவாக்கும் கடவுள், சாதி, சமய மூடநம்பிக்கைகளையும் சேர்த்து எதிர்த்தார். இதனால் காங்கிரசு இயக்கத்திலேயே பிராமணர்களால் விமர்சிக்கப் பெற்றார்.

காங்கிரசில் இருந்து தொண்டாற்றினாலும் காங்கிரசில் நடக்கும் பிராமண ஆதிக்கத்திற்கு எதிராகக் குரல் கொடுத்தார். காங்கிரசு இயக்கத்திலும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தைக் கொண்டு வர வேண்டும் என எண்ணினார். தனது எண்ணத்தைக் காங்கிரசு மாநாடுகளில் பலமுறை மசோதாவாகக் கொண்டு வந்தார். ஆனால் அனைத்து மாநாடுகளிலும் அம்மசோதாவைக் காங்கிரசுத் தலைவர்கள் ஏற்கவில்லை. கிட்டத்தட்ட 1920-இல் இருந்து 1925 வரை ஒவ்வொரு வருடமும் நடந்த காங்கிரசு மாநாட்டில் பெரியார் இத்தீர்மானத்தைக் கொண்டு வந்தார். ஒவ்வொரு மாநாட்டிலும் ஒருவிதக் காரணம் கூறி மசோதா நிராகரிக்கப்பட்டது. 1925ஆம் ஆண்டு காஞ்சிபுரத்தில் திரு.வி.கல்யாணசுந்தரனார் தலைமையில் நடந்த காங்கிரசு மாநாட்டில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத் தீர்மானத்தைக் கொண்டு வந்தார் பெரியார். ஆனால் மாநாட்டுத் தலைவர் திரு.வி.க இத்தீர்மானத்தை 'ஒழுங்கற்ற தீர்மானம்' எனக்கூறி நிராகரித்தார். தீர்மானம் நிராகரிக்கப்பட்டதைக் கண்டு பெரியார் ஆவேசம் கொண்டார். "காங்கிரஸ் கட்சி பார்ப்பனமயமாகி விட்டது. இங்கே பார்ப்பனத் தலைவர்களின் ஆதிக்கம் வலுத்துவிட்டது. காங்கிரஸில் தொடர்ந்து இருப்பதால் எந்தப்பலனும் ஏற்படப்போவதில்லை. கலியாணசுந்தர முதலியார் அவர்களே நான் வெளியேறுகிறேன். காங்கிரஸில் பிராமணர் அல்லாதார் நன்மை பெற முடியாது. காங்கிரஸை ஒழிப்பதே இனி எனது வேலை."[14] என்று கூறி மாநாட்டில் இருந்து வெளியேறினார். அவருடன் மூவலூர் இராமாமிர்தம் அம்மையார், சர்க்கரைச் செட்டியார், மணப்பாறை ரெ.திருமலைச்சாமி, டி.ஏ.ராமலிங்கச் செட்டியார், எஸ்.ராமநாதன் உள்ளிட்ட பல தொண்டர்கள் வெளியேறினர்.

1926 ஆகஸ்டு மாதம் 29 ஆம் நாள் சென்னை மாகாணக் காங்கிரசுக் குழு கட்சியில் இருந்து பெரியாரை விலக்குவதாக முடிவெடுத்தது. அதுபற்றிப் பெரியார், "என்னைக் காங்கிரஸில் இருந்து எவரும் வெளியேற்ற முடியாது. நானாகக் காங்கிரஸை விட்டு வெளியேறினால்தான் உண்டு."[15] எனப் பதிலளித்தார்.

## சுயமரியாதை இயக்கம்

தன்மானச் சிந்தனையின் அடிப்படையில் பகுத்தறிவுச் சிந்தனையை ஊட்டித் தமிழ்ச் சமுதாயத்தில் விழிப்பை உருவாக்கியவர் பெரியார் ஈ.வெ.ராமசாமி ஆவார். நீதிக்கட்சி தொடங்கப்பெற்ற காரணத்தை ஒட்டியே ஆனால் சமுதாயச் சீர்திருத்த நோக்கில் தன்மான இயக்கம் என்கின்ற சுயமரியாதை இயக்கம் தோற்றுவிக்கப்பட்டது. தமிழகத்தில் அண்ணாவின் சிந்தனையை ஈர்த்தவருள் பெரியார் குறிப்பிடத்தக்கவராவார். நீதிக்கட்சியில் அண்ணா தம் பொதுவாழ்க்கையைத் தொடங்கிய போதிலும் பெரியாரின் தலைமையிலேயே தமிழ்ச்சமுதாயம் விடுதலை இயக்கம் கண்டது என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வியக்கத்தின் தோற்றத்தையும், நோக்கத்தையும் காண்பது அண்ணாவின் படைப்பிலக்கியப் போக்கினை அறிவதற்குத் துணைநிற்கும். "அரசியலில் இருந்து பார்ப்பனீயத்தை இன்றில்லா விட்டாலும் ஒரு நாள் அகற்றி விடமுடியும்! வர்ணாசிரமக் கொள்கையை அவ்வளவு சுலபத்தில் விரட்டி விடமுடியாது! அது மக்களின் இதயத்தில் குடி புகுந்துவிட்டது! இரத்தத்தோடு கலந்துவிட்டது! அதை அழித்து ஒழித்தால்தான் அல்லலுறும் மக்களுக்கு வாழ்வு கிடைக்கும்! சமுதாயச் சீர்திருத்தமே முதல் நோக்கமாக - முக்கிய நோக்கமாகக் கொள்ள வேண்டும்!"[16] என்ற எண்ணத்தில், சமுதாயத்தில் புது ரத்தம் பாய்ச்ச பெரியார் அவர்களால் சுயமரியாதை இயக்கம் தொடங்கப்பட்டது. மேல் சாதி, கீழ் சாதி என்று சொல்லும் பார்ப்பனியத்தை வெட்டி வீழ்த்த வேண்டும் என்ற தீவிரத்தில்தான் சுயமரியாதை இயக்கம் துவக்கப்பட்டது.

காங்கிரசை ஒழிப்பதே என்னுடைய வேலை என்று சொல்லிப் புறப்பட்ட பெரியார் தன்னுடைய ஆதரவாளர்களுடன் சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்தார். சுயமரியாதை அற்றவர்களுக்குச் சுதந்திரம் பலனளிக்காது எனக் கூறிப் பெரியார் இவ்வியக்கத்தைத் தொடங்கினார். 1926 ஆம் ஆண்டு சுயமரியாதைச் சங்கமாகத் தொடங்கப்பட்ட இச்சங்கம் நாளடைவில் சுயமரியாதை இயக்கமாக உருவானது. தன்னுடைய கொள்கைகளை விளக்கவும், அதை மக்களிடத்தில் கொண்டு செல்லவும் குடிஅரசு பத்திரிகையைப் பயன்படுத்தினார். சுயமரியாதைக் கருத்துகளைத் தாங்கிச் செல்லும் வாகனமாக குடிஅரசு பத்திரிகை செயல்பட்டது. கட்டுப்பட்டுக் கிடக்கும் அறிவுக்கு விடுதலை கொடுக்க விரும்பிய பெரியார் கடவுள் என்பது வெறும் கற்பனை என்றார். புராணங்கள் அனைத்தும் புழுகுகள் என்றார். மூடநம்பிக்கைகளைத் தகர்த்தெறியும் நோக்கத்துடன் மூடப்பழக்கவழக்கங்களைக் கடுமையாக எதிர்த்தார். பெரியாரின் சுயமரியாதைப் பிரச்சாரம் மக்கள் மத்தியில் புதிய அலையை ஏற்படுத்தியது. பெரியாரின் கருத்துகளுக்கு மக்கள் செவிசாய்க்கத் தொடங்கினர்.

சுயமரியாதைக் கருத்துகளையும் கொள்கைகளையும் மக்களிடத்தில் விவரிக்கும் பணியை மட்டும் செய்யாது சுயமரியாதையை மீட்டெடுக்கும் போராட்டங்களையும் சுயமரியாதை இயக்கம் செய்தது. சாதியைக் காரணம் காட்டி ஆலயத்துக்குள் நுழையக் கூடாது என்று எங்கெல்லாம் தடுக்கிறார்களோ, அங்கெல்லாம் சுயமரியாதை இயக்கம் தாழ்த்தப்பட்டவர்களோடு ஆலயத்துக்குள் நுழையும் போராட்டத்தை நடத்தியது. சாதியை அடிப்படையாகக் கொண்டு மக்களுக்குத் தடை விதிக்கப்படும் இடங்களில் எல்லாம் சுயமரியாதை இயக்கம் களம் கண்டது. பிராமணர்கள் வசிக்கும் அக்கிரகாரத் தெருவுக்குள்

தாழ்த்தப்பட்டவர்கள் நுழையக்கூடாது என்பது அக்காலத்தில் எழுதப்படாத சட்டமாகப் பின்பற்றப்பட்டது. அதேபோல் கோயில் குளத்தில் தாழ்த்தப்பட்டவர்கள் இறங்கக்கூடாது, பொதுக் கிணற்றைப் பயன்படுத்தக் கூடாது என்பன போன்றவை பிராமணர்களின் சட்டம். இவற்றையெல்லாம் எதிர்த்து அக்கிரகாரத் தெருவுக்குள் நுழையும் போராட்டம், கோயில் குளத்தில் இறங்கிக் குளிக்கும் போராட்டம், பொதுக் கிணற்றில் புழங்கும் போராட்டம் போன்றவற்றில் சுயமரியாதை இயக்கம் தன்னை ஈடுபடுத்தி வெற்றிக் கண்டது.

சுயமரியாதை இயக்கத்தின் கொள்கைகளைப் பரப்பும் வகையில் புரட்சி, பகுத்தறிவு, புதுவைமுரசு, நகரதூதன், விடுதலை உள்ளிட்ட பத்திரிகைகள் ஒவ்வொரு காலக்கட்டங்களில் இயங்கத் தொடங்கின. புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் சுயமரியாதை இயக்கத்தில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். பெரியாரின் சுயமரியாதைக் கொள்கைகளை ஏற்றுக் களப்பணியாற்றிட சுயமரியாதைப் பிரச்சாரத்திற்கு வலுசேர்த்திட ஏராளமான சிந்தனையாளர்களும் செயல்வீரர்களும் வரத்தொடங்கினர். கைவல்யசாமியார், சாமி.சிதம்பரம், கோவை சி.அய்யாமுத்து, எஸ்.ராமநாதன், மூவலூர் இராமாமிர்தம் அம்மையார், பட்டுக்கோட்டை கே.வி.அழகிரிசாமி, கி.ஆ.பெ.விசுவநாதம், குத்தூசி எஸ்.குருசாமி, ப.ஜீவானந்தம், மாயவரம் சி.நடராசன், சி.என்.அண்ணாத்துரை போன்ற பலர் பெரியாருடன் இணைந்து சுயமரியாதைப் பிரச்சாரத்தில் ஈடுபட்டனர். சுயமரியாதை இயக்கத்தார் கடவுள், மொழி, இனம் போன்றவற்றில் மக்கள் எவ்வாறு விழிப்புணர்வு அடைய வேண்டும் என்ற சிந்தனைகளைப் பரப்பினர்.

## சமயம் மற்றும் கடவுள் குறித்த சுயமரியாதை இயக்கக் கொள்கை

மனித சமூகத்தின் அறிவைப் பாழ்படுத்தவும் தன்மான உணர்ச்சி அறவே இல்லாமல் செய்யவும் மக்களைப் பிரித்து வைத்து, உயர்வு தாழ்வு கற்பித்து, மனித சமூக ஒற்றுமையைக் கெடுத்து, பொது முன்னேற்றத்தையும் சுதந்திரத்தையும் தடுக்கும் படியான சமயம் எதுவானாலும் அதை ஒழிக்கச் சுயமரியாதை இயக்கம் பாடுபட்டது. "இறந்துபோன பெற்றோர்களை முன்னோர்களை மதிக்க வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. அதற்காகப் பார்ப்பானுக்கு ஏன் அழ வேண்டும்? அவன் காலில் ஏன் விழ வேண்டும்? அவன் கால் கழுவி, தண்ணீரை ஏன் குடிக்க வேண்டும்? இது மதக் கட்டளை, மதத் தத்துவம் என்றால் இப்படிப்பட்ட மதம் ஒழிய வேண்டாமா?"[17] எனத் தன்னுடைய சமயக்கொள்கையைப் பெரியார் தெளிவுபடுத்துகிறார்.

## கடவுட்கொள்கை

"ஒரு கடவுளுக்குத் தினம் எத்தனை தடவை பூஜை, படையல்? ஒவ்வொரு பூஜை படையலுக்கும் எத்தனைப் படி அரிசி, பருப்பு சாமான்கள்? இவைகள் எல்லாம் யார் வயிற்றில் அறுத்து வைக்கப்படுகின்றன? மக்களுக்குக் கல்வி இல்லை, தொழில் இல்லை, சாப்பாடு இல்லை என்று ஒருபுறம் சொல்லிக் கொண்டு மற்றொருபுறம் இம்மாறி செல்வம் பாழாக்கப்படுவதென்றால், யோக்கியன் எப்படி சகித்திருக்க முடியும்? காவடி எடுத்துக்கொண்டு கூத்தாடுவதும், மஞ்சள் துணிகட்டிக் கொண்டு வீதியில் கிடந்து புரளுவதும், மொட்டை அடித்துக்கொள்வதும், பட்டை பட்டையாக மண்ணையும் சாம்பலையும் அடித்துக் கொள்வதும் அழுக்குத் தண்ணீரில் குளிப்பதும் ஆன காரியங்கள் எதற்கு என்று சிந்திக்கிறோமா? சாப்பிடக்கூடிய பால், நெய், தயிர், தேன், பழச்சத்து முதலியவற்றைக் கல்லின் தலையில் குடம்குடமாகக் கொட்டி சாக்கடைக்குப் போகும்படி செய்து வேடிக்கை பார்ப்பது எதற்கு?"[18] எனக் கேட்டார் பெரியார்.

இவ்வாறு பெரியாரின் தலைமையில் மூடநம்பிக்கைகளைத் தகர்க்கும் வகையில் பிரச்சாரத்திலும், குடிஅரசு போன்ற பத்திரிகைகளில் இராமாயணம், பெரியபுராணம், மகாபாரதம், தேவாரம், நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் போன்ற நூல்களில் கிடந்த மூடநம்பிக்கைச் செய்திகளை மக்களுக்கு எடுத்துரைக்கும் விதமாக ஆய்வுக் கட்டுரை எழுதுவதிலும் சுயமரியாதை இயக்கத்தினர் முனைந்தனர். இதனால் இவ்வியக்கம் கடவுளுக்கும் சமயத்துக்கும் அவை சார்ந்த நம்பிக்கைகளுக்கும் எதிரான இயக்கமாக, தமிழகத்தில் மிகுந்த வீரியத்துடன் இயங்கியது.

## சுயமரியாதைத் திருமணம்

சுயமரியாதைத் திருமணங்கள் தமிழகத்தின் பல்வேறு இடங்களிலும், திராவிட இயக்கத் தலைவர்கள், உறுப்பினர்கள் போன்றோரின் இல்லங்களிலும் நடைபெறுவதற்கு திருமணத்திற்கு வித்திட்டவர் பெரியார் ஆவார். தாலி கட்டுவதன் மூலம் பெண் ஆணுக்கு அடிமையாகும் நிலை உருவாவதால் தாலி தேவையில்லை என்றார். இது சமுதாயத்தில் பெரும் சலசலப்பை ஏற்படுத்தியது. அர்த்தமற்றதும் பொருத்தமற்றதுமான சடங்குகள் வேண்டாம் என்பதும் அனாவசியமான அதிகச் செலவும் அதிகக் காலக்கேடும் இருக்கக்கூடாது என்பதும் சுயமரியாதைத் திருமணத்தின் தத்துவம் ஆகும். திருமணம் செய்து கொண்டதற்காக மட்டுமே ஒரு பெண் தன் மனதுக்குப் பிடிக்காமல் வாழ வேண்டும் என்ற அவசியம் இல்லை என்றும் பெரியார் கருதினார். திருமணங்களைப் பெரியார் சுயமரியாதை, பகுத்தறிவு, தமிழர், சுதந்திரம், புரட்சி, சிக்கனத் திருமணம் என வகைப்படுத்தி அதற்கான விளக்கங்களை அவரே பொதுக்கூட்டங்களிலும் மாநாடுகளிலும் அளித்தார்.

சுயமரியாதை இயக்க மாநாடுகள் பலவற்றைக் கூட்டினார். அம்மாநாடுகளில் வர்ணாசிரமத்துக்கு வழிகோலும் வேதபுராணங்களின் ஆதிக்கத்தை ஒழிக்க வேண்டும்; சாதி சமயத்தை வெளிப்படுத்தும் அடையாளங்களைப் பயன்படுத்தக் கூடாது; பொதுக் குளங்கள், கிணறுகள் போன்ற பொதுவானவற்றை அனைவரும் பயன்படுத்த அனுமதிக்கவேண்டும். கோயிலுக்குச் சொந்தமான நிலங்களை அரசு கையகப்படுத்த வேண்டும். கோயில் மூலம் கிடைக்கும் நிதியைப் பொதுக் கல்விக்குப் பயன்படுத்த வேண்டும். ஆண்களின் திருமண வயதை 19 ஆகவும் பெண்களின் திருமண வயதை 16 ஆகவும் உயர்த்த வேண்டும். சுயமரியாதை மற்றும் கலப்புத் திருமணத்துக்குச் சட்டப்பூர்வ அங்கீகாரம் அளிக்க வேண்டும் போன்ற தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இதன்மூலம் அக்காலச் சமுதாயத்தில் புரையோடிப் போயிருந்த பழக்கவழக்கங்களையும், சாதியக் கட்டுப்பாடுகளையும் அறியமுடிகின்றது. இதைச் சீர்செய்யும் கருவியாகவே சுயமரியாதை இயக்கம் செயல்பட்டது. சுயமரியாதை இயக்கத்தின் செயல்பாடும் இயக்கமும் எதிர்காலத்தில் எதை நோக்கிப் பயணிக்கும் என்பதைப் பெரியார், "இந்த இயக்கம் இன்றைய தினம் பார்ப்பனரையும் மதத்தையும் சாமியையும் பண்டிதர்களையும் கண்டித்துக் கொண்டு, மூடப்பழக்கவழக்கங்களையும் எடுத்துக்காட்டிக் கொண்டு, மூடநம்பிக்கைகளைப் பரிகாசம் செய்து கொண்டிருப்பது போலவே என்றைக்கும் இருக்கும் என்றோ, அல்லது இவை ஒழிந்தவுடன் இயக்கத்துக்கு வேலை இல்லாமல் போய்விடும் என்றோ யாரும் கருதிவிடக் கூடாது. மேற்சொன்னவற்றின் ஆதிக்கங்கள் ஒழிவதோடு, ஒருவன் உழைப்பில் ஒருவன் நோகாமல் சாப்பிடுவது என்ற தன்மை இருக்கின்ற வரையிலும் ஒருவன் தினம் ஒரு வேளைக் கஞ்சிக்கு மார்க்கமில்லாமல் பட்டினி கிடந்து சாவதும் மற்றொருவன் தினம் ஐந்து வேளை சாப்பிட்டுவிட்டு, சாய்மான நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, வயிற்றைத் தடவிக்கொண்டிருக்கிறதும் ஆகிய தன்மை இருக்கிறவரையிலும் ஒருவன் இடுப்புக்கு

வேட்டி இல்லாமல் திண்டாடுவதும், மற்றொருவன் மூன்று வேட்டிகள் போட்டுக் கொண்டு உல்லாசமாகத் திரிவதுமான தன்மை இருக்கின்ற வரையிலும் பணக்காரர்களுக்கெல்லாம் தங்கள் செல்வம் முழுமையும் தங்களுடைய சுகவாழ்வுக்கே ஏற்பட்டது என்று கருதிக் கொண்டிருக்கிற தன்மை இருக்கின்ற வரையிலும் சுயமரியாதை இயக்கம் இருந்தேதான் தீரும்."[19] என்று விளக்குகிறார்.

பெரியார் பல்வேறு நாடுகளுக்கும் சுற்றுப்பயணம் சென்று வந்தார். அவர் சென்ற நாடுகளில் பொதுவுடைமை ஆட்சியின் பயனை அவர் அறிந்து வந்தார். அதன் விளைவாகப் பெரியாருக்குச் சுயமரியாதைச் சிந்தனைகளுடன் பொதுவுடைமைச் சிந்தனையும் சமதர்மக் கருத்துகளும் சேர்ந்து கொண்டன. இதனால் தன்னுடைய சுயமரியாதை இயக்கத்தில் சமதர்மக் கொள்கைகளை இணைத்துக் கொண்டார். இதன் விளைவாகப் பெயர்களுக்கு முன் வழங்கும் மகா, ஸ்ரீ, திரு, திருவாளர், ஸ்ரீஜத் போன்ற சொற்களைப் பயன்படுத்தக் கூடாது என்றும் அதற்குப் பதிலாகத் தோழர் என்ற சொல்லைப் பயன்படுத்த வேண்டும் என்றும் இயக்கத்தாரைக் கேட்டுக் கொண்டார்.

## மீண்டும் தேர்தல்

1926 ஆம் ஆண்டு நீதிக்கட்சியின் ஆட்சிக்காலம் முடிவடைய இருந்த நிலையில் மீண்டும் தேர்தலைச் சந்திக்க நீதிக்கட்சி, ஹோம்ரூல் இயக்கம் போன்றவை தயாராக இருந்தன. இவற்றுடன் புதிதாக, தேசியக் காங்கிரசில் இருந்து பிரிந்த தலைவர்கள் தோற்றுவித்த சுயராஜ்ஜியக் கட்சியும் தேர்தலை எதிர்கொள்ளத் தயாரானது. இக்கட்சியின் சார்பில் எஸ்.சீனிவாச ஐயங்கார், சத்தியமூர்த்தி ஐயர் போன்றோர் தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டனர். நீதிக்கட்சியின் நிலைமை கவலை அளிக்கும் விதமாக இருந்தது. அதற்குக் காரணம் டி.எம்.நாயர், பிட்டி.தியாகராயர் போன்ற தலைவர்களை இழந்திருந்ததும், கட்சிக்குள் பல பிரச்சினைகள் எழுந்ததும் ஆகும். இந்த நேரத்தில் தான் பெரியார் நீதிக்கட்சிக்கு மறைமுகமாக ஆதரவு நிலைப்பாட்டை எடுத்தார். தனது குடிஅரசு இதழில் நீதிக்கட்சி பற்றிப் பெரியார் எழுதிய கட்டுரை நீதிக்கட்சி குறித்த பெரியாரின் எண்ணங்களைப் பிரதிபலிப்பதாக இருந்தது. அக்கட்டுரையில், "ஜஸ்டிஸ் மந்திரிகள் வந்த பிறகு நமது மாகாணத்தில் இலவசக் கல்வியும் கட்டாயக் கல்வியும் ஏற்பாடு செய்து, அநேக இடங்களில் அமலில் கொண்டு வந்திருக்கிறார்கள். 5 வயது முதல் 12 வயது வரை ஒவ்வொரு குழந்தையையும் கண்டிப்பாகப் படிக்க வைக்க வேண்டும் இல்லாவிட்டால் பெற்றோருக்குத் தண்டனை என்று சட்டமும் செய்திருக்கிறார்கள். அதன்மூலம் படிக்கும் லட்சக்கணக்கான பிள்ளைகளில் 100க்கு 99பேர் பார்ப்பனர் அல்லாதார்."[20] எனக் குறிப்பிட்டிருந்தார். 1926 ஆம் ஆண்டுத் தேர்தலில் நீதிக்கட்சியை ஆதரித்து, பெரியார் பத்திரிகைகளில் எழுதிவந்தார். பார்ப்பன அதிகாரம் நிறைந்த காங்கிரசுக் கட்சி சுயராஜ்ஜியக் கட்சியின் பெயரில் ஆட்சி அமைத்துவிடக் கூடாது எனப் பெரியார் எண்ணியதே அதற்குக் காரணமாகும்.

ஆனால் பெரியாரின் எண்ணம் பலிக்கவில்லை. 1926 ஆம் ஆண்டுத் தேர்தலில் சுயராஜ்ஜியக் கட்சியினர் பெரும்பாலான இடங்களைக் கைப்பற்றினர். இருப்பினும் ஆட்சி நடத்த, போதுமான எண்ணிக்கை இல்லை. இதனால் நீதிக்கட்சி உறுப்பினரான பி.சுப்பராயனைச் சுயேட்சையாக முதல்வர் பதவிக்கு நிறுத்தச் செய்து முதல்வராக்கினர் சுயராஜ்ஜியக் கட்சியினர். இருந்தாலும் இந்நிலை நீடிக்கவில்லை. சைமன் குழுவை ஆதரித்ததற்காக பி.சுப்பராயனுக்கு அளித்து வந்த ஆதரவை விளக்கிக்கொண்டனர். பின்

நீதிக்கட்சி பி.சுப்பராயனுக்கு ஆதரவு நல்கியது. தொடர்ந்து பி.சுப்பராயன் முதல்வராக நீடித்தார்.

## வகுப்புவாரி உரிமை ஆணை (கம்யூனல் ஜி.ஓ)

பி.சுப்பராயனின் அமைச்சரவையில் இருந்த எஸ்.முத்தையா உயிரற்றுக் கிடந்த கம்யூனல் ஜி.ஓ என்கின்ற வகுப்புவாரி உரிமை ஆணைக்குப் புத்துயிர் கொடுத்தார். 1928ல் புதிய வகுப்புவாரி உரிமை ஆணை பிறப்பிக்கப்பட்டது. அதன்படி அரசு அலுவலகங்களில் 12 இடங்கள் நிரப்பப்படவேண்டும் என்றால் அவற்றில் பிராமணரல்லாத இந்துக்கள் 5 பேர் இடம்பெற வேண்டும். பிராமணர்கள், இசுலாமியர்கள், ஐரோப்பியர்கள், ஆங்கிலோ இந்தியக் கிறித்தவர்கள் ஆகியோரில் இருந்து தலா 2 பேர் இடம்பெற வேண்டும். தாழ்த்தப்பட்ட வகுப்பில் இருந்து ஒருவர் வந்தே தீரவேண்டும். வகுப்புவாரி ஆணை பலத்த எதிர்ப்புகளுக்கு மத்தியில் நிறைவேறியது. பி.சுப்பராயன் மிகப்பெரிய சமூகப்புரட்சியை நிகழ்த்திக்காட்டினார். நீதிக்கட்சியின் ஆதரவுடன் மேலும் ஒரு புரட்சியை ஏற்படுத்தினார் பி.சுப்பராயன். அதுதான் 'தேவதாசி ஒழிப்புச் சட்டம்' என்ற சட்டமாகும். இச்சட்டத்தின் வாயிலாக, தேவதாசிக் குல மக்களின் இன்னல்களைப் போக்குவதற்கு நீதிக்கட்சி முயற்சிகளை மேற்கொண்டது.

## தேவதாசிமுறை ஒழிப்புச் சட்டம்

டாக்டர் முத்துலெட்சுமி ரெட்டி அவர்களால் சட்டமன்றத்தில் 1929 நவம்பர் 2 ஆம் நாள் தாக்கல் செய்யப்பட்ட சட்ட மசோதா நாட்டில் பெரும்புயலைக் கிளப்பியது. தேசியவாதிகளும், பார்ப்பனத் தலைவர்களும் கடுமையான எதிர்ப்பைத் தெரிவித்தனர். பார்ப்பன ஏடுகள், "ஆண்டவனுக்கு ஆபத்து!" என்று எழுதின. சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவர் எஸ்.சத்தியமூர்த்தி மசோதாவை எதிர்த்துக் கடுமையாகப் பேசினார். "தாசிக்குலத்தை ஒழித்துவிட்டால் அதுமொத்த சமுதாயத்தையே கெடுத்துவிடும். தாசிகள் இல்லையென்றால், குடும்பப் பெண்கள் பலரும் கெட்டுவிடுவார்கள். தாசிக்குலத்தை ஒழிப்பது நாட்டுக்கு நன்மை பயக்காது. அந்தத் தொழில் பல சமூகத்தார் மத்தியிலும் பரவிவிடும். சமூகத்துக்கு தாசிகள் தேவை என்பதைத் திரும்பத்திரும்பச் சொல்ல விரும்புகிறேன்."[21] என ஆவேசப்பட்டார்.

எஸ்.சத்தியமூர்த்தி முதலாக இந்தச் சட்ட மசோதாவை எதிர்ப்பவர்களுக்கு எல்லாம் பதிலளிக்கும் விதமாக டாக்டர் முத்துலெட்சுமி, "இந்த நாட்டில் குறிப்பிட்ட ஒரு குலத்தில் மட்டும் தான் தேவதாசிகள் தோன்ற வேண்டுமா? மற்ற குலங்களைச் சேர்ந்த பெண்கள் குறிப்பாக அய்யர், அய்யங்கார், சாத்திரி, சர்மா வீட்டுப் பெண்கள் மாறி மாறிப் பொட்டுக் கட்டிக் கொண்டு, தேவதாசிகளாக மாறிப் பலருக்கும் சிற்றின்பத்தை வாரி வாரி வழங்கக் கூடாதா?"[22] எனக் கூறினார். இறுதியாக, வாக்கெடுப்புக்கு விடப்பட்ட இம்மசோதாவிற்குப் பெரும்பான்மையினோர் ஆதரவு நல்கினர். அதன்காரணமாக, தேவதாசி முறை ஒழிப்புச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. நீதிக்கட்சியின் ஆட்சியில் நிறைவேற்றப்பட்ட சட்டங்களுள் மிக முக்கியமானது தேவதாசி முறை ஒழிப்புச் சட்டமாகும்.

## அண்ணாவும் நீதிக்கட்சியும்

அண்ணா பள்ளிப்படிப்பை முடித்தபின் உயர்கல்வியைத் தொடர, அவர் குடும்பத்தின் பொருளாதாரம் ஒத்துழைக்கவில்லை. அதனால் காஞ்சிபுரம் நகராட்சி அலுவலகத்தில் எழுத்தராகப் பணியாற்றினார். இந்தக் காலக்கட்டத்தில்தான் அண்ணாவுக்கு நீதிக்கட்சியின் மீது நாட்டம் ஏற்பட்டது. அதற்கு, தியாகராயரின் இன உணர்வுச் சிந்தனைகள்,

நீதிக்கட்சியின் ஆட்சியில் செயல்படுத்தப்பட்ட திட்டங்கள், பச்சையப்பன் கல்லூரிச் சூழல், சுயமரியாதை இளைஞர் மன்றத் தொடர்பு, தொழிலாளர் இயக்கத் தொடர்பு, பாசுதேவ் தொடர்பு, நீதிக்கட்சி முன்னோடிகளின் தொடர்பு போன்றவை காரணங்களாக அமைந்தன.

## அண்ணாவின் பொதுவாழ்க்கை

அண்ணா கல்லூரிப் படிப்பை முடித்த பின்னர் பொதுவாழ்வில் ஈடுபடலாயினார். நீதிக்கட்சியின் நெருக்கமான தொடர்பில் அவர் இருந்தார். வேலைக்குச் செல்ல ஈடுபாடு சற்றும் இல்லாத நிலையிலும் குடும்பச் சூழலைக் கருத்தில் கொண்டு வேலை தேடும் முயற்சியில் ஈடுபட்டார். 1936-ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில் பெத்துநாயக்கன் பேட்டையில் நகராட்சி உறுப்பினருக்குப் போட்டியிட்டார். அத்தேர்தலில் தோல்வியுற்ற போதிலும் அண்ணாவின் அரசியல் ஈடுபாடு குறையவில்லை. நவயுகம் செய்தித்தாள் ஆசிரியராகப் பணியாற்றிய அண்ணா, சென்னை தன்மான இயக்க இளைஞர் மன்ற ஆண்டுவிழாவில் பங்கேற்றார். நீதிக்கட்சியின் செயற்குழு உறுப்பினராகவும், நீதிக்கட்சிக் கருத்துப் பரப்பல் குழு முன்னவராகவும் விளங்கினார். விடுதலை, குடிஅரசு ஆகிய இதழ்களின் இணை ஆசிரியராகவும் திகழ்ந்த அண்ணா இயக்கம் தொடர்பான கருத்துக்களைத் தாங்கிய கட்டுரைகள், கவிதைகள், கதைகள் ஆகியவற்றை நக்கீரன், பரதன், சமதர்மன் போன்ற புனைபெயர்களில் எழுதினார். 1937-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ஆம் தேதி திருச்சி மாவட்டம், முசிறி வட்டத்தில் தன்மான இயக்க மாநாடு நடைபெற்றது. அண்ணா அம்மாநாட்டிற்குத் தலைமை வகித்துப் பேருரை ஆற்றினார். அவ்வாறே சேலம் மாவட்டத்தில் நடைபெற்ற மூன்றாவது மாநாட்டிலும் அண்ணா மாநாட்டுத் திறப்பாளராக விளங்கினார். இவ்வாறு அண்ணாவின் பொதுவாழ்க்கை தொடக்கம் பெற்றது.

## தன்மான இயக்கத்தில் அண்ணாவின் பணி

மக்கள், அறிவுத் துறையில் முன்னேற வேண்டுமானால் சமுதாயத்தில் சீர்திருத்தம் நிகழ்ந்தே ஆக வேண்டும். தன்மான இயக்கப் பணியே சமுதாயச் சீர்திருத்தத்தை உருவாக்கவல்லது என்ற கருத்துடைய அண்ணா தன்மான இயக்கம் என்பது ஒழுக்கச் சிதைவில்லா இயக்கம், மனித சமுதாயத்தை ஒழுக்க நெறிக்குக் கொண்டு வந்து முன்னேற்ற வேண்டும் என்பதற்காகப் பாடுபடும் இயக்கம், முதன்முதலில் தன்மான இயக்கம் அடுத்து பகுத்தறிவு இயக்கம், பின் தமிழ் இயக்கமாக மலர்ந்தது என்று இயக்கத்தின் படிநிலைகளைக் குறிப்பிடுகின்றார். தன்மான இயக்கத்தின் விளைவுகள் தமிழ்ச் சமுதாயத்தில் மாற்றங்களை விளைவித்தன. தன்மான இயக்கக் கொள்கைகளை மக்கள் மன்றத்தில் எடுத்துரைக்கும் பணியில் ஈடுபட்டோருள் அண்ணாவின் பணி தனிச் சிறப்புடையதாகும். தன்மான இயக்கத்தவர்கள் முற்போக்குச் சிந்தையர் என்ற எண்ணத்தினை உருவாக்கியவர் அண்ணா. பின்னாளில் தனி இயக்கம் காண்பதற்குப் பயிற்சிக் களமாக அமைந்தது பெரியாரின் சுயமரியாதை இயக்கமே. தம் பொது வாழ்வில் உண்மையாகப் பழகிய தோழர்களுள் முதன்மையானவராக அண்ணாவையே பெரியார் குறிப்பிட்டுள்ளமை அண்ணா பெரியாரிடம் கொண்டிருந்த தொடர்பையும், அன்பையும், மதிப்பையும் நன்கு புலப்படுத்துகிறது. பெரியாரின் சிந்தனைகளுக்கெல்லாம் இலக்கிய வடிவம் கொடுத்ததோடு, கலைத்துறை வழியிலும் தன்மான இயக்கக் கருத்துக்களை எடுத்து உரைத்து வந்தார். 'சந்திரோதயம்' என்னும் நாடகத்தின் தலைமை மாந்தன் தன்மான இயக்கத்தைச் சார்ந்தவனே. மேலும் அண்ணா நாடகங்கள் எழுதியும் நடித்தும் தன்மான இயக்கக் கொள்கைகளைப் பரப்பினார். வேலைக்காரி, நல்லதம்பி முதலிய திரைப்படங்கள் வாயிலாகவும் தன்மான இயக்கக் கொள்கைகளைப் பரப்பினார். அண்ணாவின்

பெரும்பாலான கதைகளும் நாடகங்களும் பெரியாருடன் உடனிருந்து பணியாற்றிய காலத்தில்தான் எழுதப்பெற்றன என்பது குறிக்கத்தக்கது. தம் படைப்புகளில் தன்மான இயக்கத்தவரைக் கதை மாந்தராகவும் படைத்தார். சாதி வேற்றுமையை உருவாக்கவல்ல புராண இதிகாச ஏடுகள், இலக்கியங்கள் ஆகியவை எதிர்க்கப்பட வேண்டும் என்பது தன்மான இயக்கச் செயல்திட்டங்களில் ஒன்றாகும். அண்ணா குடிஅரசு இதழில் நக்கீரன், பரதன் போன்ற புனை பெயர்களில் புராண எதிர்ப்புக் கட்டுரைகளை எழுதினார். தேவலீலைகள், புராண மதங்கள், கம்பரசம், ஆரியமாயை என்னும் நூல்கள் பெரியாருடன் இணைந்திருந்து சமுதாயப் பணிபுரிந்த காலக்கட்டத்தில் அண்ணாவால் எழுதப்பட்டவையாகும்.

## நீதிக்கட்சியின் வீழ்ச்சி

1930 செப்டம்பர் மாதத்துடன் பி.சுப்பராயன் அமைச்சரவைப் பதவிக்காலம் முடிவடைந்தது. அதனால் மீண்டும் தேர்தல் அறிவிப்பு வெளியானது. நீதிக்கட்சியைத் தவிர பிற கட்சிகள் தேர்தலில் போட்டியிடவில்லை. இந்நிலையில் சுயேட்சை வேட்பாளர்கள் நீதிக்கட்சியை எதிர்த்து நின்றனர். 1930ஆம் ஆண்டுத் தேர்தலில் நீதிக்கட்சி பெரிய வெற்றி பெற்று மீண்டும் ஆட்சியைப் பிடித்தது. நீதிக்கட்சியின் தலைவர் பி.முனுசாமி நாயுடு முதல்வராகப் பதவியேற்றார். இதற்கு முன்பிருந்தே கட்சிக்குள் பிரச்சினைகள் உருவாகியிருந்தன. பி.முனுசாமி நாயுடு முதல்வரான பின் பிரச்சினை பெரிதானது. கட்சிக்குள் மூத்தத் தலைவர்களுக்குள் கருத்து வேறுபாடு, நாயுடு - தமிழர் போன்ற பிரச்சினைகள் இருந்தன. இதன்பின் நீதிக்கட்சியின் புதிய தலைவராக ராமகிருஷ்ண ரங்கராவ் என்கிற பொப்பிலி அரசர் தேர்வு செய்யப்பட்டார். முனுசாமி நாயுடு முதல்வர் பதவியிலிருந்து ராஜினாமா செய்தார். பொப்பிலி அரசர் முதல்வராகப் பதவியேற்றார். இருப்பினும் பிரச்சினைகள் அப்படியேதான் இருந்தன. சைமன் கமிஷனின் அறிக்கை வெளிவருவது தாமதமானதால் 1934 ஆம் ஆண்டு நடைபெற வேண்டிய தேர்தல் நடைபெறவில்லை. அதனால் பொப்பிலி அரசர் தலைமையிலான ஆட்சியின் பதவிக்காலம் நீட்டிக்கப்பட்டது.

## 1937 ஆம் ஆண்டுத் தேர்தல்

பொப்பிலி அரசரின் தலைமையில் ஆட்சி நடத்தி வந்த நீதிக்கட்சி மக்களின் செல்வாக்கை இழந்து வந்து கொண்டிருந்தது. இதற்குப் பல காரணங்கள் இருந்தன. இதுகுறித்து பொப்பிலி அரசர், "ஜஸ்டிஸ் கட்சி என்றால் ஜமீன்தார்கள், முதலாளிமார்கள் கட்சியே தவிர பொதுமக்கள் கட்சி அல்ல என்று சொல்லப்படுவது மிகமிக சகஜமாகிவிட்டது. இதை நாம் பொய்யாக்கிக் காட்டாவிட்டால் கட்சியில் உள்ள உண்மை உழைப்பாளிகளுக்கு இதைவிட வேறு அவமானம் வேண்டியதில்லை."[23] எனக் கூறியதிலிருந்து நீதிக்கட்சித் தலைவர்கள் மக்களுடன் தொடர்பில் இல்லாமல் இருந்து வந்ததையும் அதனால் நீதிக்கட்சி மக்கள் செல்வாக்கை இழந்து வந்ததையும் அறியமுடிகின்றது.

இதுவரையிலும் நேரடித் தேர்தலில் போட்டியிடாத தேசியக் காங்கிரசு வரும் தேர்தலில் போட்டியிடும் என்ற முடிவினாலும், இந்தியா முழுவதும் காந்தியின் புகழ் பரவிக் கிடந்த காரணத்தால் காங்கிரசு, மக்கள் மத்தியில் மிகுந்த செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்து கொண்டிருந்ததாலும் நீதிக்கட்சி வலுவிழந்து காணப்பட்டது. அக்கட்சித் தலைவர்கள் தங்களின் சாதனைகளை மக்களிடத்தில் எடுத்துக்கூறத் தவறிவிட்டனர். இருப்பினும் 1937 தேர்தலில் நீதிக்கட்சிக்கும் காங்கிரசுக்கும் நேரடிப் போட்டி நிலவியது. காந்தியின்

செல்வாக்கில் கட்டுண்டுகிடந்த சென்னை மாகாணம், காங்கிரசுக்கு மிகப்பெரிய வெற்றியைக் கொடுத்தது. நீதிக்கட்சிக்கு ஆதரவு நிலைப்பாட்டைப் பெரியார் எடுத்திருந்தார். அவர்களுக்காகப் பிரச்சாரம் செய்தார். இதனால் பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தில் இருந்தே பெரியாருக்கு எதிர்ப்பு வந்தது. அவர்களுக்கு விளக்கம் அளிக்கும் விதமாக, "ஜஸ்டிஸ் கட்சி சமதர்மக் கட்சியென்பதை ஞாபகத்தில் வையுங்கள். அது தோன்றிய பிறகுதான் இன்று பறையனும் பார்ப்பானும் ஒரு ஸ்தானத்தில் சரிசமமாக வீற்றிருக்கிறார்கள். புலியும் பசுவும் ஒரு துறையில் தண்ணீர் குடிப்பதுதான் சமதர்ம ராஜ்ஜியம் என்பது பழங்காலப் பேச்சு. ஆனால் அது இன்று சர்க்கஸ் கொட்டகையில் நடைபெறுகிறது. அதனாலேயே நாம் அதைச் சமதர்ம ராஜ்ஜியம் என்று சொல்லுவதில்லை. ஆனால் இன்று பறையனும் பார்ப்பானும் சாஸ்திரியும் சங்கராச்சாரியும் சக்கிலியும் ஒரே பீடத்தில் அமருகிறார்கள். ஒரு பதவியில் இருக்கிறார்கள். ஜஸ்டிஸ் கட்சி ஏற்படுவதற்கு முன் தாழ்த்தப்பட்ட வகுப்புகளைப் பற்றிய ஒரு வார்த்தையாவது காங்கிரஸ் கூட்டத்தில் நடவடிக்கையில் ஆதாரத்தில் இருந்ததா என்று யோசித்துப் பாருங்கள். ஆகவே ஜஸ்டிஸ் கட்சி சமதர்மக் கட்சி என்பதில் உங்களுக்கு இன்னும் சந்தேகம் உண்டா?"[24] எனப் பெரியார் எடுத்துரைத்தார்.

பெரியாரின் தீவிரப்பிரச்சாரம் எடுபடவில்லை. நீதிக்கட்சி தோல்வியைச் சந்தித்தது. காங்கிரசு வெற்றி பெற்றது. ஆனால் ஆட்சியமைக்கவில்லை. இடைக்கால அரசாக நீதிக்கட்சி ஆட்சி செய்தது. பின் 1937 ஜூலை 15 காங்கிரசுக் கட்சி ஆட்சி அமைக்கக் கோரியது. இதன்படி காங்கிரசுக் கட்சியின் சார்பாக சி.இராசகோபாலச்சாரி என்கிற இராசாசி சென்னை மாகாண முதல்வராகப் பொறுப்பேற்றார்.

நீதிக்கட்சியின் தோல்வி குறித்துப் பெரியார், "நீதிக்கட்சி இன்று தோற்கடிக்கப்பட்டிருக்கலாம். ஆனால் அதன் கொள்கைகளும் குறிக்கோள்களும் எந்தக் காலத்திலும் தோற்கடிக்கப்படமாட்டா. இதைவிடக் கடுமையான ஒரு தோல்வியைக் காங்கிரஸ்காரர்கள் எதிர்காலத்தில் அணைத்துக் கொள்ள வேண்டித்தான் வரும். அப்போது, காங்கிரஸைப் பற்றிய எந்தவொரு தடயமும் இல்லாமல் போய்விடும் என்பது உறுதி"[25] என்று எழுதினார். அவர் அன்று கூறிய வார்த்தைகளில் எந்த அளவு உண்மை இருந்திருக்கும் என்பதைத் தமிழகத்தில் காங்கிரசின் இன்றைய நிலையை ஆராய்ந்து பார்த்தால் புரிந்து கொள்ள முடிகின்றது. அன்று அவர் பூமியில் விட்ட வித்து இன்று ஆலமரமாய் வளர்ந்து நிற்கின்றது. அந்த ஆலமர நிழலில் நின்று தன்னைக் காத்துக் கொள்ளும் முகமாய்க் காங்கிரசுப் பேரியக்கம் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றது.

## இந்தி மொழித் திணிப்பு

சென்னை மாகாண ஆட்சி, காங்கிரசு வசம் வந்த முதலே நீண்ட காலமாகவும், பல்வேறு காலக்கட்டங்களிலும் அக்கட்சியும், அக்கட்சியின் தலைவர்களும் வலியுறுத்தி வந்த இந்தி மொழியைத் தென்னிந்தியாவில் புகுத்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. அதற்கு முன்னரே காந்தி இந்தி மொழியின் அவசியத்தைப் பலமுறை பல இடங்களில் எடுத்துக் கூறியுள்ளார். மேலும் தனது 'யங் இந்தியா' பத்திரிகையில் இதுகுறித்து எழுதியுள்ளார். 1917 ஆம் ஆண்டு குஜராத்தில் நடைபெற்ற இரண்டாவது குஜராத் கல்வி மாநாட்டில் பேசிய காந்தி, இந்தியை இந்தியாவின் பொது மொழியாகவும் ஆட்சி மொழியாகவும் ஆக்க வேண்டும். இந்தி மொழி ஒன்றுதான் இந்தியாவின் பொது மொழியாக இருப்பதற்குத் தகுதி படைத்தது என்று கூறியிருந்தார். இவ்வாறு பல காலக்கட்டங்களில் இந்தி மொழி பற்றித் தலைவர்கள் தங்களின் கருத்துகளைப் பதிவு செய்திருந்தனர். இருப்பினும் சென்னை மாகாணத்தில் இதுவரை நீதிக்கட்சி ஆட்சியில் இருந்தபடியால் இந்தி

மொழி பற்றிய கருத்துகள் எந்தவிதத் தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை. ஆனால் இப்பொழுது நிலைமை மாறியிருந்தது. சென்னை மாகாண அரசாகக் காங்கிரசு செயல்பட்டுக்கொண்டிருக்கும் சூழலில் மாகாண முதல்வராகப் பொறுப்பேற்க இருந்த இராசாசி இந்தி மொழி பற்றி, "வடஇந்தியர்களை நன்கு அறிந்துகொள்ளத் தென்னிந்தியர்களுக்கு இந்தி மொழி பற்றிய அறிவு மிகவும் பயன்படும். இந்தியாவின் அரசியல் மற்றும் வாணிபத்தை நடத்திச் செல்ல இந்தி மொழி மிகவும் தேவைப்படும். இந்தி மொழியைப் பள்ளிகளில் கட்டாயப் பாடமொழியாக ஆக்கிடும் எண்ணத்திலேயே நான் இருந்து வருகிறேன். இந்தியில் பாட நூல்கள் விரைவில் எழுதப்பட வேண்டும். புதிய இந்தி எழுத்துகளைத் தமிழக மாணவர்கள் கற்றுக்கொள்ளத் தொடங்கி விடுவார்களேயானால் பின்னர் இந்தி, சமஸ்கிருதம் ஆகிய இரு மொழிகளையும் அவர்கள் எளிதில் பயில வாய்ப்பு ஏற்பட்டு விடும்."[26] என்று கூறிய கருத்துகள் நீதிக்கட்சியினரையும், சுயமரியாதை இயக்கத்தாரையும் தமிழ் ஆர்வலர்கள் என அனைவரையும் சுதாரித்துக் கொள்ள வைத்தது.

இந்தி மொழிக்கும் தமிழர்களுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. இந்தி மொழி ஓர் ஆரியமொழி. பார்ப்பனர்களால் கற்பிக்கப்பட்ட மூடநம்பிக்கைகள், குருட்டுப் பழக்கவழக்கங்கள் ஆகியன நிறைந்த மொழி. அது பார்ப்பன ஆதிக்கத்தை நிலைநாட்டவே பெரிதும் பயன்படும். பார்ப்பனர்களின் ஆதிக்கத்தாலும் நிர்பந்தத்தாலும் தென்னிந்தியாவில் இந்தி மொழியைத் திணிக்க முயற்சி நடைபெறுகின்றது. உலகப் பொதுமொழியாகவும், தொடர்பு மொழியாகவும் விளங்கி வரும் ஆங்கில மொழியை விலக்கி விட்டு இந்தி மொழியைப் புகுத்துவது உள்நோக்கமுடையதும், முட்டாள்தனமுமான செயல் என இந்தி எதிர்ப்பாளர்கள் கருதினர்.

இந்தச் சூழலில் 1937 டிசம்பர் 26ல் சென்னை மாகாணத் தமிழர் மாநாடு திருச்சியில் கூடியது. அதில் இந்தியைக் கடுமையாக எதிர்க்க வேண்டும்; தமிழ்நாடு தனிநாடாகப் பிரிய வேண்டும் என்ற இரண்டு முக்கியத் தீர்மானங்களைப் பெரியார் கொண்டு வந்தார். எதிர்ப்புகளைப் பற்றி இராசாசி கவலைப்படவில்லை. 1938 - 39 ஆம் ஆண்டுக்கான நிதிநிலை அறிக்கையில் சென்னை மாகாணத்தில் மொத்தம் 125 உயர்நிலைப்பள்ளிகளில் இந்தி கட்டாயப் பாடமொழியாகப் பயிற்றுவிக்கப்படும் என்றார். எதிர்ப்புக் குரல்கள் வலுக்கத் தொடங்கின. கட்டாய இந்திக்கு எதிராக ஊர்வலங்கள், கண்டனப் பொதுக்கூட்டங்கள் எல்லாம் நடத்தப்பட்டன.

இந்தி கட்டாயப் பாடமாகும் பட்சத்தில் பிராமணர் அல்லாத பிள்ளைகள் தொண்ணூறு சதவீதத்துக்கு மேல் தோல்வி அடைவது உறுதி, அதே நேரத்தில் பிராமணப் பிள்ளைகள் நூறு சதவீதம் தேர்ச்சி அடைந்து மேற்படிப்புகளைத் தொடர்வர். இப்பொழுதுதான் மேற்படிப்புகளைத் தொட்டு நிற்கும் பிராமணரல்லாத பிள்ளைகளின் மேற்படிப்பைத் தடுக்கத்தான் இந்தி ஒரு சாதனமாகுமே தவிர மனித வாழ்க்கைக்கோ அறிவுக்கோ தமிழர்களுக்கு எந்த விதத்திலும் இன்றியமையாததாகாது எனக் குடிஅரசு இதழில் எழுதினார் பெரியார்.

கண்டனங்களும், எதிர்ப்புகளும் உருவாகியிருந்த சூழலில் இராசாசி ஒரு சில திருத்தங்களுடன் இந்தி மொழியைக் கொண்டு வருவதில் முனைப்புக் காட்டினார். அனைத்துப் பள்ளிகளிலும் இந்தி கட்டாயப் பாடம் ஆகாது; வெறும் 125 பள்ளிகளில் மட்டுமே இந்தி கற்றுக் கொடுக்கப்படும். பரிட்சையில் தேர்வு பெற வேண்டிய அவசியம் இல்லை போன்ற மாற்றங்களுடன் 1938 ஏப்ரல் மாதம் அரசாணையாக அறிவிக்கப்பட்டது. அதன்படி, தமிழ்மொழி வழங்கும் பகுதிகளில் 60, தெலுங்கு மொழி வழங்கும் பகுதிகளில் 54, கன்னட மொழி வழங்கும் பகுதிகளில் 4, மலையாளம் வழங்கும் பகுதிகளில் 7 என

மொத்தம் 125 உயர்நிலைப்பள்ளிகளில் இந்தி மொழி கட்டாய மொழிப் பாடமாக ஆக்கப்பட்டது.

## இந்தி எதிர்ப்புப் போராட்டம்

கட்டாய இந்தி மொழிக்கு எதிராகப் போராட்டங்கள் பல்வேறு வடிவங்களில் நடைபெற்றன. குடிஅரசு, நகரதூதன் போன்ற பத்திரிகைகள் மக்களை இந்தி மொழிக்கு எதிரான போருக்குத் தயார்ப்படுத்தும் விதமாகத் தலையங்கங்கள் வெளியிட்டன. இந்தி மொழிப் போராட்டங்களை எவ்வாறு எடுத்துச் செல்வது என்பது பற்றி ஆலோசனை செய்யக் கூட்டம் நடைபெற்றது. அதில் இந்தி எதிர்ப்பு வாரியம் என்ற அமைப்பு உருவாக்கப்பட்டது. சோமசுந்தர பாரதியார் தலைவராகவும், கி.ஆ.பெ.விசுவநாதம் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இக்கூட்டத்தில் மாணவர்கள் இந்திப் பாடங்களைப் புறக்கணிக்கும்படி செய்தல், இந்தி மொழியைப் பயிற்றுவிக்கும் பள்ளிகளுக்கு முன்னால் மறியல் போராட்டங்களை நடத்துதல், உண்ணாவிரதம் இருத்தல், காங்கிரசு அமைச்சர்களுக்கு எதிராகக் கறுப்புக்கொடி காட்டுதல், முதலமைச்சர் வீட்டுக்கு முன்னால் மறியல் நடத்துதல் போன்ற போராட்ட முறைகள் வகுக்கப்பட்டன. இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் ஈடுபடத் தயாராக இருப்பவர்கள் சிறைக்குச் செல்லுதல் என்ற நிலையோடும் நினைப்போடும் மட்டும் இருந்து விடக்கூடாது. தேவைப்பட்டால் ரத்தம் சிந்தவும் செத்து மடியவும் தயாராக இருக்க வேண்டும் என்றார் பெரியார்.

இந்தி மொழிக்கு எதிரான போராட்டத்தில் கலந்து கொண்ட தலைவர்கள் அனைவரும் கைது செய்யப்பட்டனர். தினமும் ஆயிரக்கணக்கான தொண்டர்கள் போராட்டத்தில் ஈடுபட்டுக் கைதானார்கள்.

"இந்திக்குத் தமிழ்நாட்டில் ஆதிக்கமாம் - நீங்கள்

எல்லோரும் வாருங்கள் நாட்டினரே!

செந்தமிழுக்குத் தீமைவந்த பின்னும் இந்தத்

தேகம் இருந்தொரு லாபமுண்டோ? . . . . "[27]

எனத் தொடங்கும் புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் பாடலை வழிநெடுகிலும் பாடிக்கொண்டு 1938 ஆகஸ்டு 1 அன்று உறையூரில் இருந்து இந்தி எதிர்ப்புப் படை சென்னை மாகாணம் நோக்கிப் புறப்பட்டது. நூற்றுக்கணக்கான ஊர்களைக் கடந்தும் பலநாட்களாக நடந்தும் வந்த அந்தப்படை செப்டம்பர் 11 அன்று சென்னை வந்தடைந்தது. அவர்களை வரவேற்றுப் பேசிய பெரியார் ‘தமிழ்நாடு தமிழருக்கே’ என்ற முழக்கத்தை முன்வைத்தார். இப்போராட்டத்தில் பெண்களும் களம் இறங்கினர். இதனால் போராட்டத்தின் வேகம் அதிகரித்தது. பெரியாரை 1938 டிசம்பர் 8 அன்று கைது செய்தது இராசாசி அரசு. இந்தி எதிர்ப்புப் போராட்டத்தைத் தூண்டினார் என அவர் மீது குற்றம் சாட்டப்பட்டது. அதற்காக அவருக்கு ஓராண்டு காலக் கடுங்காவல் சிறைத் தண்டனை அளிக்கப்பட்டது. பெரியாருடன் சேர்த்து பெரும்பாலானோர்களுக்குச் சிறைத்தண்டனை தரப்பட்டிருந்தது.

பெரியார், கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டிருந்த நேரத்தில் நீதிக்கட்சியின் 14வது மாநாடு சென்னையில் கூடியது. தலைமையேற்க இருந்த பெரியார் சிறையில் இருந்தார். அவர் இல்லாவிட்டாலும் அவர் தலைமையில் மாநாடு நடைபெறுகிறது என்பதை நிரூபிக்க வேண்டி அவரது உருவபொம்மையை நாற்காலியில் இருக்கச் செய்தனர். மாநாட்டில் பெரியார் படிக்க இருந்த உரையை ஏ.டி.பன்னீர்செல்வம் படித்தார். நீதிக்கட்சி

சரியான தலைமை இல்லாமல் இருந்த நேரம் அது. பெரியார் நீதிக்கட்சிக்குத் தலைமையேற்க வேண்டும் என்ற கருத்து அக்கட்சிக்குள் எழுந்தது. அதன் விளைவாக அம்மாநாட்டில் 'பெரியாரே எங்கள் மாபெரும் தலைவர்' என்ற முழக்கம் நீதிக்கட்சித் தொண்டர்களாலும், தலைவர்களாலும் எழுப்பப்பட்டது. "எங்கள் மாபெரும் தலைவரே! உங்கள் உடல் சிறைப்படுத்தப்பட்டிருந்தாலும் உங்கள் வீரத்திருவுருவத்தின் முன் நாங்கள் அனைவரும் எழுந்து நின்று ஒன்றுபட்டிருக்கிறோம். உங்கள் தலைமையில் நாங்கள் அனைவரும் சொல்வழி நின்று கட்சி வளர, மக்கள் வாழ, நோக்கம் நிறைவேற, ஓயாது உழைத்து வெற்றி பெறுவோம் என உறுதி கூறுகிறோம்."[28] என முழக்கமிட்டு மாநாட்டில் நீதிக்கட்சியினர் பெரியாரைத் தலைவராக ஏற்றுக்கொண்டு அதற்கான உறுதிமொழியையும் எடுத்துக் கொண்டனர்.

## நடராசன் - தாளமுத்து

இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் ஈடுபட்டதற்காக 1938 டிசம்பர் 5ல் கைது செய்யப்பட்ட நடராசன் என்ற இளைஞன் சிறைச்சாலையில் காவல் துறையினரின் கடுந்தாக்குதலால் 1939 சனவரி 15 ஆம் நாள் இரவு இறந்தார். இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் முதல் களப்பலி நடராசன் ஆவார். பின்னர் இதே போராட்டத்திற்காகக் கைது செய்யப்பட்ட தாளமுத்து என்ற இளைஞரும் மார்ச் 12-ல் சிறையில் உயிர்விட்டார். இந்த இரண்டு இளைஞர்களின் உயிர்த்தியாகம் இந்தி மொழிக்கு எதிரான போராட்டத்தை வேகப்படுத்தியது. பல இளைஞர்களையும் போராட்டக்களத்துக்கு அழைத்து வந்தது இவர்களின் இறப்பு. மொழிப் போராட்டம் நாளுக்கு நாள் வலுத்துக் கொண்டே சென்றது. இதன் எதிரொலியாகச் சிறையில் அடைக்கப்பட்டிருந்த பெரியார் திடீரென 1939 மே 22 அன்று விடுதலை செய்யப்பட்டார்.

## இரண்டாம் உலகப் போர்

இந்தி எதிர்ப்புப் போராட்டம் தீவிரமடைந்து வந்த நிலையில், நீதிக்கட்சியின் தலைமையை ஏற்றிருந்தார் பெரியார். இந்நிலையில் இரண்டாம் உலகப்போர் தொடங்கியது. நேச நாடுகளுக்கு ஆதரவாக இந்தியா செயல்படும் என இந்தியாவிற்கான வைசிராய் அறிவித்தார். இதனால் கோபம் கொண்ட காங்கிரசு இயக்கம் தங்களைக் கேட்காமல் எடுத்த இம்முடிவிற்கு எதிர்ப்புத் தெரிவித்து அவர்கள் ஆட்சி செய்த எட்டு மாகாணங்களில் இருந்து பதவி விலகியது. இதன்படி 1939 அக்டோபர் 28 அன்று சென்னை மாகாண முதலமைச்சராக இருந்த இராசாசியும் பதவி விலகினார். மாற்று அரசை அமைக்க வேண்டிய சூழலில் நீதிக்கட்சியை ஆட்சிப் பொறுப்பேற்க அழைத்தார் ஆளுநர். ஆளுநரின் கோரிக்கையை நிராகரித்தார் பெரியார். இதனால் அட்வைசரி என்கின்ற ஆலோசனைக் குழு ஆட்சி அமல்படுத்தப்பட்டது. இந்த அட்வைசரி ஆட்சிதான் இந்தி மொழிப் போராட்டத்திற்குத் தற்கால முற்றுப்புள்ளி வைத்தது. உயர்நிலைப் பள்ளிகளில் முதல் மூன்று படிவங்களில் இந்தி ஒரு பாடமாக இருந்தது ரத்து செய்யப்பட்டது. விருப்பப் பாடப் பட்டியலில் இருந்தும் இந்தி அகற்றப்பட்டது. இதற்காக 1940-ல் திருவாரூரில் நடைபெற்ற நீதிக்கட்சி மாநாட்டில் நன்றி தெரிவிக்கப்பட்டது.

இரண்டாம் உலகப் போரில் ஆங்கிலேயருக்கு எதிரான நிலைப்பாட்டைக் காங்கிரசு எடுத்திருந்தது. ஆங்கிலேயப் படைகள் சார்ந்திருந்த நேச நாடுகள் போரில் தோற்க வேண்டும் என எண்ணினர் காங்கிரசுத் தலைவர்கள். அதற்கு மாறாக நீதிக்கட்சி ஆங்கிலேயருக்கு ஆதரவு தரும் எனப் பெரியார் அறிவித்தார். ஆங்கிலேயருக்கு ஆதரவு அளிப்பது பற்றி விளக்கும் விதமாகப் பெரியார், போரில் பிரிட்டிஷார் வெற்றி பெற வேண்டும்

என்பதற்காக நீதிக்கட்சி ஆதரவு தெரிவிக்கவில்லை என்றும் பிரிட்டிஷாருக்குப் பதிலாக வேறொரு அந்நியர் ஆட்சி வந்துவிடக் கூடாது என்பதற்காகவே ஆதரவு அளிக்கிறோம். ஒருவேளை பிரிட்டிஷார் தோல்வியடைந்தால் ஜெர்மனி ஆட்சி வரக்கூடும். ஹிட்லர் தன்னை ஆரியன் என அறிவித்துக் கொண்டவர். ஆகவே புதிய ஆரியன் வரக்கூடாது என்பதற்காகவே பிரிட்டிஷாருக்கு ஆதரவு என்றார்.

திராவிட நாடு கோரிக்கை வலுவுற்றிருந்த காலத்தில் முஸ்லீம் லீக் தலைவர் முகமது அலி ஜின்னாவின் பாகிஸ்தான் பிரிவினைக் கோரிக்கை, பெரியாரை மகிழ்ச்சி கொள்ளச் செய்தது. அதனை வரவேற்றுப் பத்திரிகையில் தலையங்கம் எழுதினார். மேலும் 1940 ஜுன் 2-ல் காஞ்சிபுரத்தில் திராவிட நாடு பிரிவினை மாநாடு என்ற பெயரில் மாநாடு ஒன்றை ஏற்பாடு செய்தார். அம்மாநாட்டில் பல முக்கியத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இம்மாநாட்டில் திராவிட நாட்டின் வரைபடத்தைப் பெரியார் திறந்து வைத்தார். இந்தியா, இந்திய தேசம், இந்தியன் என்னும் பிணைப்புகளில் இருந்து திராவிட நாடு தனியாகப் பிரிக்கப்பட்டு, அதற்கெனத் தனி அரசை அமைத்து, தனி மாநிலமாக ஆக்கிக் கொடுக்க வேண்டும் என ஆங்கிலேய அரசைக் கேட்டுக் கொள்ளும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தொடர்ந்து திராவிட நாடு பிரிவினை மாநாடு ஆகஸ்டு 24, 1940 அன்று நீதிக்கட்சியின் 15வது மாகாண மாநாடு திருவாரூரில் பெரியார் தலைமையில் நடைபெற்றது. இம்மாநாட்டில் மொத்தம் 35 தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அதில் முக்கியமானது திராவிடர்களுடைய கலை, நாகரிகம், பொருளாதாரம் ஆகியன முன்னேற்றம் அடைவதற்கு, பாதுகாப்பதற்குத் திராவிடர்களின் தலைநகரமாகிய சென்னை மாகாணம் இந்திய அமைச்சரின் நேர்பார்வையின் கீழ் ஒரு தனி நாடாகப் பிரிக்கப்பட வேண்டும் என்ற தீர்மானமாகும். இதனை முன்மொழிந்தவர் சண்டே அப்சர்வர் இதழின் ஆசிரியர் பி.பாலசுப்பிரமணியம்; ஆதரித்துப் பேசியவர் சி.என்.அண்ணாதுரை ஆவர். திருவாரூர் மாநாடு நீதிக்கட்சி மத்தியில் பலத்த உற்சாகத்தை ஏற்படுத்தியது. அதே உற்சாகத்துடன் 1941 பிப்ரவரி 16ல் நீதிக்கட்சி நிர்வாகக் குழுக் கூட்டம் தெலுங்கு மொழி அதிகம் பேசும் பகுதியான மசூலிப்பட்டிணத்தில் கூடியது. சென்னை மாகாணத்தில் இருந்து ஆந்திரா தனி மாகாணமாகப் பிரிக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை உச்சத்தில் இருந்த காலக்கட்டம் அது. அக்காலக்கட்டத்தில் ஆந்திரப் பிரிவினையில் நீதிக்கட்சியின் நிலைப்பாடு என்ன என்பதை விளக்கும் விதமாகத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அத்தீர்மானம் சென்னை மாகாணத்தில் இருந்து ஆந்திர மாகாணம் பிரிக்கப்படுவதை நீதிக்கட்சி ஆதரிக்கின்றது என்பதாகும். ஆந்திரப் பிரிவினையை நீதிக்கட்சி தொடக்க காலத்தில் இருந்தே ஆதரிக்கிறது என்பதற்கு அசைக்க முடியாத ஆதாரம் தான் நீதிக்கட்சி ஆட்சியில் இருந்த பொழுது உருவாக்கப்பட்ட ஆந்திரப் பல்கலைக்கழகம் ஆகும் என ஆதாரத்தைத் தெளிவுபடுத்தியது அந்த மாநாடு. இதனால் எதிர்க்கட்சியான காங்கிரசுக் கட்சியின் பொய்ப் பிரச்சாரத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது.

## திராவிட நாடு

சென்னை மாகாணத்தில் திராவிட நாடு பிரிவினை வலியுறுத்தப்பட்ட சமயத்தில் சி.என் அண்ணாதுரையால் தொடங்கப்பட்ட பத்திரிகை திராவிட நாடு ஆகும். விடுதலை என்னும் பத்திரிகையின் பொறுப்பாசிரியராக சி.என்.அண்ணாதுரை பணியாற்றிய காலத்தில் இரண்டாம் உலகப்போர் மூண்டது. போரில் ஜெர்மனி தலைமையிலான அணிக்கு அச்சு நாடுகள் என்றும் பிரிட்டன் தலைமையிலான அணிக்கு நேச நாடுகள் என்றும் பெயர். ஜெர்மனியின் ஆட்சியாளர் ஹிட்லர் தன்னை ஆரிய இனத்தின் பிரதிநிதி என அறிவித்துக் கொண்டதால் அவருக்கு எதிரான அணிக்கு அதாவது பிரிட்டன் தலைமையிலான நேச

நாடுகள் அணிக்கு ஆதரவளிப்பதுதான் சரியாக இருக்கும் என்ற பெரியாரின் கருத்தின் படி விடுதலைப் பத்திரிகையைப் போர்ப் பிரச்சாரம் செய்வதற்காகக் காணிக்கையாக்கினார். இச்செயலில் சி.என்.அண்ணாதுரைக்கு விருப்பமில்லை. சிறிதுகாலம் விருப்பமில்லாமல் பணியாற்றிய அவர் பிறகு அதில் இருந்து தன்னை விலக்கிக் கொண்டார். பிறகு தன் நண்பர்கள் உதவியுடன் 1942 மார்ச் 8-ல் திராவிட நாடு என்ற பத்திரிகையைக் காஞ்சிபுரத்தில் தொடங்கினார்.

அரசியல் பணிகளில் ஈடுபட்டிருந்த சமயத்திலேயே கலை, நாடகம் போன்றவற்றில் அண்ணாதுரைக்கு ஈடுபாடு அதிகம். எழுத்துத் திறமையும் இருந்தது. பல முக்கியத்துவம் வாய்ந்த கட்டுரைகளை அளித்தார். கட்டுரை மட்டுமல்லாமல் கதை, நாடகம், ஓரங்க நாடகம், தலையங்கம் போன்றவற்றையும் இயற்றினார். சௌமியன், ஒற்றன், சம்மட்டி, நக்கீரன், பரதன் போன்ற புனை பெயர்களில் அவர் எழுதினார்.

கிட்கிந்தையில் க்ரிப்ஸ், இந்து இட்லரிசம் போன்ற தலைப்புகளில் கட்டுரை எழுதிய சி.என்.அண்ணாதுரை, சில விமர்சனக் கட்டுரைகளையும், நையாண்டி தொடர் கட்டுரைகளையும் எழுதியது திராவிட நாடு இதழைச் சர்ச்சைக்குரிய இதழாகப் பிரபலப்படுத்தியது. கம்பரசம் தொடர் கட்டுரையாக வெளிவந்து சர்ச்சைகளைக் கிளப்பியது. திராவிட நாடு இதழ் மெல்ல மெல்ல வளர்ந்து கொண்டிருந்தது.

சி.என்.அண்ணாதுரையின் எழுத்து பல இளைஞர்களையும் நீதிக்கட்சியின் பக்கம் இழுத்தது. அவருக்கென்று ஒரு ரசிகர் வட்டம் உருவானது. அதுவே பிற்காலத்தில் தொண்டர் படையாக மாறத் தொடங்கியது. குறிப்பாக இரா.நெடுஞ்செழியன், க.அன்பழகன், மு.கருணாநிதி, இரா.செழியன், மா.நன்னன் போன்ற இளைஞர்கள் அண்ணாதுரையின் எழுத்துகளை வெகுவாக ரசித்தனர். சி.என்.அண்ணாதுரை மெல்ல மெல்ல 'அண்ணா'வாக மாறியிருந்தார். பெரியார் உட்பட அவரைச் சுற்றியிருந்தவர்கள் எல்லோரும் அவரை அண்ணா என்றே அழைத்தனர். இளைஞர்கள் கூட்டம் நீதிக்கட்சியை நோக்கி முன்னிலும் வேகமாக வர அண்ணா முக்கியக் காரணமாகத் திகழ்ந்தார்.

## கம்பராமாயணம் எதிர்ப்பு

1943-ல் பெரியாரும் அண்ணாவும் வலியுறுத்திய கருத்துகளுள் முக்கியமானது கம்பராமாயணமும், பெரியபுராணமும் எரிக்கப்பட வேண்டிய நூல்கள் என்பதாகும். இந்நூல்களுக்கு எதிராகப் பல கட்டுரைகளைப் பத்திரிகைகளில் எழுதி வந்தனர். அதற்கு நாளுக்கு நாள் வரவேற்பு அதிகரித்தது.

இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் பெரியார், அண்ணாவுடன் கைகோர்த்து நின்ற தமிழ் அறிஞர்கள் இந்த விசயத்தில் எதிர்த்து நின்றார்கள். இராமாயணம் மற்றும் பெரியபுராணம் தொடர்பாக நேரடி விவாதத்தில் ஈடுபட அண்ணா ஆர்வமாக இருந்தார். 1943 பிப்ரவரி 9 சென்னை சட்டக்கல்லூரி மண்டபத்தில் விவாத மேடை ஏற்பாடானது. அதில் அண்ணா, ஈழத்தடிகள், ரா.பி.சேதுபிள்ளை, சீனிவாசன் ஆகியோர் கலந்து கொண்டனர். கூட்டத்துக்குத் தலைமை வகித்தவர் இந்து மத பரிபாலன நிலையத்தின் தலைவர் சி.எம்.ராமச்சந்திரன் செட்டியார் ஆவார். அக்கூட்டத்தில் பேசிய அண்ணா, "கலையைக் குலைக்கும் செயலல்ல எமது செயல், கலையிலே புரட்சி உண்டாக்க உழைக்கின்றோம், தக்க காரணங்களோடு. தொல்காப்பியத்தைத் தொட்டோமில்லை, நற்றிணையை, நல்ல குறுந்தொகையை, கற்றறிந்தோர் ஏற்றுங்கலியை, அகத்தைப் புறத்தை அழிக்கப் புறப்பட்டோமில்லை; ஆரியத்தை அழகுறப் புகுத்தித் தமிழரை அறுக்கும் நூல்களையே

கண்டிக்கிறோம். இவ்விரு நூல்களைக் கொளுத்துவதால் தலைபோகும் என்று கூறும் பண்டிதர்களை நான் கேட்கிறேன். இவை இரண்டொழியத் தமிழனிடம் இலக்கியம் இல்லையா? கலை கிடையாதா? என்று. இராமாயணம் ஆரியக்கதை என்பதும் ஆரியர் திராவிடர் போராட்ட விவரம் என்பது ஆராய்ச்சியாளர்களின் முடிவு. அதனைக் கம்பர் எழுதியுள்ள முறை தமிழர் ஆரியத்தை ஏற்றுக்கொள்ளும் தூண்டுகோலாகவும் தமிழ் இனம் ஆரிய இனத்தலைவனிடம் தோற்றுவிட்டது என்பதை ஒப்புக்கொள்ளச் செய்வதுமாகவும் இருப்பதால் அந்நூலைப் படித்திடும் தமிழினம், தன்மானத்தையும் தன்னம்பிக்கையையும் இழந்து கெடுகின்றது என்று கூறுகிறோம். தமிழ் இனம் புத்துயிர் பெற இத்தகைய ஆரியக் கலையை அழிப்போம் என்றுரைக்கிறோம். . . . காடேக ராமன் கிளம்பும்போது உடன்வரப் புறப்பட்ட சீதையுடன் வாதிடுகையில், சீதை கூறும் மொழியின் பகுதியையும் சீதையை ராவணன் எடுத்துச் சென்ற விதத்தையும் வால்மீகி கூறியுள்ளபடியே கம்பர் எடுத்து எழுதியிருப்பின் அந்த ஆரியப் பாத்திரங்களிடம் ஆபாசக் குணங்கள் கிடந்ததைத் தமிழர் கண்டு, அவர்களைத் தெய்வங்களென்று போற்றும் கீழ்நிலைக்கு வந்திருக்கமாட்டார்கள். கம்பரோ, கவித்திறமையினால் ஆரிய ராமனைக் குற்றங்குறையற்ற சற்பாத்திரனாக்கிக் காட்டி வழிபாட்டுக்குரிய தெய்வமாக்கிவிட்டார். இராவணன் மிக்க வலிமைசாலி, திறமையுடையோன், வேதம் பயின்றோன், சிவபக்தன், இலங்கை சகல சுகமும் நிரம்பிய இடம் என்று வர்ணித்துவிட்டு இவ்வளவு குணாளனும் திறமைசாலியுமான ராவணன் ஓர் ஆரிய மங்கையைக் கண்டு காமுற்றுக் கருத்தழிந்து, அறம்விட்டு அழிந்தான் என்று முடிப்பது திராவிட இனப் பெருமைக்கு ஊறு தேடுவதாகும்”[29] என்ற தமது கருத்தை சுமார் ஒன்றரை மணி நேரம் பேச்சால் பதிவுசெய்தார். இராவணன் திராவிடன் அல்ல ஆரியனே என்பது ரா.பி.சேதுபிள்ளை அவர்கள் முன்வைத்த வாதம். இதுபோன்ற கருத்து யுத்தங்கள் தோன்றின. பெரியபுராணத்தையும் கடுமையாக விமர்சித்தார் அண்ணா. இராமாயணத்தையும் பெரியபுராணத்தையும் தீயிட்டு எரிக்க வேண்டும் என்றார் பெரியார். இந்த அறிவிப்பு மகிழ்ச்சியைத் தந்தது அண்ணாவுக்கு. ஏற்பாடுகள் நடந்தன. புராண எரிப்பு நிகழ்ச்சிக்கு உற்சாகமாகத் தயாராகிக் கொண்டிருந்த சமயத்தில் ஆர்.கே.சண்முகம் செட்டியாரின் தலையீடு காரணமாக இப்போராட்டத்தைக் கைவிடச் சொல்லிவிட்டார் பெரியார். அதைப்பற்றிப் பின்னாளில் அண்ணா கூறியது, “கம்பராமாயணத்தைக் கொளுத்துவதற்கெனப் பெரியார் அறிக்கை வெளியிட்டு, விசேச மாநாடு சேலத்தில் கூட்டப்பட்டது. நான் தலைமை வகித்தேன். காலை நிகழ்ச்சியிலே கூட கம்பராமாயணம் கொளுத்தப்பட வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியே சொற்பொழிவுகள் நடைபெற்றன. பிற்பகலிலே சர்.சண்முகம் தந்தி கொடுத்தார்; கொளுத்த வேண்டாம் என்று. அதன்படியே கொளுத்துவது அதே இடத்தில் அதே நேரத்தில் கைவிடப்பட்டது.”[30] எனக் குறிப்பிடுகிறார்.

திராவிட நாடு பத்திரிகை வளர்ச்சிப் பாதையில் சென்று கொண்டிருந்த போதும் நிதிப்பற்றாக்குறை இருந்து வந்தது. இதைச் சமாளிக்க ‘சந்த்ரோதயம்’ என்ற நாடகத்தை எழுதி நடித்தார் அண்ணா. 1943 நவம்பரில் நடத்தப்பட்ட சந்திரோதயம் நாடகத்தைப் பார்த்து பெரியார் ஆச்சரியப்பட்டார்; வாழ்த்தினார். கிடைத்த வசூலைக் கொண்டு திராவிட நாடு பத்திரிகை இயங்கியது. அதன்பிறகு அண்ணாவின் பல நாடகங்கள் நாத்திக, சுயமரியாதைச் சிந்தனைகளைப் பரப்புவதாக அமைந்தன. அண்ணா எழுதிய நாடகங்கள் மேடைகளில் போடும் பொழுது அவை நல்ல வரவேற்பைப் பெற்றன. கலைஞர்கள் பலரும் அண்ணாவுடன் நெருக்கம் காட்டினர். கலையும் அரசியலும் அண்ணாவைச் சூழ்ந்து கொண்டிருந்த காலக்கட்டம் அது.

## அண்ணாதுரை தீர்மானங்கள்

1944 ஆகஸ்டு 27 நீதிக்கட்சியின் பதினாறாவது மாகாண மாநாடு கூடியது. நீதிக்கட்சியின் பெயரை மாற்றம் செய்யும் முடிவுக்கு வந்திருந்த பெரியார், அதைப் பல்வேறு சமயங்களில் சொல்லி வந்தார். இந்நிலையில் சேலம் மாநாட்டில் கட்சியின் பெயரைத் '**திராவிடர் கழகம்**' என்று பெயர் மாற்றும் தீர்மானத்தை அண்ணாவின் வாயிலாகக் கொண்டு வந்தார் பெரியார். அம்மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட முக்கியத் தீர்மானங்களுள் சில.

1. கட்சியில் இருக்கும் உறுப்பினர்கள் அரசாங்கத்தால் அளிக்கப்பட்ட கவுரவப் பட்டங்கள் அனைத்தையும் திரும்பக் கொடுத்து விட வேண்டும்.

2. அரசாங்கத்தின் எந்த விதமான குழுவிலும் உறுப்பினராகவோ, பொறுப்புகளிலோ இருந்தாலும் அவற்றை உடனே ராஜினாமா செய்து விட வேண்டும்.

3. தேர்தலில் நிற்காமல் ஸ்தல ஸ்தாபனம் அல்லது ஜில்லா போர்டு, முனிசிபல் சபை, பஞ்சாயத்து போர்டு தலைவர், உபதலைவர் போன்ற பதவிகளில் அரசால் நியமனம் பெற்றவர்கள் தங்கள் பதவிகளை ராஜினாமா செய்ய வேண்டும்.

4. அரசாங்கத்தால் தொகுதி வகுக்கப்பட்ட எந்த விதமான தேர்தலுக்கும் கட்சி அங்கத்தினர்கள் நிற்கக் கூடாது.

என்பன குறிப்பிடத்தக்கனவாகும். இத்தகைய தீர்மானங்கள் அண்ணாவின் வாயிலாகக் கொண்டு வரவேண்டும் எனப் பெரியார் எண்ணியதன் பின்னணி அண்ணாவைப் பெரியார் நம்பாததே காரணம் ஆகும். ஏனெனில் சேலம் மாநாட்டில் இத்தீர்மானங்கள் கொண்டு வர இருப்பதை அறிந்த சிலர் கட்சிக்குள் குழப்பத்தை ஏற்படுத்த அண்ணாவைத் தங்கள் பக்கம் இழுக்க முயன்ற செய்தி பெரியாருக்கு வந்தது. ஆனால் அண்ணா அதற்கு இடம் கொடுக்கவில்லை. இருப்பினும் அண்ணா மீது இருந்த பெரியாரின் சந்தேகம் தீரவில்லை. அதனால் அண்ணா மீது கொண்ட சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்ளும் பொருட்டுச் சேலம் மாநாட்டில், தான் கொண்டு வர இருந்த தீர்மானங்களை அண்ணாவின் பெயரில் கொண்டு வந்தார். இதன்மூலம் பெரியாருக்கு அண்ணா மீது இருந்த சந்தேகம் தீர்ந்தது. எனினும் இந்நிகழ்வு பெரியாருக்கும் அண்ணாவுக்கும் இடையே பிளவு ஏற்பட அடிப்படையாக அமைந்தது.

## அண்ணாவின் திரைப்பயணம்

பெரியாருக்கு விருப்பம் இல்லை என்ற போதிலும் கலையுலகத்துடன் தன்னை இணைத்துக் கொள்வதில் அண்ணா தயக்கம் காட்டவில்லை. நாடகம், சினிமா மூலம் கிடைக்கும் பிரபல்யம், விளம்பரம் அனைத்தும் கட்சிக்குத் தான் லாபம்; இயக்கத்துக்குத்தான் வளர்ச்சி; கொள்கைக்குத் தான் வெற்றி என்பது அண்ணாவின் நம்பிக்கை.

கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணனுடன் அண்ணாவுக்கு நல்ல நட்பு இருந்தது. 1939இல் என்.எஸ்.கிருஷ்ணன் நடித்த 'மாணிக்கவாசகர்' என்ற திரைப்படம் அண்ணாவை வெகுவாகக் கவர்ந்தது. புரோகிதர்களுக்கு எதிரான கருத்துக்களைக் கொண்ட நாடகம் அது. 'சிரிக்காதே' என்ற படத்தில் போலிச் சாமியார்களை வெளுத்து வாங்குவார் என்.எஸ்.கிருஷ்ணன். அவரைப் பெரியாரிடம் அறிமுகம் செய்து வைத்தார் அண்ணா.

அவருக்காக 1948-ல் நல்லதம்பி என்ற படத்துக்குத் திரைக்கதை, வசனம் எழுதிக் கொடுத்தார். இந்தப் படத்தில் முற்போக்குச் சிந்தனை, மதுப்பழக்கத்திற்கு எதிர்ப்பு எனச் சமுதாயச் சிந்தனைகளை உருவாக்கும் கருத்துகள் இடம்பெற்றருந்தன. அதன்பிறகு அண்ணாவின் வெற்றிப்படமான 'வேலைக்காரி' வெளியானது. பிறகு முழுக்க முழுக்க பிராமண எதிர்ப்புச் சிந்தனைகளுடன் எழுதப்பட்ட நாடகம் சிவாஜி கண்ட இந்து ராஜ்யம் ஆகும். இதில் காகப்பட்டர் கதாபாத்திரத்தில் அண்ணாவே நடித்திருப்பார். பிராமண எதிர்ப்பு, புராண எதிர்ப்பு, வர்ணாசிரம எதிர்ப்பு என்பன போன்ற பெரியாரின் கொள்கைகள் யாவும் இடம்பெற்றிருந்தன. சிவாஜியாக வி.சி.கணேசன் என்ற இளம் நடிகர் நடித்திருந்தார். அவரே பிற்காலத்தில் சிவாஜிகணேசனாக மிகப் பெரும் நடிகராக வளர்ந்தவர் ஆவார். இவ்வாறு அண்ணாவுடன் தொடர்பு கொண்டவர்கள் தங்களைத் திராவிட இயக்கத்துடனேயே இணைத்துக் கொண்டனர். பல நடிகர்களும், கவிஞர்களும் திராவிட இயக்கக் கொள்கைகளை ஏற்றுச் செயலாற்றியதற்கு முக்கியக் காரணம் அண்ணாவே ஆவார். திரைத்துறை சார்ந்த கலைஞர்களைப் பெரியார் வெறுத்த நிலையில் அண்ணா ஆதரித்தார். அண்ணாவின் இப்போக்கும் பெரியாருக்கும் அண்ணாவுக்கும் கருத்து வேறுபாடு தோன்ற அடிப்படையாகும்.

## கறுப்புச் சட்டை ஏற்படுத்திய பிளவு

1945-ல் புத்தூரில் நடைபெற்ற திராவிடர் கழக மாநாட்டில் திராவிட விடுதலைப் படை (Dravidian Freedom Force) என்ற ஒன்றை உருவாக்கத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதன்படி செப்டம்பர் 29, 1945-ல் குடிஅரசு இதழில் அறிவிப்பு வெளியானது. கறுப்புச் சட்டைப் படை என்ற அமைப்பு அமைக்கப்பட்டது. திராவிட விடுதலைப் படை என்பது மாநாட்டில் நிறைவேறிய தீர்மானம். ஆனால் புதிதாக அமைக்கப்பட்டதோ கறுப்புச் சட்டைப் படை. கழகத் தோழர்கள் அனைவரும் கறுப்புச்சட்டை அணிய வேண்டும் என்று பெரியார் சொன்னார். எப்பொழுதும் கறுப்புச்சட்டை அணிந்திருக்க வேண்டும் என்பதில் அண்ணாவுக்கு உடன்பாடு இல்லை.

தொண்டர் படைக்குத் தேர்ந்தெடுக்கப்படுபவர் மட்டுமே கறுப்புச் சட்டை அணிய வேண்டுமே தவிர, கழகத்தினர் அனைவரும் அணியத் தேவையில்லை என்பது அண்ணாவின் கருத்து. இப்படி ஒரு வரைமுறை இல்லாமல் கறுப்புச்சட்டை அணிந்தால் அந்த ஆடைக்கு இருக்க வேண்டிய சிறப்பே சிதைந்து விடும் என்றார். இதைப்பற்றி அண்ணா பெரியாரிடம் பலமுறை வாதிட்டார். பெரியார் செவிமடுக்கவில்லை. கழகத் தோழர்கள் அனைவரும் கறுப்புச்சட்டை அணிய வேண்டுமென்பதில் பிடிவாதமாக இருந்தார். கறுப்புச் சட்டை அணியும் விவகாரத்தில் அண்ணாவைப் பெரியார் கடுமையாக விமர்சித்தார். இதனால் அண்ணா முடிந்த அளவு கழக நடவடிக்கைகளிலிருந்து ஒதுங்கியிருக்கத் தொடங்கினார். பெரியார் அண்ணா உறவில் விரிசல் வெளிப்பட இந்தக் கறுப்புச் சட்டைப் பிரச்சினை முதல் காரணமாக அமைந்தது.

மதுரையில் நடைபெற்ற கறுப்புச் சட்டைப் படை மாநாட்டில் ஏற்பட்ட கலவரத்தைப் பயன்படுத்திக் கருஞ்சட்டைப் படைக்கு அரசாங்கம் தடைவிதித்தது. இதை எதிர்த்து சென்னை நினைவு (மெமோரியல்) மண்டபத்தில் மாபெரும் கூட்டத்திற்குப் பெரியார் ஏற்பாடு செய்திருந்தார். இக்கூட்டத்திற்கு அனைவரும் கருஞ்சட்டை அணிந்தே வரவேண்டும் என்றும் பெரியார் அறிவித்திருந்தார். அனைவரும் கருஞ்சட்டை அணிந்தே வந்திருந்தார்கள். இக்கூட்டத்தில் அனைவரின் பார்வையும் அண்ணா மீது இருந்தது. காரணம் கறுப்புச்சட்டை விசயத்தில் மாறுபட்ட கருத்துக் கொண்டிருந்த அண்ணா என்ன

செய்யப்போகிறார் என்பதே அனைவரின் எதிர்பார்ப்பாக இருந்தது. அண்ணா பெரியாரின் வேண்டுகோளைக் கட்டளையாக ஏற்று எவரும் எதிர்பாராத முறையில் கறுப்புச்சட்டை அணிந்து, திடீரென்று மேடை மீது தோன்றினார். இதைக்கண்ட கூட்டத்தினர் மகிழ்ச்சி ஆரவாரத்தில் திளைத்தனர். கருஞ்சட்டைப் படையைத் தடைசெய்த அரசாங்கம் இந்தக் கூட்டத்தைத் தடுத்து நிறுத்த எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. பெரியார் எவ்வளவு வெறுப்பைக் காட்டினாலும் தலைவர் என்ற முறையில் அவரது ஆணையை ஏற்க அண்ணா தவறியதே இல்லை. இதற்குப் பெரியார் மீது அண்ணா கொண்ட அளவற்ற அன்பும் மரியாதையுமே காரணம் ஆகும்.

## 1946 பொதுத் தேர்தல்

திராவிடர் கழகம் அரசியலில் ஈடுபடப் போவதில்லை என்று முடிவு எடுத்திருந்த சூழலில் 1946 ஆம் ஆண்டு பொதுத் தேர்தல் அறிவிக்கப்பட்டது. அத்தேர்தலில் காங்கிரசு வெற்றி பெற்றது. பிரதான எதிர்க்கட்சியான திராவிடர் கழகம் களத்தில் இல்லாத சூழலில் காங்கிரசு பெற்ற வெற்றி இது. டி.பிரகாசம் முதல்வராகப் பொறுப்பேற்றார். இவர் பொறுப்பேற்றதும் வகுப்புவாரி இட ஒதுக்கீடு முறையில் சில மாற்றங்களைக் கொண்டு வந்தார். அதன்படி உயர்கல்விக் கல்லூரிகளில் சேர்க்கப்படும் மாணவர்களில் 20 சதவீதம் தகுதி - திறமை அடிப்படையில் சேர்க்கவேண்டும் என ஆணை பிறப்பிக்கப்பட்டது. இந்த உத்தரவால் பிராமண மாணவர்களே அதிக அளவில் பயன்பெறுவர். அதனாலேயே இந்த உத்தரவு பிறப்பிக்கப்பட்டது எனக் கூறி, திராவிடர் கழகம் இதைக் கடுமையாக எதிர்த்தது. இந்நிலையில் உள்கட்சிப் பூசல்கள் காரணமாக டி.பிரகாசம் முதல்வர் பொறுப்பில் இருந்து நீக்கப்பட்டு ஓமந்தூர் ராமசாமி முதலமைச்சராகத் தேர்வு செய்யப்பட்டார். ஓமந்தூர் ராமசாமி முதல்வரானதும் புதிய வகுப்புவாரி முறை ரத்து செய்யப்பட்டுப் பழைய முறையே நடைமுறைக்கு வந்தது.

## சுதந்திர தினம்

1947 ஆகஸ்டு 15 ஆம் நாள் இந்தியாவுக்குச் சுதந்திரம் தருவது தொடர்பாக ஆங்கிலேயர் முடிவுக்கு வந்திருந்தனர். இச்செய்தியினால் அனைவரும் மகிழ்ச்சியில் திளைத்தனர். சுதந்திரத் திருநாளை அனைவரும் சிறப்பாகக் கொண்டாட வேண்டும் என அனைத்துக் கட்சிகளும் எண்ணிச் செயலாற்றிக் கொண்டிருக்கையில் திராவிடர் கழகம் இதிலிருந்து விலகி நின்றது. மாறாக சுதந்திரத் தினத்தைத் துக்க தினமாக அனுசரிக்க வேண்டும் என்றார் பெரியார். பெரியாரின் அறிக்கைகள் வெளிவந்து கொண்டிருந்த பொழுது அண்ணா காஞ்சிபுரத்தில் இருந்தார். இதுகுறித்து, தன் ஆதரவாளர்களுடன் பேச சென்னை வந்தார் அண்ணா. அங்கு தனது ஆதரவாளர்களுடன் கலந்தாலோசித்து தனது கருத்தைப் பதிவு செய்திருந்தார். "இரண்டு நூற்றாண்டுகளாக இந்தத் துணைக் கண்டத்தின் மீது இருந்து வந்த பழிச்சொல்லை, இழிவை நீக்கும் நாள், அது திராவிடருக்குத் திருநாள்; துக்கநாள் ஆகாது"[31] என்பதைத் தெளிவுபடுத்துவதற்கான காரண காரிய விளக்கங்களைத் தந்து, நீண்டதொரு அறிக்கையைத் திராவிடநாடு இதழில் வெளியிட்டார். அது திராவிட இயக்க வரலாற்றில் மிகமிக முக்கியமானதொரு இடத்தைப் பெற்றது. பெரியாரிடம் தனது அறிக்கையைக் கொடுத்தனுப்பினார் அண்ணா. ஆனால் பெரியார் அதை ஏற்க மறுத்துவிட்டார். எனவே ஆகஸ்டு 15 பற்றிய அண்ணாவின் அறிக்கை திராவிடநாடு இதழில் 10 ஆகஸ்ட் 1947 அன்று 22 பக்கங்களுக்கு வெளியிடப்பட்டது. கிட்டத்தட்ட பெரியாருக்கும் அண்ணாவுக்கும் விரிசல் உறுதிப்படுத்தப்பட்ட சூழலாக அது அமைந்தது. சுதந்திர தினம் தொடர்பாகப் பெரியாரும் அண்ணாவும் வெளியிட்ட

அறிக்கைகள் கட்சிக்குள் பலத்த குழப்பங்களை ஏற்படுத்தியிருந்த சூழலில் திராவிடநாடு பிரிவினை மாநாடு 1947 செப்டம்பர் 14ல் கடலூரில் நடைபெற்றது. இம்மாநாட்டில் அண்ணா கலந்து கொள்ளவில்லை. விரிசல் விரிவடைவதைக் கழகத்தின் முக்கியத் தலைவர்கள் உணர்ந்தனர்.

இச்சூழலில் தான் காந்தியடிகள் 1948 சனவரி 30 அன்று கோட்சேவால் சுட்டுக்கொல்லப்பட்டார். இது நாடு முழுவதும் பெரும் அதிர்ச்சியை ஏற்படுத்தியது. இதைக் கண்டித்தார் பெரியார். "பார்ப்பான் ஒருவன் சுட்டான் என்ற காரணத்திற்காக அந்தப் பார்ப்பனரைத் திட்டி விடுவதாலோ அல்லது அந்தப் பார்ப்பனச் சமூகத்தையே அழித்து விடுவதாலோ எத்தகைய உருப்படியான பலனும் ஏற்பட்டுவிடாது. ஆகவேதான், அவனைக் கொன்றால் பலனில்லை என்றும் அவன் உற்பத்திக்குக் காரணமாயிருந்த மதத்தையும் கடவுளையும் அதற்கு ஆதாரமாக இருந்துவரும் அனைத்தையும் அழிக்க வேண்டும்"[32] என்றார் பெரியார்.

காந்தியைச் சுட்டுக் கொன்ற கோட்சே பார்ப்பன இனத்தைச் சேர்ந்தவராக இருந்ததால் காந்தி பக்தர்கள் பார்ப்பன மக்கள் மீது தாக்குதல் நடத்தக் கூடும். எனவே இந்தப் பதற்ற நிலையைத் தடுக்கும் வகையில் அண்ணாவை, சென்னை வானொலி நிலைத்தில் பேச அழைத்தனர். அண்ணாவும் சம்மதித்தார். "பயங்கரச் சக்தியொன்று கோட்சே உருவில் கிளம்பியது. அதன் பெயர் மத ஆதிக்க வெறி. அதனால் காந்தி கொலையுண்டார். உத்தமர் காந்தியை ஒரு தனிப்பட்ட மனிதரின் வெறிதான் கொன்றுவிட்டது. அதற்காகப் பார்ப்பன மக்கள் அத்தனை பேர் மீதும் பழிபோடக் கூடாது."[33] என்ற கருத்துகள் கொண்ட நீண்ட சொற்பொழிவை அண்ணா ஆற்றினார். அண்ணாவின் பேச்சு ஏற்படவிருந்த பெரும் கலவரத் தீயின் வேகத்தைத் தணித்தது என்றே கூறலாம்.

## மூன்று சிறுகதைகள்

பெரியாருக்கும் அண்ணாவுக்கும் இடையேயான கருத்து வேறுபாடுகள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே இருந்தன. அண்ணா கழகப் பணிகளில் இருந்து விலகி இருந்தார். இக்காலக்கட்டத்தில் அண்ணாவால் எழுதப்பட்ட மூன்று சிறுகதைகள் பெரியார் அண்ணா இருவரின் பிரிவையும் எடுத்துக்காட்டும் விதமாக அமைந்திருந்தன. அந்தச் சிறுகதைகள் மூலமும், அதில் வரும் பாத்திரங்கள் மூலமும் வசனங்கள் மூலமும் அண்ணா தனது கருத்தையும் அதிருப்தியையும் வெளிப்படுத்தினார். அச்சிறுகதைகள் ராஜ்பார்ட் ரங்கதுரை, இரும்பாரம், மரத்துண்டு ஆகியனவாகும்.

## மீண்டும் இந்தி

1948 ஜுன் 20 அனைத்து மொழிப் பகுதிகளிலும் இந்தி கட்டாயப் பாடமாக இருக்கும் என்ற அரசாணை வெளியானது. கருத்து வேறுபாடுகளால் பிரிந்திருந்த பெரியாரும் அண்ணாவும் இந்த இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் மூலம் இணைந்தனர். இந்தி எதிர்ப்பு மாநாடு சென்னையில் 1948 ஜுலை 17 ஆம் நாள் நடைபெற்றது. சிறிது கால இடைவெளிக்குப் பின் பெரியாரும் அண்ணாவும் ஒன்றாகத் தோன்றிய மேடை அது. இந்தித் திணிப்புக்கு எதிராகப் பலரும் பேசிய பிறகு அண்ணா பேசும்போது, "மறைமலை அடிகளாரும், திரு.வி.க. அவர்களும் இந்தி நுழைவால் தமிழ் கெடும், தமிழ்க் கலாசாரம் கெடும் என்று அழுத்தந் திருத்தமாகக் கூறிவிட்ட பிறகு, அவர்கள் சாட்சியம் நமக்குக் கிடைத்துவிட்ட பிறகு போர் முழக்கம் செய்வது தவிர நமக்கு வேறென்ன வேலையிருக்கிறது."[34] என்று கேட்டார். பிறகு பேசிய பெரியார், "தோழர் அண்ணா, நானும்

வந்துவிட்டேன் போராட்டத்தின் முன் நிற்க என்று சற்றுமுன் கூறியது போல நீங்கள் எல்லோரும் இந்தத் திராவிட நாட்டில் உள்ள ஒவ்வொரு ஆணும் பெண்ணும் சிறுவனும் சிறுமியும் முன்வர வேண்டும். நமது பிரிவினை உணர்ச்சியை ஒழிக்கத்தான் அவசர அவசரமாக இந்தியைக் கொண்டு வந்து புகுத்துகிறார்கள். இது எல்லோரும் ஒன்று சேரக் கூடிய நல்வாய்ப்பாக இருக்கிறது."[35] என்று பேசினார். அண்ணா மீண்டும் கழக நிகழ்ச்சியில் கலந்து கொண்டதை வரவேற்கும் விதமாகப் பெரியாரின் பேச்சு அமைந்திருந்தது. இருவருக்கும் இடையே கருத்து வேறுபாடுகள் இருந்தாலும் தமிழினத்தின் உரிமைகளுக்காக இணைந்து குரல் கொடுக்க இருவரும் தவறியதில்லை. அதை மீண்டும் இந்த இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டத்தின் மூலம் உணர்த்தினர்.

## ஈரோட்டு மாநாடு

இந்தி எதிர்ப்புப் போராட்டம் தீவிரம் பெற்றுக் கொண்டிருந்த காலக்கட்டம். மேலும் இப்போராட்டத்தைத் தீவிரப்படுத்த எண்ணிய திராவிடர் கழகம் தனது கழக மாநாட்டை 1948 அக்டோபர் 23ல் ஈரோட்டில் கூட்டியது. அம்மாநாட்டுக்குத் தலைமை வகித்தவர் அண்ணா ஆவார். அம்மாநாட்டில் பேசிய பெரியார், "நான் இந்தப் பொதுத் தொண்டிற்கு வந்து ஆண்டுகள் பலவாகிவிட்டன. ஏறக்குறைய நாற்பது வருடங்களாக உழைத்து வருகிறேன். இப்போது எனக்கு எழுபது வயதாகிவிட்டது. இனி மேலும் நான் எத்தனை நாளைக்கு உழைப்பேன் என்று எனக்குத் தெரியவில்லை. எனக்குப் பின்னர் உழைப்பதற்குப் பலர் இருக்கிறார்கள். ஆனால், அண்ணாதுரை ஒருவர் போதும் இந்தக் கழகத்தைக் கட்டிக் காத்து வழி நடத்திச் செல்வதற்கு அவர் நன்றாகப் படித்தவர்; சிறந்த பண்பாளர்; அதைவிட அவர் ஒரு பகுத்தறிவுவாதி; மிகச் சிறந்த பேச்சாளராகவும் எழுத்தாளராகவும் விளங்கி அனைவருடைய பாராட்டுகளையும் குறைவறப் பெற்றவர்; நம் அனைவருடைய அன்பையும் அபிமானத்தையும் பரிபூரணமாகப் பெற்றவர். வயதான தந்தை ஒரு குறிப்பிட்ட காலத்தில் முழுப் பொறுப்பையும் தன் அன்பு மகனிடம் ஒப்படைப்பதுதான் அறிவுடைமையாகும். ஆகவே, நான் இன்று எனது பெட்டிச்சாவியை உங்கள் அனைவர் முன்னால் அண்ணாவிடம் அளிக்கிறேன். . . . இதுவரை நான் செய்து வந்த பணிகளை விடவும் இனிமேல் அண்ணா சிறப்புடன் செய்வார் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு."[36] என்றார். பெரியாரின் பேச்சு இருவருக்கும் இடையேயான ஊடலுக்கு முற்றுப்புள்ளி வைக்க விரும்பும் விதமாக அமைந்திருந்தது. தலைமையுரையில் அண்ணா பேசும் பொழுது, "இன்று பெரியார் அவர்கள் கழகப் பெட்டிச் சாவியை என்னிடம் கொடுத்துவிடப் போவதாகவும் இனி நான் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கழகக் கடமைகளை ஆற்ற வேண்டும் என்பதாகவும் குறிப்பிட்டுப் பேசினார்கள். பெரியார் அவர்கள் அப்படியே பெட்டிச் சாவியை என்னிடத்தில் கொடுத்தாலும் சாவி மட்டும் தான் என்னிடத்திலே இருக்குமே ஒழிய பெட்டியும் அதிலுள்ள பொருளும் என்றென்றும் அவரிடத்திலேயே தான் இருக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்."[37] எனக் குறிப்பிட்டார்.

## பெரியார் - மணியம்மை திருமணம்

மூடநம்பிக்கையில் மூழ்கிக் கிடந்த தமிழகத்தைப் பல வழிகளிலும் சீரழிந்து கிடந்த தமிழகத்தைச் சீர்திருத்தத் தோன்றிய பெரியார் சாதிக் கொடுமைகளையும் வர்ணாசிரம தருமத்தையும் கடுமையாகச் சாடினார். அவரது புரட்சிகரமான சிந்தனைகள் அவரை சாக்ரடீஸ், கார்ல்மார்க்ஸ், இங்கர்சால் போன்றோரின் வரிசையில் வைத்தன. கடவுள் மறுப்புக் கொள்கையிலிருந்து சீர்திருத்தத் திருமணம் வரை அவர் பேசிய பேச்சுக்கள் மக்களைச் சிந்திக்கத் தூண்டின. மானுட வர்க்கத்தின் சரிபாதியாக இருக்கும் பெண்

இனத்தின் முன்னேற்றத்திற்கு அரும்பாடுபட்ட பெரியார், "பெண்ணடிமைத் தன்மையால் தான் நாடு பின் தங்கி விட்டது. அவர்களுக்குப் பொருத்தம் இல்லாமல் நடைபெறும் திருமணங்களையெல்லாம் ஒழித்துக் கட்ட வேண்டும்"[38] என்றார். மேலும், "என் போன்ற வயதானவர்கள் கல்யாணம் செய்து கொள்ள எண்ணக்கூடாது. எப்படியாவது அப்படி ஓர் எண்ணம் வந்து தொலைத்தால், தும்பு அறுந்ததாக (அதாவது விதவையாக), ஒரு நாற்பது ஐம்பது வயதானதாக, ஒரு கிழத்தைப் பார்த்துக் கலியாணம் செய்து தொலைக்கட்டுமே. பச்சைக் கொடிபோல ஒரு பெண்ணை, வாழ்வின் சுகத்தை அறிய வேண்டிய வயதும் பக்குவமும் கொண்ட பெண்ணைக் கலியாணம் செய்து கொள்வதா - காரணம் ஆயிரம் காட்டட்டுமே, காட்டினாலும் எந்த மானமுள்ளவன், அந்தக் கலியாணத்தைச் சரியென்று கூறுவான்? யாருக்குச் சம்மதம் வரும்?"[39] என்று பொருந்தாத் திருமணத்தைப் பற்றிப் பேசிய பெரியார் தனது 72வது வயதில் 26 வயதுள்ள பெண்ணைப் பதிவுத் திருமணம் செய்து கொள்கிறார் என்ற செய்தி கழகத் தொண்டர்களை மட்டுமல்லாது தமிழக மக்களிடையேயும் பெரும் அதிர்ச்சியை ஏற்படுத்தியது. இச்செய்தி கேட்டதும் கழகத்தின் பிற தலைவர்கள் இத்திருமணம் வேண்டாம், இதை நீங்கள் செய்யக் கூடாது என வலியுறுத்தியும் பெரியார் தன் நிலையிலிருந்து இறங்கி வரவில்லை.

பெரியாரின் திருமண ஏற்பாட்டிற்குப் பெருத்த எதிர்ப்பு இருப்பதை அறிந்த அண்ணா, பெரியாரைச் சந்தித்து வேண்டுகோள் விடுக்க ஒரு குழுவை அமைத்தார். அந்தக் குழுவினர் பெரியாரைச் சந்தித்து திருமணத்தைக் கைவிட வேண்டுமென்ற வேண்டுகோளை விடுத்தனர். பெரியாரோ அவர்களது வேண்டுகோளை நிராகரித்தார். தனது கருத்தை மாற்றிக் கொள்வதற்கில்லை என்று பெரியார் திட்டவட்டமாகத் தெரிவித்துவிட்டார்.

சி.பி.நாயகம் இல்லத்தில் திருமணப் பதிவாளர் முன்னிலையில் 9.7.1949-ல் மணியம்மையாரைப் பெரியார் திருமணம் செய்து கொண்டார். கழகத் தோழர்கள் மிகுந்த வேதனை அடைந்தனர். கோபமும் கொதிப்பும் அடைந்தவர்களை நோக்கி அண்ணா, "திருமணம் நடந்தேறிவிட்டது! இனிச்செய்ய வேண்டியது என்ன என்பதை அவசரமும் ஆத்திரமுமின்றி, தூண்டிவிடுவோர், தூபமிடுவோர், சிண்டு முடித்து விடுவோர், கண்டதைக்கிளறிப் பார்ப்போர், சந்தி சிரிக்க வைப்போர் ஆகியோருக்கு இரையாகாமல் யோசித்துத் தீர்மானிக்க வேண்டும்."[40] என ஆறுதல் கூறினார். திருமணம் நிகழ்ந்து கிட்டத்தட்ட இரண்டு மாதங்கள் கழகம் எந்தவிதச் செயல்பாடும் இன்றிக் காணப்பட்டது. பெரியாரின் இத்திருமணத்தை ஏற்காதவர்கள் அனைவரும் இயக்கத்தைப் பெரியாரிடம் இருந்து கைப்பற்ற வேண்டும், அவரைத் தலைவர் பதவியில் இருந்து நீக்க வேண்டும், விடுதலை இதழ் போன்ற இயக்கச் சொத்துக்கள் அனைத்தையும் காப்பாற்ற வேண்டும், அண்ணாவைத் தலைவராகத் தேர்ந்தெடுக்க வேண்டும் போன்ற கோரிக்கைகளை எழுப்பினர்.

"அண்ணாவின் திறமைகள் வீணாகி விடக் கூடாது; குறுகிய கொள்கையான பார்ப்பனீய எதிர்ப்பை ஒதுக்கிவிட்டால், அவரை விடப் பெரிய தேசியத் தலைவர்கள் யாரும் இல்லை; அப்படி ஒரு தலைவர் உருவாகக் காலம் வடித்துக் கொடுத்த சந்தர்ப்பம் தான் பெரியாரின் திருமணம்; அண்ணா தன்னுடைய நண்பர்களோடு சேர்ந்து சோசியலிஸ்ட் கட்சி என்ற பெயரில் கட்சி ஒன்றைத் தொடங்க வேண்டும்."[41] எனப் பிரபல எழுத்தாளரும் பத்திரிகையாளருமான கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்கள் அண்ணாவுக்குக் கடிதம் எழுதினார். ஒருகாலத்தில் 'தமிழ்நாடு தமிழருக்கே' என்று முழக்கம் எழுப்பிய போது, 'எலி வலை எலிகளுக்கே' என விமர்சனம் செய்த கல்கி அவர்கள் தற்பொழுது இவ்வாறு கடிதம் எழுதியிருந்தது, பார்ப்பனியத்தின் தீவிர எதிர்ப்பாளராக இருக்கின்ற பெரியாரிடத்தில்

இருந்து அண்ணாவைப் பிரிக்கும் நோக்கில் கல்கி எழுதியிருக்கக் கூடும் எனக் கருத இடமுள்ளது.

எல்லோர் கருத்தையும் ஆராய்ந்த அண்ணா ஒரு முடிவுக்கு வந்திருந்தார். "பெரியாரோடு மோதுவதன் மூலம் நமது நோக்கம் நிறைவேறாது. நாம் வளர்க்க விரும்பும் கழகமும் வளராது. நமக்கு இழப்புகள் தாம் மிகுவாக ஏற்படும். இறுதியில் சண்டையும் சச்சரவும் வழக்குகளும் மட்டும்தான் எஞ்சி நிற்கும். நான் எனது கருத்தை உங்கள் மீது திணிக்க விரும்பவில்லை. என் கருத்தை நீங்கள் ஏற்றுக்கொள்வதாக இருந்தால் இயக்கத்துக்கு வழிகாட்ட நான் ஆயத்தமாக இருக்கிறேன். நீங்கள் எல்லோரும் சேர்ந்து, திராவிடர் கழகத்தை வன்முறையால் கைப்பற்றித்தான் தீரவேண்டும் என்று முடிவு எடுப்பீர்களேயானால், உங்களது முடிவுக்கு நான் கட்டுப்படுகிறேன். ஆனால் அந்தக் கருத்துக்கு நான் தலைமை தாங்கமாட்டேன். உங்களில் ஒருவர் தலைமை தாங்கி வழிகாட்டுங்கள், நான் உங்களைப் பின்பற்றி நீங்கள் இடுகின்ற பணிகளை ஏற்றுச் செய்கிறேன்."[42] என்ற தனது கருத்தைக் கழகத் தோழர்களிடம் முன்வைத்தார். அண்ணாவின் கருத்துகளைக் கேட்ட கழகத் தோழர்கள் தனி இயக்கம் காணலாம் என முடிவு செய்தனர்.

## திராவிட முன்னேற்றக் கழகம் தோற்றம்

புதிய இயக்கம் காணலாம் என முடிவு செய்த கழகத் தோழர்கள் அப்புதிய இயக்கத்திற்கு 'திராவிட முன்னேற்றக் கழகம்' என்ற பெயரைச் சூட்டினர். கழகத்தின் கொடி மேல்பகுதி கறுப்பு நிறமாகவும், கீழ்பகுதி சிவப்பு நிறமாகவும் வடிவமைக்கப்பட்டது. கறுப்பு நிறம் அரசியல் பொருளாதார சமுதாய வாழ்வில் உள்ள இருண்ட நிலையைக் குறிக்கும் விதமாகவும் சிவப்பு அந்த நிலையை அகற்றி ஒளிவீசும் நிலையை உருவாக்கும் நோக்கத்தைக் குறிக்கும் விதமாகவும் அமைக்கப்பட்டது. திராவிட முன்னேற்றக் கழகத்தின் பொதுச் செயலாளராக அண்ணா தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## இராபின்சன் பூங்கா

புதிய கட்சியின் அறிவிப்பை முறைப்படித் தெரிவிக்க சென்னை இராபின்சன் பூங்காவில் பொதுக்கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. 1949 செப்டம்பர் 18 ஆம் நாள் மாலை 4மணி அளவில் கூட்டம் தொடங்கியது. கூட்டத்தில் பேசிய அண்ணா திராவிடர் கழகத்தில் ஏற்பட்ட மந்த நிலைக்கு, தான் எந்த விதத்திலும் காரணமாக அமையவில்லை. தலைவர் கொள்கையிலிருந்து தவறியதைச் சுட்டிக்காட்டித் தவறு எனத் தெரிவித்ததைப் பெரியார் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆகவே அவரைவிட்டு விலகி இன்று தனி இயக்கம் காணும் நிலைக்கு ஆளாக்கப்பட்ட விவரங்களை எல்லாம் இக்கூட்டத்தில் எடுத்துக்கூறினார். மேலும் திராவிட முன்னேற்றக் கழகம் திராவிடர் கழகத்துக்குப் போட்டியல்ல என்றும், திராவிடர் கழகத்தின் கொள்கைகளே திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கைகளாகும் என்றார். "இத்தனை ஆண்டுகளிலும் நான் அறிந்த தலைவர், நான் ஏற்றுக்கொண்ட தலைவர் பெரியார். வேறு தலைவர்களின் தலைமையை நான் எண்ணிக்கூடப் பார்க்க முடியாது. எனவே தி.மு.கவிற்குத் தலைவர் என்ற பதவி வேண்டாம். பெரியார் அமர்ந்த தலைவர் நாற்காலியில் வேறு ஒருவரை அமர்த்தவோ அல்லது நான் அமரவோ விரும்பவில்லை"[43] என்றார். திராவிடர் கழகமும், திராவிட முன்னேற்றக் கழகமும் இரட்டைக் குழல் துப்பாக்கி போல செயல்படும் எனவும் அறிவித்தார் அண்ணா.

## சிறையில் அண்ணா

1943 ஆம் ஆண்டு அண்ணா எழுதிய 'ஆரியமாயை' நூலுக்காக 1949 ஆம் ஆண்டு அவருக்குச் சிறைத்தண்டனை அளித்தது நீதிமன்றம். ஏற்கனவே இந்நூலுக்குத் தடை விதித்திருந்தது அப்போதைய சென்னை மாகாண அரசு. ஆறு ஆண்டுகள் கழித்து இப்பொழுது அதே நூலுக்கான வழக்கில் அண்ணாவுக்கு ரூ.700 அபராதம் அல்லது ஆறு மாதம் வெறுங்காவல் தண்டனை விதித்துத் தீர்ப்பு வெளியானது. அபராதம் செலுத்தவில்லை அண்ணா. சிறைக்குச் சென்றார். சிறையில் எதிர்பாராத நிகழ்வு ஒன்று நடந்தது. 'பொன்மொழிகள்' என்ற நூலுக்கான வழக்கில் சிறைத்தண்டனை வழங்கப்பெற்று அதே நாளில் அண்ணா அடைக்கப்பட்ட அதே சிறைச்சாலையில் பெரியாரும் அடைக்கப்பட்டார். அண்ணா சிறையில் அடைக்கப்பட்டது திமுகவினர் மத்தியில் கடும் கொந்தளிப்பை ஏற்படுத்தியது. இதனால் ஆங்காங்கு கண்டனப் பொதுக்கூட்டங்கள், போராட்டங்கள், கடையடைப்புகள் என நடந்தேறின. இதனால் அண்ணா சில நாள்களிலேயே விடுதலை செய்யப்பட்டார். அண்ணா விடுதலை செய்யப்பட்டதைத் திமுகவினர் வெற்றிக் கொண்டாட்டமாகக் கொண்டாடினர்.

## வகுப்புவாரி இட ஒதுக்கீடு சட்டத்திற்கு தடை (கம்யூனல் ஜீ.ஓ)

அரசு வேலை வாய்ப்பு மற்றும் கல்விக்கு வகுப்புவாரி அடிப்படையில் இடஒதுக்கீடு செய்யப்பட வேண்டும் என்பது தொடர்பாக 1928 ஆம் ஆண்டு பி.சுப்பராயன் தலைமையில் நடந்த நீதிக்கட்சி ஆட்சிக் காலத்தில் சட்டம் கொண்டு வந்து சட்டமன்றத்தில் நிறைவேற்றி இருந்தனர். இதனால் பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட வகுப்புகளைச் சேர்ந்தவர்கள் அரசு வேலைகளிலும் தொழில் நுட்பக் கல்லூரிகளிலும் நுழைவதற்கு வாய்ப்புகள் ஏற்பட்டன. இந்தச் சூழ்நிலையில் இச்சட்டத்தை எதிர்த்துப் பிராமணர்கள் உயர்நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தனர். வகுப்பு வாரி இட ஒதுக்கீடு ஆணைகள் இந்தியச் சட்டத்திற்கு முரண்பட்டு உள்ளதாகக் கூறி அதை ரத்து செய்ய வேண்டும் எனக் கூறினர். வழக்கை விசாரித்த நீதிபதிகள் வகுப்பு வாரி இட ஒதுக்கீட்டுக்குத் தடை விதித்தனர். உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பு மாணவர்கள் மத்தியில் கடும் கொந்தளிப்பை ஏற்படுத்தியது. இத்தீர்ப்பை எதிர்த்து, திராவிடர் கழகமும் திராவிட முன்னேற்றக் கழகமும் போராட்டத்தில் இறங்கின.

இத்தீர்ப்பை எதிர்த்து உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்தது சென்னை மாகாண அரசு. ஆனால் உச்சநீதிமன்றமும் உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பு செல்லும் எனத் தீர்ப்பு அளித்தது. நீதிமன்றங்கள் கைவிரித்த நிலையில் எஞ்சி இருந்தது ஒரே வாய்ப்பு. அது, அரசியல் சட்டத்தில் திருத்தத்தைக் கொண்டு வருவதுதான் என்ற கருத்து பலராலும் வலியுறுத்தப்பட்டது. இந்து, இந்தியன் எக்ஸ்பிரஸ், ஆனந்த விகடன், கல்கி போன்ற ஏடுகள் அரசியல் சட்டத்தைத் திருத்தக் கூடாது என வலியுறுத்தின.

திராவிடர் கழகமும், திமுகவும் கண்டனப் பொதுக் கூட்டங்கள், ஊர்வலங்கள், மறியல்கள் என நாளுக்கு நாள் போராட்டங்களைத் தீவிரப்படுத்திக் கொண்டே இருந்தன. மாகாணப் பிரச்சினை தேசியப் பிரச்சினையாக உருவாகிக் கொண்டிருப்பதை உணர்ந்த நேரு 1951-ல் அரசியல் சாசனத்தைத் திருத்துவது என்ற முடிவுக்கு வந்தார். அதன்படி 1951 ஜூன் 2 ஆம் நாள் இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் வகுப்பு வாரி இட ஒதுக்கீட்டு ஆணை செல்லும் விதமாகத் திருத்தம் செய்யப்பட்டு, "இந்த ஷரத்திலோ அல்லது ஷரத்து 29(2)லோ உள்ள எதுவும் குடிமக்களின் எந்தவொரு சமூக மற்றும் கல்வி ரீதியாகப் பிற்படுத்தப்பட்டுள்ள வகுப்பின் அல்லது தாழ்த்தப்பட்ட சாதியின் மற்றும் பழங்குடியினரின் முன்னேற்றத்துக்காக எந்தவொரு சிறப்பு நடவடிக்கை எடுப்பதில் இருந்தும் அரசைத்

தடுக்காது."[44] என்பது சேர்க்கப்பட்டது. இதுவே இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் முதல் திருத்தம் ஆகும்.

## 1952 பொதுத் தேர்தல்

திராவிடர் கழகம், தேர்தலில் போட்டியிடுவது இல்லை என்ற தனது கொள்கையில் நின்றது. ஆனால் காங்கிரசை அழிப்பதே தனது நோக்கமாகக் கொண்ட பெரியார் காங்கிரசுக்கு எதிராக நிலைப்பாட்டை எடுத்தார். கம்யூனிஸ்டு கட்சியைப் பெரியார் ஆதரித்தார். 1952 பொதுத் தேர்தலில் புதிதாகத் தோன்றிய திமுகவின் நிலைப்பாடு என்ன என்பதை அறிய அனைவரும் ஆவலாக இருந்த சூழலில் திமுக காங்கிரசு அல்லாத பிற நாணயமுள்ளவர்களையும், முற்போக்குச் சிந்தனைகளைக் கொண்டவர்களையும், கம்யூனிஸ்டுகளையும் ஆதரிப்பது என்றும், ஆதரவு வேண்டுபவர்கள் திமுக தலைமை குறிப்பிடும் ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டுத் தர வேண்டும் எனவும், அவர்களுக்குத் திமுக ஆதரவு தரும் எனவும் தெரிவிக்கப்பட்டது. அதன்பின் வன்னியர் சங்கம் என்ற பெயரில் செயல்பட்டு வந்த இயக்கம் உழைப்பாளர் கட்சி எனப் பெயர் மாற்றம் செய்யப்பட்டுத் தேர்தலில் களம் கண்டது. அதன் தலைவர் ராமசாமி படையாட்சி திமுகவின் ஆதரவைக் கோரினார். அதேபோல மாணிக்கவேல் நாயக்கரும் காமன்வீல் என்ற கட்சியை நடத்தி வந்தார். அவரும் திமுகவின் ஆதரவை வேண்டினார். இருவரும் திமுகவின் நிபந்தனைகளை ஏற்பதாக உறுதிமொழி கொடுத்தனர். கம்யூனிஸ்டுகளுக்கு ஆதரவாக திராவிடர் கழகமும், உழைப்பாளர் கட்சி, காமன்வீல் மற்றும் பிற சுயேட்சைகளுக்குத் திமுகவும் தேர்தலில் வேலை செய்தன. சென்னை மாகாணத்தில் 375 இடங்களுக்கு நடைபெற்ற தேர்தலில் காங்கிரசுக் கட்சி 152 இடங்களைக் கைப்பற்றியது. பிற கட்சிகள் அனைத்தும் சேர்த்து 167 உறுப்பினர்களைக் கொண்ட ஐக்கிய ஜனநாயக முன்னணி ஆட்சி அமைக்க ஆளுநரிடம் கோரியது. ஆளுநர் காங்கிரசை ஆட்சி அமைக்க அழைத்தார். இராசாசி முதல்வராகப் பொறுப்பேற்றார். திமுகவின் ஆதரவுடன் வெற்றி பெற்றிருந்த உழைப்பாளர் கட்சி, காமன்வீல் கட்சி ஆகியன காங்கிரசுடன் இணைந்து கொண்டன. திமுக முதல் துரோகச் செயலைச் சந்தித்தது.

## குலக்கல்வித்திட்டம்

இராசாசி முதல் அமைச்சர் பொறுப்பை ஏற்றதும் புதிய கல்வித்திட்டம் ஒன்றை அமல்படுத்தினார். இக்கல்வித்திட்டம் பெரிய எதிர்ப்புக்கு ஆளானது. அதன்படி ஆறுவயது முதல் பதினோரு வயது வரையுள்ள சிறுவர்கள் பாதி நாள் படிப்பு, மீதி நாள் அவரவர் குடும்பத் தொழிலைக் கற்றுக் கொள்ள வேண்டும், பெண்கள் வீட்டு வேலைகள் செய்யக் கற்றுக்கொள்ள வேண்டும் என்றார். குலத்தொழிலைக் கற்றுக்கொள்வதால் குலக்கல்வித் திட்டம் என்ற பெயருடன் இத்திட்டம் எதிர்ப்பைச் சந்தித்தது. இதனால் மாடு மேய்ப்பது, மண்பாண்டம் செய்வது, மரம் வெட்டுவது, மரவேலை செய்வது, செருப்புத் தைப்பது, குப்பை கூட்டுவது, துணி துவைப்பது போன்ற குடும்பத்தில் பிறந்தவர்கள் அந்தந்தத் தொழிலையே செய்ய வேண்டும்; வேறு வேலையைப் பற்றி அவர்கள் சிந்திக்கக் கூடாது. அதுதான் புதிய கல்வித்திட்டம். இதன் மறுபெயர் குலக்கல்வித்திட்டம். அதாவது தந்தை தொழிலை மகன் தொடர்ந்து செய்ய வேண்டும். மாடு மேய்ப்பவன் மகன் மாட்டைத்தான் மேய்க்க வேண்டும், அவனுக்கு வேறு கல்வியோ, தொழில் முன்னேற்றமோ தேவையில்லை. இராசாசியின் இந்தக் குலக்கல்வித் திட்டத்தைத் திராவிடர் கழகமும், திமுகவும் கடுமையாக எதிர்த்தன. இராசாசி பிடிவாதமாகத் தமது திட்டத்தைக் கைவிட மறுத்தார். அதனால் போராட்டம் வெடித்தது.

இதற்கு முன் தமிழக ஆந்திரா எல்லை பிரிப்புப் பிரச்சினை வெடித்தது. தமிழ் மொழி அதிகம் பேசும் சித்தூர் மாவட்டம் ஆந்திராவுடன் இணைக்கப்பட்டது. சித்தூரைத் தமிழகத்துடன் இணைக்க வேண்டி மா.பொ.சிவஞானம் போராட்டத்தைத் துவங்கினார். திமுக இப்போராட்டத்திற்கு ஆதரவு கொடுத்துப் போராடியது. இப்போராட்டத்தை நேரு முட்டாள்தனமான காரியம் என விமர்சனம் செய்தார். இதனால் ஆத்திரம் அடைந்திருந்த திமுகவினரை அண்ணா சமாதானம் செய்து வைத்திருந்தார். தக்க சமயம் வரும்போது நாம் எதிர்ப்பைத் தெரிவிக்கலாம் எனத் தொண்டர்களுக்குக் கூறியிருந்தார்.

அதேபோல் கல்லக்குடி என்ற ஊரின் பெயரை டால்மியாபுரம் என்று மாற்றியதற்கு எதிர்ப்புத் தெரிவித்து அதை மீண்டும் கல்லக்குடி எனப் பெயர் மாற்றம் செய்ய வேண்டும் என்பதை வலியுறுத்தி, திமுக போராட்டத்தில் ஈடுபட முடிவு செய்திருந்தது. இவ்வாறு இந்த மூன்று பிரச்சினைகளையும் கையில் எடுத்துக் கொண்டு திமுக மும்முனைப் போராட்டத்தை நடத்த முடிவு செய்திருந்தது. இம்மும்முனைப் போராட்டத்தால் திமுகவின் மதிப்பு உயர்ந்தது.

குலக்கல்வித் திட்டத்தை எதிர்த்து முதல்வர் இராசாசி வீட்டு முன்பு நடத்திய தமிழர்களின் போராட்டங்களைக் காட்டுமிராண்டிகளின் போராட்டமென்றும் 'நான்சென்ஸ்' என்றும் கூறிய நேருவைக் கண்டித்து ரயில் நிறுத்தப் போராட்டம், டால்மியாபுரம் என்ற பெயர் இருந்த இடங்களில் எல்லாம் அப்பெயர் மேல் கல்லக்குடி என்று அச்சிடப்பட்ட தாள்களை ஒட்டும் போராட்டம் எனப் போராட்டங்களை நடத்தினர் திமுகவினர். டால்மியாபுரம் என்ற பெயரை மாற்றும் போராட்டத்தின் போது புகைவண்டி நிலையத்துக்குள் சென்ற கருணாநிதி தலைமையிலான திமுகவினர் டால்மியாபுரம் என்றிருந்த பலகையில் கல்லக்குடி என்ற தாளை ஒட்டினர். மேலும் கல்லக்குடி என்ற பெயர் மாற்றத்தை வலியுறுத்தி ரயில் தண்டவாளத்தில் போராட்டக்குழுவினருடன் தலை வைத்துப் படுத்ததால் ஏற்பட்ட தகராறில் துப்பாக்கிச்சூடு நடத்தப்பட்டது. இதில் இரண்டு பேர் உயிரிழந்தனர். எதிர்க்கட்சிகளின் போராட்டங்கள் தீவிரமடைந்து கொண்டிருந்த நிலையில் காங்கிரசுக் கட்சிக்குள்ளேயே இக்குலக்கல்வித்திட்டத்திற்கு எதிர்ப்புக் கிளம்பியது. இதனால் இராசாசி உடல்நிலை சரியில்லை என்ற காரணத்தைக் கூறி முதலமைச்சர் பதவியில் இருந்து விலகினார். அவருக்குப் பதிலாக 1954 அன்று முதலமைச்சராகக் காமராசர் பதவியேற்றார். காமராசர் முதலமைச்சர் பொறுப்பை ஏற்றுக்கொண்டதும் உடனடியாகக் குலக்கல்வித் திட்டத்துக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. குலக்கல்வித்திட்டம் திரும்பப் பெறப்பட்டது. இத்திட்டம் திரும்பப் பெறப்பட்டது பெரியாருக்கு மிக்க மகிழ்ச்சி. காமராசரை வெகுவாகப் பாராட்டினார். தொடர் போராட்டத்திற்குக் கிடைத்த வெற்றி இது எனத் திமுகவினர் கொண்டாடினர். இதற்கு நன்றிக்கடனாக இடைத்தேர்தலில் போட்டியிட்ட காமராசரைத் திராவிடர் கழகமும், திமுகவும் ஆதரித்தன. காமராசர் தேர்தலில் வெற்றி பெற்று சட்டமன்ற உறுப்பினரானார்.

## திமுகவின் முதல் பொதுத்தேர்தல்

1952 ஆம் ஆண்டுத் தேர்தலில் திமுக ஆதரவளித்த கட்சியினர் காங்கிரசுடன் இணைந்ததினால் இனி வேறு கட்சிகளுக்குத் தங்களது ஆதரவை அளிக்கத் திமுக தயாராக இல்லை. 1957 ஆம் ஆண்டு நடைபெற இருக்கும் தேர்தலில் திமுக போட்டியிட வேண்டும் என்ற கருத்து திமுகவுக்குள் எழுந்தது. 1956 ஆம் ஆண்டு திருச்சியில் திமுக மாநாடு நடைபெற்றது. தேர்தலில் போட்டியிட அனுமதி கோரும் மாநாடாகவும் இது அமைந்தது. இம்மாநாட்டிற்கு வந்த மக்களிடம் திமுக தேர்தலில் போட்டியிடுவது தொடர்பாகக் கருத்து கேட்கப்பட்டது. வாக்கெடுப்பு மூலம் இதை அறிய இரண்டு பெட்டிகள் மாநாட்டுப் பந்தலில் வைக்கப்பெற்றன. தேர்தலில் கலந்து கொள்ளவேண்டும் என்போர்

சிவப்பு நிறப்பெட்டியிலும், வேண்டாம் என்போர் கருப்பு நிறப்பெட்டியிலும் வாக்களிக்க வேண்டுமாய்க் கேட்டுக் கெள்ளப்பட்டது. முடிவில் ஐம்பத்தாறாயிரத்துக்கு மேற்பட்டோர் வேண்டும் எனவும், 4203 பேர்கள் வேண்டாம் எனவும் வாக்களித்தனர். இதன்மூலம் திமுக வரும் தேர்தலில் போட்டியிடும் என்ற தீர்மானம் மாநாட்டில் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது.

## 1957 தேர்தல்

1957 ஆம் ஆண்டுத் தேர்தலில் திமுக காங்கிரசுக்குக் கடுமையான போட்டியை ஏற்படுத்தியது. இதுபற்றி அண்ணா, "நாம் தேர்தலில் ஈடுபடுவது இதுவே முதல் தடவையாகும் என்பது மட்டுமல்ல; பலம் பொருந்திய காங்கிரஸ் ஆட்சிக்கும் தேர்தலில் பலமான போட்டி ஏற்படுவதும் இதுவே முதல் தடவையாகும்."[45] என்றார். இத்தேர்தலில் சட்டமன்றத்திற்கு 205 இடங்களிலும், பாராளுமன்றத்திற்கு 41 தொகுதிகளிலும் காங்கிரஸ் போட்டியிட்டது. 124 சட்டமன்றத் தொகுதிகளிலும், 11 பாராளுமன்றத் தொகுதிகளிலும் திமுக போட்டியிட்டது. அண்ணா காஞ்சிபுரத்தில் போட்டியிட்டார். சேலத்தில் நெடுஞ்செழியனும், குளித்தலையில் மு.கருணாநிதியும் போட்டியிட்டனர்.

## பெரியாரின் எதிர்ப்பு

குலக்கல்வித்திட்டத்தை ரத்து செய்ததற்காகக் காமராசரைப் பாராட்டியதுடன் அதிலிருந்து அவரை ஆதரிக்கவும் செய்தார் பெரியார். இதே நிலைப்பாட்டில் 1957 தேர்தலில் காமராசருக்கும், காங்கிரசுக்கும் ஆதரவாகச் செயல்பட்டார். தன்னில் இருந்து பிரிந்து சென்ற திமுகவை மிகக் கடுமையாகச் சாடினார். அண்ணா போட்டியிடும் காஞ்சியில் சென்று காங்கிரசு வேட்பாளர் சீனிவாசன் என்பவரை ஆதரித்தும் அண்ணாவை எதிர்த்தும் பிரச்சாரம் செய்தார். காங்கிரசு வேட்பாளர் ஒரு பிராமணர். அதைப் பற்றிப் பெரியார் கவலைப்படவில்லை. திமுகவையும் அண்ணாவையும் எதிர்க்க முதலில் காங்கிரசை ஆதரிக்கத் தயாரான பெரியார், பிறகு பிராமணரை ஆதரிக்கவும் தயாராக இருந்தார் என்பதை இப்பிரச்சாரத்தின் மூலம் அறியமுடிகின்றது.

தேர்தல் முடிந்து முடிவுகள் வந்தன. காங்கிரசு 151 இடங்களில் வெற்றி பெற்றது. காங்கிரசில் இருந்து பிரிந்த காங்கிரசு சீர்திருத்தக் கட்சி 16 இடங்களில் வெற்றி பெற்றிருந்தது. யாரும் எதிர்பாராத வகையில் திமுக 15 இடங்களைக் கைப்பற்றி மூன்றாவது இடத்துக்கு வந்திருந்தது. காங்கிரசுக்கு அடுத்த பெரிய கட்சியான கம்யூனிஸ்டு வெறும் நான்கு இடங்களை மட்டுமே பெற்றது. மீண்டும் காமராசர் முதல்வர் பொறுப்பை ஏற்றார். எதிர்க்கட்சிகளின் வரிசையில் சட்டமன்றக் கடமையாற்ற அண்ணா தலைமையில் திமுகவினர் சட்டமன்றம் புகுந்தனர். 1957 தேர்தல் முடிவுக்குப் பின் மக்களின் மனப்போக்கைத் துல்லியமாகக் கணித்த அண்ணா இன்னும் பத்து ஆண்டில் திமுக ஆட்சியைப் பிடிக்கும். அதற்குப் பின் காங்கிரஸ் ஆட்சியைப் பிடிப்பது என்பது கனவுதான் என்றார். அண்ணாவின் தீர்க்க தரிசனமான வார்த்தைகள் மெய்ப்பட்டுள்ளதை இன்றைய அரசியல் சூழல் உணர்த்துகின்றது.

## தமிழ்நாடு பெயர் மாற்றக் கோரிக்கை

பதினைந்து உறுப்பினர்களுடன் சட்டமன்றத்துக்குள் நுழைந்த திமுக, சென்னை மாநிலம் என்ற பெயரைத் தமிழ்நாடு எனப் பெயர் மாற்றம் செய்ய வேண்டும் என்பதற்கான தனது முதல் தீர்மானத்தைச் சட்டமன்றத்தில் கொண்டு வந்தது. 1957 மே 7 அன்று

கொண்டுவரப்பட்ட அத்தீர்மானத்துக்கு ஆதரவாக 42 வாக்குகளும் எதிராக 127 வாக்குகளும் கிடைத்தன. திமுக கொண்டுவந்த முதல் தீர்மானம் தோல்வி அடைந்தது.

## நேருவுக்குக் கறுப்புக் கொடி

சாதி ஒழிப்பை வலியுறுத்திய பெரியார் அதை அரசும் ஏற்று அதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என வற்புறுத்தினார். இல்லையென்றால் அரசியல் சட்டத்தில் இருக்கும் சாதியைப் பாதுகாக்கும் பிரிவுக்குத் தீ வைப்போம் எனக்கூறி அதற்கான தேதியையும் அறிவித்தார். 1957 நவம்பர் 26 ஆம் நாள் இப்போராட்டம் நடக்கும் என அறிவித்திருந்த பெரியார் அதற்கு முன் கைது செய்யப்பட்டார். ஆனாலும் திராவிடர் கழகப் பொதுச் செயலாளர் குத்தூசி குருசாமி அரசியல் சட்டப்பிரிவைக் கொளுத்தினார். பிறகு கைது செய்யப்பட்டார்.

அரசியல் சட்டப்பிரிவு கொளுத்தப்பட்ட செய்தி அறிந்த நேரு, மிகுந்த ஆத்திரம் கொண்டார். இந்திய அரசியல் சட்டம் பிடிக்கவில்லை என்றால் நாட்டை விட்டு வெளியேறி விடுங்கள். இந்த அரசியல் சட்டம் பிடிக்கவில்லை என்றால் ஜெயிலிலோ, பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலோ இருக்கத்தான் அவர்கள் லாயக்கானவர்கள். அப்படிப் பேசுவது சிறுபிள்ளைத்தனம், முட்டாள்தனம் எனக் கடுமையாகப் பேசினார். இந்தப் பேச்சு திமுகவினரைக் கொந்தளிக்கச் செய்தது. 1958 சனவரி 6 அன்று சென்னை வரும் நேருவுக்குத் தங்களது எதிர்ப்பைத் தெரிவிக்கக் கறுப்புக்கொடி காட்டப்படும் என அறிவித்தார் அண்ணா. அதை விளக்கும் விதமாகப் பொதுக்கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதில் கலந்து கொள்ளச் சென்ற அண்ணா உள்ளிட்ட திமுக தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். தலைவர்கள் அனைவரும் கைது செய்யப்பட்ட சூழலில் தொண்டர்கள் நேருவுக்குக் கறுப்புக் கொடி காட்டும் போராட்டத்தை வெற்றிகரமாக நடத்திக் காட்டினார்கள். இப்போராட்டத்தில் ஏற்பட்ட தடியடியில் இருவர் உயிரிழந்தனர். மீனம்பாக்கம் விமான நிலையம் தொடங்கி நேரு சென்ற இடங்கள் அனைத்திலும் கறுப்புக் கொடிகளைக் கண்டபடியே பயணம் செய்ய வேண்டியிருந்தது.

## தேர்தல் ஆணையம் அங்கீகாரம்

1958 மார்ச் 2 திமுகவை மாநிலக்கட்சியாக அங்கீகரித்தது இந்தியத் தேர்தல் ஆணையம். திமுகவுக்குத் தேர்தல் சின்னமாக உதயசூரியனையும் ஒதுக்கியது. இந்நிலையில் 1959ல் உள்ளாட்சித் தேர்தல்கள் அறிவிக்கப்பட்டன. உள்ளாட்சித் தேர்தலில் திமுக போட்டியிடும் என அறிவிப்பு வெளியானது. திமுக தேர்தல் பொறுப்புகள் மு.கருணாநிதியிடம் ஒப்படைக்கப்பட்டன. மொத்தம் உள்ள 100 இடங்களில் 90 இடங்களுக்கு வேட்பாளர்களை நிறுத்த வேண்டும் என்பது கருணாநிதியின் திட்டம். ஆனால் அண்ணாவுக்கு இதில் விருப்பமில்லை. அனைத்துத் தொகுதிகளிலும் பிரச்சாரம் செய்வது சிரமம் என அவர் எண்ணினார். இருப்பினும் கருணாநிதியின் முடிவை ஏற்றுக்கொண்டார். பிரச்சாரத்தில் திமுகவின் முக்கியத் தலைவர்கள் அனைவரும் ஈடுபட்டனர். முக்கியமாக அண்ணா, மு.கருணாநிதி, ஈ.வெ.கி.சம்பத், கே.ஏ.மதியழகன், க.அன்பழகன், கவிஞர் கண்ணதாசன் உள்ளிட்டோர் தீவிரப் பிரச்சாரத்தில் ஈடுபட்டனர்.

## சென்னை மாநகராட்சியைக் கைப்பற்றிய திமுக

தேர்தல் முடிந்து முடிவுகள் வெளிவந்தன. முடிவுகள் காங்கிரசு மற்றும் கம்யூனிஸ்டு கட்சிகளுக்கு அதிர்ச்சி அளிக்கும் வகையில் இருந்தன. 90 இடங்களில் போட்டியிட்ட திமுக

45 இடங்களிலும் 100 இடங்களில் போட்டியிட்ட காங்கிரசு 37 இடங்களிலும் வெற்றி பெற்றிருந்தன. சென்னை மாநகராட்சியைத் திமுக கைப்பற்றியது. கம்யூனிஸ்டு கட்சி ஆதரவுடன் சென்னை மாநகர மேயராகத் திமுக சார்பில் அ.பொ.அரசு தேர்வு செய்யப்பெற்றார். சென்னை மட்டுமல்லாது தமிழகத்தின் பிற பகுதிகளிலும் திமுக கணிசமான வெற்றியைப் பெற்றிருந்தது. தேர்தல் பணிகளைச் சிறப்பாக ஆற்றித் திமுகவுக்கு வெற்றியைப் பெற்றுத் தந்த கருணாநிதிக்கு அண்ணா கணையாழி ஒன்றைப் பரிசாக வழங்கினார்.

## கணையாழி ஏற்படுத்திய பிளவு

சென்னை மாநகராட்சியைக் கைப்பற்றியதற்கு யார் காரணம் என்பது தொடர்பாகக் கட்சிக்குள் கருத்து வேறுபாடுகள் முளைக்கத் தோன்றின. கருணாநிதிக்குக் கணையாழி அணிவித்தது தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்ட சிலருக்கு அதிருப்தியை அளித்தது. அவர்களில் கவிஞர் கண்ணதாசன் முக்கியமானவர். இதுதொடர்பாகத் தனது சுயசரிதையில், "அடுத்தாற்போல் அண்ணா சென்னை மக்களுக்கு நன்றி தெரிவிக்கிறார். காங்கிரசை வீழ்த்திவிட்ட பெருமையைப் பேசுகிறார். அவற்றிற்காக உழைத்தவர்கள் பட்டியலைச் சொல்கிறார். அதில் தன்பெயரும் வருமென்று அவன் (கண்ணதாசன்) காத்துக்கொண்டிருக்கின்றான்; அந்தோ அப்படி ஒருவன் உலகத்தில் இருப்பதாகவோ, அவன் தேர்தலில் உழைத்ததாகவோ அவர் சிந்திக்கக் கூட இல்லை. வருணனைகளோடு ஒரு விஷயத்தை ஆரம்பித்தார். 'இன்று மதியம் வேகாத வெயிலில் ஊரெங்கும் அலைந்து கடையெங்கும் தேடி வாங்கி வந்தேன் ஒரு கணையாழி. அந்தக் கணையாழியை இந்த வெற்றியை ஈட்டித்தந்த என் தம்பி கருணாநிதிக்கு அணிவிக்கிறேன்.' கூட்டத்தில் பெருத்த கையொலி. கருணாநிதி வாழ்க என்ற முழக்கம். அவன் (கண்ணதாசன்) கூனிக்குறுகிப் போனான். அண்ணா அவன் இதயத்திலிருந்து சரியத் தொடங்கினார். அவன் இதயம் நெருப்பாகவே எரிந்தது."[46] எனக் குறிப்பிடுகிறார். சென்னை மாநகராட்சித் தேர்தல் திமுகவிற்கு வெற்றியை மட்டும் தேடித் தரவில்லை. கூடவே உட்கட்சிப் பூசலையும் தேடித்தந்தது. இதிலிருந்து ஈ.வெ.கி.சம்பத், கருணாநிதி ஆகியோருக்கு இடையேயான பனிப்போர் அதிகமானது. இப்பனிப்போர் பல்வேறு கட்டங்களைத் தாண்டி ஈ.வெ.கி.சம்பத் திமுகவை விட்டு வெளியேறும் சூழலை ஏற்படுத்தியது. திமுகவில் இருந்து எவர் விலகுவதையும் அண்ணா எப்பொழுதும் ஏற்றுக்கொண்டதில்லை. இதுபற்றி அவர் கூறுகையில், "நமது இயக்கத்தை விட்டு யாராவது பிரிந்து செல்கிறார்கள் என்றால் வருத்தம் தான், கூடுமான வரையில் கூடி வாழ்வதைத் தான் நான் விரும்புகிறேன். சுவரிலிருந்து சிறு ஆணி பெயர்க்கப்பட்டாலும், ஆபத்தில்லை என்றாலும் பார்க்க நன்றாக இராது என்று எண்ணுபவன். இந்த நோக்குடனேயே நான் சிலர் வெளியேற எண்ணிய போதெல்லாம் சமரசத்திற்காக முயன்றிருக்கிறேன்."[47] எனத் தனது கருத்தைத் தெரிவித்துள்ளார். ஈ.வெ.கி.சம்பத்தின் திமுகவுக்கு எதிரான நிலைப்பாடு மற்றும் உட்கட்சியிலேயே அவர் செய்த போராட்டங்களை எண்ணி அண்ணா மிகவும் வருத்தப்பட்டார். அவ்வருத்தங்கள், "நான் என்னால் முடிந்த முயற்சிகள் யாவும் செய்து சம்பத்தின் உண்ணாநோன்பை முடிக்க முயற்சி செய்தேன். சம்பத்தின் பிடிவாதத்தால் அவை தோல்வியுற்றன. எல்லோரும் விலகல் கடிதம் கொடுத்து விட்டார்கள். நானும் பொதுச்செயலாளர் பதவியில் இருந்து விலகி கண்காணாத தேசத்துக்குச் சென்று விட முடிவு செய்து விட்டேன். கழகத்தைச் சம்பத்திடம் ஒப்படைக்கிறேன். அவன் இஷ்டப்படி காரியம் நடக்கட்டும்."[48] என்ற அண்ணாவின் வாய்மொழியால் அறியமுடிகின்றது. அண்ணா, திமுக மீது சம்பத் கொண்ட அதிருப்தியைப் போக்கப் பலமுறை முயன்றும் பலனில்லை. சம்பத் திமுகவை விட்டு வெளியேறினார். தமிழ்

தேசியக் கட்சி என்ற புதிய கட்சியைத் தொடங்கினார் சம்பத். திமுக தொடங்கிய பன்னிரெண்டு ஆண்டுகள் கழித்து முதன்முதலாகப் பிளவைச் சந்தித்தது. 'இவ்வளவு காலம் கழித்தாவது என் மகனுக்கு என் புத்தி வந்ததே என்று எண்ணி மகிழ்கிறேன்.' என்ற வாழ்த்துச்செய்தி பெரியாரிடமிருந்து வந்தது. அதற்குப் பதிலளிக்கும் விதமாக நெடுஞ்செழியன், 'அன்று திராவிடர் கழகம் பிரிவதற்குத் தந்தை காரணமாக இருந்தார். இன்று திராவிட முன்னேற்றக் கழகம் பிரிவதற்குத் தனயன் காரணமாக இருக்கிறார்' என்றார்.

## 1962 பொதுத்தேர்தல்

1962 ஆம் ஆண்டுக்கான பொதுத்தேர்தலை நோக்கித் திமுக பணியாற்றிக் கொண்டு இருந்தது. இதற்கிடையில் 1961 ஜூலை மாதத்தில் அண்ணா பேசிய பேச்சு மிக முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைந்தது. திராவிட நாடு கோரிக்கையை வலியுறுத்தி வந்த அண்ணா, பாகிஸ்தானைத் தரமறுத்தால் நான் எடுத்துக்கொள்வேன் என ஜின்னா கூறிய கருத்தைக் கொண்டு மக்களிடத்தில் இவ்வாறு பேசினார். "பாகிஸ்தானைத் தரமறுத்தால் நான் எடுத்துக்கொள்வேன் என்று ஜின்னா அவர்கள் அன்று குறிப்பிட்டார். ஜின்னா அளவுக்கு நான் பலம் பெற்றால், 'திராவிட நாட்டை நான் எடுத்துக்கொள்வேன்' என்று சொல்ல மாட்டேன், எடுத்துக் கொண்டேன் என்றுதான் சொல்வேன். ஆகவே, ஜின்னா அளவுக்கு எனக்குப் பலம் தர வேண்டியது உங்கள் கடமை. இத்தகைய பலத்தை நீங்கள் தேர்தலின் மூலம்தான் தந்தாக வேண்டும்."[49]

1962 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் மூன்று கட்டங்களாக நடந்த தேர்தலில் 142 சட்டமன்றத் தொகுதிகளில் போட்டியிட்டது திமுக. நாடாளுமன்றத் தேர்தலில் 18 இடங்களில் போட்டியிட்டது. திமுகவில் இருந்து விலகிய சம்பத் சிங்கத்தை அதன் குகைக்குள்ளேயே சென்று அதை அடக்குகிறேன் என்று கூறி திமுகவின் கோட்டை என்று வர்ணிக்கப்பட்ட தென்சென்னை தொகுதியில் போட்டியிட்டார். அவரை எதிர்த்து, திமுக சார்பில் நாஞ்சில் மனோகரன் நிறுத்தப்பட்டார். சம்பத்தின் சவாலுக்கு அண்ணா கொடுத்த பதில் சுவாரஸ்யமானது. 'சிங்கத்தை அதன் குகையில் சந்திப்பது பெரிய விஷயம் இல்லை. ஆனால் அதன்பிறகு வெளியே வருவது சிங்கமா, ஆளா என்பது தான் முக்கியம்.' என்றார். 1957 தேர்தலில் வெற்றிபெற்ற 15 பேரையும் இம்முறை சட்டமன்றம் புகாமல் தடுக்க வேண்டும் என்ற நோக்கில் செயல்பட்டது காங்கிரசு. அண்ணாவை எதிர்த்து, காஞ்சிபுரம் தொகுதியில் பேருந்து அதிபர் நடேச முதலியார் நிறுத்தப்பட்டார்.

## காங்கிரசுக்கு ஆதரவாகப் பெரியார்

1957 ஆம் ஆண்டுத் தேர்தலில் திமுகவுக்கு எதிராகவும், காங்கிரசுக்கு ஆதரவாகவும் பிரச்சாரம் செய்த பெரியார் இந்தத் தேர்தலிலும் அதே நிலைப்பாட்டைக் கொண்டிருந்தார். காங்கிரசைக் கண்மூடித்தனமாக அவர் ஆதரித்தார் என்பதைத் தேர்தலில் திராவிடர் கழகத்தின் நிலை கண்ணை மூடிக்கொண்டு காங்கிரசை ஆதரிப்பதுதான். காங்கிரஸ்காரர்கள் களிமண்ணையோ, மரக்கட்டையையோ நிறுத்தினாலும் நாம் நமக்காகவே வேலை செய்வது போல் பாடுபட வேண்டும் என்ற அவரின் விளக்கத்தின் மூலமாக அறியமுடிகின்றது.

## தேர்தல் முடிவுகள்

கடுமையான போட்டிகள் நிலவிய சூழலில் 17 பிப்ரவரி 1962 அன்று தொடங்கி 24 பிப்ரவரி 1962 அன்று தேர்தல் முடிந்தது. முடிவுகள் அறிவிக்கப்பட்டன. 206 தொகுதிகளில் போட்டியிட்ட காங்கிரசுக் கட்சி 138 இடங்களிலும், 142 இடங்களில் போட்டியிட்ட திமுக 50 இடங்களிலும் வெற்றி பெற்றன. முந்தைய தேர்தல் வெற்றியைக் காட்டிலும் 35 இடங்களைத் திமுக கூடுதலாகப் பெற்றிருந்தாலும் அந்தக் கட்சியினர் வெற்றிக் கொண்டாட்டத்தில் ஈடுபட முடியவில்லை. அதற்குக் காரணம் காஞ்சிபுரத்தில் போட்டியிட்ட அண்ணா தோல்வியைச் சந்தித்திருந்தார். காமராசர் எண்ணியது போல கடந்த தேர்தலில் வெற்றி பெற்ற 15 பேரில் அண்ணா உள்ளிட்ட 14 பேர் இந்தத் தேர்தலில் தோல்வியைச் சந்தித்தனர். தஞ்சாவூரில் போட்டியிட்ட மு.கருணாநிதி மட்டுமே வெற்றி பெற்றிருந்தார்.

கம்யூனிஸ்டு 2 இடங்களிலும், இராசாசியின் சுதந்திரா கட்சி ஆறு இடங்களிலும் மட்டுமே வெற்றி பெற்றிருந்தன. ஈ.வெ.கி.சம்பத் நிறுத்திய அத்தனை பேரும் தோல்வியைத் தழுவினர். திமுகவைச் செங்குத்தாகப் பிளந்துவிட்டார் சம்பத் என்ற கணிப்பு அர்த்தம் இல்லாமல் போனது. மீண்டும் காமராசர் முதல்வராகப் பொறுப்பேற்றுக்கொண்டார். அவருடன் ஒன்பது பேர் கொண்ட அமைச்சரவையும் பதவியேற்றுக் கொண்டது. அதேபோல் நாடாளுமன்றத் தேர்தலிலும் காங்கிரசு அதிக இடங்களைக் கைப்பற்றியது. மீண்டும் நேரு பிரதமராகப் பதவியேற்றார். தேர்தல் முடிவுகள் வெளியான பின் அண்ணா, காஞ்சிபுரத்துத் தேர்தல் ரகசியம் என்ற கட்டுரையை எழுதினார். அக்கட்டுரை காஞ்சிபுரத்தில் அண்ணா எவ்வாறு தோற்கடிக்கப்பட்டார் என்பதைக் கூறுவதாக அமைந்திருந்தது.

## திமுகவினரைத் தேற்றிய அண்ணா

தேர்தலில் அண்ணா தோல்வி அடைந்திருந்தது திமுகவினரை மிகுந்த பாதிப்புக்குள்ளாக்கியது என்றே கூற வேண்டும். 50 இடங்களைக் கைப்பற்றிப் பிரதான எதிர்க்கட்சியான நிலையிலும் அக்கட்சியினர் களையிழந்து காணப்பட்டனர். இவர்களைத் தேற்றும் பணியிலே ஈடுபட்டார் அண்ணா. "உள்ளம் உடைய இடம் கொடுக்கக் கூடாது. கண்ணீரைத் துடைத்துக் கொண்டு கழகக் காரியமாற்றப் புறப்படுங்கள். நான் வெளியே நிற்கிறேன். என் அணிவகுப்பு உள்ளே செல்கிறது. தலைவன் இல்லாமல் அணிவகுப்பு அமைக்க முடியும். ஆனால் அணிவகுப்பு இல்லாத தலைவனை அமைக்க முடியாது. என் தோல்வி பற்றி வருந்துகிறவர்களுக்கு நான் இதைத்தான் சொல்லிக் கொள்கிறேன். என்னைத் திட்டமிட்டு ஒழித்துக்கட்டுவார்கள் என்பது முன்பே தெரியும். எப்படி எங்கள் பதினைந்து பேரையும் ஒழிப்போம் என்று கூறி 50 இடங்களைக் கோட்டை விட்டார்களோ, அதேபோல அடுத்த தேர்தலில் இந்த ஐம்பது பேரையும் ஒழிப்போம் என்று கூறி, இன்னொரு எழுபத்தைந்து இடங்களைக் கோட்டை விடுவார்கள். வெற்றி பெற்று வருகிறது கழகம்! நாட்டு மக்களின் பேராதரவு வளர்ந்து வருகிறது. இது சாதாரணமானதல்ல. அரசியல் முக்கியத்துவம் வாய்ந்தது! இதை எண்ணி புதிய உற்சாகத்துடன் பணியாற்றுங்கள்!"[50] எனத் திமுகவினரை உற்சாகமூட்டும் நோக்கில் பேசினார் அண்ணா.

## மாநிலங்களவையில் அண்ணா

காஞ்சிபுரத்தில் தோல்வி அடைந்து சட்டமன்றத்துக்குள் நுழைவதற்கான வாய்ப்பை இழந்திருந்த அண்ணாவை டெல்லிக்கு அனுப்பத் தயாரானது திமுக. நாடாளுமன்ற மாநிலங்களவையில் தமிழகத்துக்கான ஒரு இடம் காலியாக இருந்தது. அந்த இடத்துக்கான

தேர்தல் ஏப்ரல் மாதம் நடந்தது. ஐம்பது சட்டமன்ற உறுப்பினர்களைப் பெற்றிருந்ததால் திமுக சார்பில் அண்ணா மாநிலங்களவை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

திராவிட நாடு பிரிவினை என்பது திமுகவின் உயிர்நாடிக் கொள்கை. அதைத் தன்னுடைய முதல் பேச்சிலேயே வலியுறுத்திப் பேசினார் அண்ணா. 'நான் திராவிட இனவழி வந்தவன், நான் என்னைத் திராவிடன் என்று சொல்லிக்கொள்வதில் பெருமிதம் கொள்கிறேன்' எனப் பேசத் தொடங்கிய அண்ணாவின் கம்பீரமான பேச்சைக் கேட்டவர்கள் மெய் மறந்து இருந்தனர். அவரது திராவிட நாடு பிரிவினைக் கொள்கையை நாடாளுமன்ற அவை ஏற்றுக்கொள்ளவில்லை. இருப்பினும் அண்ணாவின் பேச்சைக் கேட்டு அவருடைய வாதத்திறமையைக் கண்டு வியந்தனர். பல இந்தியப் பத்திரிகைகளும் அண்ணாவின் பேச்சைப் பாராட்டின. 'அண்ணாதுரை தமது கொள்கையில் கொண்ட உண்மைப் பிடிப்பாலும், ஆற்றல் மிக்க பேச்சாலும் மேலவையைக் கவர்ந்து விட்டார். இதில் ஐயம் இல்லை.' எனச் செய்தி வெளியிட்டது ஆங்கில நாளேடான இந்து. இன்னும் பல நாளேடுகள் அண்ணாவைப் பாராட்டி செய்திகள் வெளியிட்டிருந்தன. அண்ணாவின் புகழ் இந்தியா முழுவதும் மெல்ல மெல்லப் பரவத் தொடங்கியது. அண்ணா நாடாளுமன்றத்தில், "நான் திராவிட இனவழி வந்தவன். நான் என்னைத் திராவிடன் என்று கூறிக் கொள்வதில் பெருமிதம் கொள்கிறேன். இவ்வாறு கூறிக்கொள்வதால் வங்காளியர், குஜராத்தியர், மராட்டியர் முதலியோர்க்கு எதிராக இருப்பவன் என்று பொருள் படாது. ராபர்ட் பர்ன்ஸ் கூறுவதைப் போல மனிதன் எப்படியிருந்தாலும் மனிதன் தான். நான் என்னைத் திராவிட இனத்தைச் சேர்ந்தவன் என்று கூறிடும் போது, திராவிடனிடம் இவ்வுலகிற்கு வழங்குவதற்குத் திட்டவட்டமான - மிகத் தெளிவான - வேறுபட்ட கூறுகளைக் கொண்டிருக்கிறார்கள் என்று எண்ணுகிறேன். அதனால் எங்களுக்கு சுயநிர்ணய உரிமை தேவை என விரும்புகிறோம்."[51] என அவர் ஆற்றிய உரை வரலாற்றில் முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைந்தது.

## இந்திய - சீனப்போர்

மாநிலங்களவையில் திராவிட நாட்டுப் பிரிவினையை அண்ணா எழுப்பிய சூழலில் இந்தியா மீது சீனா 1962 செப்டம்பர் 19 அன்று தாக்குதலைத் தொடங்கியது. இந்தியாவுக்கு ஆபத்து ஏற்பட்டுள்ள சூழலில் ஒட்டுமொத்த தேசமும் மத்திய அரசுக்கு ஆதரவாக இருக்க வேண்டும் என்று கோரினார் நேரு. இந்தியா இக்கட்டான சூழலில் இருக்கும் போது பிரிவினை வாதத்தை எழுப்புவது சரியாக இருக்காது என எண்ணிய அண்ணா சீனக்காரன் எடுத்து வைத்த காலடியைத் திருப்பி எடுக்கும் வரை அந்த ஒரு துறையில் பிரதமர் நேருவின் கரத்தை வலுப்படுத்தியே தீருவோம். சீன ஆக்கிரமிப்பை நசுக்கி ஒடுக்குவதற்கு இந்திய அரசு மேற்கொள்ளும் எல்லா முயற்சிக்கும் திமுக ஆதரவளிக்கும் என்று அறிவித்தார். அத்தோடு நிறுத்திக் கொள்ளவில்லை. திமுக சார்பில் யுத்த நிதி திரட்டி நாடு காக்கும் பணியில் ஈடுபடுவோம் என்று அறிவித்தார். அறிவித்தபடி போர் நிதி திரட்டி முதலமைச்சர் காமராசரிடம் ஒப்படைத்தார்.

திராவிட நாடு வேண்டும் என்று ஒருபக்கம் கேட்டுக்கொண்டே இன்னொரு பக்கம் இந்தியாவைப் பாதுகாக்க நிதி திரட்டுவது திமுகவின் இரட்டை நிலைப்பாட்டைக் குறிக்கிறது என்ற விமர்சனம் எழுந்தது. அதற்கு அண்ணாவின் பதில், 'வீடு இருந்தால் தானே ஓடு மாற்ற முடியும்? வீட்டுக்கு அல்லவா ஆபத்து வந்திருக்கிறது?' என்றார். 1962 நவம்பர் 21 போர் நிறுத்தம் செய்தது சீனா. அப்போரில் இந்தியாவுக்கு மிகப்பெரிய தோல்வி. அத்தோல்வி நேருவுக்குக் கிடைத்த தோல்வியாகவே கருதப்பட்டது.

## பிரிவினைத் தடைச்சட்டம்

திமுக திராவிட நாடு கோரிக்கையை வலியுறுத்துவது போலவே நாட்டின் பிற பகுதிகளிலும் பிரிவினைக் குரல் எழுந்தது. சீக்கியர்கள் தனி நாடு வேண்டும் எனக் கிளர்ச்சி செய்தனர். காஷ்மீர் மக்களும் தனிநாடு வேண்டி முழக்கம் இட்டனர். நாகர் மக்கள் தனி நாடு வேண்டும் என்று கிளர்ச்சி செய்தனர். இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு, 'உள்நாட்டுப் போர் மூண்டாலும் நாடு பிரிவதைச் சகித்துக் கொள்ள முடியாது.' என நேரு கடுமையாக எச்சரித்தார். அதன் விளைவு 'பிரிவினைத் தடைச்சட்டம்'. இந்தச் சட்டத்தின் மூலம் பிரிவினை கோருவோர் கடுமையாகத் தண்டிக்கப்படுவர். அவர்கள் சார்ந்துள்ள கட்சி தேர்தலில் நிற்க இயலாது. திராவிட நாடு பிரிவினையைக் கொள்கையாகக் கொண்ட திமுகவுக்கு இப்பிரிவினைத் தடைச் சட்டம் பெரும் சவாலாக இருந்தது.

## திமுகவின் நிலை

திமுகவின் எதிர்காலத்தைக் கேள்விக் குறியாக்கியது பிரிவினைத் தடைச்சட்டம். இது குறித்து அண்ணா கூறுகையில், "தடைச் சட்டத்தை மீறினால், கழகம் என்ற அமைப்பு உருத்தெரியாமல் அழிக்கப்பட்டுவிடுமே அதற்கு என்ன செய்வது என்று கேட்டால், போகட்டும் என்று சிலர் பதில் கூறும்போது நான் உள்ளபடி சொல்லொணாத துயரத்திற்கு ஆளாகின்றேன். ஆனால், அதேவிதமான வேதனை, மன உளைச்சல் கொள்கையை விட்டுவிடுவது என்பதிலே ஏற்படவில்லையா என்றால் அதை விட அதிகம் ஏற்படுத்துகிறது. எத்தனையோ விதவிதமான ஆயுதங்களைக் கொண்டு நம்மை அழிக்கப்பார்த்து முடியாது போகவே, இப்போது தடைச்சட்டம் எனும் ஆயுதம் வீசுகிறது காங்கிரஸ். எப்படி நம்மை ஒழிக்க காங்கிரஸ் ஒவ்வொரு கட்டத்தில் ஒவ்வொரு முறையையும் ஒவ்வொரு கருவியையும் நாடிற்றோ அதுபோலவே நாமும் ஒவ்வொரு கட்டத்துக்கு ஏற்ற முறையையும் கருவியையும் உருவாக்கிக் கொள்ள வேண்டும். இதனைப் போர் முறைத் தந்திரம் என்று கூறலாம். எனது நோக்கம் கொள்கையையும் விடக்கூடாது. கழகம் எனும் அமைப்பும் கலையலாகாது. நம்மிலே எவரும் கோழைகளாகி விடுதல் ஆகாது."[52] எனக் குறிப்பிட்டு இப்பிரச்சினையைத் தீர்க்க கட்சியில் பல்வேறு சட்ட ஆலோசனைகளை நடத்தினார். இறுதியில் கட்சியின் கொள்கையில் ஒரு திருத்தத்தை மேற்கொள்ளத் தயாரானது திமுக. அதன்படி தனது கொள்கையில் 'திராவிட நாடு அமையப் பாடுபடுவது என்று இருக்கும் கட்சியின் குறிக்கோள், 'தமிழகம், ஆந்திரம், கேரளம், கர்நாடகம் ஆகிய நான்கு மொழிவழி மாநிலங்களும் இந்திய அரசுரிமை ஒருமைத் தன்மை, அரசியலமைப்புச் சட்டம் ஆகியவற்றுக்குள் இயன்ற அளவு கூடுதலான அதிகாரங்களைப் பெற்று நெருங்கிய திராவிடக் கூட்டமைப்பாக நிலவப்பாடுபடுவது' எனத் திருத்தம் செய்யப்பட்டது. சவால்களை எதிர்த்துச் சளைக்காமல் போராடும் குணம் கொண்டது திமுக என்பது பொதுவான கருத்து. ஆகவே, பிரிவினைத் தடைச்சட்டத்தை எதிர்த்து திமுக போராடும்; திராவிட நாடு கொள்கையைத் தொடர்ச்சியாக வலியுறுத்தும்; அதையே சாக்காக வைத்து திமுகவை அரசியல் களத்தில் இருந்தே அகற்றி விடலாம் என்று எண்ணிக் கொண்டிருந்த காங்கிரசு கட்சிக்கு இத்திருத்தம் கொண்டு வந்தது மிகுந்த ஏமாற்றத்தை அளித்தது. சட்டத்தில் இருந்து திமுக தன்னைத் தற்காத்துக் கொண்டு செயலாற்றத் தொடங்கியது.

## இந்தித் திணிப்பு எதிர்ப்புப் போராட்டம்

1963 பிப்ரவரி மாதம் நேரு அவர்கள் மாநில முதலமைச்சர்களுக்கு அறிவிப்பு வெளியிடுகிறார். அதில் ஆங்கிலம் இணை ஆட்சிமொழியாக நீடிப்பதற்கான மசோதா அல்லது அரசியல் சாசனத் திருத்தம் நாடாளுமன்றத்தில் நடப்புக் கூட்டத் தொடரில்

கொண்டு வரப்படும் என்று குறிப்பிட்டிருந்தார். ஆனால் அரசியல் சாசனத் திருத்தம் என்பதற்குப் பதிலாக ஆட்சி மொழிகள் சட்டம் - 1963 என்ற பெயரில் புதிய சட்டம் கொண்டு வர முடிவு செய்யப்பட்டது. ஏப்ரல் 13, 1963 அன்று நாடாளுமன்றத்தில் உள்துறை அமைச்சர் லால்பகதூர் சாஸ்திரி ஆட்சிமொழி மசோதாவைக் கொண்டு வந்தார். இம்மசோதாவின் படி 1965 சனவரி 26 முதல் இந்தி மொழி மட்டுமே இந்தியாவின் ஆட்சிமொழி ஆகும். இந்தி மொழிக்குத் துணையாக ஆங்கிலத்தைப் பயன்படுத்தலாம் என்ற சட்ட மசோதா கொண்டு வரப்பட்டது. இம்மசோதா இந்தி தவிர்த்த மற்ற மொழிகளுக்கு இழைக்கப்படும் அநீதியாகவே திமுக கருதியது. போராட்டங்களை நடத்தத் தயாரானது. அண்ணா தனது கருத்தை மாநிலங்களவையில் பகிரங்கமாக அறிவித்தார். "விளைவைக் குறித்து அஞ்சப் போவதில்லை. இந்தித் திணிப்பை எதிர்த்துப் போராடுவோம். கடந்த ஓராண்டு காலத்தில் நாம் உருவாக்கிய அமைதியான சூழ்நிலையையும் ஒற்றுமை மனப்பான்மையையும் குலைத்து, குரோதத்தை இம்மசோதா ஏற்படுத்துகிறது. நான் அரசியலில் மெதுவாகச் செல்பவன். அவசரமாகப் போய் குழியில் விழுந்துவிட மாட்டேன். அதற்காகப் பயந்தவன் என்றோ, அஞ்சி ஒதுங்குபவன் என்றோ யாரும் என்னை நினைத்துவிட வேண்டாம். இந்தியை எதிர்க்கும் போராட்டத்தில் 4 ஆண்டுகள் அல்ல; 40 ஆண்டுகள் ஆனாலும் சிறைக்குப் போகத் தயாராக இருக்கிறேன்."[53] என்றார் அண்ணா.

திமுகவின் போராட்டங்கள் குறித்துப் பொதுக்குழுவில் முடிவெடுத்தனர். போராட்டங்கள் என்னென்ன வடிவங்களில் செல்ல வேண்டும் என்பதைத் திட்டமிட்டனர். இந்தி எதிர்ப்பு மாநாடுகள் நடத்தப்பட்டன. சென்னையில் நடைபெற்ற இந்தி எதிர்ப்பு மாநாட்டில் இந்தி திணிப்புக்கு ஆதரவாக இருக்கும் அரசியல் சட்டத்தின் 17வது பிரிவைத் தீயிட்டுக் கொளுத்தும் போராட்டத்தையும், மத்திய அரசு அலுவலகங்கள் முன் மறியல் நடத்தும் போராட்டத்தையும் அறிவித்தது திமுக. இப்போராட்டங்கள் சனவரி 1965 வரை நடைபெறும் என அறிவிக்கப்பட்டது. போராட்டங்கள் தீவிரமடைந்தன. மாணவர்கள் மத்தியில் பலத்த எழுச்சி உண்டானது. சனவரி 26 ஆம் நாளைத் துக்க நாளாக அனுசரிக்க வேண்டும் என்ற கோரிக்கை வலுப்பெற்றது. அண்ணா உள்ளிட்ட தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். இருப்பினும் போராட்டங்கள் ஓயவில்லை. இந்தித் திணிப்பை எதிர்த்து சின்னச்சாமி தன்னுயிரைப் பலியாகக் கொடுத்தார். அவரைத் தொடர்ந்து சிவலிங்கம், அரங்கநாதன், வீரப்பன், முத்து ஆகியோர் தீக்குளித்துத் தாய்மொழிக்காகத் தங்கள் இன்னுயிரைத் துறந்தனர்.

## மாணவர் போராட்டம்

இந்தித் திணிப்பை வாபஸ் பெற முடியாது என்று 1965 பிப்ரவரி 3 அன்று பிரதமர் சாஸ்திரி அறிவித்தார். இந்த அறிவிப்பைத் தொடர்ந்து மாணவர்கள் போராட்டம் தீவிரமடைந்தது. ரயில் மறியல் போராட்டம், அரசு அலுவலகங்கள் முற்றுகைப் போராட்டம் போன்ற போராட்டங்களை நடத்தினர். இந்தித் திணிப்பைக் கண்டிக்கும் விதமாக 1965 பிப்ரவரி 11ல் தமிழ்நாட்டைச் சேர்ந்த மத்திய அமைச்சர்கள் சி.சுப்பிரமணியமும், ஓ.வி.அளகேசனும் தமது பதவியை ராசினாமா செய்தனர். இப்பிரச்சினை குறித்து குடியரசுத்தலைவர் டாக்டர்.இராதாகிருஷ்ணன் தனது கருத்தைப் பகிரங்கமாகவே பிரதமருக்குத் தெரிவித்தார். அதில், 'தமிழ்நாடு இந்தியாவில் இருந்து பிரிவதைத்தான் நீங்கள் விரும்புகிறீர்களா? இல்லையெனில் உடனடியாக இந்தித் திணிப்பு முடிவை வாபஸ் பெறுங்கள்' எனக் கேட்டுக் கொண்டார்.

மத்திய அரசு கொடுத்த வாக்குறுதிகளை மாணவர்கள் ஏற்கவில்லை. மாணவர்களை அமைதிப்படுத்த அண்ணாவிடம் வேண்டுகோள் விடுக்கப்பட்டது. இதற்குப் பதிலளித்த அண்ணா, 'கிளர்ச்சி என் தலைமையில் நடைபெறவும் இல்லை. கழகக் கிளர்ச்சியும் அல்ல அது. நான் வாபஸ் பெற' என்றார். உண்மையில் போராட்டத்தைத் தொடங்கியது மட்டும் தான் திமுக. அது பின்னர் மாணவர்கள் போராட்டமாக வீறுகொண்டு நடைபெற்றது. இருப்பினும் மாணவர்களை நேரில் சந்தித்து மத்திய அரசு கொடுத்த உறுதிமொழியை ஏற்றுப் போராட்டத்தைக் கைவிட வேண்டுமென கேட்டுக் கொண்டதை அடுத்து மாணவர்கள் போராட்டத்தை நிறுத்திக் கொள்வதாக அறிவித்தனர். இந்தித் திணிப்புப் போராட்டத்தில் இருந்து தமிழகம் இயல்பு நிலைக்குத் திரும்பியது.

## 1967 தேர்தல்

1967 பிப்ரவரி மாதத்தில் பொதுத்தேர்தல் நடத்தப்படும் என்று அறிவிப்பு வெளியானது. இத்தேர்தலில் கூட்டணி அமைத்துப் போட்டியிடுவது என்ற முடிவுக்கு வந்திருந்தார் அண்ணா. இதற்கு முன்னே அனைத்துக் கட்சிகளுடனும் நல்ல இணக்கம் காட்டி வந்த அண்ணாவுக்குத் தேர்தல் நேரத்தில் கட்சிகளை இணைப்பதில் சிக்கல் உருவாகவில்லை. தேர்தலில் வெற்றிக் கூட்டணியின் அவசியத்தை எடுத்துரைக்கும் விதமாக அண்ணா தொண்டர்களிடம், "என் வீட்டில் ஒரு திருடன் திடீரெனப் புகுந்து விட்டால் அவனை அடிக்க எந்தத் தடி அகப்பட்டாலும் அதை எடுத்து அடிப்பேன். அப்போது, சுதந்திரா தடியென்றோ, கம்யூனிஸ்டு தடியென்றோ பார்க்கமாட்டேன். எல்லாத் தடிகளையும் உபயோகிப்பேன். காங்கிரஸ் கட்சியை வீழ்த்துவதற்காக மற்ற கட்சிகளுடன் உடன்பாடு செய்து கொள்வது தவறாகாது. கொள்கையில் பற்றும் இலட்சியத்தில் வலுவும் இருப்பவர்கள் யாருடன் சேர்ந்தாலும் அழிந்துவிடமாட்டார்கள். இதில் எனக்குத் துணிவும் நம்பிக்கையும் இருந்துவருகிறது."[54] என எடுத்துரைத்தார்.

தமிழ்நாடு சட்டமன்றத் தொகுதிகள் 206-ல் இருந்து 234 ஆக அதிகரித்திருந்தது. திமுக கூட்டணி அமைப்பது தொடர்பான வேலைகளைத் தொடங்கியது. இறுதியாக திமுக கூட்டணியில் சுதந்திரா கட்சி, மார்க்சிஸ்டு கம்யூனிஸ்ட், முஸ்லிம் லீக், பார்வர்ட் பிளாக், பிரஜா சோஷலிஸ்ட் கட்சி, சி.பா.ஆதித்தனாரின் நாம் தமிழர் கட்சி, மா.பொ.சியின் தமிழரசுக்கழகம் போன்ற கட்சிகளைக் கொண்ட ஜனநாயக முற்போக்குக் கூட்டணி அமைக்கப்பட்டுத் தொகுதி உடன்பாடுகள் செய்து கொண்டு தேர்தலைச் சந்தித்தன.

திமுகவின் வேட்பாளர் பட்டியல் வெளியிடப்பட்டது. விருதுநகர் சட்டமன்றத் தொகுதியில் காமராசரை எதிர்த்து நிறுத்தப்பட்ட வேட்பாளர் மொழிப் போராட்டத்தில் ஈடுபட்ட மாணவர் தலைவர்களுள் ஒருவரான பெ.சீனிவாசன் ஆவார். இவர் நிறுத்தப்பட்டது அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியது. இதைவிட வியப்பு ஒன்றும் ஏற்பட்டது. அது திமுகவின் வேட்பாளர் பட்டியலில் அண்ணாவின் பெயர் இல்லை. அண்ணா தென்சென்னை மக்களவைத் தொகுதியில் போட்டியிட்டார். பிரச்சாரங்கள் தீவிரமடைந்தன. ஒருவருக்கொருவர் மற்றவரைக் குற்றஞ்சாட்டிப் பேசினர். எட்டு நொண்டிகளைக் கொண்ட கூட்டணியை எதிர்த்துப் படுத்துக் கொண்டே ஜெயிப்பேன் என்றார் காமராசர். இதற்கு எதிர்வினை ஆற்றிய இராசாசி 'காமராசர் படுப்பது நிச்சயம். ஆனால் ஜெயிப்பது சாத்தியமல்ல' என்றார். இவ்வாறு தலைவர்களின் பிரச்சாரங்களில் வேகம் காணப்பட்டது.

## படி அரிசித்திட்டம்

1967-இல் அரிசிப்பற்றாக்குறை மிகுந்துக் காணப்பட்டது. மக்களுக்கு ரூபாய்க்கு மூன்று படி அரிசி கொடுக்க வேண்டும். அதற்குக் காங்கிரசு ஆட்சியாளர்கள் சம்மதித்தால் இந்தக் கணமே திமுக தேர்தல் களத்தில் இருந்து விலகிக் கொள்ளும் என்றார் அண்ணா. திமுக ஆட்சிக்கு வந்தால் 'ரூபாய்க்கு மூன்றுபடி அரிசி லட்சியம்; ஒருபடி நிச்சயம்' என்ற வாக்குறுதியை அளித்தார் அண்ணா. கவர்ச்சிகரமான வாக்குறுதி, வாக்குகளை வாரி வழங்கும் வாக்குறுதி. இதை மக்களிடம் எப்படி எடுத்துச்செல்வது எனத் திமுக சிந்தித்த நிலையில், தினத்தந்தி அதிபரும் நாம் தமிழர் இயக்கத்தின் நிறுவனருமான சி.பா.ஆதித்தனார் அண்ணாவின் வாக்குறுதியை 'படி அரிசித் திட்டம்' என்ற பெயரில் தமிழகம் முழுவதும் கொண்டு சேர்க்கும் பணியைத் தினத்தந்தி மூலம் திறம்பட செய்து முடித்தார். பிப்ரவரி 15 அன்று முதல் கட்டத் தேர்தல் பிப்ரவரி 21 அன்று இரண்டாம் கட்டத் தேர்தல் நடந்து முடிந்தது. தேர்தல் முடிவுகள் வெளியாகத் தொடங்கின.

## திமுக ஆட்சி

காங்கிரசுக் கட்சி வேட்பாளர் டி.என்.அனந்தநாயகி தோல்வியடைந்தார், அந்த நொடியில் தொடங்கியது காங்கிரசின் சரிவு. பல தொகுதிகளிலும் திமுக கூட்டணி வேட்பாளர்கள் வெற்றி என்ற செய்தி வரத் தொடங்கியது. மாறாக காங்கிரசுக் கட்சியின் பல தலைவர்களும் தோல்வியடைந்தனர். இதில் காமராசரின் தோல்வி அனைவரையும் வியப்பிலும் கவலையிலும் ஆழ்த்தியது. விருதுநகரில் போட்டியிட்ட அவர் திமுக வேட்பாளரான பெ.சீனிவாசன் என்பவரிடம் வெற்றியைப் பறிகொடுத்தார். திமுக தான் போட்டியிட்ட 174 தொகுதிகளில் 137 தொகுதிகளைக் கைப்பற்றியது. தமிழகத்தின் ஆட்சிக்கட்டிலில் ஏறியது திமுக. நாடாளுமன்றத்திற்குப் போட்டியிட்ட அக்கட்சி 25 இடங்களில் வெற்றிபெற்றிருந்தது.

தென்சென்னை மக்களவை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த அண்ணா முதல்வராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். முதல்வராக நீடிக்க வேண்டுமானால் பதவியேற்ற ஆறு மாதங்களுக்குள் சட்டமன்ற அல்லது மேலவை உறுப்பினராகத் தேர்வு பெற வேண்டும் என்பது நியதி.

## முதல்வரானார் அண்ணா

1967 மார்ச் 6 சென்னை ராசாசி மண்டபத்தில் அண்ணா தலைமையில் திமுக அமைச்சரவை பதவியேற்றுக் கொண்டது. கடந்த காலங்களில் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொள்ளும் பொழுது ஆண்டவன் பெயரால் உறுதி எடுப்பது வழக்கம். ஆனால் திமுகவினர் தமிழில் 'உளமாற' எனச் சொல்லி உறுதி எடுத்துக் கொண்டனர். இந்த நாள் திராவிட இயக்கம் மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றிய தினம். இருபதுகளில் தொடங்கி முப்பதுகள் வரை மூத்த திராவிட இயக்கமான நீதிக்கட்சி ஆட்சியில் இருந்தது. அதன்பிறகு நீண்ட இடைவெளிக்குப் பிறகு புதிய திராவிட இயக்கமான திமுக ஆட்சியைக் கைப்பற்றியது. மிகப்பெரிய பாரம்பரியம் கொண்ட திராவிட இயக்கத்தின் மற்றொரு அத்தியாயம் அண்ணாவால் தொடங்கி வைக்கப்பட்டது.

## மொழி மாற்றம்

அண்ணா ஆட்சிக்கு வந்த பிறகு சென்னை ஜெயின்ட் ஜார்ஜ் கோட்டையில் தமிழ்நாடு அரசு தலைமைச் செயலகம் என்ற பெயர்ப்பலகை வைக்கப்பட்டது. தமிழக

அரசின் இலச்சினையில் உள்ள கோபுரச் சின்னத்தில் இருந்த 'கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்' என்ற ஆங்கில வாக்கியம் நீக்கப்பட்டு தமிழக அரசு என மாற்றப்பட்டது. அரசுச் சின்னத்தின் கீழ் இடம்பெற்றிருந்த 'சத்ய மேவ ஜெயதே' என்ற வடமொழி வாக்கியம் நீக்கப்பட்டு 'வாய்மையே வெல்லும்' என்று பொறிக்கப்பட்டது. இது போன்ற சீர்திருத்த நடவடிக்கைகளில் இருந்து தனது செயல்பாட்டைத் தொடங்கினார் அண்ணா.

## தமிழ்நாடு பெயர் மாற்றத் தீர்மானம்

1967 ஜூலை 18 சட்ட சபையில் மெட்ராஸ் ஸ்டேட் என்று அழைக்கப்பட்டு வந்த சென்னை மாகாணத்துக்குத் 'தமிழ்நாடு' என்ற பெயர் மாற்றம் செய்யும் தீர்மானம் கொண்டு வந்து நிறைவேற்றப்பட்டது.

தமிழகத்தில் இந்திக்கு வேலை இல்லை. இங்கு தமிழ், ஆங்கிலம், இந்தி என்ற மும்மொழிக் கொள்கையை ஏற்றுக்கொள்ளவில்லை என்பதை எடுத்துக்கூறிச் சட்டமன்றத்தில் தமிழ், ஆங்கிலம் என்ற இருமொழிக்கொள்கையே தமிழகத்தில் பின்பற்றப்படும் எனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அண்ணா ஆட்சியில் 'ஆகாஷவாணி' என்ற சொல் ஒழிந்து 'வானொலி' என்ற தமிழ்ச்சொல் பயன்படுத்தப்பட்டது.

## சுயமரியாதைத் திருமணச் சட்டம்

சுயமரியாதை இயக்கத்தினரால் இதுவரையிலும் நடத்தி வைக்கப்பட்ட எல்லாச் சுயமரியாதைத் திருமணங்களுக்கும், இனி நடக்கப் போகும் இது போன்ற திருமணங்களுக்கும் சட்டப் பாதுகாப்புத் தர அண்ணா சுயமரியாதைத் திருமணச் சட்டத்தை இயற்றினார். இதனால் பல ஆண்டுகளாக நடைமுறையில் இருந்த சுயமரியாதைத் திருமணத்துக்குச் சட்டரீதியான அங்கீகாரம் வழங்கப்பட்டது. பொது உடைமை இயக்கத் தலைவர் ப.ஜீவானந்தம் அவர்களின் மகள் திருமணத்தில் இதற்கான அறிவிப்பை அண்ணா அறிவித்தார். இத்திருமணத்தில் கலந்து கொண்டு பேசிய அண்ணா, "தமிழர்களின் குடும்பங்களில் பல சுயமரியாதைத் திருமணங்கள் நடந்திருக்கின்றன. சட்டப்படி செல்லாது என்று தெரிந்தும் அதனால் ஏற்படும் தொல்லைகளைப் பொருட்படுத்தாது, மக்களுக்காகத்தானே சட்டம் என்பதை உணர்ந்து சுயமரியாதைத் திருமணம் செய்து கொண்டவர்கள் நமது வணக்கத்திற்கு உரியவர்கள் ஆவார்கள். எங்களது ஆட்சியில், விரைவில் சுயமரியாதைத் திருமணத்தைச் சட்டப்படிச் செல்லத்தக்கதாகச் சட்டம் கொண்டு வர இருக்கிறோம். பெரியாரவர்கள் நீண்ட நாட்களாக எதிர்பார்த்துக் கொண்டிருந்ததை, நாங்கள் வந்து செய்யும் வாய்ப்புக் கிடைத்தமைக்காகப் பெருமகிழ்ச்சி அடைகிறேன். . . . . . எனக்கு முன் இருந்தவர்கள்கூட இதைச் செய்திருக்க முடியும்! எனினும் நான் போய் நடத்த வேண்டிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தமைக்காகப் பெரு மகிழ்ச்சியடைகிறேன்."[55] எனக் குறிபிட்டார். இச்சட்டத்தின் வாயிலாக, சுயமரியாதைத் திருமணம், சீர்திருத்தத் திருமணம் போன்றவற்றைச் செய்து கொண்டவர்களுக்குச் சட்டப்படியான சொத்துரிமை கிடைக்க வழிவகை செய்யப்பட்டது.

## உலகத் தமிழ் மாநாடு

அண்ணாவின் பெரு முயற்சியால் இரண்டாவது உலகத்தமிழ் மாநாடு சென்னையில் 1968 சனவரி முதல் தேதி தொடங்கி பத்து நாட்கள் நடைபெற்றது. இம்மாநாட்டில் தமிழுக்கு உழைத்து உயர்வைத் தந்த புலவர்கள் அறிஞர்களின் சிலைகள் திறக்கப்பட்டன. அண்ணா மாநாட்டைத் துவக்கி வைத்து உரையாற்றினார்.

## யேல் பல்கலைக்கழகத்தில் அண்ணா

அமெரிக்காவிலுள்ள 'யேல்' பல்கலைக்கழகம் அண்ணாவை அழைத்து 'சப் ஃபெல்லோசிப் என்ற மிக உயர்ந்த விருதை அளித்துச் சிறப்பித்தது. அமெரிக்கர் அல்லாதாருக்கு அந்த விருது வழங்கப்பட்டதில்லை. தமிழகத்தைச் சேர்ந்த அண்ணாவுக்குத் தான் இந்தச் சிறப்பு விருது முதன் முதலாக வழங்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.

## புற்றுநோய்த் தாக்கம்

ஓய்வில்லாமல் உழைத்த அண்ணா தனது உடலைப் பேண எண்ணவில்லை. உடலில் பல அவதிகளையும் பெற்றிருந்த அவர் அதை வெளியே சொல்லவில்லை. இருப்பினும் அவருக்குள்ள நோய் அதை வெளிப்படுத்தியது. உடல் நாளுக்கு நாள் மெலிந்தது. நோயின் தாக்கம் அதிகமானதால் பொது மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார். உணவுக்குழாயில் வளரும் சதையை அறுவை சிகிச்சை மூலம்தான் அகற்ற முடியும் என்றனர் மருத்துவர்கள். பின்னர்தான் அண்ணாவைத் தாக்கியிருப்பது புற்றுநோய் என்பது தெரியவந்தது. மேல் சிகிச்சைக்காக அமெரிக்கா சென்றார். சிகிச்சை முடிந்து நவம்பர் 6ஆம் தேதி அண்ணா சென்னை திரும்பினார்.

## தமிழ்நாடு பெயர் சூட்டுவிழா

சிகிச்சை முடிந்து திரும்பி வந்திருந்த நேரம் பொதுக் கூட்டங்களில் அண்ணா பேசக்கூடாது என மருத்துவர்கள் கூறியிருந்தனர். அந்த நேரத்தில் சென்னை மாகாணத்திற்கு 'தமிழ்நாடு' எனப் பெயர் மாற்றம் செய்யும் விழா வந்தது. அந்த விழாவில் கலந்து கொள்ள முடிவு செய்தார் அண்ணா. மருத்துவர்களும் நண்பர்களும் தடுத்தும் விழாவில் கலந்து கொண்டார். 'நண்பர்களே!' என்ற அண்ணாவின் குரல் நீண்ட நாட்களுக்குப் பிறகு கேட்டது. அண்ணாவின் குரல் கேட்டு எழுந்த ஆரவாரம் அடங்க சில நிமிடங்கள் ஆனது. மேலும் அவ்விழாவில் அவர் பேசுகையில், "நான் இந்த மகிழ்ச்சி விழாவில் கலந்து கொள்ள முடிவெடுத்த போது - 'நீங்கள் கூட்டத்தில் பேசக்கூடாது, அதிக நேரம் பேசினால் உடலுக்கு ஊறு நேரிடும்!' என டாக்டர்களும் நண்பர்களும் தடைவிதித்தனர். தமிழ்நாடு பெயர் மாற்ற மகிழ்ச்சி விழா நடைபெறும் இன்றைய தினம் நான் பேசுவதாலேயே இந்த உடலுக்கு ஊறு நேரிடும் என்றால், இந்த உடல் இருந்தே பயனில்லை என்று கூறி எனது வேண்டுகோளை ஏற்றுக்கொள்ளும்படி மருத்துவர்களிடமும், நண்பர்களிடமும் கேட்டுக்கொண்டேன். இத்தகைய வாய்ப்பு வாழ்க்கையில் ஒருமுறைதான் வரும் பலமுறை வருவதில்லை! பெறவேண்டும் என்று நினைத்ததைப் பெற்றிருக்கிறோம். அடைய வேண்டியதை நாம் அடைந்திருக்கிறோம்."[56] என்றார். இந்நிகழ்வை வரலாற்றில் "The son who named his mother" எனக் குறிப்பிடுவர்.

## அண்ணா மறைவு

அண்ணாவின் உடல்நிலை சீரான நிலையை அடையவில்லை. மருத்துவர்கள் ஓய்வெடுக்கச் சொல்லியும் அதை விரும்பாத அண்ணா தொடர்ந்து பணியாற்றினார். மீண்டும் புற்றுநோயின் தாக்கம் அதிகமானது. அதனால், அடையாறு புற்றுநோய் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட அண்ணா 1969 பிப்ரவரி 3ஆம் நாள் நள்ளிரவு 12.20 மணிக்கு சிகிச்சைப் பலனின்றி உயிரிழந்தார். இச்செய்தி கேட்டு தமிழகம் எங்கும் மக்கள் துக்கத்தில் ஆழ்ந்தனர். செய்தியைக் கேட்ட பெரியார், 'போச்சு; போச்சு; எல்லாமே போச்சு' எனத் துடித்தார். யாருக்கும் யாரும் ஆறுதல் கூற முடியாத சூழல். அண்ணாவின் இறுதி

ஊர்வலத்தில் கலந்து கொள்ள, தமிழகத்தின் மூலை முடுக்குகளில் இருந்தெல்லாம் மக்கள் சென்னை நோக்கிச் சென்றனர். சுமார் ஒன்றரை கோடி மக்கள் அண்ணாவின் இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்டனர். உலகில் இதுவரையிலும் எவருக்கும் இந்த அளவு மக்கள் கூடிய இறுதி ஊர்வலம் நடைபெற்றதில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இந்த இறுதி ஊர்வலம் பின்னர் கின்னஸ் சாதனைப் புத்தகத்தில் இடம்பெற்றது. சென்னை கடற்கரையோரத்தில் அண்ணா நல்லடக்கம் செய்யப்பட்டார். இன்று அந்த இடம் அண்ணா சதுக்கம் எனப் பெயர் பெற்று விளங்குகிறது. எழில் மிகுந்த மலர்த்தோட்டத்தின் மத்தியில் **'எதையும் தாங்கும் இதயம் இங்கே உறங்குகிறது'** என்று பொறிக்கப்பட்ட சலவைக் கல்லைத் தாங்கிய நினைவிடம் அமைக்கப்பெற்றுள்ளது.

## இலக்கியச் சூழல்

### புனைகதை

மேலை நாட்டினர் சிறுகதை, புதினம் முதலானவற்றை Fiction எனும் ஆங்கிலச் சொல்லால் குறித்தனர். Fiction எனும் சொல்லைத் தமிழ் அறிஞர்கள் புனைகதைகள் என அழைத்தனர். அம்முறையில் அண்ணாவின் சிறுகதைகளும் புதினங்களும் நாடகங்களும் அடங்கும்.

"இலக்கியம் என்னுடைய பிரச்சினையல்ல; வாழ்க்கைதான் என்னுடைய பிரச்சினை. வாழ்க்கையில் இன்பத்தைப் பெருக்க வேண்டும்; வேதனையைக் குறைக்க வேண்டும். இதுதான் என் இறுதி லட்சியம். ஒரு தெளிவான சமூகக் குறிக்கோள் உள்ள எழுத்தாளன் நான். இந்த சமூக உறவுதான் என்னை எழுதவைக்கிறது"[57] என்ற வாக்கியம் அண்ணாவுக்கு மிகப் பொருந்தும்.

புதின வடிவத்தைப் போலவே சிறுகதை வடிவமும் ஆங்கில இலக்கிய வாசிப்பின் வழியே தமிழுக்குப் பெறப்பட்டது ஆகும். தமிழில் இவ்வடிவத்தின் முன்னோடியாக வ.வே.சு.ஐயர் விளங்குகிறார். இவரையடுத்து, பி.எஸ்.இராமையா, கு.ப.ராஜகோபாலன், ந.பிச்சமூர்த்தி, புதுமைப்பித்தன். சி.சு.செல்லப்பா, கா. சிவத்தம்பி, இளங்கோவன், சிதம்பர சுப்ரமணியன், பி.எம்.கண்ணன், மௌனி போன்றவர்கள் சிறுகதைகளை மட்டுமல்லாமல் பரிசோதனை ரீதியிலான கதைகளையும் எழுதினர்.

இவர்கள் வரிசையில் கு.அழகிரிசாமி, லா.ச.ராமாமிர்தம், தி.ஜானகிராமன் போன்றவர்களும் தமிழில் சிறுகதை வடிவத்தை வளப்படுத்தினர். இந்த எழுத்தாளர்கள், சிறுகதையின் வடிவத்திற்கும் உள்ளடக்கத்திற்கும் மொழிக்கும் நடைக்கும் பரிசோதனைக்கும் முன்னுரிமை தந்து எழுதியவர்கள். பெரும்பாலும் இவர்கள் தனிமனிதச் சிக்கல், புலம்பல், குழப்பம், குடும்ப உறவுகளுக்கிடையிலான மோதல்கள் ஆகியவற்றை முதன்மைபடுத்தி எழுதினர்.

இவர்கள் எழுதிய அதே காலக்கட்டத்தில் தமிழகத்தில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்கள், பல எழுத்தாளர்களையும் சிந்தனையாளர்களையும் போராட்டக்காரர்களையும் உருவாக்கியது. சமுதாயத்தில் நிலவிய மூடப்பழக்கவழக்கங்களுக்கும் பரம்பரைத் தொழில்களுக்கும் எதிராகக் கருத்துப் பிரச்சாரத்தை சில படைப்பாளர்கள் மேற்கொண்டனர். இனம், மொழி, திராவிட இயக்கச் சிந்தனைகள், பழமைக்கு எதிரான குணம், அறியாமை, மடமை, மூடப்பழக்கவழக்கங்களுக்கு எதிரான நிலைப்பாடு என்னும் போக்குகளில் எழுத வந்தவர்களில், முதன்மையானவராகவும் பேரெழுச்சியை

உருவாக்கியவராகவும் விளங்கியவர் சி.என்.அண்ணாதுரை என்கின்ற பேரறிஞர் அண்ணா ஆவார்.

இவரது எழுத்து தமிழகத்தில் ஓர் இயக்கமாக வளர்ந்தது. ஒரு புதியவகை எழுத்து இயக்கத்தை மட்டுமல்ல, ஓர்அரசியல் இயக்கத்தையும் உருவாக்கியது இவரது எழுத்துகள். அண்ணாவினுடைய எழுத்து தமிழ் மொழியில், தமிழ்ச் சமூக வாழ்வில் பாய்ச்சலான பெரிய மாற்றத்தை உருவாக்கியது என்பது வரலாறு. அந்த வரலாறு எளிதில் அழிக்கக்கூடிய வரலாறாக இல்லை. அவருடைய எழுத்தின் தாக்கம் இன்றும் இருக்கிறது.

அண்ணாவுக்கு மேடைப் பேச்சாளர், எழுத்தாளர், அரசியல் தலைவர், நாடக ஆசிரியர் என்று பல முகங்கள் உண்டு. மற்ற முகங்களைவிட எழுத்தாளர் என்ற முகம் மிகவும் முக்கியமானதாகும்.

## சிறுகதை

காலங்காலமாகக் கதை சொல்வதும், கதை கேட்பதும் எல்லா நாடுகளிலும் எல்லா மக்களிடையேயும் வாய்மொழி மரபாக இருந்து வந்திருக்கிறது. நாகரிகம் தோன்றுவதற்கு முன்பே, மக்கள் இனக் குழுக்களாக இயங்கி வந்த போது, ஓய்வு நேரங்களில் சக மனிதர்களிடம் தொடர்பு கொள்வதற்கும், குடும்ப உறவினர்களுடன் பொழுதைக் கழிக்கவும் கதை கூறும் மரபைக் கையாண்டு வந்துள்ளனர். கதை கூறுபவர் தன்னுடைய கற்பனை வளத்தாலும், அனுபவத்தின் பயனாலும், தான் கண்டதையும் கேட்டதையும் விரித்துச் சொல்லி, கேட்போரின் பொழுது போக்கிற்குத் துணை நின்றனர். 'ஒரே ஒரு ஊரில் ஒரே ஒரு ராஜாவாம்' என்று சுவாரஸ்ய உணர்வோடு கதை தொடங்கும் மரபும் நம்மிடையே இருந்துள்ளது. பொய்ம்மொழி, பொய்க்கதை, புனைகதை, கட்டுக்கதை, பழங்கதை என்றெல்லாம் கதைகள் அக்காலத்தில் சுட்டப்பட்டுள்ளன. குடும்பங்களில் சிறு குழந்தைகளுக்குப் 'பாட்டி கதை' சொல்லும் மரபு உண்டு. அம்மரபு போன தலைமுறை வரை தமிழ் மண்ணில் இருந்து வந்துள்ளது.

பின்பு 'எழுத்து மரபு' ஏற்பட்ட போது, கதைகள் பெரிய எழுத்துக் கதைகளாக எழுதப்பட்டன. பின்னர், அச்சு இயந்திர வருகைக்குப் பின்னர், அக்கதைகள் நூல்களாகவும் வெளிவந்தன. இன்றும், அவை பெரிய எழுத்துக் கதைகள் என்ற பெயரில் விற்பனையில் உள்ளன. அல்லி அரசாணி மாலை, புலந்திரன் கதை, வீர அபிமன்யு, மயில் இராவணன் கதை, சதகண்ட இராவணன் கதை, நல்லதங்காள் கதை, அரிச்சந்திரன் கதை என்பன அவ்வகையில் அடங்கும்.

மேலை நாடுகளில் குறிப்பாக அமெரிக்கா, பிரான்ஸ் ஆகிய நாடுகளிலும், கீழை நாடான ரஷ்யாவிலும் சிறுகதை என்ற பெயரில் ஒரு நிகழ்ச்சியை அல்லது ஓர் உணர்ச்சியை, ஓரிரு பாத்திரங்களைக் கொண்டு, அரைமணி நேரத்தில், ஒரே அமர்வில் படித்து முடித்துவிடக் கூடிய கதைகள் தோற்றம் பெற்று அச்சேறின. ஆங்கிலக் கல்வியின் காரணமாகத் தமிழர்களும் அதே போன்ற கதை மரபைத் தமிழில் உருவாக்கத் தொடங்கினர். இவ்வாறு தமிழ்ச் சிறுகதை வரலாறு தொடங்கியது.

தமிழ் மொழியில் அச்சு இயந்திரம் கண்டு பிடிக்கப்பட்ட பின்பு வீரமாமுனிவர் (1680-1749) எழுதிய 'பரமார்த்த குரு கதை' என்ற கதை நூல், அவர் காலத்திற்குப் பிறகு, 1822இல் சென்னை கல்விச் சங்கத்தாரால் அச்சிடப்பட்டது. இது ஆய்வாளர்களால் தமிழின் முதல் சிறுகதை நூலாகச் சுட்டப்படுகிறது. பின்பு கதாமஞ்சரி (1826), ஈசாப்பின் நீதிக்கதைகள் போன்ற சிறுகதைகள் தோன்றின.

தமிழில் மேலைநாட்டு மரபை ஒட்டிய நவீனச் சிறுகதை முயற்சிகள் 20ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலக்கட்டத்தில் மேற்கொள்ளப்பட்டன. ஆங்கிலத்திலும் தமிழிலும் புதினம் படைத்து வந்த அ.மாதவையா 1910-ஆம் ஆண்டில் இந்து ஆங்கில நாளிதழில் வாரம் ஒரு கதையாக 27 சிறுகதைகளை எழுதினார். மகாகவி சுப்பிரமணிய பாரதியாரும் பல சிறுகதைகளைப் படைத்தார். நவதந்திரக் கதைகள், வேணுமுதலி சரித்திரம், மன்மத ராணி, பூலோக ரம்பை, ஆவணி அவிட்டம், ஸ்வர்ண குமாரி, ஆறில் ஒரு பங்கு, காந்தாமணி, ரயில்வே ஸ்தானம் என்று பல கதைகளை எழுதியுள்ளார்.

வ.வே.சு. ஐயர் 1912ஆம் ஆண்டு, கம்ப நிலையம் என்ற பதிப்பகத்தின் மூலம் மங்கையர்க்கரசியின் காதல் என்ற ஐந்து கதைகள் அடங்கிய தொகுதியை வெளியிட்டார். மங்கையர்க்கரசியின் காதல், காங்கேயன், கமல விஜயன், குளத்தங்கரை அரசமரம் என்ற கதைகளில் குளத்தங்கரை அரசமரம் என்ற கதையே தமிழின் முதல் சிறுகதையாகப் பல விமர்சகர்களால் சுட்டப்படுகின்றது. தி.ஜ.ர.வின் முதல் சிறுகதை சந்தனக் காவடி; இவருடைய புகழ் பெற்ற சிறுகதை நொண்டிக்கிளி. கால் ஊனமுற்ற ஒரு பெண், எவரும் தன்னைத் திருமணம் செய்து கொள்ளப் போவதில்லை என்று உணர்ந்த பின் எடுக்கும் புரட்சிகரமான முடிவே கதையாகும். கதையில், நொண்டிப் பெண்ணின் ஏக்கங்களும் எதிர்பார்ப்புகளும் நன்கு பதிவு செய்யப்பட்டுள்ளன. காந்தியத்தைப் பேசும் பல சிறுகதைகளையும் இவர் எழுதினார். இவ்வாறு மாதவையா, பாரதியார், வ.வே.சு. அய்யர் போன்றோர் தமிழில் சிறுகதை முன்னோடிகளாகப் போற்றப்படுகின்றனர்.

## அறிஞர் அண்ணாவின் சிறுகதை இலக்கியம்

அண்ணாவின் படைப்பிலக்கியங்களில் எண்ணிக்கையில் மிகுந்தும், தரத்தில் சிறந்தும் விளங்குபவை அவரின் சிறுகதைகளாகும். படைப்பாளனும் படிப்பாளனும் கருத்துக்களைப் பகிர்ந்து கொள்ளும் வாயிலே கதை இலக்கியம் எனக் கருதியவர் அண்ணா. 1934-ஆம் ஆண்டு வெளியான 'கொக்கரக்கோ' என்னும் சிறுகதைக்குப் பின் 1939 ஆம் ஆண்டிலிருந்து தொடர்ந்து சிறுகதை, குறும்புதினம், நெடும்புதினம் ஆகியவற்றைப் படைத்துள்ளார். 1939-ஆம் ஆண்டிற்குப் பின் அண்ணா திராவிட நாடு இதழில் மீண்டும் சிறுகதை எழுதத் தொடங்கினார். தொடர்ந்து 1956-ஆம் ஆண்டு வரை சிறுகதை எழுதிய அண்ணா மீண்டும் 1961-ஆம் ஆண்டுதான் சிறுகதை எழுதினார். இவ்வாண்டுகளுக்கு இடையே அண்ணா புதினங்களைப் படைத்துள்ளார். திராவிடநாடு இதழில் பெயரின்றி எண்ணற்ற சிறுகதைகள் இடம்பெற்றுள்ளன.

## புதின இலக்கியம்

நாவல் என்னும் சொல் புதுமை என்னும் பொருளைத் தருகிறது. 'Novella' என்னும் இத்தாலி மொழிச் சொல்லிலிருந்தே இது பிறந்தது என்பர். புதுமை என்னும் பொருளிலேயே நாவலைக் குறிக்கத் தமிழ் மொழியில் புதினம் என்றனர். உரைநடையில் கதை கூறும் பாங்கில் அமைந்த மனித வாழ்க்கையின் விளக்கமே புதினம்.

புதினம் முதன் முதலில் இத்தாலி நாட்டில் தோன்றியது. அது பெரும்பாலும் காதல் நிகழ்ச்சிகளையே சித்திரிப்பதாய் இருந்தது. எனவே நாவல் என்னும் சொல் முதலில் 'Romance' என்னும் பொருளிலேயே வழங்கப்பட்டது. பின்னரே மனித வாழ்க்கையைச் சுவைபடக் கூறும் வடிவமாயிற்று. சாமுவேல் ரிச்சட்சன் என்பவர் 1741-ஆம் ஆண்டு 'பமிலா' என்ற புதினத்தை எழுதினார். இதுவே உலகின் முதல் புதினமாகக் கருதப்படுகிறது.

## புதின அமைப்பு

விழுது விட்டு நிற்கும் ஆலமரம் போன்று பல கிளைகள் விட்டுக் கதையை வளர்த்துக் கூறுவது புதினம்; பல மணிநேரம் படிக்கக் கூடியது. புதினம் தனக்கென்று அமைந்த ஒரு பெரிய களம் உடையது. சுருங்கக் கூறினால், புதினம் ஒரு பெரிய கதையையும், கதை மாந்தர் பலரையும் கொண்டது. தனிமனிதன் அல்லது சமுதாய வாழ்க்கையின் பல பகுதிகளையும் சித்திரித்துக் காட்டுவது.

மனித வாழ்க்கையில் நிகழ்ந்த ஏதேனும் ஒரு பெரிய நிகழ்ச்சி, வரலாற்றுத் தொடர்புடைய சில உண்மைகள், அன்றாடப் பொதுவாழ்க்கையில் நிகழும் சில நிகழ்ச்சிகள், உளவியல் தொடர்புடைய சில சிக்கல்கள் ஆகியன புதினத்திற்குரிய கருப்பொருளாக அமையும். மனிதருள்ளும், மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் இடையேயும் தோன்றும் மோதலை அடிநிலையாகக் கொண்டதே புதின இலக்கியம் ஆகும். தி.ஜானகிராமனின் புதினங்களில் பொதுவாக இழையோடும் பிரச்சினை ஆண், பெண் உறவுகள் பற்றியதாகும். சமுதாயத்தில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகளை எதிர்த்துப் போராடுவதைக் கருப்பொருளாகக் கொண்டவை ஐசக் அருமைராசனின் கீறல்கள், கு.சின்னப்பபாரதியின் தாகம், பொன்னீலனின் கரிசல் போன்ற புதினங்கள். கா.நா.சுப்பிரமணியம், இந்திரா பார்த்தசாரதி, ஜெயகாந்தன் ஆகியோர் புதினங்களில் தனிமனிதக் கோட்பாடுகள் வலியுறுத்தப்படுகின்றன.

## தமிழ்ப் புதினத்தின் தோற்றம்

மேனாட்டாரின் வருகைக்குப் பிறகு 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழில் புதினம் பிறந்தது. ஆங்கிலக் கல்வியைக் கற்று ஆங்கிலப் புதினங்களைக் கற்றவர்களே முதல் புதினங்களைப் படைத்தனர். ஆங்கிலக் கல்வி கற்று, நீதிபதியாகப் பணியாற்றிய மாயூரம் வேதநாயகம் பிள்ளை அவர்களே 1889-ல் 'பிரதாப முதலியார் சரித்திரம்' எனும் புதினத்தை எழுதினார். புதினத்திற்கு எழுதிய ஆங்கில முன்னுரையில், "தமிழில் இம்மாதிரி உரைநடை நவீனம், பொதுமக்களுக்கு இதுவரை அளிக்கப்படவில்லை. ஆகையால் இந்நூல் வாசகர்களுக்கு ரசமாகவும், போதனை நிறைந்ததாகவும் இருக்கலாம் எனப் பெருமை கொள்கிறேன்"[58] என்று குறிப்பிடுகின்றார்.

## தமிழ்ப் புதின முன்னோடிகள்

முதல் தமிழ் புதினத்தை எழுதிய பெருமைக்குரியவர் மாயூரம் வேதநாயகம் பிள்ளை ஆவார். இவர் தமிழ்ப் புதினத்தின் தந்தை என அழைக்கப்படுகிறார். இவர் தமிழின் முதல் புதினமான பிரதாப முதலியார் சரித்திரத்தையும், சுகுண சுந்தரி கதையையும் படைத்தவர். இவரின் முதல் புதினம் சமூகப் புதினத்திற்கு வித்திட்டது என்றால், இவரின் அடுத்த புதினமான சுகுண சுந்தரி கதை வரலாற்றுப் புதினத்திற்கு அடிகோலியது. இவ்வகையில் பண்டித.எஸ்.எம்.நடேச சாஸ்திரி, பி.ஆர்.இராஜம் ஐயர், மாதவையா போன்றோர் தமிழ்ப் புதினத்தின் முன்னோடிகளாக விளங்குகின்றனர்.

## புதின வகைகள்

புதினங்கள் பாடுபொருள், மொழி நடை, உத்தி ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு பலவாகப் பாகுபடுத்தப்பெறும். அவ்வகையில் பின்வரும் புதின வகைகள் குறிப்பிடத்தக்கனவாகும்.

1. துப்பறியும் புதினங்கள்
2. சமூகப் புதினங்கள்
3. வலாற்றுப் புதினங்கள்
4. அறிவியல் புதினங்கள்
5. வட்டாரப் புதினங்கள்
6. மொழி பெயர்ப்புப் புதினங்கள்
7. தழுவல் புதினங்கள்

## துப்பறியும் புதினங்கள்

துப்பறியும் புதினங்கள், நிகழ்ந்த ஏதேனும் ஒரு மர்மச் சம்பவம் குறித்து மக்கள் கொள்ளும் மேலோட்டமான கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு படைக்கப் பெற்றுள்ளன. இன்றியமையாத நிலையில் கதையில் மர்மங்கள் அதிகம் இடம்பெறும். தொடக்கக் காலத்தில் துப்பறியும் புதினங்கள் மக்களிடம் நல்ல வரவேற்பைப் பெற்றன. இத்துப்பறியும் புதினங்கள் பெரும்பாலும் மேனாட்டுத் துப்பறியும் கதைகளின் தழுவல்களாகவே விளங்கின. இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆரணிகுப்புசாமி முதலியார், வடுவூர் துரைசாமி ஐயங்கார், ஜே.ஆர்.ரங்கராஜு போன்றோர் எண்ணற்ற துப்பறியும் புதினங்களை எழுதினர்.

## சமூகப் புதினங்கள்

சமுதாயத்தில் நிலவும் அன்றாடப் பிரச்சினைகளை அடிப்படையாகக் கொண்டு அவற்றைக் களையும் நல்ல நோக்கத்துடன் எழுதப்படுபவை சமூகப் புதினங்கள் ஆகும். சமுதாயச் சிக்கல்கள், பிரச்சாரங்கள், சீர்திருத்தங்கள் என்னும் போக்குகளில் இவ்வகைப் புதினங்கள் அமையும். நாரண துரைக்கண்ணன், வ.ரா., விந்தன், வேங்கட ரமணி, கல்கி, கொத்தமங்கலம் சுப்பு, ஜெயகாந்தன், கோவி.மணிசேகரன், நா.பார்த்தசாரதி, மு.வ., அநுத்தமா, இந்துமதி, ராஜம்கிருஷ்ணன், லஷ்மி, வாஸந்தி சிவசங்கரி, அனுராதா ரமணன், கு.ராஜவேலு, நீலபத்மநாபன், அகிலன், வாசவன் முதலியோர் சிறந்த சமூகப் புதினப் படைப்பாளர்கள் ஆவர். அகிலனின் எங்கே போகிறோம், மு.வ.வின் நெஞ்சில் ஒரு முள், அநுத்தமாவின் மணல்வீடு, ஜெயகாந்தனின் சில நேரங்களில் சில மனிதர்கள், சின்னப்ப பாரதியின் தாகம், ஐசக் அருமைராசனின் கீறல்கள், வாசவனின் அக்கினிக்குஞ்சு போன்றவை குறிப்பிடத்தக்கன.

## வரலாற்றுப் புதினங்கள்

வரலாற்றுப் புதினம் என்பது வரலாற்றில் காணப்பெறும் மாந்தர்களையும் நிகழ்ச்சிகளையும் அதன் பின்புலத்தையும் பயன்படுத்தி ஓரளவு கற்பனை கலந்து படைக்கப்படும் புதின வகையாகும். மேலை நாட்டார் படைத்த வரலாற்றுப் புதினங்களில் வால்டர் ஸ்காட்டு எழுதிய புதினங்களையே பலரும் முன்னோடியாகக் கொண்டுள்ளனர். கற்பனைப் படைப்பின் தாக்கம் மிகமிக வரலாற்றுக் கற்பனை புதினங்களே அதிக அளவில் தோன்றியுள்ளன. வரலாற்றுப் புதினங்கள் நடப்பு நிலையைத் தவிர்ப்பதில்லை. பழங்கால நிகழ்ச்சிகள் தற்கால நிகழ்ச்சிகளுடன் எதாவது ஒரு வகையில் தொடர்புடையனவாக இருக்கும். வரலாற்றுப் புதினங்களில் புனைநிலை மாந்தரே சிறப்பான இடம்பெறுவர். வரலாற்றுப் புதினங்களில் மக்களுக்கு ஒரு பற்றை உருவாக்கியவர் கல்கி. வரலாற்றுப் புதினங்களைச் சிறப்பாக எழுதிப் பிற்காலச் சந்ததியினருக்கு முன்னோடியாகத் திகழ்ந்த இவரை வரலாற்றுப் புதினத் துறையின் தந்தை என்பர். பார்த்திபன் கனவு, சிவகாமியின்

சபதம், பொன்னியின் செல்வன் என்பன இவரது வரலாற்றுப் புதினங்களாகும். சாண்டில்யன், மு.கருணாநிதி, மேத்தா, பூவண்ணன், அரு.ராமநாதன், நா.பார்த்தசாரதி போன்றோர் வரலாற்றுப் புதினப் படைப்பாளர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

## அறிவியல் புதினங்கள்

அறிவியல் கருத்துகளை அடியொற்றிய புதினங்கள் கற்பவர்க்குப் புதுமையும், அறிவியல் அறிவும் ஊட்டுபவை. புதிய அறிவியல் கண்டுபிடிப்புகளால் உலகம் எண்ணிப் பார்க்க முடியாத அளவுக்குப் பெருமாற்றம் பெற்றுவிடும் என்ற அடிப்படையில் கதை எழுதப் பலர் முன்வந்தனர். புதுப்புது விதமான இயந்திரக் கண்டுபிடிப்புகளைக் கற்பனை செய்து படைக்கப்பட்ட கதைகளே அறிவியல் கதைகளாகும். தமிழ் அறிவியல் புதினத் துறையில் சுஜாதா குறிப்பிடத்தக்கவர். அவரின் சொர்க்கத் தீவு என்னும் புதினம் அறிவியல் புதினம் ஆகும். அதேபோல் கி.ராஜேந்திரனின் விண்ணும் மண்ணும் என்னும் புதினமும் அறிவியல் புதினமாகும்.

## வட்டாரப் புதினங்கள்

வட்டாரப் புதினங்கள் அந்தந்த வட்டார நிலவியல், மக்களின் வாழ்க்கை முறைகள், பழக்கவழக்கங்கள், பேச்சு வழக்குகள் ஆகியவற்றை இயல்பாக வெளிப்படுத்துவனவாக அமைகின்றன. இவ்வகையில் நிகழ்வுகள் ஒரு குறிப்பிட்ட வட்டாரம் சார்ந்த சிற்றூரிலோ அல்லது சின்னஞ்சிறு நகரத்திலோ நடப்பதாகக் காட்டப்படும். இதனுள் ஒரு சமூகத்தின் முழு வாழ்வையும் அதன் இருண்டதும் ஒளி மிக்கதுமான எல்லாப் பகுதிகளையும் படைப்பாளர்கள் தீட்டிக் காட்டுவார்கள். வட்டாரப் புதினங்களின் முன்னோடிகளாக கே.எஸ்.வேங்கடரமணி, ஆர்.சண்முகசுந்தரம், சங்கரராமன் முதலியோரைக் குறிப்பிடலாம். சி.சு.செல்லப்பாவின் வாடிவாசல் மதுரை மாவட்டத்து மறவர்கள் வாழ்வின் சிறுபகுதியை வெளிப்படுத்தும் வட்டாரப் புதினமாகும். ராஜம்கிருஷ்ணின் குறிஞ்சித்தேன், ஹெப்சிகா ஜேசுதாசனின் புத்தம்வீடு, கி.ராஜநாராயணின் கரிசல் போன்றவை இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை.

## மொழிபெயர்ப்புப் புதினங்கள்

இந்தியாவின் பிறமொழிகளிலிருந்தும் உலக மொழிகளிலிருந்தும் மொழி பெயர்க்கப்படும் புதினங்கள் மொழிபெயர்ப்புப் புதினங்கள் எனப்படும். அவ்வகையில் காண்டேகரின் மராத்தி புதினத்தை கா.ஸ்ரீ.ஸ்ரீ. சிறப்புற மொழிபெயர்த்து அளித்துள்ளார். எரி நட்சத்திரம், கிரௌஞ்ச வதம், சுகம் எங்கே? முதலியன சிறந்த மொழி பெயர்ப்புகளாகும். தா.நா.குமாரசாமியும், தா.நா.சேனாதிபதியும் தாகூர் படைத்த வங்காளப் புதினங்களை மொழிபெயர்த்துள்ளனர். மாக்ஸிம் கார்க்கியின் தாய், டால்ஸ்டாயின் போரும் அமைதியும், ஹெமிங்வேயின் கடலும் கிழவனும், வால்டர் ஸ்காட்டின் ஐவன் ஹோ முதலியன சிறந்த மொழி பெயர்ப்புப் புதினங்களாகும். தாகூர், பங்கிம் சந்திரர், சரத்சந்திரர் ஆகியோரின் வங்கப் புதினங்களும், தகழி சிவசங்கர பிள்ளையின் செம்மீன் என்ற மலையாளப் புதினமும் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டவற்றுள் குறிப்பிடத்தக்கனவாகும்.

## தழுவல் புதினங்கள்

மேலை நாட்டுப் புதினங்களை அப்படியே மொழி பெயர்க்காமல் அதன் பாடுபொருளைத் தழுவி எழுதப்பட்ட புதினங்கள் தழுவல் புதினங்கள் எனப்படும். இவ்வகையில் முதன் முதலில் ஆரணி குப்புசாமி அவர்களின் முயற்சியால் ரெயினால்ட்ஸ்

எழுதிய புதினங்கள் தமிழ் உருவம் கொண்டன. இவரைத் தொடர்ந்து வடுவூர் துரைசாமி ஐயங்காரும் மேனகா, திகம்பர சாமியார் அல்லது கும்பகோணம் வக்கீல் ஆகிய இரண்டு புதினங்களைப் படைத்தார். இவை பின்னர் திரைப்படங்களாக வெளிவந்து புகழ்பெற்றன. டால்ஸ்டாயின் அன்னாகரீனாவைத் தழுவி, நாரண துரைக்கண்ணன் சீமாட்டி கார்த்தியாயினி என்ற புதினத்தை உருவாக்கினார். டிக்கன்ஸின் ஆலிவர் டுவிஸ்டைத் தழுவி எஸ்.மாரிசாமி அனாதை ஆனந்தன் என்ற புதினத்தை உருவாக்கினார். ரெயினால்ட்ஸ் புதினத்தைத் தழுவி மறைமலை அடிகள் குமுதவல்லி அல்லர் நாகநாட்டரசி என்ற புதினத்தை எழுதினார்.

## அறிஞர் அண்ணாவின் புதின இலக்கியம்

குடிஅரசு இதழில் பணியாற்றிய காலத்தில் அண்ணா புதினம் எழுதத் தொடங்கினார். 1939-ல் 'கோமளத்தின் கோபம்' என்னும் முதல் குறும்புதினத்தை எழுதினார். 1940-ல் 'வீங்கிய உதடு' என்னும் தொடர் கதையை எழுதினார். அப்புதினம் சிறிது காலத்திற்குப் பின் தொடரவில்லை. பின் மீண்டும் இக்கதையை 1948 ஆம் ஆண்டு திராவிட நாடு இதழில் 'என்வாழ்வு' என்ற பெயரில் எழுதினார். இதுவே அண்ணாவின் முதல் நெடும்புதினம் ஆகும். 1942-ஆம் ஆண்டு வரலாற்று அடிப்படையிலான 'கலிங்கராணி' என்ற புதினத்தைப் படைத்துள்ளார். சமுதாயத்தின் பல்வேறு சிக்கல்களை அடித்தளமாக்கி 1943-ஆம் ஆண்டு 'பார்வதி பி.ஏ.',வையும் 1946-ஆம் ஆண்டு 'ரங்கோன் ராதா'வையும் படைத்துள்ளார். அண்ணாவின் புதினத்தைக் குறும்புதினம், நெடும்புதினம் என இருவகையாகப் பிரிக்கலாம். இவ்வகையில் 5 நெடும்புதினங்களையும் 19 குறும்புதினங்களையும் அவர் படைத்தளித்துள்ளார். 1939-ஆம் ஆண்டு தனது புதின இலக்கியப் பயணத்தைத் தொடங்கிய அண்ணா 1968 வரை புதினங்களைப் படைத்துள்ளார்.

## நாடக இலக்கியம்

நாடு + அகம் = நாடகம். உள்ளம் விரும்புமாறு ஆடலும் பாடலும் கொண்டு விளங்குவது நாடகம் ஆகும். கூத்தரும் விறலியரும் நாடகக் கலைஞர்கள் ஆவர். தொல்காப்பியத்தில் நாடக வழக்கு என்னும் சொல்லாட்சி காணப் பெறுகின்றது. பரதம், அகத்தியம், முறுவல், சயந்தம், செயிற்றியம், குணநூல், பஞ்சமரபு, பரத சேனாபதீயம், மதிவாணர் நாடகத் தமிழ் போன்ற நாடக இலக்கண நூல்கள் பண்டைக் காலத்தில் இருந்தமையைச் சிலப்பதிகார அடியார்க்கு நல்லார் உரை உணர்த்தும். கலித்தொகை, பரிபாடல் போன்ற சங்க இலக்கியங்களில் நாடகக் கூறுகளைச் சிறப்பாகக் காணமுடிகின்றது.

கலைகள் காமத்தை மிகுவிப்பன என்ற எண்ணமுடைய சமணர்களால் களப்பிரர் காலத்தில் நாடகம் தன் செல்வாக்கை இழந்தது. இராஜராஜசோழன் காலத்தில் 'ராஜராஜேஸ்வர விஜயம்' என்னும் நாடகம் இயற்றப்பட்டு நடிக்கப் பெற்றது. பிறகு கி.பி.17ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து மீண்டும் நாடகங்கள் புத்துயிர் பெறத் தொடங்கின. பள்ளு, குறவஞ்சி, நொண்டி நாடகம் முதலியன எளிய நடையில் அமைந்து மக்களை மிகவும் கவர்ந்தன. கி.பி.18ஆம் நூற்றாண்டளவில், இராமநாடகக் கீர்த்தனை, நந்தனார் சரித்திரக் கீர்த்தனை போன்ற நாடகங்கள் மிகப் புகழ் பெற்றன.

கி.பி.19-ஆம் நூற்றாண்டு தொடங்கி, நாடகம் மிகுந்த வளர்ச்சிபெறத் தொடங்கியது. பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, ஆங்கிலத்தில் லிட்டன் என்பார் எழுதிய இரகசிய வழி (The secret way) என்னும் நூலைத் தழுவி, 'மனோன்மணீயம்' என்னும் நாடகத்தை யாத்தளித்தார்.

இதனைப் போன்று அடுத்தடுத்துக் கவிதை நாடகங்கள் பல தமிழில் எழுந்தன. பிறகு, உரைநடை உரையாடல்கள் கொண்ட நாடகங்கள் பலவும் தோன்றலாயின. பிற்காலத்திய திரைப்படத் தோற்றத்திற்கு நாடகமே முன்னோடி என்பது யாவரும் அறிந்த ஒன்றேயாகும். இன்றும், தொலைக்காட்சிகளில் நாடகத்தின் செல்வாக்கு சிறந்து விளங்கி வருவது கண்கூடு.

காசி விசுவநாத முதலியார், திண்டிவனம் ராமசாமி ராஜா, தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள், பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, பரிதிமாற் கலைஞர், பம்மல் சம்பந்த முதலியார், நவாப் ராஜமாணிக்கம், எம்.ஆர்.ராதா, ஆர்.எஸ்.மனோகர் ஆகியோர் நாடகத் துறையில் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

## நாடக வகைகள்

நாடகங்கள், அதன் பாடுபொருளாலும் உத்திகளாலும் சமூக நாடகங்கள், புராண இதிகாச நாடகங்கள், வரலாற்று நாடகங்கள், இலக்கிய நாடகங்கள், வாழ்க்கை வரலாற்று நாடகங்கள், அரசியல் நாடகங்கள், நகைச்சுவை நாடகங்கள், துப்பறியும் நாடகங்கள், மொழிபெயர்ப்பு நாடகங்கள் எனப் பல வகையாகப் பாடுபடுத்தப்பெறும்.

### சமூக நாடகங்கள்

சமூக நாடகங்கள் சமூகச் சூழல்களின் பின்னணியில் எழுதப் பெற்றவை. மக்களின் வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டவை. இவை சீர்த்திருத்த நோக்கத்தை முன்னிறுத்தி வீடு, அலுவலகம், சமுதாயம் எனப் பல நிலைகளில் காணும் அவலங்களை அடையாளம் காட்டுவனவாகவும் அமைந்துள்ளன. சிக்கல்களை காட்டி, தீர்வுகளை எடுத்துரைப்பனவாகவும் உள்ளன. 1867-ஆம் ஆண்டில் காசிவிசுவநாத முதலியார் எழுதிய 'டம்பாச்சாரி விலாசம்' இவ்வகையில் முதல் நாடகமாகும். நடுத்தர வர்க்கத்தினரின் உணர்வுகளும் மதிப்பீடுகளும் சமுதாய நாடகங்களில் வெளிப்பட்டன. வரதட்சணைக் கொடுமை, பொருந்தா மணக்கொடுமை, ஆடம்பரத் திருமணங்களால் வரும் சிக்கல்கள், குடும்ப உறவுச் சிக்கல்கள், போலித்தனங்கள், பெண்களின் நிலை என்று குடும்பம் சார்ந்த நிகழ்வுகள் நாடகங்களாக்கப்பட்டன. சாதி எதிர்ப்பு, பொருளியல் மேம்பாடு, வேலையில்லாத் திண்டாட்டம், கிராமப்புறப் பிரச்சினைகள், சமுதாயத்திற்கு அறிவுரைகள் எனப் பல நிலைகளிலும் நாடகங்கள் படைக்கப்பட்டன.

### புராண இதிகாச நாடகங்கள்

சிறுத்தொண்டர், அரிச்சந்திரன், மார்க்கண்டேயன் முதலானோரின் புராண வரலாறுகளையும், இராமாயண, மகாபாரதங்களாகிய இதிகாசங்களையும் அடிப்படையாகக் கொண்டு புனையப்படுவன இவ்வகையின. லவகுசா இராமாயண அடிப்படையிலும், கிருஷ்ணன் தூது, கர்ண மோட்சம் என்பன மகாபாரத அடிப்படையிலும் இயற்றப் பட்டனவாகும். இவற்றில் வசனங்கள் பழங்கால நடையினவாக அமைதல் வேண்டும். ஒப்பனைகளும் கற்பனை நிலையில் பல்வேறு அணிகலன்களும் கிரீடங்களும் (மணிமுடி) கொண்டு அமைக்கப்படுதல் மரபு. இவற்றில் பாடல்கள் மிகுதியாகக் காணப்படும். இவை மேடை நாடகங்களில் செல்வாக்குப் பெற்றவை. சங்கரதாஸ் சுவாமிகள் எழுதிய வள்ளி திருமணம், சதி அனுசூயா, பவளக்கொடி, அபிமன்யு, பிரகலாதன் முதலான நாடகங்கள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கனவாகும்.

## வரலாற்று நாடகங்கள்

நடந்த நிகழ்ச்சிகளை உண்மைக்கு மாறுபாடின்றி எடுத்துரைப்பது வரலாற்று நாடகங்களின் இயல்பாகும். சுவை மிகுதிப்பாட்டிற்காகச் சில நிகழ்வுகளும் சில கதாபாத்திரங்களும் இவற்றில் படைத்துக் கொள்ளப்பெறும். ஒரு சில வரலாற்று நிகழ்வுகளை மையப்படுத்திப் பிற பகுதிகள் புனைந்து எழுதப் பெறுதல் வழக்கம். அரு.ராமநாதனின் இராஜராஜ சோழன், ஆறு.அழகப்பனின் திருமலை நாயக்கர், கண்ணதாசனின் சிவகங்கைச் சீமை போன்றன இவ்வகையில் அமைந்த நாடகங்களில் குறிப்பிடத்தக்கவையாகும்.

## இலக்கிய நாடகங்கள்

சங்க இலக்கியம், காப்பியங்கள் ஆகியவற்றில் காணப்பெறும் சிற்சில கதாபாத்திரங்களையும், குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளையும் மையப் பொருளாகக் கொண்டு புனையப்பெறுவன இவ்வகை நாடகங்கள் ஆகும். இவற்றில் தலைமைப் பாத்திரங்கள் செந்தமிழ் நடையிலும், சராசரிக் குடிமக்கள் பாத்திரங்கள் வழக்குத்தமிழ் நடையிலும் வசனம் பேசுதலாக அமைப்பது இயல்பு. இவற்றைக் கவிதையில் அமைப்பதும் உண்டு; உரைநடையில் அமைப்பதும் உண்டு. பாரதிதாசனின் பிசிராந்தையார், சேரதாண்டவம், வ.சுப.மாணிக்கனாரின் மனைவியின் உரிமை (வள்ளல் பேகன் வரலாறு), புலவர் பழநியின் அனிச்ச அடி (பெண் கொலை புரிந்த நன்னன் கதை), மறைமலையடிகளின் அம்பிகாபதி அமராவதி, அ.ச.ஞானசம்பந்தனாரின் தெள்ளாறெறிந்த நந்தி போன்றன இவ்வகை நாடகங்களுக்குத் தக்க சான்றுகளாகும்.

## வாழ்க்கை வரலாற்று நாடகங்கள்

ஒருவருடைய வாழ்க்கை வரலாறு முழுவதும் தெரிந்த நிலையில், அவை விடுபடாத வண்ணம் புனைந்துரை அதிகமின்றி உள்ள வண்ணம் எழுதுவது இவ்வகை நாடகமாகும். பிறப்பு முதல் இறப்பு வரையிலான நிகழ்வுகள் யாவும் இதில் இடம்பெறும். மு.வரதராசனாரின் பச்சையப்பர் நாடகம் இதற்குத் தக்க எடுத்துக் காட்டாகும். அழகிரிசாமியின் கவிச்சக்கரவர்த்தி கம்பர் என்பதும் பல நிகழ்ச்சித் தொகுப்பாக அமைந்து இவ்வகை நாடகமாக அமைகின்றது.

## அரசியல் நாடகங்கள்

அரசியல் உணர்வும், சிந்தனையும் அமைந்த நாடகங்கள் அரசியல் நாடகங்களாகும். இவை விடுதலைப் போராட்டக் காலத்தில் வீறுணர்ச்சியை ஊட்டின. எஸ்.டி.சுந்தரத்தின் வீர சுதந்திரம் என்னும் நாடகம் திருப்பூர் குமரன், சுப்பிரமணிய பாரதி, அரவிந்தர் போன்றோர் தம் வீர வரலாறு புனையப்பட்டதாகும்.

## நகைச்சுவை நாடகங்கள்

மக்களைச் சிரிக்க வைப்பதையே குறிக்கோளாகக் கொண்டு, உருவம், மொழிநடை, அறியாமை, அப்பாவித்தனம் ஆகியவற்றின் அடிப்படையில் புனையப் பெறுவது நகைச்சுவை நாடகம் எனப்படும். இதன் தலைப்பே இதனியல்பைப் புலப்படுத்துவதாக அமையும். கேலி, கிண்டல் முதலியன இவற்றில் மிகுந்திருத்தல் இயல்பு. சங்கீதப் பைத்தியம், வைகுண்ட வைத்தியர், சோம்பேறி, சபாபதி, சகுனம் பார்த்தது போன்றன இவ்வகை நாடகங்களாகும். பம்மல் சம்பந்த முதலியார் இவ்வகை நாடகங்களில் ஆற்றல் படைத்தவராவார்.

### துப்பறியும் நாடகங்கள்

இவ்வகை நாடகங்கள் திருட்டு, கொலை, சதி போன்றவற்றில் ஈடுபட்டவர்களைத் தக்க தடயங்களைக் கொண்டு கண்டுபிடிப்பதாக அமையும். இது மேனாட்டு நாடகங்களைத் தழுவி எழுந்த வகைப்பாடாகும். இன்ஸ்பெக்டர், சதுரங்கம், கொலை போன்றவை இத்தகு நாடகங்களாகும். பரமகுரு எழுதிய வினை விதைத்தவர் என்னும் நாடகம் இவ்வகைக்குத் தக்க சான்றாகும்.

### மொழிபெயர்ப்பு நாடகங்கள்

சமஸ்கிருதம், ஆங்கிலம், தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற பிறமொழிகளில் படைக்கப்பட்ட சிறந்த நாடக இலக்கியங்களைத் தமிழில் மொழிபெயர்த்தல் இவ்வகையில் அடங்கும். மறைமலையடிகளின் சாகுந்தல நாடகம், வடமொழியில் அமைந்த காளிதாசனின் சாகுந்தலத்தின் மொழிபெயர்ப்பாகும். ஆங்கிலத்தில் அமைந்த சேக்ஸ்பியரின் நாடகங்கள் பல தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

இன்றைய காலக்கட்டத்தில் வார இதழ், மாத இதழ்களில் தொடர்ந்து தொடர் நாடகங்களாக வெளிவரும் நாடகங்களும் மிகவும் குறிப்பிடத் தக்கனவாகும். மேடை நாடகங்களுக்கென நாடகக் குழுக்கள், நாடக சபாக்கள் பல இன்றும் செயல்படுகின்றன.

### அண்ணாவின் நாடக இலக்கியம்

அண்ணா ஒரு நாடக ஆசிரியரே என்று நிறுவும் வகையில் அண்ணாவின் பல்வேறு இலக்கிய வகைகள்ளும் நாடக இலக்கியமே தலைமை பெற்றதாகும். அண்ணாவின் நாடக உணர்வைப் புலப்படுத்தும் வண்ணம் அமையப்பெற்றது குடிஅரசு இதழில் வெளிவந்த 'காங்கிரசு வாலா 1936 மாடலும் 1938 மாடலும்' என்னும் நாடகமாகும். காங்கிரசு இயக்கம் பதவிக்கு வருமுன், மக்கள் மத்தியில் பேசிய பேச்சுக்கும், பதவிக்கு வந்த பின் பேசிய பேச்சுக்கும் இடையேயான வேறுபாட்டைக் காட்டுவதாய் இந்நாடகம் அமைக்கப்பெற்றுள்ளது. இந்நாடகமே அண்ணாவின் முதல் நாடகம் ஆகும். "திராவிட நாடு, காஞ்சி என்னும் இரு இதழ்களில் இடம்பெறும் காமிராவுக்குத் தப்பிய காட்சிகள் என்பது ஓரங்க நாடகத்தைச் சார்ந்ததாக அமைகின்றது. இதுமட்டுமின்றி ஊரார் உரையாடல், ஏர்முனை, கிராமத்தில் இன்று என்பன நாடகப் போக்கின."[59] அண்ணாவின் நாடகங்களைப் பெரு நாடகங்கள் என்றும் சிறு நாடகங்கள் என்றும் பிரிப்பர். அவ்வகையில் 11 பெரு நாடகங்களையும், 50 சிறு நாடகங்களையும் படைத்தளித்துள்ளார். பெரும்பாலான பெரு நாடகங்கள் இயக்கக் கருத்துக்களை வலியுறுத்தும் நோக்கில் எழுதப்பட்டன. சமுதாயச் சீர்திருத்தம், அரசியல் எள்ளல், உண்மை நிகழ்ச்சிகள், வரலாற்று நிகழ்ச்சிகள், இலக்கியச் செய்திகள் என்பனவற்றின் அடிப்படையில் இந்நாடகங்களை அண்ணா படைத்துள்ளார். இலக்கியத்தைத் திறனாய்வு செய்து அதனை நாடகமாக்கிய திறன் (நீதிதேவன் மயக்கம்) அண்ணாவின் நாடகக் கலையில் குறிக்கத்தக்கதாகும். தமிழ்ச் சமுதாயத்தின் வீழ்ச்சியையும், தாழ்ச்சியையும், மக்களின் மனநிலைகளையும் கண்டுணர்ந்த அண்ணா அதனைத் தமது நாடக இலக்கியங்களில் பதிவு செய்துள்ளார். "நுட்பமான காட்சித்திறனும், அவற்றுள் எடுத்துச் சொல்லும் இனிய, எளிய அழகும், பழகு தமிழும், ஈடற்ற பீடு நடையும், மாந்தர் பண்பினை எடுத்துக் காட்டும் கலையுணர்வும், ஆழ்ந்த எண்ணங்களின் வண்ணமும் அண்ணாவின் நாடக இலக்கியப் படைப்பாற்றலை உயர்த்தியுள்ளன."[60] அண்ணாவின் நாடக இலக்கியமானது சமுதாயப் பார்வையையும் தேவையையும் நிறைவேற்றியுள்ளன.

## தொகுப்புரை

அறிஞர் அண்ணா பிறந்து வளர்ந்த காலக்கட்டத்தில் தமிழகத்தில் பார்ப்பனர்களின் ஆதிக்கம் மிகுதியாகப் பரவியிருந்தது. இந்து மதம் உருவாக்கிய சாதியின் பெயரால் ஏற்றத்தாழ்வுகளும் கொடுமைகளும் அதிகமாகக் காணப்பட்டன. அனைத்துத் துறைகளிலும் பார்ப்பனர்களின் தலையீடு இருந்தது. பார்ப்பனரல்லாதாரின் வாழ்வு தாழ்ந்தே காணப்பட்டது. பார்ப்பனரல்லாத மக்களின் வாழ்வு மேன்மையடைய பார்ப்பனரல்லாத தலைவர்களான தியாகராயர், டி.எம்.நாயர், சி.நடேசனார், பி.சுப்பிரமணியம், பொப்பிலி அரசர், பனகல் அரசர் போன்றோர் அரும்பாடுபட்டுள்ளனர்.

தமிழகத்தில் ஆரியர்களின் வரவு சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுகளையும் பல மூடப்பழக்கவழக்கங்களையும் உருவாக்கியது. சாதிய ஏற்றத்தாழ்வுகள் மிகவும் கண்மூடித்தனமாகப் பின்பற்றப்பட்டன. உண்ண, உடுத்த, பேச என மனிதர்களின் அடிப்படை நிகழ்வுகளில் கூட சாதி வேறுபாடுகள் காட்டப்பட்டன. மக்களிடையே பிரிவினையை உருவாக்கிய சாதி, தீண்டாமைக்கு வழிவகுத்தது.

கல்வியை கண்போன்று போற்றி வாழ்ந்த சமுதாயம் பிற்காலத்தில் கல்வியின் உரிமைக்காகப் போராட வேண்டிய நிலைக்கு ஆளானது. மேலைநாட்டுக் கல்வி, வசதி வாய்த்தவர்களுக்கு மட்டுமே கிடைத்தது. கல்வி நிலையங்களிலும் தீண்டாமைக் கொடுமைகள் காணப்பட்டன. சமுதாயத்தில் இருந்த தீண்டாமைக் கொடுமைகள், அடக்குமுறை, கல்வி நிலையங்களின் நுழைவுச் சிரமங்கள், கடுமையானக் கட்டணங்கள் முதலியவற்றால் பெரும்பாலான மக்கள் மேலைநாட்டுக் கல்வியைப் பெறமுடியாத சூழல் இருந்தது.

பெண்கள் அனைத்து நிலைகளிலும் அடிமைப்படுத்தப்பட்டிருந்தனர். அவர்களின் உரிமைகள் அனைத்தும் பறிக்கப்பட்டிருந்தன. குழந்தை மணம், கைம்மைக் கொடுமை, தேவதாசிமுறை எனப் பெண்கள் மிகுந்த துயரங்களுக்கு ஆட்பட்டிருந்தனர்.

நீதிக்கட்சி தோன்றுவதற்கு முக்கியக் காரணமாக விளங்கியது அன்னிபெசன்ட் அம்மையாரின் ஹோம் ரூல் இயக்கம் ஆகும். தென்னிந்திய நல உரிமைச் சங்கம் என்பதே பின்னாளில் நீதிக்கட்சி என்றாயிற்று. இதனை டாக்டர். சி.நடேசனார் ஒருங்கிணைத்துத் தொடங்கி வைத்தார். 1920-ல் நீதிக்கட்சி சென்னை மாகாண ஆட்சியைப் பிடித்தது. வகுப்புவாரி உரிமை ஆணை, தேவதாசி முறை ஒழிப்புச் சட்டம், அறநிலையத் துறைப் பாதுகாப்புச் சட்டம், பெண்களுக்கு வாக்களிக்கும் உரிமை போன்ற முக்கிய சட்டங்களை நீதிக்கட்சி இயற்றியது.

காங்கிரசில் இருந்து வெளியேறிய பெரியார் சுயமரியாதை இயக்கத்தைத் தொடங்கி, சமுதாய சீர்திருத்தச் செயல்களில் ஈடுபட்டார். அண்ணா நீதிக்கட்சியிலும் சுயமரியாதை இயக்கத்திலும் இருந்து அரசியல், சமுதாய சீர்திருத்தம் என்ற நோக்கில் தனது செயல்பாடுகளை அமைத்துக்கொண்டார். பின்னாளில் நீதிக்கட்சிக்குப் பெரியார் தலைமை வகித்தார். நீதிக்கட்சி திராவிடர் கழகம் எனப் பெயர் மாற்றம் பெற்றது.

தமிழகத்தில் இந்தி மொழித் திணிப்பு நிகழ்த்தப்பட்டது. இதனை எதிர்த்து, தமிழறிஞர்களும் அரசியல் இயக்கங்களும் போராட்டம் நடத்தின. இம்மொழிப் போராட்டத்தில் சிலர் தங்கள் இன்னுயிரைத் தியாகம் செய்தனர்.

கறுப்புச் சட்டை அணிதல், சுதந்திர தினம், பெரியார் மணியம்மை திருமணம் போன்ற நிகழ்வுகளால் கருத்து வேறுபாடு கொண்ட பெரியாரும் அண்ணாவும் பிரிய நேர்ந்தது. அண்ணா திராவிடர் கழகத்திலிருந்து பிரிந்து திராவிட முன்னேற்றக் கழகம் என்ற இயக்கத்தை உருவாக்கினார். இவ்வியக்கம் 1967 ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில் வெற்றி பெற்று தமிழகத்தில் ஆட்சியைப் பிடித்தது.

அண்ணா முதல்வராகப் பொறுப்பேற்றதும் சுயமரியாதைத் திருமணத்திற்குச் சட்ட அங்கீகாரம் அளித்தார். சென்னை மாகாணம் என்பதைத் தமிழ்நாடு எனப் பெயர் மாற்றம் செய்தார். தமிழகத்தில் இருமொழிக் கொள்கையை அமல்படுத்தினார். புற்றுநோயின் தாக்கத்தினால் அண்ணா 1969 பிப்ரவரி 3ஆம் நாள் இறந்தார்.

மேலை நாட்டினர் சிறுகதை, புதினம் முதலானவற்றை Fiction எனும் ஆங்கிலச் சொல்லால் குறித்தனர். Fiction எனும் சொல்லைத் தமிழ் அறிஞர்கள் புனைகதைகள் என அழைத்தனர். தமிழின் முதல் சிறுகதை நூலாக வீரமாமுனிவரின் பரமார்த்த குரு கதை நூல் ஆய்வாளர்களால் சுட்டப்படுகிறது. தமிழ்ச் சிறுகதையின் முன்னோடிகளாக வ.வே.சு.ஐயர், அ.மாதவையா, பாரதியார் போன்றோர் திகழ்கின்றனர்.

நாவல் என்னும் சொல் புதுமை என்னும் பொருளைத் தருகிறது. Novella என்னும் இத்தாலி மொழியிலிருந்து பிறந்தது. புதுமை என்னும் பொருளைக் குறித்து தமிழில் நாவல், புதினம் என்றானது. மாயூரம் வேதநாயகம் பிள்ளை எழுதிய பிரதாப முதலியார் சரித்திரம் என்னும் புதினமே தமிழில் தோன்றிய முதல் புதினம் ஆகும். மாதவையா, எம்.நடேச சாஸ்திரி, பி.ஆர்.இராஜம் ஐயர் போன்றோர் தமிழ்ப் புதினத்தின் முன்னோடிகளாவர்.

நாடு+அகம் = நாடகம் ஆகும். ஆடலும் பாடலும் கொண்டு விளங்குவது நாடகம் ஆகும். தொல்காப்பியத்தில் நாடக வழக்கு என்னும் சொல்லாட்சி காணப்பெறுகிறது. நாடக இலக்கண நூல்கள் பல இருந்தமையை சிலப்பதிகார அடியார்க்கு நல்லார் உரை உணர்த்துகின்றது. பம்மல் சம்பந்த முதலியார், பரிதிமாற் கலைஞர், சங்கரதாஸ் சுவாமிகள், சுந்தரம் பிள்ளை போன்றோர் தமிழ் நாடக வளர்ச்சிக்கு முக்கியப் பங்காற்றியவர்கள் ஆவர். இத்தகைய அரசியல், சமுதாய, இலக்கியப் பின்புலத்தில் அறிஞர் அண்ணா - சிறுகதைகளையும் - புதினங்களையும் - நாடகங்களையும் படைத்துத் தமிழுக்கு அருந்தொண்டாற்றியுள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. பண்டித எஸ்.முத்துசாமிப்பிள்ளை, நீதிக்கட்சி வரலாறு, ப.13
2. இரா.சக்குபாய், க.நெடுஞ்செழியன், இந்தியச் சமூகப் புரட்சியில் திராவிட இயக்கத்தின் கொடை, பக்.95-96
3. அருணன், தமிழகத்தில் சமூக சீர்திருத்தம் இரு நூற்றாண்டு வரலாறு, ப.164
4. மேலது, பக்.165-166
5. பண்டித எஸ்.முத்துசாமிப்பிள்ளை, நீதிக்கட்சி வரலாறு, ப.14
6. மேலது ப.16
7. முரசொலி மாறன், திராவிட இயக்க வரலாறு, தொகுதி-1, ப.157
8. மேலது, ப.167
9. ஆர்.முத்துக்குமார், திராவிட இயக்க வரலாறு, பாகம்-1, ப.39
10. மேலது, ப.51
11. மேலது, ப.52
12. மேலது, ப.57
13. மேலது, ப.62
14. மேலது, ப.92
15. மேலது, ப.93
16. கே.ஜி.இராதாமணாளன், திராவிட இயக்க வரலாறு, ப.119
17. ஆர்.முத்துக்குமார், திராவிட இயக்க வரலாறு, பாகம்-1, ப.124
18. மேலது, பக்.124-125
19. மேலது, பக்.130-131
20. மேலது, ப.93
21. கே.ஜி.இராதாமணாளன், திராவிட இயக்க வரலாறு, ப.119
22. மேலது, ப.130
23. ஆர்.முத்துக்குமார், திராவிட இயக்க வரலாறு, பாகம்-1, ப.109
24. மேலது, ப.115
25. மேலது, ப.117

26. மேலது, ப.141

27. மேலது, ப.149

28. கே.ஜி.இராதாமணாளன், திராவிட இயக்க வரலாறு, ப.155

29. ஆர்.முத்துக்குமார், திராவிட இயக்க வரலாறு, பாகம்-1, பக்.163-164

30. மேலது, ப.165

31. ஜி.விசுவநாதன், அண்ணா அருமை அண்ணா, ப.39

32. ஆர்.முத்துக்குமார், திராவிட இயக்க வரலாறு, பாகம்-1, ப.195

33. மேலது, ப.195

34. மேலது, ப.200

35. மேலது, ப.200

36. பட்டத்தி மைந்தன், அறிவுப் பேரொளி அண்ணா, ப.57

37. ஜெ.ஶ்ரீசந்திரன், பேரறிஞர் அண்ணாவின் வாழ்க்கை வரலாறு, ப.128

38. மேலது, ப.128

39. மேலது, பக்.135-136

40. கே.ஜி.இராதாமணாளன், திராவிட இயக்க வரலாறு, ப.207

41. ஆர்.முத்துக்குமார், திராவிட இயக்க வரலாறு, பாகம்-1, ப.219

42. மேலது, ப.220

43. ஜி.விசுவநாதன், அண்ணா அருமை அண்ணா, ப.46

44. ஆர்.முத்துக்குமார், திராவிட இயக்க வரலாறு, பாகம்-1, ப.233

45. ஜெ.ஶ்ரீசந்திரன், பேரறிஞர் அண்ணாவின் வாழ்க்கை வரலாறு, ப.185

46. ஆர்.முத்துக்குமார், திராவிட இயக்க வரலாறு, பாகம்-1, ப.269

47. மேலது, ப.276

48. மேலது, ப.289

49. மேலது, ப.293

50. மேலது, பக்.302-303

51. கோவி.லெனின், திராவிடர் இயக்கம் நோக்கம் தாக்கம் தேக்கம், ப.152

52. மேலது, பக்.156-157

53. ஆர்.முத்துக்குமார், திராவிட இயக்க வரலாறு, பாகம்-1, ப.312

54. ஆர்.முத்துக்குமார், தமிழக அரசியல் வரலாறு, பாகம்-1, ப.204

55. க.நெடுஞ்செழியன் (ப.ஆ), பன்முக நோக்கில் பேரறிஞர் அண்ணா, பக்.97-98

56. கே.ஜி.இராதாமணாளன், திராவிட இயக்க வரலாறு, பக்.312-313

57. இரா.சேது, அண்ணாவின் புனைகதைத்திறன், ப.10

58. http://neelamegan.blogspot.in

59. பா.உதயக்குமார், அறிஞர் அண்ணாவின் சிறுகதைத்திறன், ப.64

60. இரா.சனார்த்தனம், அண்ணா ஒரு நாடக அறிஞர், ப.246

# இயல் - 2

## அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் சமுதாய மதிப்புகள்

இருபதாம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் தமக்கெனத் தனியானதொரு தகுதிசான்ற இடத்தினைப் பெற்றுத் திகழ்பவர் அறிஞர் அண்ணா ஆவார். பேச்சுத்துறையில் பெரும்புகழ் பெற்றிருந்த அவர்கள் எழுத்துத் துறையிலும் சிறப்புற்று விளங்கினார். 'அவர் தொடாத்துறை ஒன்றுமில்லை. தொட்டத் துறைகளை அழகு படுத்தாமல் விட்டதில்லை' என்று மேனாட்டு அறிஞர் ஜான்சனை எழுத்தாளர் கோல்டுசுமித் பாராட்டியது போன்று பேரறிஞர் அண்ணாவை பாராட்டுவதும் தகும். அவர் சிறுகதைப் படைப்பாளராக, புதின ஆசிரியராக, நாடகம் இயற்றுபவராக, கவிதை தீட்டுபவராக, கடித இலக்கியத்தின் முன்னோடிகளில் ஒருவராக இப்படிப் பல்வேறு துறைகளில் பாங்குறப் பளிச்சிடுகின்றார். அண்ணாவின் படைப்புகள் சமுதாய முன்னேற்றத்திற்குத் துணை செய்வதாகவே அமைந்துள்ளன. இத்தகைய அண்ணாவின் படைப்புகளில் அவர் வலியுறுத்தும் சமுதாய மதிப்புகளை ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

### சமுதாயம் - சொல் விளக்கம்

சமுதாயம் என்ற சொல்லுக்கு, "கூட்டம், சங்கம், பின்னணி, பொது, போர்"[1] என்ற பொருள்களைத் தமிழ்மொழியகராதி கூறுகிறது. "கூட்டம், சங்கம், பொதுவானது, மக்களின் திரள், பொருளின் திரல், உடன்படிக்கை."[2] என்று கழகத் தமிழகராதி பொருள் தருகிறது. இவ்விரு அகராதிகளிலும் சமுதாயம் என்ற சொல்லுக்குக் கூட்டம், சங்கம், பொது என்ற பொருள்கள் பொதுவானவைகளாகக் காணப்படுகின்றன. சமுதாயம் பற்றிய விளக்கத்தினை, "எது சமுதாயம்? மக்கள் பலர் கூடியிருப்பது; கூடி வாழ்வது. கூடியிருப்பது வேறு; கூடி வாழ்வது வேறு. கூடி வாழ்வதே மானுட சமுதாயம். அங்கு நல்லோர் உண்டா? தீயோர் உண்டா? இருவரும் உண்டு."[3] என்னும் கூற்று எடுத்துரைக்கும்.

### சமுதாயவியல்

அறிவியலின் உட்பிரிவுகளான கணிதவியல், வேதியியல், பௌதிகவியல் முதலிய பல இயல்களைப் போல சமுதாயவியலும் ஓர் அறிவியலாகும். மனிதனிடத்தில் இயல்பாக அமைந்திருக்கும் அறிவை அது தூண்டுகிறது. சமுதாயவியலைக் கற்கும்போது அறிவுக்குப் போதிய பயிற்சி கிடைப்பதாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர். ஒன்று உண்மையா? பொய்யா? நன்மையா? தீமையா? என ஆராயும் ஆராய்ச்சிப் போக்கை இவ்வறிவியல் தருகிறது. எதையும் முன்னோர்கள் சொன்னார்கள் என்பதனால் ஏற்றுக்கொள்ள அது மறுக்கிறது. அறிவுடன் தொடர்புபடுத்தி மக்கள் திரளியத்தைப் பகுத்துப் பார்க்கும் அறிவுசார் பணியைச் சமுதாயவியல் தொடங்கி வைக்கிறது. சமுதாயவியலை நன்கு ஆராய்ந்த மேலை நாட்டறிஞர்கள் சமுதாயவியல் பிற எல்லா இயல்களுடனும் ஏதோ ஒரு வகையில் தொடர்புடையதாக இருப்பதை எடுத்துக்காட்டியுள்ளனர்.

அறிவியல் என்பது மனித அறிவைப் பயன்படுத்தி அதன்மூலம் ஒன்றின் நிலைப்பாட்டைப் புரிந்துகொள்வதாகும். அறிவின் ஒரு குறிப்பிட்ட செயல்வடிவமே அறிவியல் எனக் கூறப்படுகிறது. உயிரினங்களில் பகுத்தறிவுள்ள உயிரினம் மனிதர்கள். மனிதர்கள் தாங்கள் பெறும் அனுபவத்தின் மூலம் அறிவைப் பெறுகிறார்கள். அனுபவம் ஒரு சிறந்த ஆசிரியர் எனக் கூறுவர். இந்த அறிவுத் திறனைப் பொது அறிவு, பகுத்தறிவு என

இரண்டாகப் பிரிப்பர். பொது அறிவு சமுதாயத்தோடு மனிதன் உறவாடும்போதும் பழகும்போதும் கிடைக்கக் கூடிய பொதுத் தகவல்கள். இவ்வறிவியல் தகவல்கள் வகைப்படுத்தப்படாமல் கிடைத்த மேனிக்கு அப்படியே மூளைக்குள் பதிவாகி விடுகின்றன. உணர்ச்சிப் பூர்வமாகத் தெரிந்து கொள்ளக் கூடிய பலரும் அறிந்த அறிவைப் பொதுஅறிவு அனுபவம் எனக் கூறுவர். சமுதாயத்திலுள்ள பழக்கவழக்கங்களும், மரபுகளும், பண்பாட்டுப் போக்குகளும் மனிதனுக்குப் பொது அறிவு பெறும் அனுபவத்தை உண்டாக்குகின்றன.

பகுத்தறிவு, ஒன்றின் உருவாக்கத்திற்குரிய காரணகாரியத்தைக் கண்டறிய முயலுகின்றது. ஆதாரங்களைக் கண்டறிவதும், உண்மைகளை நிலைநிறுத்துவதும் கொள்கைகளை உருவாக்குவதும் ஆகிய அனுபவங்களைப் பகுத்தறிவு அனுபவம் எனக் குறிப்பிடுகின்றனர். இதுபோல, பகுத்தறிவு அனுபவத்திற்குப் பல குணங்கள் உள்ளன. இயற்பியல், வேதியியல், உயிரியல் போன்றவற்றை அறியப் பகுத்தறிவு பயன்படுகிறது. அதுபோலவே சமுதாயவியலையும் அறிந்து கொள்ளப் பகுத்தறிவு தேவைப்படுகிறது. மேற்சொல்லப்பட்ட இயல்கள் மனித வாழ்க்கையின் தன்மையை ஆராய்கின்றன. சமுதாயவியல் மற்றும் சமுதாய அறிவியல்கள் மனிதர்களின் செயல்கள் குறித்தும் வளர்ச்சி குறித்தும் ஆராய்கின்றன. அறிவியல்களுக்கு முக்கியமானது அவற்றின் பாடப்பொருள் என்கின்றனர். அதுபோலவே சமுதாயவியலும் அதன் பாடப்பொருள்களாகச் சமுதாய உறவுகளைக் கொண்டுள்ளது. மனித இன உறவுகள், வாழ்க்கை முறைகள் சமுதாயவியலில் அறிவியல் அடிப்படையில் ஆராயப்படுகின்றன.

## சமுதாயவியலின் பயன்கள்

'சமுதாயவியல்' சமுதாயம் பற்றிப் படிக்க அமைக்கப்பெற்ற ஒரு கல்விமுறையாகும். இதன் அடிப்படையில் சமுதாயத்தை மாற்றவும் சமுதாயத் தேவைகளை நிறைவு செய்து கொள்ளவுமான ஓர் ஒழுங்கைச் சமுதாயவியலார் தெரிவிக்கின்றனர். சமுதாய அமைப்பில் அமைந்த பல்வேறு பிரிவுகளிலும் ஏற்படும் நிகழ்வுகளுக்கான காரணங்களை அறிந்து கொள்ளச் சமுதாயவியல் பயனுடையதாயிருக்கிறது.

சமுதாயத்தைப் பற்றிப் போதிக்கும் பிற இயல்களும் உள்ளன. வரலாறு, உளவியல், பொருளாதாரவியல், அரசியல் ஆகியன சமுதாயம் பற்றி எழுதப்பட்டவை. இவ்வியல்களுக்கும் சமுதாயவியலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இவ்வியல்கள் ஒவ்வொன்றிலும் சமுதாயவியலின் பிரதிபலிப்பைக் காணமுடியும். மேலைநாட்டைச் சேர்ந்த ஆல்பிரட் பெரோடா போன்ற அறிஞர்கள் சமுதாயவியலுக்கு மதிப்பில்லை என விவாதிக்கின்றனர். எனினும் சமுதாயவியல் என்னும் கொள்கை வளர்ச்சியினால் பல பயன்கள் உள்ளன. சமுதாயவியல் சமுதாயத்தைப் பற்றிய அறிவைத் தருகிறது. பல்வேறு நிறுவனங்களைப் பற்றிப் பொதுவாகப் படிப்பதால் சமுதாயத் தேவைகளைப் புரிந்துகொண்டு அதற்கேற்பச் செயற்பட முடிகிறது. முந்தைய தலைமுறையினரின் வாழ்க்கை வரலாறு, பண்பாடு, பழக்கவழக்கங்கள் முதலியனவற்றை அறியமுடிகின்றது. சமுதாயக் கட்டுப்பாடு, சமுதாய நாகரிகம், ஒழுங்கு முதலியவற்றைக் கண்டறிந்து இளந்தலைமுறையினர்க்கு எடுத்துக்கூற வாய்ப்பாக அமைந்துள்ளது. மக்கள் அறிவியல் நெறியுடன் வாழ வேண்டியதன் அவசியத்தை இது வலியுறுத்துகிறது. இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் முதலிய மூன்று காலக்கட்டத்தையும் ஒப்பிட்டுப் பார்த்துச் சமுதாயத்தை நன்னெறி நோக்கிச் செலுத்த சமுதாயவியல் பயன்படுகிறது. சமுதாயவியல் தனி நபருக்கும் சமுதாயத்துக்கும் பயன்படும்படியான அறிவியல் கொள்கையாக இருக்கிறது.

ஒவ்வொரு சமூகமும் தொடர்ச்சியாய்த் தனது இருப்பிற்கான போராட்டத்தில் சில பொதுவான சமுதாய மதிப்புகளை அல்லது விழுமியங்களைக் (Social Values) கட்டமைத்துக் கொள்கின்றது. இந்த விழுமியம் 'ஒரு சமூகத்தின் ஆன்மா' என்று கொள்ளத்தக்க அளவிற்குச் சிறப்புமிக்கது. சமூக மக்களின் கருத்தொருமை, பற்றுறுதிகள்(Convictions) பழக்கவழக்கங்கள் ஆகியவற்றிலிருந்தும், சமுதாய - பொருளாதார உறவுப் பின்னணிகளிலிருந்தும் உருவாகக் கூடியவையே சமுதாய மதிப்புகள் ஆகும். சமூகம் மாறும் போது மதிப்புகளும் மாறக்கூடியன. அதே நேரத்தில் இம்மதிப்புகள் உருக்கொள்வதற்கான சமுதாயச் சூழல்கள் மறைந்துவிட்ட பிறகும் கூடச் சமுதாயத்தில் இவைகளில் சில மதிப்புகள் தொடர்ந்து வாழவும் கூடியவை.

நட்பு, விருந்தோம்பல், காதல், வீரம், மானம், கற்பு, கொடை, செய்ந்நன்றியறிதல், கல்வி, குழந்தைப்பேறு என்னும் பல விழுமியங்கள் சங்க இலக்கியங்களில் போற்றப்பட்டுள்ளன. திருக்குறளிலும் போற்றப்படுகின்றன. இன்றுவரை தமிழ்ப் பண்பாடு பற்றிய சித்திரத்தில் இவை தவறாமல் இடம்பெற்று வருகின்றன. எனினும் காலமாற்றத்தில் இவ்விழுமியங்களிலும் குற்றங்கள் நேர்ந்திருப்பதைப் புதிய படைப்பாளிகள் சுட்டிக்காட்டியுள்ளனர். காதல், கற்பு, கல்வி போன்றவை பற்றிய பழைய கருத்தோட்டங்கள் இன்றைய இலக்கியங்களில் மாற்றத்திற்குள்ளாகியிருக்கின்றன. இந்த அளவிற்கு ஒரு காலத்தில் சமுதாய வளர்ச்சிக்கு ஆதாரமாக இருந்த விழுமியங்கள், மற்றொரு காலத்தில் அச்சமுதாயத்திற்குப் பாரமாகிவிடுகிற சூழலும் நிகழ்ந்துவிடுகிறது. இவ்வாறு ஒரு விழுமியத்தை 'உன்னதம்' எனக் கட்டமைக்கின்ற இலக்கியங்கள் பின்னர் அதனைச் சமுதாயத்திற்குப் பாரமாகிவிட்டது எனக் கூறிப் புதிய மதிப்புகளை உருவாக்கி உள்ளத்து உணர்வாகச் சேர்க்கின்றன.

இருபதாம் நூற்றாண்டில் மனிதன் அளப்பரிய சாதனைகளில் உயர்ந்து நின்றான். அறிவியல், இலக்கியம் எனப் பல துறைகளிலும் அதிக வளர்ச்சி அடைந்தது இந்நூற்றாண்டில் ஆகும். இருபதாம் நூற்றாண்டின் உயரிய இலக்கியப் படைப்புகள் என்னும் போது நம் கண் முன் நிற்பது புனைகதைகளாகும். ஒரு நூற்றாண்டிற்கும் மேற்பட்ட கால வளர்ச்சியினைக் கொண்டது இவ்விலக்கியங்கள். பொழுது போக்கிற்காக என்ற அளவில் முதலில் ஏற்றுக்கொள்ளப்பட்ட இவ்வகை இலக்கியங்கள் நாட்பட நாட்பட மக்களின் வாழ்வை, ஏற்றத்தை, தாழ்வை, குணங்களை என அனைத்தையும் விளக்கும், விமர்சிக்கும் கதையமைப்பைக் கொண்டதாய் மாறின. கலை, இலக்கியம், அறிவியல் என ஒவ்வொன்றிலும் ஏற்பட்ட மாற்றத்தினைப் புலப்படுத்துவதைப் படைப்பாசிரியர்கள் பலரும் விரும்பினர். அவற்றின் வெளிப்பாடாகவே பல படைப்புகள் தோன்றின.

"அடிப்படையில் வாழ்க்கை அனுபவத்தை மொழியின் வாயிலாக உணர்த்துவதே இலக்கியம்"[4] என்பது ஹட்சன் கூற்று. அப்படி உணர்த்தாத இலக்கியங்கள் நிலைபேறுடையனவாய் இருப்பதில்லை. இதை உணர்ந்த படைப்பாளிகள் பலரும் இருபதாம் நூற்றாண்டின் இடைப்பட்ட காலத்தில் தமது கருத்துக்களை இணைத்துக் காலத்தைக் காட்டும் கண்ணாடியாக இலக்கியத்தை மிளிரச் செய்தனர்.

"சமுதாயம் தேங்கிக் கிடக்கின்ற ஒன்றன்று. நாள்தோறும் மாறிக்கொண்டு வருகின்ற ஒன்று. மாறிவரும் சமுதாயத்தைச் சித்தரித்துக் காட்டும் இலக்கியமே உண்மையான சமுதாய இலக்கியமாகக் கருதப்பட முடியும்"[5] என்னும் கொள்கைக்கேற்ப இருபதாம் நூற்றாண்டு இலக்கியப் படைப்பாளர்கள் தமது படைப்புகளைப் படைத்துள்ளனர். இவர்கள்

தமது படைப்புகளை மக்களுக்காக, சமுதாயத்தின் நிறைகுறைகளை எடுத்துச் சொல்வதற்காக, சமுதாய வளர்ச்சிக்காகப் படைத்தனர்.

## மதிப்பு - ஒரு பார்வை

நன்மையுடன், வாழ்க்கைக்கு முழு உறுதியும் தந்து மதம், இனம், நாடு என்ற எல்லைகளைக் கடந்து நின்று அனைவரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய நற்கருத்துக்களின் ஒழுங்கை மதிப்பு எனலாம். மதிப்பு என்பது பலராலும் காணப்படக்கூடிய பருப்பொருளன்று. மதிப்பு நுண்மையானது. அதே போன்று பொருளின் இயல்பான பொருளுமன்று. அதன் இடம், காலம் இவற்றை ஒட்டியே அமைவது. மற்றொரு பொருளையொட்டிய ஒப்புமைப் பண்பாகவும் கருதப்படுவது. "மதிப்பு ஒரு பொருளுக்கும் மற்றொரு பொருளுக்கும் குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பட்ட இடத்தில் இருக்கும் உறவைக் காட்டுகிறது. எடுத்துக்காட்டாகப் பனிக்கட்டி குளிர்காலத்தைவிடக் கோடையில் மதிப்புமிக்கது."[6]

மனிதர்களின் பழக்கவழக்கங்கள், தீர்மானங்கள், விருப்பங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் மதிப்புகள் அமையும். இத்தகு மதிப்பு பலராலும் ஏற்றுக் கொள்ளக்கூடியதாகவும், பலருக்கும் நன்மை தரக்கூடியதாகவும் சமுதாயத்தை வழிநடத்திச் செல்லக் கூடியதாகவும் இருத்தல் வேண்டும். இதனை விழுமியம் (Values) என்ற சொல்லாலும் குறிப்பர். இவ்வகையில் "விழுமியம் என்பது விரும்பத்தக்கதாக அல்லது போற்றத்தக்கதாக நம்பப்பட்டு வருவது"[7] ஆகும்.

"மதிப்புணர்வுகளை இருபெரும் பகுதிகளாகப் பிரிப்பதனால் அவற்றைத் தனிமனித மதிப்புணர்வு, சமுதாய மதிப்புணர்வு என்றும் பாகுபடுத்துவர்."[8] "தனிமனிதன் தொடங்கி சமூக எல்லை விரிவின் அடிப்படையில் மதிப்புகளைத் தான் சார்ந்தது, குழு சார்ந்தது, சமூகம் சார்ந்தது, நாடு சார்ந்தது, மனித இனம் சார்ந்தது, சுற்றுப்புறம் சார்ந்தது என வகைப்படுத்துவார்"[9] நிக்கொலாஸ் ரெஷர். தனி மனித நலம், சமுதாய நலம் என்ற இரண்டில் தனிமனிதனுக்குப் பயன் தரும் பொருள் அல்லது செயல் சமுதாயத்திற்கு நலம் தராது, தீமை தரும் எனின் அது மதிப்பாகும் தன்மையை இழக்கிறது. "தனிமனித நலம் முக்கியமானது என்றாலும், சமூக நலம்தான் தனிமனித நலத்தைப் பேணமுடியும். ஒரு சமூக முழுமையின் விதிமுறை அமைப்புகளினாலேயே அதன் தனிமனிதன் மதிக்கப்படுவதும் நிறைவாக நடத்தப்படுவதும் சாத்தியமாகும். ஆகவே தனிமனித நலம் என்பது ஒரு சமூகச் செயற்பாடே (Social Function) அன்றி வேறன்று. எனவே தான், தனி மனித நலம் சார்ந்த மதிப்புக்கும் சமூக நலம் சார்ந்த மதிப்புக்கும் இடையே முரண்பாடு வருகின்ற போது, சமூக நலம் சார்ந்த மதிப்புக்கே முதன்மை தரவேண்டும் என்று கருதப்படுகிறது. தனி மனித மதிப்புகளும், சமூகம் சார்ந்த மதிப்புகளும் முரண்பாடு காணாத அளவுக்கு சமூக அமைப்பும் தனிமனித அறிவு முதிர்ச்சியும் அமைவது குறிக்கோள் சமூகமாகும்."[10]

சமுதாயத்தில் ஒருவரோடு ஒருவர் கொள்ளும் தொடர்பால் மதிப்புகள் உருவாவதுடன் பெரும்பான்மை மக்களின் ஆதரவும் பெற்றால்தான் சிறந்ததாக நிலைத்து நிற்கும். சமுதாயத்தின் தேவைகளை நிறைவு செய்யும் இம்மதிப்புகள் புதிய முயற்சி, வளர்ச்சி, சிந்தனை போன்றவற்றிற்குத் தடைக்கல்லாக அமைவதும் தடுக்க முடியாததாகிறது.

## மதிப்புகள் மாறும் இயல்பின

மனிதன் வாழும் சமுதாயம் மாறுதலுக்குட்பட்டது. வளர்ச்சி தேவையான ஒன்று. பிறந்த குழந்தைகளுக்குத் தேவையான பொருள்களும், அணுகுமுறைகளும் வளர்ந்த

குழந்தைகளுக்குத் தேவைப்படுவதில்லை. அதுபோலவே, ஒரு காலக்கட்டத்தில் உயரியதாக மதிக்கப்பட்ட மதிப்புகள் பின்னொரு காலத்துக்குத் தேவையானதை நிறைவு செய்யும் என்று கூற முடியாது. அந்தந்தக் காலத் தேவைகளுக்கேற்ப மதிப்புகள் மாறக்கூடியன. பெண்ணின் நிலை, ஆண் பெண் உறவு, திருமண முறைகள், சாதி, சமயம், கலை, கல்வி, அரசியல் போக்கு, பணத்தின் ஆதிக்கம் ஆகிய அனைத்துமே இன்று மாற்றமடைந்து வருகின்றன. நிலையானது எனக் கொண்ட சமுதாயக் கட்டுக்கோப்புகள் கூட மாற்றம் பெற்று வருகின்றன. ஒரு காலத்திற்குப் பொருந்தியதாக ஏற்றுக்கொள்ளத்தக்கதாகக் கருதப்பட்ட மதிப்புகள் பிறிதொரு காலத்திற்கு ஏற்றுக்கொள்ள முடியாததாகி விடுகின்றன. மக்களின் தேவைகளுக்கும், மதிப்புகளுக்கும் இடையில் முரண்பாடு தோன்றலாம். அதனால் பழைய மதிப்புகளுக்கு மாறாகப் புதிய மதிப்புகள் தோன்றலாம். ஆனால் அவை உடனே மக்களால் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன என்று கூறமுடியாது. மாற்றம் மெதுவாக நடந்தாலும் தொடர்ந்து நடைபெறும். எனவே நிலைபேறுடைய மதிப்பு, சார் மதிப்பு என்ற இரண்டில் நிலைபேறுடைய மதிப்புகள் கணக்கிட்டுச் சொல்ல முடியாத கால எல்லைக்கு மட்டுமே உரியன. அதாவது சார்நிலையில் நிலைபேறுடையது. அத்தகு சார்நிலையில் நிலைபேறுடையனவாய் உள்ளவையே பொதுமைக் கூறுகளாக நின்று சமுதாயத்தின் கட்டுக்கோப்பைப் பேண உதவுகின்றன.

## மதிப்புகளின் அளவுகோல்

அந்தந்தக் காலத்துச் சூழலையும், தேவைகளையும் கொண்ட மதிப்புகளை அறிய அந்தந்தக் கால இலக்கியங்கள் மட்டுமே பயன்படும். மாறாக, இருபதாம் நூற்றாண்டு மதிப்பினை அறியச் சங்க நூல்கள் காட்டும் வாழ்க்கை முறையினை அளவிடு கருவியாகக் கொள்ள முடியாது. அந்நிலை மட்டுமின்றி மனித உறவுகள், மனிதநேய உணர்வுகள், அந்தந்தக் கால அரசியல், பொருளாதாரச் சூழல்கள் முதலியவற்றைக் கொண்டு மதிப்புகளை அறியலாமே தவிர, பிறவகையில் மதிப்பிடுதல் சரியானதாகாது.

## மதிப்பு வகை

மதிப்புகள் நேர்மதிப்பு (Positive Values), எதிர்மதிப்பு (Negative Values), மதிப்புப் போராட்டம் (Value Conflict), இரட்டைமதிப்பு (Dual Value), மதிப்புப் போலிகள் (False Value) என வகைப்படுத்தப்படுகின்றன. மனிதன், அவனது உள்ளம் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு உதவுவன அனைத்தும் நேர்மதிப்பின் பாற்படும். அவை அல்லாதன பிற எதிர்மதிப்பாகும். "நேர்மதிப்பு போற்றப்பட்ட போது, அதுவே எதிர்மதிப்பை ஆதரிப்பதாக அல்லது நிலைநாட்டுவதாக ஆகிறது."[11] சமுதாயத்தில் இரண்டு மதிப்பு மாற்றங்களுமே நடைபெற்று வருவதைத் தவிர்க்க முடியாது. ஒரே சமயத்தில் நேர்த்திசை மதிப்பு மாற்றங்களும், எதிர்த்திசை மதிப்பு மாற்றங்களும் சமுதாயத்தில் நிகழ்கின்றன. அவற்றின் மாறுபாடுகளும் தொடர்ந்து நிகழ்கின்றன.

## மதிப்புப் போராட்டம் (Value Conflict)

எதிரெதிர் மதிப்பு முரண்படும் போதும் நேர்மதிப்புகளுள் முதன்மை எதற்கு என்ற கேள்வி எழும் போதும் மதிப்புப் போராட்டம் ஏற்படுகிறது என்பர் சமூகவியல் அறிஞர்கள். சில சமயங்களில் நேர்மதிப்புகள் எதிர்மதிப்புகளாகவும், எதிர்மதிப்புகள் நேர்மதிப்புகளாகவும் மாற்றம் பெறத் தொடங்கும் போதும் சிக்கலும் போராட்டமும் ஏற்பட வாய்ப்புண்டு.

## இரட்டை மதிப்பு (Dual Value)

வாழ்வில் இரட்டை வேடமிடும் மனிதர்கள் அதிகரித்து வருகின்றனர். அதனால் மதிப்புகளும் இரட்டை மதிப்புகளாகின்றன. வீட்டில், அலுவலகத்தில், பொதுமக்கள் முன்னிலையில் என்று ஒவ்வோர் இடத்தில் ஒவ்வொரு நிலையாக, மனிதன் தன்னைப் பச்சோந்தியாக மாற்றிக்கொள்ளுவதால் இம்மதிப்புத் தன்மை சமுதாயத்தில் அதிகமாகக் காணப்படுகிறது.

## மதிப்புப் போலிகள் (False Value)

சில பழக்கவழக்கங்கள், சம்பிரதாயங்கள், ஆடம்பரங்கள் போன்றவை இன்றைய நடைமுறை வாழ்க்கைக்கு ஏற்றவையாய் இருப்பதில்லை. பழமையில் ஊறியவர்களும், அவர்களைக் கண்மூடிப் பின்பற்றும் சிலரும் அவற்றைத் தேவையற்றது என்று நீக்க முயல்வதில்லை. நடப்புலக வாழ்விற்குத் தேவையற்றவை என்பது தெரிந்தும் அதற்குத் தாமாகவே சிறப்பிடம் தந்து பின்பற்றப்படுவன மதிப்புப் போலிகள் எனப்படும்.

## சமுதாய அமைப்பு

மதிப்புகள் நுண்மையானவை. அவற்றைக் கண்ணால் காண முடியாது. ஆனால் சமுதாய அமைப்புகளையும், அவற்றின் தன்மைகளையும் அவை மூலம் அறியப்படும் மக்களின் வாழ்நிலையையும் நுணுகிக் காண்பதன் மூலமே மதிப்புகளை ஆழ்ந்தறிந்து ஆராய முடியும். எனவே, சமுதாய அமைப்புகள் பற்றிய ஆய்வே மதிப்புகளை அறிய உதவும் அளவுகோலாகும்.

"சமூகவியலாளர், சமூக அமைப்புகளைக் குடும்பம், அரசியல், பொருளாதாரம், கல்வி, சமய அமைப்புகள் என்று ஐந்து முதன்மை அமைப்புகளாகப் பிரிப்பர்."[12] இவை பல்வேறு துணை அமைப்புகளைத் தம்மிடம் கொண்டிருக்கும்.

## சமுதாயவியல் அணுகுமுறை

பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட அறிவியல் வளர்ச்சியினால் மனிதர்களையும் அவர்கள் வாழ்க்கையையும் கற்பிக்கின்ற கல்வித் துறைகள் சமுதாயவியல், உளவியல், மானிடவியல், வரலாற்றியல், பொருளாதாரவியல், மொழியியல், நாட்டுப்புறவியல் எனப் பலவாறு பெருகிச் செழித்தன. இதன் விளைவாக ஒவ்வொன்றையும் இலக்கியத்தோடு இணைத்துப் பார்க்கிற பார்வையும் வளர்ச்சியுற்றது. இலக்கியமும் ஒரு சமுதாய நிறுவனமாக உணரப்பட்டது இதற்குக் காரணமாகும். இலக்கியத்தின் ஆதாரமாக விளங்கும் மொழியே சமுதாயத்தின் படைப்புத்தான். இலக்கியத்திற்கும் சமுதாயத்திற்கும் இருக்கும் உறவினைச் 'சமுதாயத்தைச் சொல்லில் வடித்தளிப்பதே இலக்கியம்' என்ற டி போனால்ட் (De Bonald) என்பாரின் புகழ்பெற்ற கூற்று உணர்த்தும்.

இலக்கியத்திற்கும் சமுதாயத்திற்குமான உறவினைச் சமுதாயத்தின் அடிப்படை அலகுகளான குடும்பம், சமயம், அரசு, கல்வி, நீதிமன்றம், பொருளாதார உறவு முதலியவற்றோடு இணைத்து விளக்க முயல்வது சமுதாயவியல் அணுகுமுறை. எனவே தான் சமுதாயவியல் திறனாய்வு பெரும் செல்வாக்குள்ள ஒன்றாகத் தொடர்கிறது. சான்றாக, இலக்கியத்திற்கும் பொருளாதார நிறுவனங்களுக்குமான உறவை வரலாற்றடிப்படையில் அறிந்து கொள்ளும்போது இலக்கியம் சமுதாயக் கட்டமைப்பிற்குள்ளேயே இயங்கிக் கொண்டிருக்கிறது என்பதை அறிய முடிகிறது. தொடக்க

காலத்தில் இலக்கியம் மன்னர்களின் ஆதரவினாலும், அரசின் ஆதரவினாலும் வளர்க்கப்பட்டது. பின்னர்ச் சமயங்கள், சமய நிறுவனங்கள் இலக்கியத்தை வளர்த்துள்ளன.

இன்றைய மக்களாட்சிக் காலத்தில் இலக்கிய ஏடுகள், வணிக இதழ்கள், பதிப்பகங்கள், வானொலி, தொலைக்காட்சி, கணினி முதலிய ஊடகங்கள் ஆகியவற்றால் இலக்கியத்திற்கு ஆக்கம் உண்டாகிறது. பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம் முதலிய கல்வி நிறுவனங்களாலும் இலக்கியம் பேணப்படுகின்றது. இவ்வாறு பல்வேறு சமுதாயப்பிரிவுகளின் ஊட்டத்தால் வளர்கின்ற இலக்கியத்தின் தன்மையும் அதற்கேற்ப மாறி வந்திருப்பதைத் திறனாய்வுகள் விளக்கும்.

## அண்ணாவின் படைப்புகளில் நேர்மதிப்புகள்

சமுதாயத்தில் மனிதனுடைய விருப்பத்துக்கும், கருத்துக்கும், எடுத்துக்கொள்ளும் பொருளுக்கும் இன்னபிறவற்றிற்கும் உதவி, அம்மனிதனை அல்லது சமுதாயத்தை உயர்த்துவன நேர் மதிப்புகளாகும். அவ்வகையில் திருமணம், ஒழுக்கம், நேர்மை, கடமை, நாட்டுப்பற்று, இரக்கம், கொடை ஆகிய நேர்மதிப்புகளை அண்ணா தன் படைப்புகளில் படைத்துள்ளார். இம்மதிப்புகள் தனிமனிதனையும் சமுதாயத்தையும் உயர்த்தவல்லன என்ற காரணத்தினால் அண்ணா இவற்றைத் தன் படைப்புகளில் வலியுறுத்துகின்றார்.

## திருமணம்

மனித உயிர்கள் சேர்ந்து வாழும் இயல்பின. இயற்கையான இந்த உணர்வை இயல்பூக்கம் என்பர் உளவியலார். 'மனிதன் ஒரு சமூகப்பிராணி' என்பது கிரேக்க அறிஞர் அரிஸ்டாட்டிலின் புகழ்பெற்ற மொழியாகும். மனிதனும் ஒரு வகை விலங்குதான் என்றாலும் சிந்திக்கத் தெரிந்த விலங்காவான். அவன் சிந்தனையில் தோன்றிய சமூக நிறுவனம் திருமணமாகும்.

மனித நாகரிகம் வளராத காட்டுமிராண்டி நிலையில் மக்கள் குழுவாகச் சேர்ந்து வாழ்ந்தனர். திருமணம், குடும்பம் என்ற அமைப்பு அப்போது இல்லை. வேட்டையாடியும் உணவு சேகரித்தும் வாழ்ந்த நாடோடி வாழ்க்கையிலிருந்து மீண்டனர். நிலையான இடத்தில் தங்கி விவசாயம் செய்து வாழத் தொடங்கினர். திருமணம், குடும்பம், சமூகம், அரசு, தனிச் சொத்துரிமை ஆகியன தோன்றின. ஆணும் பெண்ணும் சேர்ந்து திருமணம் என்ற நிகழ்வின் வழிக் குடும்பம் அமைகிறது. அவ்வகையில் இன்றைய சமூக அமைப்பின் மையமாகக் குடும்பம் விளங்குகிறது.

"ஒவ்வொரு பாதியாய் வளர்ந்து வரூஉம் இரண்டு உயிர் ஒன்றி முழுத்தன்மை எய்திக் கடனாற்றுதற்கு, அவைகளை அன்புக் கயிற்றால் இயற்கை பிணிப்பது திருமணம்"[13] என்பது திருமணம் குறித்த திரு.வி.க. அவர்களின் கூற்றாகும்.

திருமணம் என்ற சடங்கு குடும்ப வாழ்க்கையை உருவாக்குகின்ற இன்றியமையாத கூறாகக் கருதப்படுகின்றது. பழைய சமுதாய அமைப்பில் திருமணம் என்னும் சடங்கு குடும்பங்களின் இணைப்பு என்னும் கருத்தில் காணப்படுகின்றது. இரண்டு மனங்களின் இணைப்பு என்பதை விட இரு குடும்பங்களின் சொத்துக்களின் இணைப்பு என்ற நிலையிலேயே திருமணம் நிகழ்கின்றது. அல்லது சொத்துக்கு ஆசைப்பட்டு இளம்பெண்ணை ஒரு வயோதிகனுக்குத் திருமணம் செய்து வைக்கின்ற நிலையே பெரும்பாலும் இருந்துவந்துள்ளது. இந்தத் திருமண முறைகளை அண்ணா அவர்கள் கடுமையாக எதிர்க்கின்றார். பெண்களின் விருப்பத்தைக் கேட்காமலும், மனம் ஒன்றாத்

திருமணத்தையே பெரும்பாலும் நடத்துகின்ற சமுதாயத்தில் இதை மாற்ற விழைகிறார். சமுதாயத்தில் மதிப்புகளாக இருந்த இளம்பெண் திருமணம், பொருந்தா மணம், வயோதிகத் திருமணம் போன்றவற்றை எதிர்க்கும் விதமாக இலக்கியங்களைப் படைத்தளித்துள்ளார். இத்திருமணங்கள் பெண்களுக்கு ஏற்படுத்தும் துன்பங்களைத் தன் கதைகளில் சித்திரிக்கின்றார். அதோடு விதவையர் மணம், கலப்பு மணம், சுயமரியாதைத் திருமணம் போன்ற சமுதாயத்தில் பின்பற்றப்படாத திருமணங்கள் மதிப்புகளாக மாற்றம் பெற வேண்டும் என வலியுறுத்துகின்றார்.

திருமணம் என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் அவர்கள் வாழ்வில் நடைபெறக் கூடிய மிக முக்கியமான ஒரு நிகழ்வாகும். இத்திருமண வாழ்வு என்பது ஆண்களுக்கு அவர்களின் விருப்பத்துடன் நடைபெறும் நிகழ்வாக அமைகின்றது. ஆனால் பெண்களுக்கு அவர்களின் விருப்பங்களைப் பற்றிக் கருத்துக் கூறக்கூட அனுமதி வாய்ப்பதில்லை. பெரும்பாலான பெண்கள் தங்களுக்கு வரப்போகும் கணவரைத் திருமண மேடையில்தான் பார்க்கிறார்கள் என்ற எதார்த்த உண்மையை அண்ணாவின் புனைகதைகளில் காணமுடிகின்றது. இது பெண்களுக்கு ஏற்படும் சிக்கலாகவும், அக்காலக்கட்டத்தில் இருந்த பழக்கவழக்கங்களில் ஒன்றாகவும் காட்டுகிறார் அறிஞர் அண்ணா. இதை 'ரங்கோன் ராதா' என்னும் புதினத்தில் ரங்கத்தின் வீட்டு வேலைக்காரியாக வரும் பெண்ணின் படைப்பின் மூலம் புலப்படும். இப்பெண் பாத்திரம் மரபுவழிப்பட்ட பெண்ணாகப் படைக்கப்பட்டுள்ளாள். பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளையும் அடக்குமுறைகளையும் இயல்பானதாக ஏற்றுக்கொள்பவளாகவும் காலங்காலமாகப் பின்பற்றப்பட்டு வரும் சமூக வழக்கத்தைக் கண்டும் கேட்டும் அதனைப் பின்பற்றுபவளாகவும் இருக்கின்றாள். பெற்றோர் பார்க்கும் ஆண்மகனையே திருமணம் செய்து கொள்வது என்பது சமுதாயத்தில் இருக்கும் நடைமுறை என்பதாலும், அதுவே ஒரு குடும்பத்திற்குச் சமுதாயத்தில் மதிப்பைக் கொடுப்பதாலும் இம்முறையைச் சமுதாய மதிப்பாகக் கொண்டுள்ளனர் எனக் கருதவும் இடமுள்ளது. இப்புதினத்தில் வரும் வேலைக்காரி துளசியிடம் உன் திருமணத்திற்கு உன்னிடம் சம்மதம் கேட்டார்களா? என ரங்கம் கேட்கின்றாள். அதற்கு வேலைக்காரியான துளசி, "என்னையா! என்னை ஏன் கேட்கவேணும்? இது என்ன வழக்கம்? அவரே பார்த்தாரு, எனக்கு வயசாயிடுச்சு. அவ்வளவுதானே. யாரையோ புடிச்சாரு, ஐயரை நாள் கேட்டாரு, கலியாணத்தை முடிச்சாரு; அவ்வளவுதான். வேறே என்னை என்ன கேட்டாரு, எந்தப் பெண்ணைத்தான் அவங்க அப்பா கேட்டாரு? அப்பேர்ப்பட்ட சீதையைக் கூட நீ இராமரைக் கலியாணம் செய்துக்க இஷ்டந்தானான்னு அவங்க அப்பா கேக்கலியே!"[14] என்று கூறுவதிலிருந்து திருமணத்திற்குப் பெண்ணிடம் சம்மதம் பெறும் பழக்கம் இல்லை என்பதை அறியமுடிகின்றது. இப்பழக்கம் சமுதாயத்தில் ஒரு மதிப்பாகக் கருதப்பட்டுப் பின்பற்றபட்டு வந்துள்ளதை வேலைக்காரியின் கூற்று புலப்படுத்துகின்றது.

திருமணம் என்பது மனித வாழ்வில் நடைபெற வேண்டிய இன்றியமையாத ஒரு நிகழ்வாகும். இத்தகைய நிகழ்வில் பங்கு பெறும் ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒருவருக்கு ஒருவரை பிடித்திருப்பது மிக முக்கியமான நிலையாகும். இந்நிலை சிறப்புற்றால் அவர்களின் வாழ்வு சிறக்கும் என்பது மறுக்கமுடியாத உண்மையாகும். இந்த உண்மையை அண்ணா தனது பல படைப்புகளில் மிக அழுத்தமாகப் பதிவுசெய்துள்ளார்.

## ஒழுக்கம்

ஒழுக்கம் ஆண்களுக்கும் பெண்களுக்கும் பொதுவானதாகும். ஆனால் இச்சமுதாயத்தில் பெண்கள் மட்டுமே ஒழுக்கம் என்னும் உயரிய பண்பைப் பெற்றிருக்க

வேண்டும் என்பது போலத்தான் பழக்கவழக்கங்கள் சமுதாய மதிப்புகளாக விளங்குகின்றன. பெண் ஏதோ ஒரு காரணத்திற்காகப் பல ஆண்களுடன் தொடர்பு வைத்திருந்தால் அவளை விபச்சாரி எனவும் ஒழுக்கங்கெட்டவள் எனவும் கூறும் சமுதாயம் ஒரு ஆண் இந்தத் தவறைச் செய்தால் அதை மதிப்பாகக் கருதி ஏற்றுக்கொள்கின்றது.

"கற்பு நிலை என்று சொல்ல வந்தார். இரு

கட்சிக்கும் அது பொதுவில் வைப்போம்"[15]

எனப் பாரதி அறிவுறுத்தும் நிலையிலிருந்து அக்காலச் சமுதாயத்தை அறிந்து கொள்ள முடிகின்றது. இத்தகைய சூழலே அண்ணா காலச் சமுதாயத்திலும் நிலவியது. ஒழுக்கம் பல தன்மைகளில் வெளிப்படுகிறது. ஆணின் காதலை ஏற்றுக்கொள்ளும் இச்சமுதாயம், பெண்ணின் காதலை ஒழுக்கக்கேடு எனக் கருதுகின்றது. மதிப்பு ஒன்றுதான். ஆனால், அது நிகழும் இடத்திற்கு தகுந்தவாறு அதன் மதிப்பு மாறுகிறது.

காதலித்து ஏமாற்றும் ஆண்களின் ஒழுக்கக்கேடான செயல் சமுதாயத்தில் ஒரு பெண்ணை எத்தகைய நிலைக்கு ஆளாக்குகின்றது என்பதை அண்ணாவின் பல கதைகள் காட்டுகின்றன. இதில் பல பெண்கள் தங்கள் உயிரை மாய்த்துக் கொள்ளும் நிலைக்கு ஆளாக்கப்படுகின்றனர். ஆண்களின் இந்த ஏமாற்றுவேலை பெண்களை இச்சமுதாயத்தில் விபச்சாரிகளாக உருவாக்குகின்றது. இதுவும் ஒருவகையான ஒழுக்கக்கேடான செயலாகவே அண்ணா கருதுகின்றார். சமுதாயத்தில் ஒழுக்கம் என்னும் மதிப்பு ஒரு சார்புடையதாக இருக்கின்றது. இதனை அனைவருக்கும் பொதுவான மதிப்பாக மாற்ற முனைகிறார் அண்ணா. 'தங்கத்தின் காதலன்' என்னும் சிறுகதையில், தன்னை உயிராக நினைத்த தங்கத்தை ஏமாற்றிப் பணத்திற்கு ஆசைப்பட்டு வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்ட பொன்னம்பலம் ஒழுக்கக் குணம் கொண்டவனாக இருந்திருப்பானேயானால் தன்னைக் காதலித்த பெண்ணை ஏமாற்றியிருக்க மாட்டான். அப்பெண் வாழ்விற்காக ஒழுக்கங்கெட்டு விபச்சாரப் படுகுழியில் வீழ்ந்திருக்க மாட்டாள். அவளது மகளும் அதே வழியில் சென்றிருக்கமாட்டாள். தனிமனிதன் ஒழுக்கம் தவறுவதால் சமுதாயத்தில் பெண்கள் பாதிக்கப்படுவதை, "ஜாதி சனியனைக்கண்டு மிரண்ட எத்தனையோ பேர் தமக்கு உகந்தவரை மணம் புரிந்து கொள்ளாது, அவர்கள் வாழ்வைக் கெடுத்து, அவர்களை விபச்சாரிகளாக்கினர். தலைவர் அவர்களே! உமது தங்கத்தின் மகள் அப்படியே ஒரு விபச்சாரியானாள்."[16] எனக் காண்பிக்கின்றார். அதேபோல் பிரார்த்தனை என்னும் சிறுகதையிலும் ஆணின் ஏமாற்றுத்தனத்தால் விபச்சாரியான பெண்ணின் கதையை எடுத்துக்கூறுகிறார். "தாயம்மாள் ஏழைக்குடி. ஆனால் அவளுடைய எழில் மலையப்பனை அந்தக் குடிசைக்கு வரவழைத்தது. மலையப்பனின் பெற்றோர், 'பையன் கெட்டுக் கீரை வழியாவதற்குள் ஒரு முடி போட்டுவிட வேண்டும்' என்று முடிவு செய்தனர். அதற்குள் குடிசையிலே மலையப்பன் தாயம்மாளைச் சரிபடுத்திவிட்டான். அதிக கஷ்டங்கூட இல்லை. அவன் தொட்டான். அந்தத் தளிர் சாய்ந்தது. 'உன்னைத்தான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன். எங்கப்பா மீது ஆணை என்று மலையப்பன் கூறினான். அந்தக் குமாரி ஆனந்தமடைந்தாள். அடிவயிற்றிலே ஆனந்தத்தின் சாட்சி, மெதுவாகத் தவழத் தொடங்கிற்று. அந்தச் செய்தி தெரிந்ததும் மலையப்பன் ஊரைவிட்டே நழுவினான்."[17] என எடுத்துக்காட்டி ஒழுக்கக்கேட்டினால் வரும் பிரச்சினைகளை விளக்கியுள்ளார். காமத்தின் காரணமாக ஒருவன் தன் இச்சையைத் தீர்த்துக்கொள்ள விரும்பித் தன் மனைவியின் சங்கிலியைத் திருடிக்கொண்டு விபச்சாரியைத் தேடிச் செல்கின்றான். இறுதியில் அவன் இன்பம் காணாது சங்கிலியைப் பறிகொடுக்கின்றான். இத்தகைய ஆணின்

ஒழுக்கக்கேட்டால் ஏற்படும் விளைவுகளைக் 'கைக்கு எட்டியது' என்ற சிறுகதையில் காண்பிக்கின்றார் அண்ணா.

ஊருக்குப் பெரிய மனிதர் என்ற போர்வையில் ஒழிந்து கொண்டு இழிவான செயல்களில் ஈடுபடும் ஆடவரின் ஒழுக்கக்கேட்டை விமர்சிக்கிறார் அண்ணா. விதவைப் பெண்ணுக்கு இரக்கம் காட்டாமல் அவளைத் தன் இச்சைக்கு ஆளாக்கி விபச்சாரியாக்கிய நிலையைக் 'குற்றவாளி யார்?' என்ற சிறுகதையில், "ஏன் அவனும் ஒரு ஆடவன்தானே! அதிலும் ஊருக்குப் பெரியவன் - ஏழைகளை விசாரித்துத் தண்டிக்க அதிகாரம் படைத்தவன்! நான் ஏழை, விதவை. பிறகு இரையாகத்தானே வேண்டும், உன் அண்ணன் போன்ற காட்டு ராஜாவுக்கு!"[18] என்று சாடுகிறார். இத்தகைய ஆடவரின் ஒழுக்கக்கேடுகள் பெண்களை ஒழுக்கம் தவறச் செய்கிறது. இது வாழ்வில் அவர்கள் மீள முடியாத சூழலை உருவாக்கிவிடுகின்றது. சமுதாயத்தில் ஒருவரின் ஒழுக்கக் கேடு அவரை மட்டும் பாதிப்புக்குள்ளாக்காது என்பதையும் இக்கதையின் வாயிலாகப் புலப்படுத்துகின்றார்.

அதேபோல விதவையைக் காதலித்து அவளது வயிற்றில் கருவை உருவாக்கி விட்டுப் பின் கைவிடும் ஆடவனால் அப்பெண் விபச்சாரப் படுகுழியில் விழுந்து வாழ்வில் படும் துன்பங்களை 'ஓர் இரவு' நாடகம் விளக்குவதாய் அமைந்துள்ளது. ஆண் பெண் வேறுபாடு இல்லாமல் அனைவருக்கும் பொதுவானதாகவே ஒழுக்கம் இன்று விளங்குகிறது. ஆனால் பாரதியார் வாழ்ந்த காலத்தில் கூட, ஒழுக்கம் பெண்களுக்கு மட்டுமே உரிய ஒரு மதிப்பாகக் கருதப்பட்டுள்ளது. ஆண்களின் இவ்வொழுக்கக் கேட்டை யாரும் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் ஒரு பெண் தனது வரம்பை மீறி ஏதேனும் செய்தால் அவளை இச்சமூகம் ஒழுக்கங்கெட்டவள் என முத்திரை குத்தி ஒதுக்கிவிடும் தன்மையை வரலாற்றின் அடிப்படையில் ஆராயும் பொழுது அறியமுடிகின்றது. இதனால் ஒழுக்கம் என்பது அனைவரும் பின்பற்றும் ஒரு சமுதாய மதிப்பாகத் திகழ வேண்டும் என்ற அண்ணாவின் எண்ணத்தை அவரது படைப்புகள் பிரதிபலிக்கின்றன.

'புதிய பொலிவு' என்னும் குறும்புதினத்தில் நல்வாழ்வு வாழும் வேலப்பன் பணத்திற்கு ஆசைப்பட்டு, சமுதாயத்தில் செய்யக்கூடாத தொழிலைச் செய்து பணம் பெறுகின்றான். காவல்துறையிடம் சிக்குகின்றான். எவ்வளவு வேகமாகப் பணம் சம்பாதித்தானோ அதே வேகத்தில் பணத்தையும் புகழையும் இழந்து தவிக்கின்றான். தான் காதலித்த செல்லியையும் இழக்கின்றான். செல்லி வேறொருவனைத் திருமணம் செய்து கொண்டு நகரம் செல்கின்றாள். அங்கு தன் கணவனுக்குச் சரியான துணையாகவும் நகரவாசியாகவும் தன்னை ஆக்கிக்கொள்ள முடியாமல் சிரமப்படுகின்றாள். செல்லியின் கணவன் வடிவேலன் ஊர்மிளா என்ற பெண்ணுடன் நட்பு கொள்கிறான். வடிவேலன் செல்லியை விட்டு நீங்க ஊர்மிளா திட்டம் வகுக்கின்றாள். வேலப்பனைக் காதலிக்கும் போது செல்லி பத்தினியாகவா இருந்திருப்பாள் எனக் கேட்ட ஊர்மிளாவை வடிவேலன் அறைந்து விரட்டுகிறான். இங்கு செல்லியின் ஒழுக்கத்தின் மேன்மையை ஊர்மிளாவின் கன்னத்தில் விழுந்த அறைகள் எடுத்துக்காட்டுகின்றன. ஒழுக்கம் தவறிச் சென்றதால் வாழ்வை இழந்த வேலப்பனையும், வாழ்வை இழக்க இருந்து நல்லொழுக்கத்தால் திரும்ப வாழ்வைப் பெற்ற செல்லியையும் அண்ணா இக்குறும்புதினத்தில் படைத்துக் காண்பித்து ஒழுக்கத்தின் மேன்மையையும் அதன் மதிப்பையும் புரியவைக்கின்றார். இதேபோல ஒழுக்கத் தவறினால் தன் வாழ்வை இழந்து அல்லலுறும் கோமளம் என்ற பெண்ணின் வாழ்வைக் 'கோமளத்தின் கோபம்' என்ற குறும்புதினத்தில் படைத்துக்காட்டியுள்ளார்.

ஓர் அரசன் தன் ஒழுக்கத்தில் இருந்து தவறி, தான் பார்த்து, பிறந்து, வளர்ந்த பெண்ணைத் தன் இச்சைக்கு வலுக்கட்டாயமாக உட்படுத்தி, அவளது இறப்புக்குக்

காரணமாக இருக்கின்றான். இதனால் அப்பெண்ணின் தந்தைக்கு உருவாகும் பழிவாங்கும் எண்ணம் மன்னனை எவ்வாறு பழிவாங்குகிறது என்பதைத் 'திருமலை கண்ட திவ்ய ஜோதி' குறும்புதினத்தில் காட்டுகிறார். ஒழுக்கம் என்பது சமுதாயத்தின் அடித்தட்டு மக்களில் இருந்து மன்னன் வரையிலும் பின்பற்றப்படும் ஒரு மதிப்பாக வளர வேண்டும் என்ற அண்ணாவின் எண்ணம் இக்குறும்புதினத்தில் காணப்படுகின்றது.

## நேர்மை

நேர்மைக் குணம் அனைவருக்கும் பொதுவானதாக விளங்கினாலும் குறிப்பிட்ட சில மனிதர்களிடம் மட்டுமே காணப்படுகிறது. இதனைச் சமுதாய மதிப்பாகவும், தன் உயிரைக் காட்டிலும் மேலானதாகவும் கருத வேண்டும் என்ற கருத்தை அண்ணாவின் படைப்புகள் வெளிக்காட்டுகின்றன. 'நாக்கிழந்தார்' என்னும் சிறுகதையில் பணம் சம்பாதிக்கச் சீமானின் திட்டத்திற்கு முதலில் ஒத்துழைத்த பஞ்சை தனது நாக்கை அறுத்துக்கொள்கின்றான். இதனை வைத்து அந்தச் சீமான் மக்களை ஏமாற்றிப் பணம் சம்பாதித்துக் கொள்கின்றான். தன்னை வைத்து இவன் செய்து வரும் அக்கிரமங்களைக் கண்டு பொறாதவனாகவும் மக்களை ஏமாற்றிக்கொண்டிருக்கின்றோம் என்ற குற்ற உணர்வின் காரணமாகவும் தற்கொலை செய்து கொள்கின்றான் பஞ்சை. இவன் ஒரு நேர வயிற்றுக் கஞ்சிக்கு வழியில்லாமல் வாழ்ந்தவன் தான்; இப்பொழுது அனைத்தும் கிடைக்கும் வாழ்வு வாழ்கின்றவன் தான்; இருப்பினும் இந்த வாழ்க்கையை எண்ணித் தற்கொலை செய்து கொண்டு மடிந்ததன் காரணம் அவனது நேர்மை. மக்களை ஏமாற்றுகின்றோம் என்ற அவனது குற்ற உணர்ச்சி. "வேஷத்துக்கும் வஞ்சனைக்கும் எவ்வளவு மயங்குகிறது இவ்வுலகம் என்று எண்ணி ஏங்கினான்."[19] எனக் கூறும் அண்ணா அவனுடைய நேர்மையை வெளிப்படுத்துகிறார்.

பெண்ணைத் திருமணம் செய்து கொள்கிறேன் என ஆசை வார்த்தைகள் கூறி அவளை ஏமாற்றி அபலையாக்கும் ஆண்களைத் துணிவுடன் எதிர்க்கும் ஆண்மகனாக மாகாளி என்ற கதாபாத்திரத்தைத் 'தழும்புகள்' என்ற குறும்புதினத்தில் அண்ணா படைத்துக்காட்டுகிறார். பெண்ணை ஏமாற்றுவது யாராக இருந்தாலும் தவறு எனச் சுட்டிக் காண்பித்து அந்தப் பெண் இழந்த வாழ்க்கையைத் திரும்பப் பெற்றுக்கொடுக்கப் போராடும் அவனது நேர்மையை அண்ணா இந்தப் புதினத்தில் காட்டியுள்ளார். மாகாளி மிராசுதாரரிடம் வேலை பார்க்கும் வேலைக்காரன். ஓர் ஊருக்கு மிராசுதாரரும் மாகாளியும் செல்கின்றனர். அந்த ஊருக்குச் சென்ற பின் மிராசுதாரரை ஒரு கும்பல் விரட்டி அடித்தது. மிராசுதாரரைக் காப்பாற்ற மாகாளியும் அவர்களுடன் சண்டையில் ஈடுபட்டு அவரைக் காப்பாற்றுகிறான். அங்கிருந்து இருவரும் செல்கின்றனர். மிராசுதாரர் அந்த ஊர்ப் பெண்ணைக் காதலித்து ஏமாற்றி விடுகிறார். அவளைத் திருமணம் செய்து கொள்ள நிர்பந்தம் செய்து மிராசுதாரரை அழைத்துச் சென்றனர். ஆனால் அங்கிருந்து தப்பித்து மிராசுதாரர் ஓடிவந்துள்ளார் என்பதை அறிந்த மாகாளி தான் தவறு செய்து விட்டதை உணர்ந்து பெண்ணை ஏமாற்றியவன் நிச்சயம் அந்தப் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று கூறி மிராசுதாரரை மீண்டும் அந்த ஊருக்கு அழைத்துச் செல்கிறான். அந்த ஊர் மக்களிடம் உண்மையை விளக்கிப் பாதிக்கப்பட்ட பெண்ணை மிராசுதாரருக்குத் திருமணம் செய்து வைக்கிறான். தவறு யார் செய்திருந்தாலும் அதைத் தட்டிக்கேட்கும் நேர்மையை மாகாளி பெற்றிருந்தான். அவன் பெற்றிருந்த நேர்மையை மிராசுதாரர் பெற்றிருந்தால் அவர் அப்பெண்ணைக் கைவிடத் துணிந்திருக்கமாட்டார். மிராசுதாரருக்கு ஆதரவாக அவரது உறவினர்கள் செயல்பட்டு அப்பெண்ணின் ஊரைத் தாக்கி நாசம் செய்திருக்கமாட்டார்கள்.

ஆகவே நேர்மை என்பதை சமுதாய மதிப்பாக வலியுறுத்தும் அண்ணாவின் பாங்கு இப்புதினத்தில் வெளிப்படுகின்றது.

ஊரை ஏமாற்றும் அண்ணன். மக்களுக்கு நல்லது செய்ய வேண்டும் என்று எண்ணுகின்ற மருத்துவர் தம்பி. இவர்களைக் கொண்டு நேர்மையின் அவசியத்தை 'மக்கள் தீர்ப்பு' எனும் குறும்புதினம் விளக்குவதாய் அமைந்துள்ளது. மக்களுக்கு ஒரு நல்ல திட்டத்தைக் கொண்டு வர மருத்துவரான தம்பி முயற்சிகள் மேற்கொண்டு வரும் நிலையில் அத்திட்டத்தில் எப்படி லாபம் சம்பாதிக்கலாம் எனத் திட்டமிடுகின்றான் அண்ணன். அந்தத் திட்டத்தில் இருக்கும் தீமையை ஆராய்ந்த பின் அத்திட்டம் வேண்டாம் எனக் கூறுகின்றான் தம்பி. ஆனால் அண்ணனோ இந்தத் திட்டத்தை நம்பி நிறையப் பணம் செலவழித்தாகிவிட்டது. அதனால் இத்திட்டத்தை எக்காரணம் கொண்டும் தடுத்து நிறுத்த முடியாது என்று கூறிவிடுகின்றான். இறுதியில் மருத்துவரின் மீது பழிசுமத்தப்பட்டது. மக்கள் அனைவரும் மருத்துவரைச் சந்தேகம் கொண்டு அவருக்கெதிராகப் போராடும் நிலை உருவானது. இருப்பினும் இத்திட்டம் கொண்டு வந்தால் மக்கள் மிகுந்த துன்பத்திற்கு உள்ளாவார்கள் என்ற காரணத்தால் மருத்துவர் பல்வேறு துன்பங்களைச் சந்தித்து, இறுதியில் மக்களுக்கு உண்மையினைப் புரியவைத்தார். உண்மையைப் புரிந்து கொண்ட மக்கள் திட்டத்தைத் தடுத்து நிறுத்தினர். துரோகம் இழைத்த நகராட்சி மன்றத்தைக் கலைத்தனர். மருத்துவரைப் போற்றினர். மக்களுக்கு நன்மை விளைய வேண்டும் என்ற நேர்மையின் வெற்றியை இம்மக்களின் தீர்ப்பு மூலமாக எடுத்துரைக்கிறார் அண்ணா.

நீதித்துறையில் இருப்பவர்கள் எந்தவிதக் குற்றவுணர்ச்சிக்கும் இடமளிக்காமல் பணியாற்ற வேண்டும். மனதிலே சிறு சஞ்சலம் தோன்றினாலும் நீதித்துறையை விட்டு விலகிவிட வேண்டும் என்ற நேர்மைத் தன்மையை 'அப்போதே சொன்னேன்' குறும்புதினத்தில் வலியுறுத்துகின்றார். அதேபோல் மடாதிபதியாக ஆகும் நிலையில் மடங்களில் நடக்கும் அக்கிரமங்களையெல்லாம் கண்டு இந்த அசிங்கத்தில் இருக்கக்கூடாது என்று எண்ணித் தனக்குக் கிடைக்க இருந்த மடாதிபதி பதவியைத் துறந்து மடத்தை விட்டு வெளியேறி மக்களோடு மக்களாக வாழ்பவனின் நேர்மையை எடுத்துக்காட்டுவது 'கடைசிக் களவு' குறும்புதினம் ஆகும். மடங்களின் தன்மையை உணர்ந்த நிலையில் மடத்தை விட்டு வெளியேற எண்ணித் தன்னை இளைய மடாதிபதியாகத் தேர்ந்தெடுத்தவரிடம் சென்று, "ஏமாளிகளை ஏய்த்துப் பிழைக்கும் இந்த இழிதொழிலில் உழல என் உள்ளம் இடமளிக்கவில்லை! நான் தங்கள் நம்பிக்கையை நாசமாக்கிவிட்டதற்குக் கோபித்துக் கொள்கிறீர் - ஆனால் நான் என்ன செய்ய முடியும்!"[20] எனக் கூறிக் காவியைக் களைந்து விட்டு, அழுக்கேறிய வெள்ளை ஆடையைக் கட்டிக்கொண்டு மடத்தை விட்டு வெளியேறும் பண்டாரத்தின் வாயிலாக நேர்மைக் குணத்தை உணரவைக்கின்றார் அண்ணா.

**கடமை**

நன்மை, தீமைகளைப் பகுத்தறிந்து ஆழமான சிந்தனைக்குப் பின் விழிப்புணர்வோடு கூடிய நியாயமான செயலே கடமையாகும். தனிமனிதர்கள் ஒவ்வொருவரும் தத்தம் கடமைகளைச் சரியாகச் செய்தால் குடும்ப வாழ்வும், சமுதாயமும், நாடும் முன்னேற்றப் பாதையில் செல்லும்.

"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே;

சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே;

வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;

நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே;

ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கி,

களிறுஎறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே."[21]

என்ற புறநானூற்றுப் பாடல் ஒவ்வொருவருக்கும் உள்ள கடமையைப் பற்றி எடுத்துக்கூறுகின்றது. இப்பாடல் கடமைக்கு எனப் பொதுவான ஒரு வரையறையை அளிக்கவில்லை. எனினும் ஏறத்தாழ கடமைக்குரிய சரியான விளக்கத்தை இப்பாடல் தருகின்றது. கடமை என்பது தனிமனிதர்கள் ஒவ்வொருவருக்கும் ஏற்ப மாறுபடுகின்றது என்ற உண்மையை இப்பாடல் மிகத் தெளிவாக எடுத்துரைக்கின்றது. இக்காலத்திலும் இக்கருத்தே கடமைக்கு மிகப் பொருத்தமான வரையறையாக உள்ளது.

உலகம் தழுவியதான சில நுண் கருத்துக்களை விளக்குகின்ற மற்ற சொற்களைப் போலவே கடமை என்னும் சொல்லின் பொருளையும் முழுமையாக விளக்க முடியாது. அதன் செயல்பாட்டு முறைகளையும் விளைவுகளையும் வைத்து ஓரளவுக்கு அதைப் புரிந்து கொள்ளலாம். சில குறிப்பிட்ட காரியங்கள் நிகழும்போது, இயல்பாகவோ அல்லது பழக்கத்தின் காரணமாகவோ ஒரு குறிப்பிட்ட வகையில் நடந்துகொள்ளும் உள்ளுந்தல் தோன்றுகிறது. இத்தகைய உள்ளுந்தல் எழுந்ததும் மனம் அந்தச் சூழ்நிலையைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்குகிறது. அந்தச் சூழ்நிலையில் இன்ன வகையில் நடந்துகொள்வது நல்லது என்று சிலவேளைகளில் நினைக்கிறது. வேறு சிலவேளைகளிலோ, அதே சூழ்நிலையில் அப்படி நடப்பது தவறு என்று நினைக்கிறது. எல்லா இடங்களிலும் நல்லவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் மனச்சாட்சிக்கு ஏற்ப நடந்து கொள்கிறார்கள் என்பதே கடமை பற்றிய பொதுவான கருத்தாகும்.

கடந்த நூற்றாண்டில் இந்தியாவில் தக் எனப்படும் பயங்கரமான ஒரு கொள்ளைக் கூட்டத்தினர் இருந்தனர். யாரை வேண்டுமானாலும் கொல்வதும், அவர்களுடைய பொருட்களைக் கொள்ளையடிப்பதும் தங்கள் கடமை என்று அவர்கள் எண்ணினர். எவ்வளவு அதிகம் பேரைக் கொல்கிறார்களோ, அந்த அளவிற்கு அவர்கள் தங்களைச் சிறந்தவர்களாகக் கருதினார்கள். சாதாரணமாக ஒருவன் தெருவில் சென்று மற்றொருவனைச் சுட்டுக் கொன்றுவிட்டால், தான் தவறு செய்துவிட்டதற்காக அவன் வருந்த வேண்டும், அது தான் சரி. அதே மனிதன் போர்வீரனாகப் படையில் சேர்ந்து ஒருவனை அல்ல, இருபது பேரைக் கொன்றாலும் தன் கடமையைச் சிறப்பாகச் செய்ததாகவே நிச்சயமாக மகிழ்வான். எனவே செயலைக் கொண்டு கடமை வரையறுக்கப்படுவதில்லை. செயலில் உள்ள நன்மைகளை ஆராய நல்ல குணத்தை மனிதன் பெற்றிருக்க வேண்டும். அந்தக் குணத்தைப் பெற வேண்டுமானால் தனது கடமை இதுவென அறிந்திருக்க வேண்டும் என்பதனை,

"கடன்என்ப நல்லவை எல்லாம் கடன்அறிந்து

சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு"[22]

என்ற குறள் மூலம் வலியுறுத்துகின்றார் வள்ளுவர். 'இதயம் இரும்பானால்' குறும்புதினத்தில், "அரசன் கடமை, மக்களுக்கு உணவளிக்க வேண்டியது; வாழ வைக்க வேண்டியது; அதற்குத் தான் அரசன்!"[23] என அண்ணா அரசனின் கடமையைச் சுட்டிக்காண்பிக்கின்றார். அரசாள்வோரின் கடமையை இவ்வாறு படைப்பாளர்கள்

நினைவூட்டிக் கொண்டே இருக்கவேண்டும் இல்லையேல் அரசாள்வோர் தங்களது கடமைகளை மறந்துவிடுவர். இந்த நிலை எக்காலத்துக்கும் பொருந்துவதாக விளங்குகின்றது.

## நாட்டுப்பற்று

ஒவ்வொரு குடிமகனும் தன் நாட்டின் மீது பற்று கொண்டிருக்க வேண்டும். இந்த தேசமே நாட்டுப்பற்றின் உணர்வாலேயே உருவானது. விடுதலைப் போராட்டக் காலத்தில் இருந்த மக்களிடத்தில் காணப்பெற்ற நாட்டுப்பற்றே இந்தியாவிற்கு விடுதலையைப் பெற்றுத் தந்தது என்றால் அது மிகையாகாது.

அறிஞர் அண்ணா தன் நாட்டின் மீது கொண்ட பற்றைப் பல்வேறு சமயங்களில் வெளிப்படுத்தியுள்ளார். திராவிட நாடு கோரிக்கை எழுந்திருந்த சூழலில் அண்ணா, இந்திய அரசாங்கத்தையும் காங்கிரசையும் மிகக் கடுமையாக எதிர்த்து வந்தார். அக்காலக்கட்டத்தில் தான் இந்தியா மீது சீனா போர் நிகழ்த்தியது. இந்தப் போரில் இந்தியாவிற்கும் இந்தியப் பிரதமரான நேருவுக்கும் உறுதுணையாக இருந்து அவரின் கையை வலுப்படுத்துவோம் என அண்ணா கூறினார். போர் முடியும் வரையில் தனி நாடு கோரிக்கையை எழுப்பமாட்டோம் எனவும் உறுதி கூறினார். மேலும் போருக்கான நிதியைத் தன் இயக்கத்தின் சார்பாக வசூல் செய்து தமிழக முதல்வர் காமராசரிடம் கொடுத்தார். இவ்வாறு இந்தியாவில் இருந்து தமிழகம் தனி நாடாக மலர வேண்டும் என்ற எண்ணத்தில் செயல்பட்டாலும் அவருக்குள்ள நாட்டுப்பற்று இதுபோன்ற சூழலில் வெளிப்படுகின்றது. அதேபோல் சுதந்திர தினத்தைத் துக்க தினமாகப் பெரியார் எண்ணினார். ஆனால் அண்ணாவோ அதனை மகிழ்ச்சிக்குரிய திருநாள் எனக் கூறியது போன்ற நிகழ்வுகள் அவருடைய நாட்டுப்பற்றை எடுத்துக்காட்டுகின்றன.

அண்ணா தனது படைப்புகளில் நாட்டுப்பற்று குறித்தும் நாட்டுப்பற்றுள்ள மனிதர்கள் குறித்தும் விவரித்துள்ளார். அவர்கள் வாயிலாகச் சமுதாயத்தில் நாட்டுப்பற்றுமிக்க இளைஞர்களை உருவாக்கும் பணியைச் செய்கிறார். ‘எங்கும் அவன்’ என்ற சிறுகதையில் வரும் டாக்டர் கமலாவின் கணவர் இந்திய விமானப் படையில் பணியாற்றி வருகின்றார். கமலாவின் மருத்துவமனையில் வேலை பார்த்து வந்த சொக்கனிடம் தன் கணவனின் இராணுவப்பணியைப் பற்றிக் கூறும்பொழுதெல்லாம் தானும் அதில் சேர்ந்து பணியாற்ற வேண்டும் என்ற எண்ணம் அவனுக்குத் தோன்றியது. இந்த நேரத்தில் டாக்டர் கமலாவின் கணவர் போரில் வீரமரணம் அடைந்தார் என்ற செய்தியைக் கேட்டதும் சொக்கனுக்கு இராணுவத்தில் சேர வேண்டும் என்ற எண்ணம் இன்னும் வேகமெடுத்தது. சீனப்போரின் போது சொக்கன் இராணுவத்தில் சேர்ந்து பணியாற்றினான். டாக்டர் கமலா, கமலாவின் மருத்துவமனையில் வேலை பார்த்து வந்த விதவையான கனிமொழி போன்றவர்களும் சென்று தேசப் பணியாற்றினார்கள். சீனப்போர் முடிவுக்கு வந்தது. கமலாவும் கனிமொழியும் வீடு திரும்பினர். சிலகாலம் கழித்து பாகிஸ்தான் படை இந்தியாவிற்குள் நுழைந்தது. அந்தப்போரில் சொக்கன் உயிர்விடுகின்றான். சொக்கனை நினைத்து அனைவரும் பெருமிதம் கொள்கிறார்கள். இவ்வாறு கதை முடிகின்றது. சொக்கனுக்கு இராணுவத்தில் சேர வேண்டும் என்ற வெறி ஏற்பட காரணமாயிருந்தது டாக்டர் கமலாவின் கணவர் இறப்பு. “நாட்டுக்காக உயிரை ஈந்தார்; வீரமரணமடைந்தார். அவர்பெயர் நிலைத்து நிற்கும்! நாடே புகழ்கிறது அந்த வீரனை!”[24] என அந்தச் சூழலை விவரிக்கின்றார். அதே சமயத்தில் டாக்டர் கமலா, விதவையாக இருந்தாலும் தேசப்பணியாற்ற, தன் தந்தையிடம் வாதிட்டு அனுமதி பெற்றுச் சென்ற கனிமொழி ஆகியோரையும் தேசப்பற்று மிக்க பெண்களாகக்

கதையில் படைத்துக்காட்டியுள்ளார். இதன்மூலம் நாட்டுப்பற்று அனைவரிடத்திலும் இருக்கக்கூடிய மதிப்பாக விளங்கவேண்டும் என்பதைப் புலப்படுத்துகிறார்.

அண்ணா வாழ்ந்த காலச் சமுதாயத்தில் ஆங்கிலேயே அரசு அளிக்கும் சர் பட்டம், ராவ்பகதூர் பட்டம், திவான் பட்டம் போன்ற பட்டங்களுக்கு ஆசைப்பட்டு ஆங்கிலேயருக்கு விசுவாசமாக நடந்து சொந்த நாட்டிற்குத் துரோகம் இழைத்தவர்கள் அதிகம் வாழ்ந்ததையும் அவரின் படைப்புகள் வழி அறியமுடிகின்றது. அதேபோல் ஆங்கிலேயருடன் மட்டுமல்லாமல் ஆங்கிலேயரை வீழ்த்த சப்பான் நாட்டு இராணுவத்திற்கு உதவி செய்வதால் ஆளுநர் பதவி கிடைக்கும் என்ற ஆசையில் சப்பான் இராணுவத்திற்கு உதவுகின்ற செயலைக் கருவாகக் கொண்டு படைக்கப்பட்டது 'பார்வதி பி.ஏ.' புதினம் ஆகும். "ஓ! மறந்து விடவில்லையே! ஜப்பானிய சாம்ராஜியத்தின் நேசரான உமக்குத்தான் தமிழ்நாட்டு ஆட்சி உரிமை!! நீரே இங்கு கவர்னர்! இதுதான் உம்மிடம் செய்து கொண்ட ஒப்பந்தம். டோக்கியோ இதனை ஏற்றுக் கொண்டுவிட்டது."[25] என்ற உரையாடல் இதனை உணர்த்தும். இத்தகைய சமுதாயச் சூழல்கள் நிரம்பிய நிலையில் இந்திய விடுதலைப் போராட்டம் நடைபெற்று வந்ததை அண்ணாவின் படைப்புகள் வெளிப்படுத்துகின்றன. ஆங்கிலேயருக்குப் பிறகு வேறொரு நாடு இந்தியாவை அடிமைக்குட்படுத்தி விடக் கூடாது என்ற கருத்தையும் இப்புதினத்தில் அண்ணா வலியுறுத்துகிறார்.

பெண்களையும் நாட்டுப்பற்றுள்ளவர்களாகக் காண்பிக்கும் சிறுகதை 'காலிழந்தான்' என்பதாகும். இராணுவத்தில் பணியாற்றும் ஆடவரைத் திருமணம் செய்து கொள்ளும் ஒவ்வொரு பெண்ணும் இந்நாட்டுக்குத் தங்களது சேவையைச் செய்கிறார்கள். போரில் காலை இழந்தவனைத் திருமணம் செய்து கொண்டு மகிழ்ச்சியாக வாழும் பெண்ணைப் பற்றிய கதையே 'காலிழந்தான்' ஆகும். "நாட்டுப் பாதுகாப்புக்காகக் காலிழந்தவரைக் கணவராகக் கொள்வதிலே நான் பெருமை அடைகிறேன்."[26] எனக் கூறும் அப்பெண்ணின் வாயிலாகப் பெண்களும் நாட்டுப்பற்று என்னும் மதிப்பை மனதில் தாங்கி வாழ வேண்டும் என்பதை வலியுறுத்துகிறார்.

## இரக்கம்

இரக்கம் என்னும் ஒரு குணம் அனைவரிடத்தும் இருக்க வேண்டிய சமுதாயத்தில் கடைபிடிக்கக்கூடிய ஒரு மதிப்பாக உருவாக வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தவர் அண்ணா. அதனாலேயே தன்னுடைய பெரும்பாலான இலக்கியங்களில் இரக்கத்திற்குரிய கதாபாத்திரங்களை மிகுதியாகப் படைத்துக் காண்பித்துள்ளார். இது போன்ற மக்கள் படும் துன்பத்தைக் கண்டு அரசாள்வோர் முதல் அடித்தட்டு மக்கள் வரை அவர்களுக்கு உதவ முன்வர வேண்டும். இதற்கு அனைவரும் பெற்றிருக்க வேண்டிய ஒரு மதிப்பாக இரக்கம் என்பது அமைகின்றது. இரக்கம் என்னும் பொருளை அனைவரிடத்துள்ளும் கொண்டு சேர்க்கும் பெரு முயற்சியை அண்ணா தனது இலக்கியங்கள் வாயிலாக மேற்கொண்டுள்ளார். 'தசாவதாரம்' என்னும் புதினத்தில் பிராமண இனத்தைச் சேர்ந்த விதவையான சூடாமணி, தேவர் என்பவரைக் காதலித்து வீட்டை எதிர்த்துத் திருமணம் செய்து கொள்கிறாள். அதனால் அவளது அண்ணனின் கோபத்திற்கு ஆளாகின்றாள். கோவில் நகைகள் கொள்ளை போன வழக்கில் தேவர் மீது குற்றம் சுமத்தப்பட்டுக் கைது செய்யப்படுகின்றார். யாருடைய உதவியும் கிடைக்கப் பெறாத நிலையில் சூடாமணியின் நிலையை அண்ணா விவரிக்கும் காட்சிகள் அவள் மேல் இரக்கம் கொள்ளச் செய்கிறது. இதேபோல் இப்புதினத்தில் நாடகக்காரியாக வரும் சொர்ணம் சமீன்தாரின் வைப்பாட்டியாக ஆகின்றாள். பணத்துக்கும் சுகத்துக்கும் பஞ்சமில்லாத வாழ்வுதான். பணத்தை வாரி

இறைத்தான் சமீன்தார். ஆனால் அன்பு காட்டுவதில்லை. இதனால் அன்புக்கு ஏங்குபவளாகக் காட்டும் சொர்ணத்தின் மீதும் இரக்கம் கொள்ளச் செய்கிறார். அதேபோல் கணவனை இழந்து விதவையான கமலா, பாலு என்பவனிடம் வசப்பட்டு பின் முருகன், துரைசிங்கம் போன்றவரிடமும் வசப்பட நேரிடுகிறது. கைம்மை எய்தினால் மறுமணம் செய்து கொள்ளவே கூடாது என்கின்ற சமுதாயக் கட்டுப்பாடு இருப்பதனால்தான் கைம்பெண்கள் வழிதவறிச் செல்ல நேருடுகிறது. 'குப்பைத் தொட்டிகள் குழந்தை பெற்றுக் கொள்கின்றன' என்று தந்தை பெரியார் ரத்தினச் சுருக்கமாகக் குறிப்பிடுவார். திருமணம் செய்யாத உறவை மதிக்க வேண்டியதில்லை என்று காலம் காலமாகக் கற்பித்து வந்திருப்பதால் ஆண்கள் பெண்களைச் சுவைத்துவிட்டுத் தூக்கி எறியும் வழக்கம் இந்நாட்டில் வேரூன்றியிருக்கிறது. இந்த வேதனைக்குரிய நிலைகளைத்தான் கமலாவின் கதை மூலம் படம்பிடித்துக்காட்டியிருக்கிறார் அண்ணா. கமலாவின் வாழ்வில் இரக்கம் என்ற குணம் படைத்தவர்கள் இருந்திருந்தால் கமலா பொதுவாகியிருக்கமாட்டாள். இப்புதினத்தில் இம்மூன்று மகளிரின் கதை மூலம் இரக்கமில்லாதவர்களால் பெண்கள் படும் துயரை எடுத்துக்காட்டியிருக்கின்றார். சமுதாயத்தில் இரக்கம் என்பது ஒரு மதிப்பாக உருவாக வேண்டும் என்பதை இக்கதை வழியாக வலியுறுத்துகின்றார்.

'சோணாசலம்' கதையில் மகளுக்கு வரதட்சணை கொடுக்க முடியாமல் துன்பப்படும் சோணாசலம் இரக்கத்திற்குரியவனாக உள்ளான். ஆனால் அவனிடம் யாரும் இரக்கப்பட முன்வரவில்லை என்பதனை, "ஆமாம்! வறுமை நோய்! மருந்து, மலைமலையாகக் குவித்து வைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இவனுக்குத் தர மாட்டார்கள். இவன் வறுமை நோயினாலேயே நொந்து, நொறுங்கி, நசித்துப் போக வேண்டியதுதான். இவனிடம் இரக்கம் காட்டுபவர் யாரும் இல்லை. இவனிடம் இரக்கம் காட்ட ஒருவராவது இருந்தால், அவன் முகத்திலே அவ்வளவு கவலை தோன்றாது - கண்களிலே கப்பிக் கொண்டிருக்கும் சோகத்தைக் கவனித்து மருந்திட யாரும் முன்வரவில்லை;"[27] எனக் கூறுகிறார் அண்ணா. அவனிடம் தனது மருமகன் இரக்கம் காட்டியிருந்தால் அவளது மகள் வாழாவெட்டியாக வந்திருக்கமாட்டாள். அவனது துன்பத்தைக் கண்டு பிறர் இரக்கம் காட்டியிருந்தால் இறுதியில் திருடனாக ஆகியிருக்க மாட்டான் என்ற சிந்தனையை அண்ணா பதிவு செய்கிறார். சமுதாயத்தில் இரக்கம் என்பது ஒரு மதிப்பாக அனைவராலும் பின்பற்றப்படாததால் ஏற்படும் நிலையை இக்கதை வழி விளக்குகின்றார்.

தன்னுடைய முதலாளிக்காகத் திருட்டுச் செயலில் ஈடுபட்டு குண்டடிபட்டு வரும் தொழிலாளியின் மேல் கொஞ்சம் கூட இரக்கம் காட்டாமல் நடந்து கொள்ளும் பாங்கைத் 'தவளையும் மனிதனும்' சிறுகதையில் காட்டுகிறார். முதலாளியின் இந்தச் செயலை நினைத்து வாடும் அமாவாசை, "எவனுக்கு இந்த வேலை செய்யப் போய் எனக்கு இந்த ஆபத்து வந்ததோ, அந்தப் பாவி என்னைக் கைவிட்டு விட்டான். சாவதானாலும், நான் இருக்கும் இடத்தில் சாகவேண்டாம் தொலைவாகப் போய்விடு என்று கூறிவிட்டான். இவ்வளவு உழைத்தவனாச்சே, ஊர்ப்பகையைத் தேடிக் கொண்டவனாச்சே நமக்காகத்தானே இவ்வளவு இம்சைப்படுகிறான், அவனைக் காப்பாற்ற வேண்டியது நமது கடமை என்ற எண்ணம் பிறக்கவில்லையே. அந்த மனதிலே..."[28] இவ்வாறு கூறுவதிலிருந்து இரக்கம் என்பது துளிகூட அந்த முதலாளியின் உள்ளத்தில் தோன்றவில்லை என்பதை அறியமுடிகின்றது. இரக்கம் இல்லாததால் இறுதியில் அவன் இறந்துபடுகின்றான். அவன் மனைவி பைத்தியம் பிடித்தவளாகின்றாள். இதன் மூலம் இரக்கம் என்னும் பண்பின் மதிப்பை அறியவைக்கின்றார் அண்ணா.

பெண்ணிடம் இரக்கம் காட்ட அவளைக் காதலித்தவன் எண்ணவில்லை, அந்த இளமங்கையைத் திருமணம் செய்து கொள்ளும் கிழவர், அவள் சிறுபெண் அவளுக்குத் தான் பொருத்தமானவர் கிடையாது; அப்பெண்ணின் வாழ்வைச் சீரழிக்கக்கூடாது என இரக்கம் கொள்ளவில்லை; வறுமையில் அப்பெண்ணின் குடும்பம் தத்தளித்துக் கொண்டு இருக்கும் போது அக்குடும்பத்திடம் யாரும் இரக்கம் கொள்ளவில்லை; அவர்கள் வீட்டை ஏலத்திற்குக் கொண்டுவர நினைக்கும் கடன்கொடுத்தவர் அவர்கள் மீது இரக்கம் காட்டவில்லை என ஒரு குடும்பம் பிறரின் இரக்கமற்ற குணத்தின் காரணமாக வஞ்சிக்கப்பட்டு வரும் சூழலை, 'இரக்கம் ஒரு பயணம்' என்னும் குறுநாடகத்தில் அண்ணா மிகச் சிறப்பாகக் காட்டியுள்ளார். இந்நாடகத்தில் தன் பெண்ணைக் காதலித்துத் திருமணம் செய்து கொள்வதாக வாக்களித்து ஏமாற்றியவனைப் பற்றி ஒரு தாய், "அந்தப் பெண்ணை நம்பும்படிச் செய்தோமே - கைவிட்டால் அது கலங்காதா என்று எண்ணினானா? இரக்கம் காட்டினானா?"[29] எனக் கூறுவதில் அண்ணா அத்தாயின் உள்ளக் குமுறலை வெளிப்படுத்தியுள்ளார். இரக்கம் என்ற ஒரு பொருள் இல்லாததால் ஒரு குடும்பம் எத்தகைய அவலங்களைச் சந்திக்க நேரிடுகிறது என்பதை இந்நாடகம் தெளிவாக விளக்குகின்றது.

## கொடை

செல்வந்தர்கள் தானம் செய்வதாக எண்ணிக்கொண்டு கோவில்களுக்குத் தங்கத்தேர், வெள்ளித்தேர், தங்கக்குடை, வெள்ளிக்குடை, கோவிலைப் புதுப்பிக்கப் பணம், குடமுழுக்கு நடத்துவதற்குப் பணம் எனக் கோவில் தொடர்புடைய வேலைகளில் அதிகம் தங்களது பணத்தைச் செலவிடுகின்றனர். இதைத் தவிர்த்துப் பட்டினியால் வாடுவோருக்கு உண்ண உணவும் அவர்கள் வாழ்வில் ஏற்றம் பெற உதவியும் செய்து தருவதே உண்மையான பக்தியாகும். ஆனால் பெரும்பாலான செல்வந்தர்கள் அவ்வாறு செய்வதில்லை. கோவில் பணிகளுக்குச் செய்வதைப் புண்ணியம் எனக் கருதும் இவர்கள் பிற மக்களுக்கு உதவுவதைப் பாவமாகக் கருதுகின்ற சூழல் நிலவுகின்றது. இந்தச் சூழலில் பணம் படைத்தவர்கள் தெய்வங்களுக்குச் செய்யும் தொண்டு என்பது சமுதாயத்தில் ஒரு மதிப்பாக இருந்துவந்துள்ளது. ஆனால் அண்ணா தனது படைப்புகளின் மூலம் எத்தகைய செயல்கள் சமுதாய மதிப்புகளாக வர வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்துகிறார். கோவில்களுக்குத் தொண்டு புரிவதை அவர் சமுதாய மதிப்பாகக் கருதவில்லை. மாறாக மக்களின் துன்பத்திலே பங்கெடுத்துக் கொண்டு ஏழை மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்குரிய பணிகளே சமுதாய மதிப்புகளாக ஆக வேண்டும் என்ற அண்ணாவின் எண்ணப் பிரதிபலிப்பு 'அவன் பித்தனா' என்னும் குறுநாடகத்தில் வெளிப்படுகிறது. மக்கள் பட்டினியால் செத்துக் கொண்டிருக்கும் வேளையில் திருப்பதி வெங்கடாசலபதி கோவில் தேருக்கு தங்கக்குடை அளிப்பதாக ஒரு செல்வந்தர் கூறியிருக்கிறார் என்ற உண்மைச் செய்தியைக் கொண்டு இக்கதை அமைக்கப்பட்டிருக்கின்றது. இதில் தங்கக்குடை தனக்கு வரப்போகும் செய்தியை,

"மாரி : தங்கத்திலே குடையா? செலவு அதிகமாகுமே.

வெங் : நம்ம கையை விட்டா செலவாகப் போகிறது. நாஸ்தீகாள் நடமாடுகின்ற இந்தக் காலத்திலேயும், நமக்குச் சேவை செய்யும் பக்திமான்கள் இல்லாமலா போய்விட்டார்கள்?

மாரி : யாருடைய கைங்கரியம்? யாரோ, அழகப்ப செட்டியாரென்று ஒரு பிரபு இருக்கிறாராமே, அவரா?

வெங் : சே, சே, அந்த ஆசாமி அல்ல. இப்பதான் அந்த ஆள் ஐந்து லட்ச ரூபாயைக் கொட்டி அழுதான்.

மாரி : எதற்கு?

வெங் : படிப்புக்காம்!

மாரி : தங்கக்குடை தரப்போவது?

வெங் : எம்.சி.டி.சிதம்பரஞ் செட்டியார் இருக்காரோன்னா, அவர் 15,000 ரூபாய் செலவிலே, நமக்குத் தங்கக் குடை தர்மம் செய்ய முன் வந்திருக்கிறார்."[30]

என மாரியும் வெங்கடேஸ்வரரும் பேசிக் கொள்வதில் அண்ணா புலப்படுத்துகிறார். இவ்வுரையாடல் மூலம் கோவிலுக்குச் செய்யும் கொடையைக் காட்டிலும் கல்விக்காக செய்யும் கொடையின் சிறப்பை உணர்ந்திராத சூழல் நிலவியதை அறியமுடிகின்றது. கோவில்களுக்குத் தேர் வாங்கிக் கொடுப்பது, கோவில் புதுப்பிக்கப் பணம் கொடுப்பது, குடமுழுக்கு நடத்துவது போன்ற செயல்களே சமுதாய மதிப்பாகக் கருதப்பட்டு வந்த சூழலில் கல்விக்காகச் செய்யும் சேவைகளும் சமுதாய மதிப்பாகக் கருதப்படவேண்டும் என்பதை அண்ணா வலியுறுத்துகின்றார். செல்வந்தர்கள் கோவில்களுக்குச் செய்வது மட்டுமல்லாது இதுபோன்ற சமுதாய முன்னேற்றத்திற்கான செயல்களில் தங்களை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும் என்பதைக் காரைக்குடியில் கல்விக் கழகம் அமையத் தான் இருந்த வீட்டையும் கல்விக்காக ஈந்த வள்ளல் அழகப்பச் செட்டியாரை அனைவருக்கும் முன்னுதாரணம் காட்டித் தான் காண விரும்பும் சமுதாயத்தை உருவாக்கத் தனது படைப்புகளைப் பயன்படுத்துகின்றார் அண்ணா.

செல்வந்தர்கள் கோவில்களுக்குத் தானமாக நிலங்களை வழங்குவது காணிக்கையாகத் தேர் வாங்கிக் கொடுப்பது, மண்டபம் கட்டிக் கொடுப்பது போன்ற பணிகளில் ஈடுபடுவர். இதனை ஒரு மதிப்பாகவே கருதிச் செய்து வந்தனர். சமுதாயத்தில் தெய்வங்களுக்குச் செய்யும் தொண்டை மக்களுக்குச் செய்ய முன்வராத செல்வந்தர்களைக் கண்டிக்கிறார். இதனை உங்கள் ஆண்டவனே ஏற்றுக்கொள்ள மாட்டான் என்ற கருத்தை வலியுறுத்தும் படைப்புகளைப் படைத்துக் காட்டியுள்ளார். 'வெள்ளிரதம்' என்னும் சிறுகதையில் கோவிலுக்கு வெள்ளித்தேர் அன்பளிப்பு அளித்த செய்தியைக் கொண்டு கோவில்களுக்குக் காணிக்கைச் செய்யும் பழக்கம் சமுதாய மதிப்பாகக் கருதிப் பின்பற்றப்பட்டு வந்ததை அறிய முடிகின்றது. ஆனால் இந்த வெள்ளித்தேரால் தெய்வபக்தி குலைந்து வருவதாகக் கடவுளரே பேசுவதாகக் கதை உள்ளது. இந்த வெள்ளித் தேருக்குச் செலவழித்த தொகையைக் கொண்டு, "நெசவுத் தொழிற் சாலையோ, ஏகாம்பரர் காலேஜோ அமைத்திருந்தால் ஒவ்வொரு நாளும் பயன்தருமே - ஏழை எளியவர் பிழைப்பரே, அறிவுக் கதிர் பரவுமே - செய்தனரா?"[31] என வெள்ளித் தேரைக் கொடையாக நல்கியவர்களைப் பார்த்து சிவபெருமான் கூறுவதாக அமைத்திருக்கின்றார். வெள்ளித் தேரைக் கொடையாகக் கொடுத்தால் அது வருடத்திற்கு ஒரு முறைதான் பயன்படும். ஆனால் சமுதாய முன்னேற்றத்திற்குப் பயன்படும் வகையில் கொடுத்தால் அது ஒவ்வொரு நாளும் பயன்படுமே என விளக்குகிறார். இதன் மூலம் கொடை என்னும் மதிப்பு சமுதாய முன்னேற்றத்திற்குப் பயன்பட வேண்டும் என்ற கருத்தை அண்ணா வலியுறுத்துகின்றார்.

## அண்ணாவின் படைப்புகளில் எதிர்மதிப்புகள்

மனிதனின் வளர்ச்சிக்கும் மலர்ச்சிக்கும் பயன்படாதன அல்லது தனி மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் தீமை பயப்பன எதிர்மதிப்புகள் ஆகும். அண்ணா தன் படைப்புகளில் ஊழல், திருட்டு, சூதாட்டம், மதுப்பழக்கம், கொலை, துரோகம் ஆகியனவற்றை எதிர்மதிப்புகளாகப் படைத்துக் காட்டுகிறார்.

### ஊழல்

நாட்டின் வளர்ச்சிக்குப் பெரும் தடையாக விளங்கும் காரணிகளுள் மிக முக்கியமானது ஊழல் ஆகும். இது நாட்டை வறுமையில் வைப்பதுடன் பல குற்றச் செயல்களுக்கும் காரணமாக விளங்குகிறது. 'மக்கள் தீர்ப்பு' எனும் குறும்புதினத்தில் மக்கள் நலனுக்காக மருத்துவர் குளிக்கும் இடம் கட்டும் திட்டத்தைக் கொண்டு வர எண்ணுகிறார். நல்ல நோக்கத்துடன் மருத்துவர் இத்திட்டத்தைத் தொடங்கினாலும் அவரது அண்ணன் இதை இலாப நோக்கத்துடன் காண்கின்றார். இத்திட்டத்திற்கு நகராட்சியில் அனுமதி பெற ஆளுக்கு ஆயிரம் ரூபாய் லஞ்சம் கொடுக்கிறார். இதனை அவர் தனது தம்பியிடம், "உன் பைத்தியக்காரத் திட்டத்தை நகராட்சி மன்றம் ஏற்றுக் கொண்டதே, காரணம் என்ன? உன் திட்டத்திலே அறிவும் அருமையும் ததும்புகிறது என்றா மடையா? இருபது ஆயிரம் செலவு எனக்கு - ஆளுக்கு ஆயிரம் அந்தப் பணத்தைப் பெற்றுக் கொண்டுதான், 'நகரத்தந்தைகள்' உன் திட்டத்துக்கு ஆதரவாளர்களாக்குவதற்கு நான் செலவிட்டது"[32] எனக் கூறும் அண்ணனின் கூற்றிலிருந்து அறியமுடிகின்றது. எக்காலத்தும் இத்தகைய செயல்கள் சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. இக்குறும்புதினத்தின் வழி அண்ணா ஊழல் செய்பவர்கள் நீண்ட நாட்களுக்கு மக்களை ஏமாற்ற முடியாது; உண்மை வெளிப்படும் போது ஊழல்வாதிகளின் நிலைமை மிக மோசமாகக் கூடும் என எச்சரிக்கின்றார்.

## திருட்டு

திருட்டு என்பது இச்சமுதாயத்தில் நிகழக் கூடாத ஒன்றாக இருக்க வேண்டும் என்ற நோக்கில் அறிஞர் அண்ணா தன்னுடைய படைப்புகளில் திருட்டை மேற்கொள்கின்றவர்களும் அதற்குத் துணை போகின்றவர்களும் படும் துன்பத்தை எடுத்துக்கூறுகிறார். 'ஏழை' என்னும் சிறுகதையில் கள்ளக்கடத்தல் தொழிலில் ஈடுபட்டு, செல்வந்தனாக உயர்ந்தவன் செல்லப்பன். ஊரில் பெரிய மனிதராக அடையாளம் காணப்படுகின்றான். இறுதியில் அவனது கள்ளக்கடத்தல் தொழில் கண்டறியப்பட்டு சிறையில் அடைக்கப்படுகின்றான். 'தவளையும் மனிதனும்' சிறுகதையில் திருட்டுத் தொழில் செய்பவனுக்கு உடந்தையாகச் செயல்பட்டவனின் துன்பத்தினை விவரிக்கின்றார். இதன் வாயிலாகத் திருட்டுத் தொழிலைச் செய்கின்றவர்களும் அதற்குத் துணை போகின்றவர்களும் சமுதாயத்தில் குற்றவாளிகளாகக் கருதப்படும் நிலையை அண்ணா ஆதரிப்பதை அவரின் படைப்புகளின் வழி அறியமுடிகின்றது. திருடுகின்றவர்கள் ஒரு நாள் தண்டனையை அடைவர் என்ற கருத்தைப் பறவையைக் கொண்டு 'நெஞ்சில் நெருப்பு' என்ற சிறுகதையில் விளக்குகிறார். இதில், "களவாடிப் பிழைக்கும் புள்ளினம், கவண் கற்களுக்கன்றோ இரையாகும், ஓர்நாள்? புள்ளினம் அதனை அறியாமல், தென்னங்கீற்றினிலே ஊஞ்சலாடி மகிழ்கின்றன. ஏன்? களவு, குற்றம் என்ற உணர்வு இல்லை!"[33] என்ற கூற்று திருட்டில் ஈடுபடுபவருக்கு அவர் மாட்டிக் கொள்ளும் வரையில் அது தவறு என அறிந்து கொள்ள மனம் இடம் கொடுப்பதில்லை. திருட்டால் கிட்டிய செல்வங்களால் அவனின் சிந்தனை தடைபடுகின்றது. அதனால் திருடுவது என்பது குற்றம் என அவனால் சிந்திக்கக் கூட முடிவதில்லை என்பதை உணர்த்துகின்றது. 'கனவான்' என்ற

சிறுகதையும் திருட்டைக் கருவாகக் கொண்டு இயற்றப்பட்டதாகும். கோயில் பூசாரியாக நடித்து வைரத்தைக் கடத்த முயலும் ஒருவன் காவல்துறையில் சிக்கிக் கொள்வதாக இக்கதையை அண்ணா படைத்துள்ளார். சமுதாயத்தைப் பாதிக்கின்ற இத்தகைய திருட்டை ஒழிக்க வேண்டுமானால் அதற்கு நாட்டில் வறுமையை ஒழிக்க வேண்டும். வறுமையை ஒழித்தாலே பாதித் திருட்டை ஒழித்துவிடலாம் என்பது அண்ணாவின் படைப்புகள் வழி அறியப்படும் செய்தியாகும். அதேசமயம் திருடுவது எக்காலத்திலும் ஏற்றுக்கொள்ள முடியாத ஒரு செயலாகவும் கருதுகிறார். புராணங்களில் பக்தியின் காரணமாகத் திருடிய திருமங்கையாழ்வாரின் திருட்டும் குற்றமே என்கிறார். இக்காலத்தில் அவ்வாறு திருடினால் அதனை இச்சமுதாயம் ஏற்றுக்கொள்ளாது என்ற உண்மையை 'வழக்கு வாபஸ்' என்ற நாடகத்தின் வழி உணர்த்துகின்றார். ஆக, திருட்டை யார் செய்தாலும் எக்காரணத்திற்காகச் செய்தாலும் அது குற்றமே ஆகும் என்பது அண்ணாவின் படைப்புகள் வழி அறியலாகும் உண்மையாகும்.

## சூதாட்டம்

சூதாட்டம் என்பது சீட்டுகளை வைத்து ஆடுவது மட்டுமல்ல. எந்தவொரு போட்டியிலும் இவர்கள் தான் வெற்றி பெறுவார்கள் என முன்கூட்டியே நிர்ணயம் செய்து பணத்தை வைத்து விளையாடும் அனைத்து வகையான ஆட்டங்களும் சூதாட்டமாகும். குதிரைப் பந்தயத்தில் இந்தக் குதிரை தான் வெற்றி பெறும் என எண்ணி அக்குதிரையின் மீது பணம் கட்டி விளையாடும் சூதாட்டத்தை அண்ணா 'ஓர் இரவு' நாடகத்தில் காட்டுகிறார். இந்நாடகத்தில் வரும் கோபால் குதிரைப் பந்தயத்தில் பணம் கட்டி இழந்த நிலையிலும் மீண்டும் பணம் கட்டி விளையாட முற்படுகிறான். இதனை, "நாட்டிமெயிட் கட்டாயம் வருமா? நம்பிக் கட்டலாமா சார். சார்! எனக்கு இதுவரையிலே 500 ரூபாய்க்குமேல் நஷ்டம் சார். ஒயிப் கழுத்துச் செயினைக் கூட மார்வாடியிடம் வைத்துவிட்டேன் சார். இந்த ரேசிலே ஜெயிக்காவிட்டா என்பாடு ரொம்பத் திண்டாட்டமா போயிடும் சார்."[34] என்ற கோபாலின் கூற்று உணர்த்தும். இத்தகைய சூதாட்டத்தால் தனிநபர் மட்டுமல்லாது குடும்பமும் அதனோடு சமுதாயமும் பாழ்படும் என்பது அண்ணாவின் திடமான கருத்தாகும். சூதாட்டத்தில் ஈடுபடுவதும் அதனை நடத்துவதும் தவறு என்பதை உணர்த்தும் சிறுகதை 'சூதாடி' ஆகும். இதுபோன்ற படைப்புகள் மூலம் சூதாட்டம் ஏற்படுத்தும் விளைவுகளை விளக்கி, இது சமுதாயத்தில் ஒரு பழக்கமாக ஆகிவிடக் கூடாது என எச்சரிக்கின்றார் அண்ணா.

## மதுப்பழக்கம்

மது என்னும் தீய பொருள் இச்சமுதாயத்தில் ஏற்படுத்தும் பிரச்சினைகள் குறித்து அண்ணா தன்னுடைய படைப்புகளில் விரிவாகப் பேசவில்லையெனினும் மதுவை இச்சமுதாயம் ஏற்றுக்கொள்ளக் கூடாது என்ற கொள்கையைத் தம் படைப்புகளில் வலியுறுத்தியுள்ளார். தமிழகத்தில் மதுக்கடைகள் திறக்கப்படாததால் கள்ளச் சாராயக் கடைகள் அதிகமாயின. இந்தக் கள்ளச் சாராயத்தைக் குடித்து மக்கள் இறக்க நேரிட்டது. அதனால் கள்ளத் தனமாக நடைபெறும் இச்சாராய விற்பனையை ஒழிக்க மக்கள் முன்வர வேண்டும் என்ற சிந்தனையை 'சன்மானம்' என்ற நாடகத்தில், "மகாமத்மாவோட கொள்கைகளைக் காப்பாத்தறதுன்னு சங்கல்பம் செய்துண்டு இருக்கற, நம்ம சர்க்கார் மது விலக்குச் சட்டம் கொண்டு வந்தா. சில பேர், அதை மீறி, திருட்டுத் தனமாகக் குடிக்கறா. அப்படிப்பட்ட பாபாத்மாக்களைக் கண்டுபிடித்து, ஒழிக்க வேணும்னா, தைரியமா, பொதுஜனம் ஒத்துழைக்க வேணும்"[35] என்கிறார். 'பிரார்த்தனை' சிறுகதையில் ஆணுடன்

சேர்ந்து பெண்ணும் மது அருந்தி நினைவற்றுப் போனதால், அப்பெண் தனது மகளின் கற்பை இழக்க நேரிட்டதைக் குறிப்பிடுகிறார். ஆண்களின் மதுப்பழக்கத்தைக் கடுமையாக எதிர்க்கும் அண்ணா பெண்கள் இப்பழக்கத்தைக் கொண்டிருந்தால் பெண்கள் தங்கள் உயிரைக் காட்டிலும் உயர்வானதாகக் கருதும் கற்பை இழக்க நேரிடும் எனவும் மதுப்பழக்கம் கொண்டவரை மட்டுமல்லாமல் அவரது சுற்றச்சார்பையும் பாதிக்கும் என்பதையும் இக்கதை வாயிலாக உணர்த்துகின்றார். பல பிரச்சினைகள் உருவாகக் காரணமாக இருக்கும் மதுப்பழக்கம் இச்சமுதாயத்தில் தலைதூக்கக்கூடாது என எண்ணினார். தன்னுடைய ஆட்சிக் காலத்தில் மிகுந்த நிதி நெருக்கடி ஏற்பட்ட நேரத்தில் மதுக்கடைகளைத் திறந்தால் அதிலிருந்து மீளலாம் என அமைச்சர்களும் அதிகாரிகளும் கூறிய கருத்தை அண்ணா ஏற்கவில்லை. "விழியை இழந்தாலும் மதியை இழந்து மதுவை ஏற்றுக் கொள்ளமாட்டேன்"[36] எனக்கூறித் தான் இறக்கும் வரையிலும் தமிழகத்தில் மதுக்கடைகளைத் திறக்க அண்ணா அனுமதிக்கவில்லை. இத்தகைய கருத்துக்களும் செயல்களும் இச்சமுதாயத்தில் இருந்து மதுப்பழக்கம் அகற்றப்பட வேண்டும் என்ற அண்ணாவின் நிலைப்பாட்டைப் பிரதிபலிக்கின்றன.

## கொலை

ஓர் உயிரைக் கொல்வதை கொடுமையிலும் மிகக் கொடுமையானதாக அண்ணா கருதுகிறார். ஓர் உயிரைக் கொன்று விட்டு ஒருவன் நிம்மதியாக இவ்வுலகில் வாழ முடியாது; அவனது மனமே அவனை நிம்மதியில்லாமல் செய்து விடும் என்பதனை ‘நெஞ்சில் நெருப்பு’ என்ற சிறுகதை மூலம் உணர்த்துகிறார் அண்ணா. திருடச் சென்ற இடத்தில் தன்னைத் தடுத்த முதியவரைக் கொலை செய்தவனின் மனமே அவனைத் துன்புறுத்தும் நிலையை, "கண்களை மூடிக் கொள்கிறான் இறுக. எனினும் கிழவன் தெரிகிறான்! கண்ணீர் பொழிகிறான்! காலடி வீழ்கிறான்! இரத்தம்! பிணம்! கொலை!! ஓடுகிறான்! ஓடுகிறான்! கிழவனை விட்டுவிட்டு! அந்த முதியவனோ, விடாமல் இவனைத் துரத்துகிறான். எத்துணை வேகமாக ஓடியும் எங்கெல்லாம் சென்று ஒளிந்து கொண்டும், பயனில்லை; கொலையுண்ட கிழவன், இவனெதிரில் வந்து வந்து நிற்கிறான்"[37] என இக்கதையில் அண்ணா விவரிக்கிறார்.

‘கன்னி விதவையான கதை’யில் வாங்கிய கடனைக் கட்ட வழியில்லாததால் கடனைக் கழிக்க வயது முதிர்ந்த சோமசுந்தரத்திற்குத் தன் மகளை மணம் செய்து கொடுக்கின்றார் குத்தாலலிங்கம். இச்செயலால் குத்தாலலிங்கத்திற்கும் அவரது மகனுக்கும் இடையே பிரிவினை உருவாகின்றது. இப்பிரிவினையை ஏற்க மனமில்லாமல் சூழ்ச்சி செய்து தன் மகளைத் திருமணம் செய்து கொண்ட சோமசுந்தரத்தைக் கொன்று அவளை அவ்வாழ்க்கையில் இருந்து மீட்க எண்ணுகிறார். ஆனால் சோமசுந்தரம் முன்போல அல்லாமல் மிகுந்த மாற்றம் பெற்று செல்லியைத் தன் மகளாக ஏற்று வாழ்ந்து வருவதை அறியாமல் குத்தாலலிங்கம் அவரைக் கொலை செய்து விடுகிறார். கொலைக்குப் பின் உண்மையறிந்த குத்தாலலிங்கம் மனம் குழம்பித் திரிவதாக அண்ணா இக்கதையை முடித்திருக்கின்றார். எத்தகைய பிரச்சினைக்கும் கொலை தீர்வாகாது என்பதையும் அது மேலும் பிரச்சினைகளையே உருவாக்கும் என்பதையும் கருத்தில் கொண்ட அண்ணா, கொலை செய்பவரைச் சட்டம் தண்டிக்காமல் விட்டாலும் அவரது மனமே அவரைத் தண்டிக்கும் எனவும் எச்சரிக்கின்றார். ‘குறும்புக்காரன்’ என்ற நாடகத்தில் தன் தாயைக் கொலை செய்தவரைக் கடவுளாக வணங்கும் நிலையை எடுத்துக்காட்டுவதோடு இன்றைக்கு ஒருவன் இச்செயலைச் செய்தால் அவன் எய்தும் நிலையையும் விளக்குகிறார். இதனை, "மனுஷன் செய்தா, மகாபாபம்னு சொல்லி விடுவோம் - இது ரிஷி செய்த காரியம்!!

இதுக்கு பூஜை செய்யறோம். . .”[38] என்கின்ற கூற்றின் வழி உணர்த்துகின்றார். கொலை செய்தவர் யாராக இருந்தாலும் தண்டிக்கப்பட வேண்டுமே தவிர வணங்குவதற்கு உரியவர் அல்லர் என்பதனையும் இக்கதை வழியாக வலியுறுத்துகின்றார். இதன் வாயிலாக அவர் இச்சமுதாயத்தில் கொலைகள் நிகழ்வதை எதிர்க்கும் நிலையை அறியமுடிகின்றது.

## துரோகம்

எதிரியைக் காட்டிலும் துரோகியே மிக ஆபத்தானவன் என்பது பழமொழி. எதிரி என்பவன் எதிரிலே நின்று எதிர்ப்பவன். ஆனால் துரோகி கூடவே இருந்து அழிக்க நினைப்பவன். இத்தகைய துரோகத்தனத்தை ‘ரொட்டித்துண்டு’ என்ற சிறுகதையில் அண்ணா வெளிப்படுத்துகிறார். இதில் தன்னுடைய நண்பன் எழுதிய ரொட்டித்துண்டு கதையைத் தான் எழுதியதாக வெளியிட்டு பெரும் புகழ் அடைகின்றான் பாரத்பூஷணன். உண்மையறிந்த நண்பன் கதிர்வேலு அவனிடம் சென்று வாக்குவாதத்தில் ஈடுபடுகிறான். அவனைப் பாரத்பூஷணன் அடித்து தனியறையில் சிறைபடுத்துகிறான். அதோடு அவனுக்குப் பைத்தியம் பிடித்திருப்பதாக நம்ப வைத்து அவனை மனநல மருத்துவமனையில் சேர்க்கவும் திட்டம் தீட்டுகின்றான். நண்பனாலேயே இத்தகைய தீமைகளை அனுபவிக்கும் கதிர்வேலன் மிகுந்த துன்பத்திற்கு உள்ளாகின்றான். அண்ணாவின் படைப்புகளில் ஆண்கள் பெண்களுக்குச் செய்யும் துரோகம், பெண்கள் ஆண்களுக்குச் செய்யும் துரோகம், முதலாளிகள் தொழிலாளர்களுக்குச் செய்யும் துரோகம், நண்பன் நண்பனுக்குச் செய்யும் துரோகம், அண்ணன் தம்பிக்குச் செய்யும் துரோகம் என்பன காட்டப்பட்டுள்ளன. ஓர் இரவு, ரங்கோன் ராதா, பார்வதி பி.ஏ., தங்கத்தின் காதலன், பிரார்த்தனை, சொல்லாதது, தவளையும் மனிதனும், கோமளத்தின் கோபம், சிங்களச் சீமாட்டி, குமாஸ்தாவின் பெண், மக்கள் தீர்ப்பு போன்ற படைப்புகள் இதற்குச் சான்று பகர்வதாய் அமைந்துள்ளன.

## அண்ணாவின் படைப்புகளில் மதிப்புப் போராட்டம்

ஒரு சமுதாயத்தில் ஒரே காலக்கட்டத்தில் ஒரு சாரார் நேர்மதிப்புகளாகக் கருதுவது மற்றொரு சாராரால் எதிர்மதிப்புகளாகவும் ஒரு சாரார் எதிர்மதிப்புகளாகக் கருதுவது மற்றொரு சாராரால் நேர்மதிப்புகளாகவும் கொள்ளப்படுவது மதிப்புப் போராட்டம் எனப்படும். அண்ணா வாழ்ந்த காலத்தில் நேர்மதிப்புகளாகக் கருதப்பட்டவை எதிர்மதிப்புகளாகவும் எதிர்மதிப்புகளாகக் கருதப்பட்டவை நேர்மதிப்புகளாகவும் மாற்றம் பெறும் சூழல் ஏற்பட்டுள்ளது. அவ்வகையில் அண்ணா தம் படைப்புகளில் நேர்மதிப்புகளை எதிர் மதிப்புகளாகவும் எதிர்மதிப்புகளை நேர்மதிப்புகளாகவும் படைத்துள்ளார்.

அவ்வகையில் அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் காணப்படும் சாதியப்பாகுபாடு, கடவுள், காதல், கலப்புமணம், கைம்பெண் திருமணம், பொருந்தா மணம், பலதாரமுறை, வைப்பாட்டிமுறை, தாசிமுறை போன்றவை மதிப்புப் போராட்டங்களாகக் கருதத்தக்கனவாகும்.

## சாதியப்பாகுபாடு

சமுதாயத்தில் தொழிலடிப்படையாகத் தோன்றிய பிரிவினைகள் நாளடைவில் வளர்ந்துள்ளன. தமிழகம் முழுவதும் பரவிக் குடியமர்ந்த ஆரியர்கள் தமது உயர்வு கருதி மக்களிடம் சாதி வேறுபாடுகளைக் கற்பித்தனர். ஆரியர்கள் தமிழகத்தில் நுழைவதற்கு முன்பு தமிழ் மக்களின் வாழ்க்கை முறை வேறாயிருந்தது. “ஆரியர்கள் இந்தியாவுக்குள் நுழைந்ததனால் புதிய சிக்கல்கள் உருவாயின. இனத்தாலும், அரசியலாலும் மாறுபட்ட

திராவிடர்கள் நீண்ட கால நாகரிகத்துடன் வாழ்ந்தபடியால் இவர்களை விடத் தாங்கள் உயர்ந்தவர்கள் என்று கூறிக் கொண்ட ஆரியர்களும் இவர்களுக்குமிடையே விரிந்த பெரிய பிளவு ஏற்பட்டது."[39] என்பார் கே.கே.பிள்ளை.

ஆரியர்கள் தமக்கெதிராகத் திராவிடர்கள் ஒற்றுமையாகத் திரண்டு விடக்கூடாது என்பதற்காகத் திராவிடர்களைப் பிளவுபடுத்தினர். "எதற்காகப் பார்ப்பான் என்றும் சூத்திரன் அவர்ணஸ்தர்கள் என்றும் பிரித்தார்கள் என்றால் இவர்கள் ஒற்றுமையாக இருந்தால் தங்களுக்கு ஆபத்து என்று கருதியே இப்படிப் பிரித்தார்கள். தமிழர்களுக்குள்ளாகவே நான் மேல்சாதி, கீழ்சாதி என்று சண்டை போட்டுக் கொண்டால் தம்மிடம் சண்டைக்கு வரமாட்டான் என்பதாகக் கருதியே பார்ப்பான் இம்மாதிரி சூழ்ச்சி செய்து இருக்கிறான்"[40] என்னும் பெரியாரின் கூற்றும் இதனை உறுதி செய்கிறது. இதன் மூலம் பார்ப்பனர்களின் சுயநலம் சாதிகளின் தோற்றத்திற்குக் காரணம் என்பது புலனாகிறது.

சாதிகளை ஒழிக்க வேண்டுமென்பதில் பல முயற்சிகள் எடுக்கப்பட்டாலும், சாதிப்பாகுபாடுகள் மறையவில்லை. அண்ணா தனது இலக்கியங்களில் சாதிய ஒழிப்பைப் படைத்துக் காட்டுகிறார். பல சாதிகளைப் பற்றியும் தனது படைப்புகளில் கூறுகின்றார். சாதிப்பிரிவுகளால் ஏற்படும் தீயவிளைவுகளைப் பற்றி ஆராய்கின்றார். சாதிப்பாகுபாடு குறித்த மக்களின் எண்ணம் மாற்றமடைய வேண்டும் என வலியுறுத்தும் விதமாகத் தன் படைப்புகளைப் படைத்துள்ளார். சாதிப்பாகுபாடு மனிதனின் அறிவையும், உணர்வையும் மழுங்கடிப்பதோடு நல்லிணக்கமும் ஒற்றுமையும் வளரவிடாமல் தடுக்கிறது. எனவே சாதி குறித்த சமுதாய மதிப்பு அறவே ஒழிந்து போக வேண்டுமென்பதை வலியுறுத்துகிறார். தனது படைப்புகளில் சாதி ஒழுக்கங்களைக் கண்ணும் கருத்துமாகக் கடைபிடிப்பவர்களைப் படம்பிடித்துக் காண்பிக்கின்றார். சாதியக் கட்டுப்பாடுகளை மீறி மாற்றத்தை உருவாக்கும் கதாபாத்திரங்களையும் தனது கதைகளில் காட்டுகின்றார். சாதிப்பிரிவினை கூடாது என்பதை நாமக்கல் கவிஞர்,

"சாதியும் மதங்களும் வீட்டோடு
சமத்துவம் யாவரும் நாட்டோடு
நீதியும் அறங்களும் உலகெங்கும்
நிலைத்திடத் தவம்புரிகிற சங்கம்."[41]

என்று குறிப்பிடுவதும் நோக்கத்தக்கதாகும்.

சாதியப் பாகுபாட்டைப் பின்பற்றுபவர்களில் முதன்மையானவர்களாகப் பார்ப்பனர்கள் விளங்குகிறார்கள். சமுதாயத்தில் தன்னை விட உயர்ந்தவர்கள் யாரும் இல்லை என்ற எண்ணம் கொண்டவர்கள். அதனையே சமுதாயமும் ஏற்றுக்கொள்ளும் வண்ணம் செய்தவர்கள். கடவுளுக்குத் தரகர்களாக விளங்குபவர்களாதலால் இவர்களை மேலானவர்கள் எனப் பிற இனத்தவரும் எண்ணினர். பார்ப்பனர்களின் சூழ்ச்சித்தன்மையை மற்றவர்கள் உணராது இருந்தனர். சமுதாயத்தில் சாதியப் பாகுபாட்டை உருவாக்கியவர்கள் பார்ப்பனர்களே ஆவர். அவர்களே முதன் முதலில் நால்வருணப் பாகுபாட்டை அறிமுகம் செய்துள்ளனர். இதிலிருந்தே பல கிளைகள் தோன்றி இன்று சாதி மிகப்பெரிய விருட்சமாக வளர்ந்து நிற்கின்றது.

பார்ப்பனர்கள் தங்களைத் தவிர, பிற சாதிகளை மிக இழிவாகக் கருதும் எண்ணம் கொண்டவர்களாகவே அண்ணாவின் படைப்புகளில் சித்திரிக்கப்பட்டுள்ளனர்.

'தீட்டுத்துணி' என்னும் சிறுகதையில் பார்ப்பனரின் வீட்டில் வேலை பார்க்கும் ஆதி திராவிட இனத்தைச் சேர்ந்த அந்தோணிசாமியின் மீது சீலை திருடியதாகக் குற்றம் சுமத்தி அவனைக் கட்டிப்போட்டு துன்புறுத்துகிறார்கள். அவன் தான் எடுக்கவில்லை என்பதை எடுத்துக்கூறியும் யாரும் அவனது பேச்சை ஏற்றுக்கொள்ளவில்லை. இந்நிலையை, "சீ, நாயே, மூடு வாயை, பசப்பிவிட்டுடலாம்னு பார்க்கின்றாயா? பறப்பய புத்தி இங்கு செல்லாது! நீ எடுத்துண்டு போன சேலையைக் கொடுக்கல்லே, உன் உடம்புத்தோல்...!"[42] என்ற பார்ப்பனரின் பேச்சு வெளிப்படுத்துகின்றது. சாதி சமுதாயத்தில் ஒரு மதிப்பாகப் பின்பற்றப்பட்டு வருவதால் ஏற்படும் தீமைகளைக் கண்டு பொங்குகிறார் அண்ணா. அதன் வெளிப்பாடுகளே இத்தகைய படைப்புகள். மனிதனை மனிதன் மதிக்காத ஒரு பண்பு சாதியால் ஏற்படுகிறது என்றால் அப்படிப்பட்ட சாதி தேவையில்லை என்பதை வலியுறுத்துகின்றார்.

சமுதாயத்தில் காலங்காலமாகத் திருமணம் என்பது அந்தந்த சாதிக்குள் மட்டுமே நிகழ்ந்துள்ளது. இன்றும் பெரும்பாலான திருமணங்கள் அவ்வாறே நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. ஆனால் இந்த நடைமுறை அக்காலத்தில் மிகவும் அதிகமாகவும், உறுதியாகவும் பின்பற்றப்பட்டிருந்ததை 'வேலைக்காரி' என்ற நாடகம் உணர்த்தும். இந்நாடகத்தில் வேலைக்காரி பாத்திரத்தில் வரும் அமிர்தத்திற்கு மாப்பிள்ளை பார்க்கும்பொழுது கூட, "நம்ப ஜாதியானா பார்த்து ஒருத்தனைக் கட்டிப்போடு"[43] என்று அமிர்தத்தின் தந்தை முருகேசனிடம் அவரது நண்பர் கூறுவதிலிருந்து அறியமுடிகின்றது.

இதில் வரும் வேதாசல முதலியார் சாதி மற்றும் பணத் திமிர் கொண்டவராக இருக்கின்றார். இந்நாடகத்தின் இறுதியில் வேதாசல முதலியார் தன்னுடைய குணங்களை மாற்றிக் கொள்வதாக இந்நாடகம் அமைந்துள்ளது. இதில், "உங்களுக்கு வேறு உலகம், எனக்கு வேறு உலகமில்லை; ஆனந்தா, வா! சரசா! இந்தப் பாதகனை நல்வழிப்படுத்திய உன் புருஷன் ஆனந்தனோடு வாழ்ந்திடு! அமிர்தம், பலே! நீ பெரிய யோகக்காரிதான்! காதலால் ஜாதியை வென்ற உத்தமி. உன் புருஷன் மூர்த்தியோடு சுகமாக வாழ்ந்திரு!"[44] என வேதாசல முதலியார் மனம் திருந்திக் கூறுவதாகப் படைத்துக் காட்டுவர் அண்ணா. இதேபோல் அனைவரும் மனித குலம் என்பதை மனதில் கொண்டு சாதி வேறுபாடுகளற்ற திருமணத்தை ஏற்றுக்கொள்ளுதல், ஏழை பணக்காரன் வேற்றுமை பார்க்காத நிலையை அடைதல், விரும்பிய வாழ்க்கையை அனைவரும் பெற்று வாழ்வதற்கு சாதி, சமயம், பணம் போன்றவை தடையாக இருக்கக்கூடாது என்பன போன்ற கருத்துக்கள் அனைவரும் பின்பற்றும் சமுதாய மதிப்புகளாக மாற வேண்டும் என்னும் தனது விருப்பத்தை அண்ணா இந்நாடகம் மூலம் வலியுறுத்துகின்றார்.

பள்ளியில் பிற மாணவனின் திண்பண்டத்தைத் தின்ற மாணவனின் தாய் தன் மகனுக்குக் கூறும் அறிவுரையாக, "இனிமே அப்படி எல்லாம் செய்யாதே. இதோபார், நாம்பள்ளாம் ஒசத்தி ஜாதி சைவ மொதலியாருங்க. நம்ப வேலாயுதம் இருக்கிறான் பாரு. அவங்க மட்ட ஜாதி - அவங்க தொட்டதை நாம்ப சாப்பிடக்கூடாது."[45] எனக் கூறுகிறார். இது சிறுவயதிலேயே சாதியப்பாகுபாட்டை அம்மாணவனின் மனதில் பதியச் செய்கின்றது. இதனால் அம்மாணவன் பின்னாளில் சாதியத்தின் பிரதிநிதியாகத் தன்னைக் காண்பித்துக் கொள்ளும் நிலையை உருவாக்கும் என்பதைச் சுட்டிக்காட்டி, சாதிகளற்ற சமுதாயத்தை உருவாக்க வேண்டுமாயின் சாதி எனும் மதிப்பு சமுதாயத்தில் இருந்து அகற்றப்பட்டு அனைவரும் மனித குலம் என்ற ஒற்றைக் குடையின் கீழ் வாழ வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துவதாக இந்நாடகம் அமைந்துள்ளது.

சாதி என்கின்ற மதிப்பை இந்த சமுதாயம் பின்பற்றுவதால் அண்ணன் தங்கை இச்சமுதாயத்தில் வாழ முடியாமல் தங்களது வாழ்வை முடித்துக் கொள்கிறார்கள். இவர்களைப் பற்றி 'இருவர்' என்னும் சிறுகதை உணர்த்தும். இதில் சாதி விட்டுச் சாதித் திருமணம் செய்து கொள்ளும் தங்கை அதற்குத் துணையாக இருக்கும் அண்ணன் ஆகிய இருவரும் சமுதாயத்தால் புறக்கணிக்கப்பட்டு இறுதியில் வாழ்வில் வெறுப்புற்றுத் தற்கொலை செய்து கொள்கிறார்கள். இவர்களின் இறப்பிற்குக் காரணம் சாதிப் பாகுபாடு என்கின்ற மதிப்பை மக்கள் பின்பற்றி வருதலேயாகும் என எடுத்துக்காட்டுகிறார் அண்ணா. சாதிவெறியின் காரணமாகத் தான் காதலிக்கும் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளாது ஏமாற்றுகிறான். அதேசமயத்தில் அவளைத் தனது காமக்கிழத்தியாக்கிக் கொள்ளவும் நினைக்கிறான். திருமணம் செய்து கொள்ள மறுக்கும் அவனது சாதி அவளை அடைய மட்டும் அனுமதிக்கும் நிலையைச் 'சிங்களச் சீமாட்டி' குறும்புதினத்தில் அண்ணா எடுத்துக்காட்டுகிறார். பெண்ணின் காதலை, சாதியைக் காரணம் காட்டி நிராகரிப்பது அக்காலத்தில் இருந்த சாதிய மதிப்பைக் காட்டுகிறது. சாதி விட்டுச் சாதித் திருமணம் செய்து கொள்வது என்பது அண்ணா காலச் சமுதாயத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு மதிப்பாக இல்லை. இந்தச் சூழல் மாற வேண்டும். சாதியப் பாகுபாடு என்கின்ற சமுதாய மதிப்பு அகன்று சாதியை மதிப்பாகப் பார்க்கும் மக்களின் பார்வை மாறவேண்டும் என்பது அண்ணாவின் படைப்புகளில் இருந்து அறிந்து கொள்ளமுடிகின்றது.

## கடவுள்

காற்று, நெருப்பு, மழை, இடி, மின்னல், நோய், கொடிய விலங்குகள் ஆகியவற்றின் மீது கொண்ட அச்சத்தாலும் அவற்றிற்கான காரணங்களை அறியாததாலும் மனிதன் அவற்றைக் கடவுளாகக் கற்பித்துக் கொண்டான். எனவேதான், "மனிதன் தனது அறியாமையினால், அச்சத்தினால், ஆசையினால் கடவுளைக் கற்பித்துக் கொண்டான்"[46] என்கிறார் இங்கர்சால். மனிதன் தன் பேராசை, கற்பனை, மன விகாரங்களின் அடிப்படையில் பலவிதமான விநோத உருவங்களைக் கொண்ட கடவுள்களைப் படைத்துக் கொண்டதாகப் பெரியார் கருதுகிறார். எனவே தான், "கடவுள் என்று கல்லைத்தான், மனித உருவத்தைத்தான், மாடு, குரங்கு, மீன் முதலான உருவங்களைத் தான், ஒருதலை, இரண்டு தலை எனப் பல கைகளையும் உடைய மனித உருவங்களைத்தான் மனிதனும் மிருகமும் இணைந்த உருவங்களைத்தான் காட்டு மிராண்டித் தனமாக வணங்குகிறான்..... கடவுளுக்கு அய்ந்து வேளை ஆறு வேளை படைத்தல் பால், நெய், தேன், தயிர், இளநீர் முதலியவற்றால் பூசை செய்வது காட்டுமிராண்டித் தனமல்லவா?"[47] என்று பெரியார் வினவுகின்றார். பாதுகாப்பின்மை உணர்வின் காரணமாக மதம் வாழ்கிறது என மார்க்ஸ் கருதுவது, "மதம் துன்பப் படுகிறவர்களுக்குப் பெருமூச்சாகும்; இதயமற்ற உலகத்திற்கு இதயமாகும்"[48] என்று கூறுவதன் மூலம் தெரிகிறது. இவற்றால் அச்சம், அறியாமை, ஆசை, பாதுகாப்பற்ற உணர்வு போன்றவற்றின் காரணமாகக் கடவுளர் கற்பிக்கப்பட்டனர் என்பது புலனாகிறது.

பெரியார் இயக்கத்தினர் கடவுளின் பெயரால் நடக்கும் அக்கிரமங்களையும் மூடப்பழக்கவழக்கங்களையும் ஏற்றுக்கொள்ள மனமில்லாமல் சமய நம்பிக்கைகளைப் பொய் எனக் கூறி வந்தனர். எதனையும் பகுத்தாராய்ந்த பின்னரே ஒரு முடிவுக்கு வரவேண்டும் எனவும் இக்கூட்டம் வலியுறுத்தியது. மக்களின் கடவுள் நம்பிக்கையைப் பயன்படுத்திக் கொள்ளைப் பணம் சம்பாதிக்கும் கூட்டத்தின் வஞ்சகத் தன்மையை மக்களுக்கு உணர்த்தியது. இந்த இயக்கத்தின் கொள்கைகளால் கவரப்பட்ட அண்ணா இவ்வியக்கத்தில் இணைந்து பணியாற்றினார். பெரியாரின் கொள்கைகளைத் தனது இலக்கியங்களின் வழி

மக்களுக்குக் கொண்டு செல்லும் பணியை மேற்கொண்டார். பெரியாரின் கொள்கைகளுள் ஒன்றான கடவுள் எதிர்ப்புக் கொள்கையைத் தனது பல படைப்புகளில் நிறுவியுள்ளார். சமுதாயத்தில் கடவுள் என்னும் மதிப்பை மக்களிடத்தில் இருந்து அகற்றும் பணியில் முனைந்து செயல்பட்டார்.

ஓர் ஊரில் அக்கிரமம் செய்பவனைப் பார்க்கும் பொதுமக்கள், "உன்னுடைய அக்கிரமத்தைக் கடவுள் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார். என்றைக்காவது, இதற்காக, கடவுள்தண்டிக்கத்தான் போகிறார்."[49] எனக் கூறுவது இயல்பான ஒன்றாகும். அத்தகைய தண்டிக்கும் கடமையைக் கடவுள் எனும் மதிப்பு பெற்றிருக்கின்றது. இதனைப் பகுத்தாராய முடியாத பாமர மக்கள் கூறலாம். ஆனால் ஆட்சியிலும் அதிகாரத்திலும் இருக்கும் நபர்கள் சமுதாயத்தில் தீங்கை உருவாக்குபவர்களை அடக்க உரிமையுள்ளவர்கள் இத்தகைய மொழிகளைக் கூறுவது என்பது அபத்தமான ஒன்றாகும் எனக் கருதுகிறார் அறிஞர் அண்ணா. உணவுப் பொருள்களைப் பதுக்கி வைப்பவர்கள் மீது நடவடிக்கை எடுத்து உணவுப் பொருட்களை மீட்காமல் இந்திய நாட்டின் உள்துறை அமைச்சர் பட்டேல் அவர்கள் உணவுப் பொருட்களைப் பதுக்கி வைக்கும் செயலுக்கு கடவுள் கட்டாயம் தண்டனை கொடுப்பார் எனக் கூறுவதை, ஆட்சி அதிகாரத்தின் உச்சத்தில் இருக்கக்கூடிய ஒருவர் இவ்வாறு கூறுவது ஏற்புடையதல்ல என எடுத்துக்காட்டுகிறார். கடவுள் என்னும் மதிப்பு இருப்பதால் தானே ஆட்சியாளர்கள் கூடத் தவறுகளைத் தட்டிக்கேட்காமல் கடவுள் தண்டிப்பார் எனக் கூறித் தப்பித்துக்கொள்கின்றனர். கடவுள் என்னும் மதிப்பு இல்லை என்றால் இத்தகைய சூழல் உருவாகியிராது என்பது அண்ணாவின் கருத்தாக அமைகின்றது. அதனாலேயே கடவுள் என்ற மதிப்பு சமுதாயத்தில் இருந்து அகல வேண்டும் என்பதைத் தனது கொள்கையாகவே ஏற்றுச் செயல்பட்டுள்ளார்.

காலத்திற்கு ஏற்றவண்ணம் கடவுளின் தன்மை அமையாமையை எள்ளல் சுவையோடும் கற்பனை உரையாடல் மூலமாகவும் சுட்டும் அண்ணா, காலத்திற்குக்காலம் புதிய புதிய கடவுளர்கள் தோன்றுவதைச் 'சமயபுரத்தம்மன் மான நஷ்ட வழக்கு' என்னும் சிறுகதையில் நகைச்சுவையுடன் சாடியுள்ளமை குறிக்கத்தக்கது.

இரண்டு குழுக்களுக்கிடையே ஏற்பட்ட பிரச்சினையின் காரணமாகக் கடவுளைச் சிறைபிடித்து வைத்த உண்மைச் சம்பவத்தை அடிப்படையாக வைத்து அமைக்கப்பட்டது 'கருப்பணசாமி யோசிக்கிறார்' எனும் கதையாகும். இச்சம்பவத்தைப் பற்றிக் கருப்பணசாமியே பேசுவதாகக் கற்பனையுடன் படைத்துக் காட்டியிருக்கும் பாங்கு சிறப்பானது. இதில், "கண்டதையும் கடியதையும், வேகாததையும் பழுக்காததையும் தின்று வயிற்றுப்போக்கு ஏற்பட்டால் என்னை வந்து கேட்கிறார்களே தேவி! கருப்பண்ண ஸ்வாமி! என்னைக் காப்பாற்றுன்னு. பைத்தியகாரத்தனம்தானே அது."[50] எனக் கருப்பணசாமியின் வாயிலாக அண்ணா கூறுவது கடவுளைப் பற்றிச் சிந்திக்க வைக்கும் கருத்துக்களாக அமைந்துள்ளன. இந்தக் கடவுள் எனக்கு உரியவர், இந்தக் கடவுள் அவர்களுக்கு உரியவர் என்ற பேதத்தால் வரும் நிலையை வைத்து உருவாகும் பிரச்சினைகள் நாட்டில் ஏராளம். கடவுள் என்ற மதிப்பினால் மக்கள் ஒருவரை ஒருவர் எதிர்க்கும் தன்மையை உணர்ந்த அண்ணா மக்களின் மனதில் இருந்து கடவுளை அகற்றும் நோக்கில் கடவுளை மையமாக வைத்து 'கடவுளின் கவலை', 'வள்ளிநாயகியின் கோபம்', 'கதிரவன் கண்ணீர்', 'மனித மந்தை', 'தேவதையின் துயரம்', 'அல்லாடும் ஆண்டவன்', 'பள்ளியறையிலே பரமசிவன்' போன்ற பல சிறுகதைகளைப் படைத்தளித்துள்ளார்.

## காதல்

"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது

தான் அமர்ந்து வரூஉம் மேவற்றாகும்."[51]

என்பார் தொல்காப்பியர். இதில் மனிதரும் அடங்குவர். திருக்குறள் வைப்பு முறையில் அறம், பொருள், இன்பம் என்பதாக அமைந்திருப்பினும் தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் அகத்திணையியல், களவியல், கற்பியல் என உயிரியற்கையான காதல் வாழ்வை முன்னதாக வைத்துக் கூறுவது இன்பத்தின் சிறப்பை எடுத்துக் கூறுவதற்கேயாகும். மனிதர்களை உயிர்த்துடிப்புடன் இயக்கவல்லதும், மனித இனப்பயிரைக் காலறாது ஈன்றெடுத்துச் செழுமைப்படுத்த வல்லதும் இவ்வின்ப உணர்வே ஆகும். சங்க இலக்கியப் பாடல்களுள் பெரும்பான்மையின அகப்பாடல்களாக அமைந்திருப்பதும் இவ்வடிப்படையில்தான். இப்படி இயற்கையோடு ஒத்திசைவாக வளர்ந்து வந்ததுதான் தமிழரின் களவு, கற்பு நெறிகள். சங்க காலத்தில் இருந்து மதிப்பாகக் கருதிப் பின்பற்றி வரும் காதலை இடையில் தோன்றிய சிலரின் சூழ்ச்சிகளால் அது உடன்பாட்டு மதிப்பிலிருந்து எதிர்மறை மதிப்பாக மாற்றம் பெற்றது. இதனால் களவு வாழ்விற்குப் பின் கற்பு வாழ்க்கை என்னும் நெறியுடன் வாழ்ந்த தமிழ்ச் சமூகம் காதலை ஏற்றுக்கொள்ளாத சமூகமாக மாறியது. இடையில் தோன்றிய இக்கட்டுப்பாட்டை பலரும் உடைத்தும் எதிர்த்தும் வந்துள்ளனர். அந்த வகையில் அறிஞர் அண்ணா இச்சமூகம் காதலை ஏற்றுக்கொள்ளும் ஒரு மதிப்பாகக் கருதும் நிலையை உருவாக்க தனது இலக்கியங்களைப் பிரச்சார ஆயுதமாகப் பயன்படுத்தினார். சமுதாயத்தில் உள்ள சாதியப்பாகுபாட்டை கலப்பு மணங்களும் காதல் மணங்களும் அகற்றும் என நம்பினார். ஆகவே அறிஞர் அண்ணா தனது படைப்புகளில் பல வகைப்பட்ட பெண்களின் காதலை எடுத்துரைக்கின்றார். ஏழைப்பெண், விதவை, தாசியர் குலப் பெண் போன்றோரின் காதலையும் அதேபோல ஆண்களின் காதலையும் படைத்துக்காட்டுகிறார்.

தாசியர் குலப் பெண்களுக்கு ஏற்படும் காதலைப் பற்றி 'என் வாழ்வு' என்னும் புதினம் விவரிக்கும். பொதுவாகவே காதலை ஏற்றுக்கொள்ளாத இச்சமூகம் தாசியர் குலப் பெண்களின் காதலை ஏற்றுக்கொள்ளாமல் இருப்பதில் எவ்வித வியப்பும் இல்லை. ஆனால் பெண்களுக்கு அத்தகைய காதல் உணர்வுகளை ஆடவரின் அன்புமொழிகளும், செயல்களும் உருவாக்கிவிடுகின்றன. இறுதியில் தான் அந்த ஆடவர்களின் இத்தகைய பேச்சும் செயலும் அப்பெண்களின் உள்ளன்பைப் பெறுவதற்கு அல்ல என்பதை அறிய முடிகின்றது. ஆனால் அதற்குள் தங்களை அந்த ஆடவர்க்கு அர்ப்பணித்து விட்டு நிற்கும் பெண்களை அண்ணா தன் பல படைப்புகளில் காட்டியுள்ளார். இத்தகைய சூழலில் தாசியர் குலப் பெண்களின் வாழ்வில் காதல் ஏற்படுத்தும் துன்பங்களை விவரிப்பதாக இப்புதினம் படைக்கப்பட்டுள்ளது. இப்புதினத்தில் தாசிகளுக்குக் காதல் ஏது விமலா? எனக் கேட்கும் டாக்டரிடம் விமலா, "காதல் என்பதன் கருத்துத் தெரியாமல் பேசும் பேச்சு இது . . . . . டாக்டரே காதல் என்பது இருவர் மனது லயிப்பது அல்லவா! சுருதியில் சேர்ந்த சங்கீதம் போன்றது. மலரில் மணம் இருப்பது போன்றது. எனவே இருவர் வேண்டுமே காதலுக்கு, தாசிகளிடம் சேரும் புருஷர்களிலே யார், தங்கள் முழு மனதையும், தங்கள் வாழ்வையும் ஒப்படைப்பார்கள்?"[52] எனக் கூறுகிறாள். இதிலிருந்து காதல் பற்றிய தவறான புரிதலே சமுதாயத்தில் காதலை ஏற்காத சூழலை உருவாக்குகின்றது என்பதையும் அதனைச் சமுதாய மதிப்புகளில் ஒன்றாகக் கருதவில்லை என்பதையும் அறியமுடிகின்றது. காதலை ஒரு மதிப்பாகக் கருதினால் சமுதாயத்தில் நிறைய விமலாக்கள் தோன்றுவதைத் தடுக்க முடியும் என்பதை அண்ணா இப்புதினத்தின் வழியாகப் புலப்படுத்துகிறார்.

விதவையின் காதலை இச்சமுதாயம் ஏற்றுக்கொள்ளாத நிலையை அண்ணா, ‘அவள் முடிவு’ என்ற சிறுகதையில் வெளிப்படுத்துவர். பதினெட்டு வயதே நிரம்பிய அப்பெண் கணவனை இழந்து படும் துயரத்தையும், இந்த நேரத்தில் அன்புமொழி கூறும் ஆடவரின் மேல் காதல் கொண்டு ஏமாறும் நிலையையும் இக்கதை விளக்குகின்றது. “இன்பம் அடையலாம் என்று மனக்கோட்டைக் கட்டிக்கொண்டிருந்த அவள் துன்பந்தான் அடைந்தாள். சமூகக் கட்டுப்பாட்டைத் திருட்டுத் தனமாக முறித்தெறிய முயன்ற அவளை அழித்துச் சமூகத்தின் அமைப்பு வெற்றி கொண்டது. அதோ அத்தி மரத்தடியிலே அவளின் உடல் காற்றிலே ஊசலாடிக் கொண்டிருக்கிறது! நம் சமூகம் சீர்படுமா?”[53] எனக் கேட்கிறார் அண்ணா. மேலும் இக்கதையில் விதவையின் காதல் தோல்வி அவளுக்கு இறுதியைக் கொடுத்ததற்குக் காரணமாகச் சமுதாயக் கட்டுப்பாடுகள், விதவையின் காதலை ஏற்றுக்கொள்ளாத சமுதாயச் சூழல், விதவைக்கு மறுமணம் கூடாது என்கின்ற மதிப்பு விதவையைத் தன் இச்சைக்குப் பயன்படுத்திக் கொள்ளும் ஆண்கள் போன்றவற்றையும் குறிப்பிடுகின்றார். இவற்றில் இருந்து பெண்களை விடுவிக்கவும், பெண்களும் தங்களுக்கு உரியவரைத் தானே தேர்ந்தெடுத்துக் கொள்ளும் பக்குவத்தைப் பெறவும், அதனை இச்சமுதாயம் அங்கீகரிக்கவும் காதல் ஒரு மதிப்பாகக் கருதப்பட வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றார்.

‘கபோதிபுரத்துக் காதல்’ என்னும் குறும்புதினத்தில் வரும் ராதா தன்னைக் காதலித்த பரந்தாமனை விடுத்து குடும்பத்தின் நிலை கருதி வேறொரு வயது முதிர்ந்தவனைத் திருமணம் செய்து கொள்கிறாள். அக்கிழவனும் இறந்துபட சிறுவயதில் விதவை நிலையை அடைகிறாள் அப்பெண். அப்பெண்ணைத் தேடி வரும் காதலன் அம்மை நோயின் காரணமாகத் தனது பார்வையை இழந்து தவிக்கின்றான். அவன் அப்பெண்ணைச் சந்திக்கும் பொழுது தன்னைத் திருமணம் செய்து கொள்ளுமாறு கேட்கிறான். அவளும் அவனைத் திருமணம் செய்து கொள்கின்றாள். இவ்வாறு காதலின் மேன்மையை எடுத்துக்கூறுவதாக இக்குறும்புதினத்தை அண்ணா படைத்திருக்கின்றார்.

அவ்வகையில் காதலை வலியுறுத்தும் அண்ணாவின் படைப்புகளாக ‘செங்கரும்பு’, ‘சொக்கி’ போன்ற கதைகள் உள்ளன. காதல் திருமணங்களை அங்கீகரிப்பதால் காதல் மூலமாக நிகழும் கலப்பு மணங்கள் சமுதாய மதிப்பாக மாறுவதோடு, சாதி வேறுபாட்டை அகற்றும் என்பது அண்ணாவின் எண்ணம். அதன் காரணமாகவே தனது படைப்புகளில் காதல் திருமணங்களை நிகழ்த்திக் காட்டுகிறார்.

## கலப்பு மணம்

சாதி விட்டுச் சாதித் திருமணம் செய்து கொள்வது என்பது சமுதாயத்தில் எத்தகைய விளைவுகளை உருவாக்கும் என்பதை அண்ணாவின் பல படைப்புகளில் காணமுடிகின்றது. இருப்பினும் அண்ணா கலப்புத் திருமணங்கள் தோன்ற வேண்டும் என்ற கருத்தை ஏற்றுச் செயல்பட்டவர். ஆண் பெண் இருவரின் மனங்கள் ஒத்துப் போவதை மட்டும் பார்த்துத் திருமணங்கள் நிகழ வேண்டுமே தவிர சாதியைப் பார்த்துத் திருமணங்கள் நடைபெறக் கூடாது. சாதி பார்த்துத் திருமணம் செய்யும் வழக்கம் இந்நாட்டை விட்டு அகல வேண்டும் என்பதையும், கலப்புத் திருமணங்கள் செய்து கொள்வோரை இச்சமுதாயம் ஏற்றுக் கொள்ள வேண்டும் எனவும் வலியுறுத்துகின்றார் அண்ணா. இக்கலப்புத் திருமணத்தை,

“நீர்ஒரு சாதி! நான் ஒரு சாதி!

ஆயினும் அன்பால் இருவரும் ஒருவர்”[54]

எனப் பாவேந்தர் பாரதிதாசனும் ஆதரித்துப் பாடுவர். 'பாமா விஜயம்' சிறுகதையில் அய்யரின் மகள் தன்னைக் காதலித்த வேறு சாதியைச் சார்ந்தவரைத் திருமணம் செய்து கொண்டு வாழ்கிறாள். அதேபோல 'பேரன் பெங்களூரில்' என்ற சிறுகதையிலும் புரோகிதரின் மகளாக வரும் ஏமலதாவும் வேற்றுச் சாதியைச் சார்ந்த ஆடவனைக் காதலித்துத் திருமணம் செய்து கொள்கிறாள். இச்சிறுகதையில், "காதலுக்கு ஜாதி ஏது! சந்தனுவின் சரசத்துக்குச் சொந்தமான சுந்தராங்கி மீன்பிடிப்போர் குலம். மச்சகந்தியே பிறகு பரிமளக்கந்தியாகிவிடவில்லையா! பெண்ணுக்கேற்றது ஆணுக்குந்தான்."[55] எனப் புராணங்களை உண்மையென நம்பி வாழும் மக்கள் புராணங்களில் வரும் இத்தகைய சீர்திருத்தக் கதைகளை மட்டும் மறந்து விடுகின்றனர் என்பதைச் சுட்டிக்காட்டி, சாதி மாறித் திருமணம் செய்துகொள்வது புராணங்களில் வரும் தெய்வங்களின் கதைகளிலேயே நடைபெற்று இருக்கின்றது என எடுத்துக்கூறுகிறார். இத்தகைய புராணக் கதைகளைக் காப்பாற்றி மக்கள் மத்தியில் பரப்பும் புரோகிதர் கூட்டமே இதை ஏற்காவிடில் சாதாரண அடித்தட்டு மக்கள் எவ்வாறு ஏற்றுக்கொள்வார்கள் என்ற சிந்தனையையும் ஊட்டுகிறார். அதனால் தான் முதலில் பார்ப்பனர்களின் இல்லங்களில் இத்தகைய மதிப்பு மாற்றத்தைத் தனது படைப்புகளில் உருவாக்குகின்றார். அவர்களின் மதிப்புகளில் ஒன்றாக அது விளங்கினாலே அதை சமுதாயத்தில் ஏற்றுக்கொள்ளப்படும் மதிப்பாக மாற்ற முடியும் என்ற நம்பிக்கை அண்ணாவிற்கு இருந்துள்ளது. அதன் காரணமாகவே இம்மதிப்பைப் பார்ப்பனர்கள் வீட்டு பெண்களின் கலப்பு மணத்தில் இருந்து தொடங்குகிறார். பார்ப்பனர்களின் தலைவராகக் கருதப்பட்ட இராசாசி கலப்பு மணம் பரவ வேண்டும். பரவினால்தான் இந்தத் தேசத்துக்கே விமோசனம் உண்டு. சாதி, குலம், மதம் முதலியவற்றாலே நாம் இனிப் பாழாகக் கூடாது என்று பேசியதாக அண்ணா தனது 'கலப்பு மணம்' என்ற நாடகத்தில் பதிவு செய்கிறார். கலப்பு மணம் பரவ வேண்டும் என்ற இராசாசியின் கூற்றைத் தனது இலக்கியத்தில் பதிவு செய்துள்ள தன்மையை ஆராய்கையில், பார்ப்பனர்களின் தலைவராக மதிக்கப்பட்ட ஒருவர் கலப்பு மணத்தை ஆதரிக்கும் பொழுது பிற பார்ப்பனர்களும் ஆதரித்துப் பின்பற்ற வாய்ப்புண்டு. அதன் காரணமாகக் கலப்பு மணம் சமுதாயத்தில் ஒரு மதிப்பாக நிலைபெறவும் வாய்ப்பாக அமையும் என்ற எண்ணத்தின் வெளிப்பாடு இந்நாடகமெனக் கருத இடமுண்டு. இதில்,

"கலப்பு மணம் ஓங்கவென்று கொட்டுமுரசே

காதல் மணம் வாழ்கவென்று கொட்டுமுரசே

பலத்த சாதிபேதம் போகக் கொட்டுமுரசே

பாரில் யாரும்ஒன்று சேரக் கொட்டுமுரசே"[56]

எனக் கலப்பு மணத்தின் பெருமையைப் பாராட்டுவர். இவற்றால் கலப்பு மணம் சமுதாயத்தில் நேர்மதிப்பாக மாறவேண்டும் என்னும் நோக்கில் அண்ணா தனது படைப்புகளைப் படைத்திருப்பது தெளிவாகும்.

## கைம்பெண் திருமணம்

கணவனை இழந்த பெண் 'கைம்பெண்' எனப்படுகின்றாள். கைம்பெண் என்றால் 'சிறுமை எய்தியவள்' என்று பொருள். கை என்ற சொல் சிறுமை என்ற பொருளைத் தருகின்றது என்பதனைக் 'கைக்கிளை' என்ற சொல்லும் உணர்த்தும். இழக்க இழக்கப் புதுப்பெண் தேடும் சமுதாய அமைப்பு ஆடவர்க்கு மட்டும் இருப்பதால் அவர்கள் சிறுமையுறுவதேயில்லை. எனவே கைம்பெண் என்ற பெண்பாலுக்குக் கையாண் என்ற

ஆண்பாற் சொல் வழக்கில் உருவாக்கப்படவில்லை. அதைப் போலவே விதவை என்ற பெண்பாற் சொல்லுக்கு இணையாக விதவன் என்ற ஆண்பாற்சொல் தமிழில் இல்லை. திருமணம் நடந்து கணவனை இழந்த விதவைகளுக்கு மறுமணம் அக்காலத்தில் மறுக்கப்பட்டு வந்துள்ளது. விதவைகள் அக்காலச் சமுதாயக் கட்டுபாட்டிற்கு உட்பட்டு வாழ்ந்து வந்தனர். விதவைகளுக்கென வரையறைகள் வகுக்கப்பட்டிருந்தன. இன்னும் சொல்லப்போனால் கணவனை இழந்த பெண்கள் கணவனை எரிக்கும்போது அந்நெருப்பிலே வீழ்ந்து தானும் உயிரைத் துறக்க வேண்டும். இதற்கு 'உடன்கட்டை ஏறுதல்' என்று பெயர். இவ்வாறு பெண்களுக்கு எதிரான கொடுமைகளைச் சமுதாய மதிப்புகளாகக் கருதிப் பின்பற்றி வந்துள்ளனர். இராசாராம் மோகன்ராய் போன்ற தலைவர்கள் உடன்கட்டை ஏறுதல் போன்ற கொடுமைகளுக்கு எதிராகப் போராடியதன் விளைவாக இன்று பெரும்பாலான இடங்களில் இப்பழக்கம் ஒழிக்கப்பட்டுள்ளது. இருப்பினும் விதவைப் பெண்களுக்கான மற்ற கொடுமைகளிலிருந்து அப்பெண்களைக் காப்பாற்றுவது என்பது அது அவர்களுக்கு நடைபெறும் மறுமணத்தினால் மட்டுமே முடியும் என்பதை நன்கு அறிந்த அண்ணா தனது படைப்புகளில் விதவைத் திருமணத்தை வலியுறுத்துகின்றார்.

அண்ணாவினுடைய காலக் கட்டத்திலும் விதவைத் திருமணம் என்பது மறுக்கப்பட்ட ஒன்றாகவே இருந்தது. கணவன் இறந்துவிட்டால் இளம்பெண் விதவைத் துன்பத்தை அனுபவிக்க வேண்டியது அவள் விதி என்று கருதும் மக்கள் இன்றும் இருக்கின்றனர். ஆயினும், பகுத்தறிவுப் பாதையில் நடைபயின்ற அண்ணா அவர்கள் தன்னுடைய படைப்புகளில் விதவைகளின் மறுமணத்தை நிகழ்த்தியும் வலியுறுத்தியும் உள்ளார்.

'பாமா விஜயம்' என்ற சிறுகதையில் வரும் கமலா ஒரு விதவை. புரோகிதரின் மகள். அவளுக்குச் சோதிடம் மூலம் பொருத்தம் பார்த்துத் திருமணம் செய்து வைத்தனர். கமலாவின் சாதகப் பலனை அவளது தந்தை சுப்பய்யரே கணித்தார். ஆனால் திருமணம் முடிந்து இரண்டு மாதத்திலேயே கமலா தன் கணவனை இழக்கின்றாள். இந்நிலையில் இக்கதையில் வரும் சரசாவிற்குத் திருமணம் செய்ய வேண்டி அவள் தாயாரிடம் பேசிக்கொண்டிருக்கும் போது அங்கு வந்த சரசா, புரோகிதரைப் பார்த்து தனது மகளின் சாதகத்தையே சரியாகக் கணிக்கத் தெரியாதவர் என் சாதகத்தை எவ்வாறு கணிப்பார் எனக் கேட்கின்றாள். அதற்கு சுப்பய்யர், "என்னமோ! நடந்தது நடந்துவிட்டது. என் மகள் கமலம், இப்போது ஏதோ, ஆண்டவனைத் துதித்துக் கொண்டு, சிவனே என்று காலந்தள்ளுகிறாள். அவள் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்"[57] என்று வருத்தத்துடன் கூறுகிறார். அவரின் கூற்றை ஆராயும்பொழுது விதவையான பெண்களுக்கு மறுமணம் செய்து வைப்பது பற்றி எண்ணிக்கூடப் பார்க்காத சமுதாய அமைப்பு முறை இருந்துள்ளதை அறியமுடிகின்றது. அண்ணாவின் காலக்கட்டத்திலும் இவ்வழக்கம் இருந்துள்ளதை இச்சிறுகதை உணர்த்துகிறது. ஆண் பெண் ஏற்றத்தாழ்வினையும் படம்பிடித்துக் காட்டுகிறார். ஒரு வயதான ஆடவன் எத்தனை பெண்களை வேண்டுமானாலும் மணக்கலாம். ஆனால் இளம் வயதில் கணவனை இழந்த பெண் மறுமணம் செய்து கொள்வதை ஏற்றுக்கொள்வதில்லை என்கின்ற வழக்கம் சமுதாயத்தில் ஊறிப்போன நடைமுறைகளில் ஒன்றாக விளங்குவதை அண்ணா எடுத்தியம்புகிறார். இதன் வாயிலாக இவ்வழக்கம் ஒழிய வேண்டும் எனவும், கணவனை இழந்த பெண்களுக்கும் மறுமணம் செய்து வைத்தல் என்பது சமுதாயத்தில் நேர்மதிப்பாக மலர வேண்டும் எனவும் கருதும் அண்ணாவின் எண்ணம் தெளிவாகும்.

கணவனை இழந்த பெண் மீண்டும் திருமணம் செய்து கொள்வதற்குச் சமுதாயத்தில் பல தடைகள் இருந்தன. மிக இளம் வயதிலேயே கணவனை இழந்திருந்தாலும் சிறு

வயதுதானே மீண்டும் திருமணம் செய்து வைக்கலாம் என்ற சிந்தனை அக்காலச் சமுதாயத்தில் தடை செய்யப்பட்ட சிந்தனையாகவே இருந்துள்ளது. கணவனை இழந்த பெண் சமுதாயத்தில் இருந்து பிரித்து வைக்கப்பட்ட பொருளாகவே கருதப்பட்டாள். குறிப்பாக இந்து மதத்தைப் பின்பற்றுபவர்கள் இதுபோன்ற சம்பிரதாயங்களைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றி வந்துள்ளனர். இதுபோன்ற சம்பிரதாயங்கள் நெடுங்காலந்தொட்டே சமுதாயத்தில் பின்பற்றி வரும் மதிப்புகளாக உள்ளன. கணவனை இழந்தவர்கள் தங்கள் முகத்தில் மஞ்சள் பூசிக்கொள்ள மாட்டார்கள், நெற்றியில் குங்குமம் இட்டுக் கொள்ளவும் மாட்டார்கள் என்ற சமுதாயத்தில் நிலவுகின்ற பழக்கவழக்கத்தை, 'அவள் முடிவு' என்ற சிறுகதையில், "அவள் மஞ்சளையும், குங்குமத்தையும் இழந்தவள்தான் ஆனால் அழகாகத்தான் இருந்தாள்."[58] எனக் கணவனை இழந்த பெண்ணைக் குறிக்கும் பொழுது அவள் விதவை என்பதை வெளிப்படையாக உணர்த்தாமல் சமுதாயத்தில் இருக்கின்ற பழக்கவழக்கங்களைக் கொண்டே அறிஞர் அண்ணா உணர்த்துவதை அறியமுடிகின்றது. திருமணத்திற்கு முன்பே பெண்கள் மஞ்சள், குங்குமம், பூ போன்வற்றைப் பயன்படுத்தி வருகிறார்கள். திருமணத்திற்குப் பின் பெண்கள் தாலியை மட்டுமே புதிதாகப் பெறுகிறார்கள். அதனால் கணவன் இறந்த பின் பெண்கள் தாலியை மட்டும் இழப்பதுதான் முறையாகும். அதைவிடுத்து சிறுவயதிலிருந்து பின்பற்றி வரும் பழக்கவழக்கங்களை தொடரக் கூடாது என்பது சரியான பழக்கமல்ல. இத்தகைய கண்மூடித்தனமான பழக்கவழக்கங்கள் சமுதாய மதிப்புகளிலிருந்து அகற்றப்பட்டு, அவர்களும் இச்சமுதாயத்தில் எல்லோரையும் போல சமத்துவமாக வாழ வழிகாணுமாறு சமுதாய மதிப்புகள் உருவாக வேண்டும் என்பதை இக்கதை உணர்த்துகின்றது.

விதவைகளுக்கு மறுமணம் என்பது சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாகக் கருதப்பட வேண்டும். "சமூகத்தால் குற்றவாளியாகக் கருதப்படும் அக்காதலர்கள், பின்னர் நேரில் வந்து வணங்கித் தண்டனை கேட்கும்போது, அவர் உள்ளம் துடிதுடித்தது. துக்கம் நெஞ்சை அடைத்தது. இவர்கள் தூய வாழ்வுக்கு நாம் எமனா? சே! அதினிலும் கொடியது வேறென்ன இருக்கிறது? இவர்கள் சந்தோஷ வாழ்வைக் கண்டுகளிக்கச் சமூகம் நம்மைத் தடுத்துவிட்டாலும் நாம் இவர்கள் வாழ்வைத் தடுக்கக் கூடாது என்ற முடிவுக்கு வந்தார்."[59] என்ற செய்தியின் மூலம் விதவைத் திருமணத்தைப் பெண்ணின் தந்தை ஏற்றுக்கொள்வதை இக்கதையில் காணமுடிகின்றது. இன்று பெண்ணின் தந்தை ஏற்றுக்கொண்ட ஒன்றைப் பின்னாளில் சமுதாயம் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற கருத்தை அண்ணா இக்கதையில் வலியுறுத்துகின்றார்.

'சந்திரோதயம்' என்னும் நாடகத்தில் திருமணத்திற்கு முன் தன்னைக் காதலித்தவனை விட்டுக் குடும்பச் சூழல் காரணமாக வேறொருவனைத் திருமணம் செய்து கொண்ட பெண் விதவையாகின்றாள். அப்பெண் காதலித்தவரைத் திருமணம் செய்து கொள்ள அவளின் பெற்றோரும் சமுதாயக் கட்டுப்பாடும் காரணமாக இருந்தன என்பதனை, "பெண்கள் திருமணத்தை பெற்றோர்கள்தானம்மா நடத்த வேண்டும். உன் தாய் கல்யாணம் - உன் பாட்டி கல்யாணம் எல்லாம் பரம்பரை பரம்பரையாகப் பெற்றோர்கள் பார்த்து அவர்களுக்குப் பிடித்தமானவர்களுக்குத்தான் நடத்தி வந்திருக்கின்றார்கள்."[60] என்ற கூற்று உணர்த்துகின்றது. பெற்றோர் பார்த்த ஆடவனைத் திருமணம் செய்து கொண்ட அப்பெண் கணவனை இழக்கிறாள். தான் காதலித்த சாம்பசிவம் நெடுநாட்கள் கழித்து சந்திராவைக் காண வருகின்றான். அவளின் நிலையை உணர்ந்த அவன் அவளை மறுமணம் செய்து கொள்ளுமாறு கேட்கிறான். வைதீக சமயத்தைச் சார்ந்த என் பெற்றோர் இந்தத் திருமணத்திற்குச் சம்மதம் தரமாட்டார்கள் என்பதைக் கூறுகிறாள். இதிலிருந்து விதவைக்குத் திருமணம் செய்வதை அக்காலச் சமுதாயம் ஏற்றுக்கொள்ளாத எதிர்மறை

மதிப்பாகக் கருதியதை அறியமுடிகின்றது. இவ்வெதிர்மறை மதிப்பு உடன்பாட்டு மதிப்பாக மாற வேண்டும் என்பதை இந்நாடகம் வாயிலாக அண்ணா வலியுறுத்துகின்றார். 'காதல் ஜோதி' என்ற நாடகமும் விதவைத் திருமணம் இச்சமுதாய மதிப்பாக உருவாக வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துவதாக அமைந்துள்ளது. "நாட்டின் மீது பூட்டப்பட்டுள்ள பழைய விலங்குகள் நொறுக்கப்பட வேண்டும். புதுக்கருத்துக்கு இடமளிக்க வேண்டும், சுகுணா-தங்கவேல் திருமணம் இதற்குத் துணை செய்யும். வாழ்க மணமக்கள்! வளர்க சீர்திருத்தம். மலர்க புது சமுதாயம்!"[61] என்ற கூற்று விதவைக்கு மறுமணம் என்பது சமுதாய மதிப்பாக மலர வேண்டும் என்ற அண்ணாவின் எண்ணத்தைப் பிரதிபலிக்கின்றது.

அண்ணாவின் படைப்புகளில் வரும் விதவை மறுமணம் அனைத்தும் காதல் திருமணங்களாகவே உள்ளன. ஆண் பெண்ணின் காதலையே ஏற்றுக்கொள்ளாத இச்சமுதாயம் விதவைப் பெண்ணின் காதலை மட்டும் ஏற்றுக்கொள்ளுமா? என்ற சிந்தனை வெளிப்பாட்டின் காரணமாகவும், விதவையின் காதல் திருமணம் இச்சமுதாயம் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய மதிப்புகளில் ஒன்றாக மாற வேண்டும் என்ற நோக்கத்திற்காகவும் அண்ணா தனது படைப்புகளில் இதனைப் படைத்துக்காட்டுகிறார். மேலும் விதவை நிலை அடைந்த பெண்ணின் மனக்குமுறலைப் பல படைப்புகளில் எடுத்துக்காட்டியுள்ளார். "நான் விதவையானேன். சகுனத் தடையானேன். சமுதாயத்தின் சனியனானேன். பெற்றோரின் கண்களில் நீர் வழியும்படியான நிலைபெற்றேன். . . . . . என் இளமையும் எழிலும் போகவில்லை. என் கண்ணொளி போகவில்லை. நான் அபலையானேன். ஆனால் அழகியாகத் தான் இருந்தேன். தாலி இழந்தேன். ஆனால் காய்ந்த தளிர் போலிருந்தேனேயன்றி சருகாக இல்லை, குங்குமமிழந்தேன். ஆனால் பொட்டிடாத என் நெற்றியும் பொலிவுடன்தான் இருந்தது. பார்சிக்காரிகள் பொட்டிடுவதில்லை. . . . வாடாத பூவாக இருந்தேன். ஆனால் விஷவாடை உள்ள மலர் என்று உலகம் என்னைக் கருதிற்று. அது என்னுடைய குற்றமா? எனக்கு மணம் செய்வித்து விடவேண்டும் என்று துடித்தவர்கள், இன்று எனக்குத் துணையாகவா இருந்தார்கள்? ஏதோ அவள் எழுத்து என்று கூறிவிட்டு, என்ன செய்யலாம் கொடுத்து வைக்காதவர்கள் என்று கூறிவிட்டு, அவரவர்கள் காரியத்தை அவரவர்கள் கவனிக்கத் தொடங்கினார்கள்."[62] எனக் 'குமாஸ்தவின் பெண்' குறும்புதினத்தில் வரும் காந்தாவினுடைய இக்கூற்று மகளிரின் விதவை நிலையையும், அக்காலச் சமுதாயத்தில் விதவையின் அடையாளங்களையும், அதனை ஏற்றுக்கொண்ட சமுதாயத்தையும், மகளிரின் பொதுவான துயரங்களையும் பிரதிபலிக்கின்றது. விதவை மகளிரின் அடையாளங்களாக உள்ள இதுபோன்ற பழக்கவழக்கங்கள் மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட மதிப்புகளாக விளங்குகின்றன என்பதையும் அறியமுடிகின்றது. இக்காலத்தில் இம்மதிப்புகளில் மாற்றம் நிகழ்ந்திருக்கின்றன. வெள்ளைப் புடவை தான் கட்ட வேண்டும், வீட்டை விட்டு வெளியே வரக்கூடாது, பூ சூடக் கூடாது போன்ற பழக்கவழக்கங்கள் பெரும்பாலும் மாறியுள்ளன. இத்தகைய பழைய மதிப்புகள் மாற்றம் பெற வேண்டும் என்பதே அண்ணாவின் நோக்கமாகும்.

'இவர்கள் குற்றவாளிகளா?', 'பாமா விஜயம்', 'பேரன் பெங்களூரில்', '1938-1940 ஒரு வசீகர வரலாறு', 'திறப்பு விழா', 'கபோதிபுரத்துக்காதல்' போன்ற படைப்புகளின் வாயிலாக அண்ணா விதவை மறுமணத்தை வலியுறுத்துகின்றார்.

## பொருந்தா மணம்

மனம் ஒன்றி வாழ்வதே வாழ்க்கை. அவ்வாழ்க்கை கிடைக்கப் பெற்ற அனைவரும் எக்குறையும் இல்லாமல் வாழ்வார்கள் என்பதில் மாற்றுக்கருத்து இல்லை. வசதி

வாய்ப்புகளைக் கொண்டு வாழ்க்கையின் மகிழ்ச்சியைக் கணக்கிட முடியாது. மனதைக் கொண்டே கணக்கிட வேண்டும். அவ்வகையில் யாருக்கும் வாழ்வு மகிழ்ச்சிகரமான ஒன்றாக விளங்க வேண்டுமானால் திருமணம் செய்து கொள்ளும் இருவரின் மனதும் ஒத்துப் போக வேண்டும். வாழ்க்கை என்பது மாட்டுவண்டி என்று எடுத்துக்கொண்டால், அவ்வண்டியை இழுத்துச் செல்லும் மாடுகள் ஆணும் பெண்ணும் ஆவர். வண்டியை இழுத்துச் செல்லும் இரண்டு மாடுகளும் ஒன்றையொன்று புரிந்து செயல்பட்டால் தான் வண்டி ஒழுங்காக வீடு வந்து சேரும். அதேபோல தான் வாழ்க்கையும் கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் புரிந்து செயல்பட்டால் தான் வாழ்க்கை என்னும் வண்டியை ஓட்ட முடியும். அதற்குத் திருமணத்திற்கு முன் பெண்ணுக்கு ஆணையும், ஆணுக்குப் பெண்ணையும் பிடித்திருக்க வேண்டும். செல்வம் இருக்கின்றது என்பதாலேயே வயதான ஒருவருக்கோ அல்லது மனதிற்குப் பிடிக்காத ஒருவருக்கோ பெண்ணைத் திருமணம் செய்து வைத்தால் அது அவர்களின் வாழ்வை நாசமாக்கிவிடும் என்பதில் மாற்றுக்கருத்து இல்லை.

பொதுவாக, திருமணம் முடிவு செய்வதற்கு மணப்பெண்ணின் கருத்தைக் கேட்கும் வழக்கம் இச்சமுதாயத்தில் இல்லை. இதை அண்ணாவின் பல படைப்புகளில் காணமுடிகின்றது. பெண்ணை யாருக்கு வேண்டுமானாலும், எத்தனையாவது தாரமாகவும், எத்தனை வயதுக்காரனுக்கும் மணம் முடித்து வைக்கும் வழக்கமே மேலோங்கி இருந்துள்ளது. இவ்வழக்கம் அக்காலச் சமுதாயத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு மதிப்பாகவே கருதப்படுகிறது. பொருந்தா மணத்தின் அவலங்களை விவரிப்பதாகப் 'பாவையர் பயணம்' என்னும் நாடகம் விளங்குகிறது. வயோதிகனுக்கு வாழ்க்கைப்படும் பெண்ணின் துயரத்தை விளக்குவதாய் இந்நாடகத்தை அண்ணா படைத்துக்காட்டியுள்ளார். "கிழவனுக்கா என்னை மணமுடிக்கத் திட்டமிடுகிறீர்கள் இதற்கு ஒரு போதும் சம்மதிக்கமாட்டேன் என்று பாவை எதிர்த்துப் பேசினால், நிலைமை மேலும் மோசமாகிவிடும். வேறென்ன, பெண்ணின் கண்ணீருக்காகப் பயந்து, எந்தப் பெற்றோர்கள் தங்கள் திட்டத்தை மாற்றிக் கொண்டிருக்கிறார்கள்."[63] என்ற அண்ணாவின் கூற்று அக்காலச் சமுதாயத்தை மட்டுமல்லாது இக்காலச் சமுதாயத்தையும் பிரதிபலிப்பதாக அமைந்துள்ளது. இன்றும் பெரும்பாலான திருமணங்கள் பெண்களின் விருப்பமில்லாமலேயே நடைபெற்றுக்கொண்டிருப்பதை அன்றாடச் செய்திகள் வழி அறியமுடியும். இவ்வழக்கத்தை இச்சமுதாயத்தில் இருந்து அகற்றிப் பெண்ணின் மனதிற்கு ஏற்றவாறும் வயதுக்கு ஏற்றவாறும் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்பதை அண்ணா வலியுறுத்துகின்றார். அண்ணாவின் 'வாலிப விருந்து', 'காமக்குரங்கு', 'கன்னி விதவையான கதை', 'சுடுமூஞ்சி', 'கபோதிபுரத்துக் காதல்' போன்ற கதைகள் பொருந்தா மணத்தைச் சித்திரித்துக் காட்டுவதாக உள்ளன. இவைகளில் பொருந்தா மணத்தினால் உண்டாகும் சிக்கல்களைக் காட்டிப் பொருந்தா மணம் கூடாது என்ற கருத்தை வலியுறுத்துகிறார்.

### பலதாரமுறை

ஒரு ஆண் தன் மனைவி உயிருடன் இருந்தாலும் இல்லாவிட்டாலும் மற்றொரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளலாம். இதனை இச்சமுதாயம் ஏற்றுக்கொண்டுள்ளது. பல பெண்களைத் திருமணம் செய்து கொண்டு வாழ்வது என்பது அக்காலத்தில் ஒரு மதிப்பாக இருந்து வந்துள்ளது. இதனை, "ஏக காலத்தில் ஒரு மனிதன் இரண்டு மூன்று ஸ்திரீகளை விவாகம் செய்து கொள்ளலாம் என்ற விதி முற்காலத்திலே இருந்ததாகத் தெரிகின்றது. இக்காலத்திலும் மேற்கண்ட விதி முற்றிலும் மாறிவிட்டதாகத் தோன்றவில்லை. இது நமது தேசத்திற்கு பெரிய அவமானமென்று நாம் உறுதியாக நம்புகின்றோம்."[64] என்ற பாரதியின் கூற்றுப் புலப்படுத்துகின்றது. சமீன்தார்கள்,

மிட்டாதாரர்கள், செல்வந்தர்கள் போன்றோர் தங்கள் வசதிக்கேற்பத் திருமணங்களைச் செய்து கொண்டனர். இத்தகைய திருமணங்களை அண்ணாவின் படைப்புகளில் காணமுடிகின்றது. ‘வாலிப விருந்து’, ‘சுடுமூஞ்சி’ போன்ற சிறுகதைகளில் இரண்டாந்தாரமாகத் திருமணம் செய்து கொள்ளும் கதாபாத்திரங்களைப் படைத்துக்காட்டியிருப்பது அன்றைய சமுதாயத்தைப் பிரதிபலிப்பதாக இருக்கின்றது. ‘வள்ளிநாயகியின் கோபம்’ என்ற சிறுகதை இருதார மணத்தை எதிர்த்து இருதார மணத் தடைச் சட்டம் கொண்டு வரப்பட்டதை மையமாக வைத்து எழுதப்பட்டது. இதில் இருதார மணத்திற்குத் தடை விதிக்கும் சட்டத்திற்கு முருகன் மீது வள்ளி கோபம் கொள்வதாக அமைக்கப்பட்டிருக்கும். முதல் மனைவி உயிருடன் இருக்கும் போது இரண்டாவதாகத் திருமணம் செய்து கொள்வது செல்லாது என இந்தத் தடைச்சட்டம் கூறுகின்றது. இதனால் ஆத்திரம் கொண்ட முருகனின் இரண்டாம் மனைவி வள்ளி முருகனைக் கடுமையாகச் சாடுகிறாள். இருதாரத் தடைச் சட்டம் கொண்டு வந்ததை ஆராயும்போது இருதார முறை சமுதாயத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு மதிப்பாக இருந்து வந்தள்ளதை தெரிந்துகொள்ளமுடிகின்றது. இந்தத் தடைச்சட்டத்தால் இத்தகைய மதிப்பு மறையும் நிலை உருவாகும். இருப்பினும் இன்றும் இம்மதிப்பு சமுதாயத்தில் இருந்து கொண்டுதான் இருக்கிறது. இந்த இருதார முறை பெண்களுக்குச் சிக்கல்களை உருவாக்குவதாலும், இம்முறையைச் சமுதாய மதிப்பாகக் கருதக்கூடாது என்ற எண்ணத்தை இத்தடைச்சட்டம் நிறைவேற்றியிருப்பதாலும் அதனை வரவேற்கும் விதத்தில் அண்ணா இச்சிறுகதையை நகைச்சுவைத் ததும்பப் படைத்துள்ளார். இதன் வாயிலாகப் பலதார முறை என்ற மதிப்பு ஒழிந்து ஒருதார முறை மதிப்பே நிலைக்க வேண்டும் என்ற சிந்தனையை அவரின் படைப்புகள் வெளிப்படுத்துகின்றன. ‘பாவையின் பயணம்’ நாடகத்தில் மன்னன் அமலாதித்தியர் ஏற்கனவே ஐந்து பெண்களை மணந்து கொண்டு யாருக்கும் குழந்தைப் பேறு இல்லாததால் ஆறாவதாகச் சித்திரப்பாவை என்ற பெண்ணையும் மணந்து கொள்கின்றான். இதில் பலதாரமுறை குறித்து அண்ணா குறிப்பிட்டுள்ளார். பலதாரமுறை தவறு எனக் கூறுவோரிடம், "வயோதிகனுக்கு இளம் வனிதை வாழ்க்கைப்படுவது முறையற்ற காரியமல்ல என்பதற்கு: தசரதன் கைகேயியைக் கலியாணம் செய்து கொண்டாரல்லவா."[65] என்பதை எடுத்துக்காட்டி, இராமாயணத்திலேயே பலதாரமுறையை அங்கீகரித்துள்ளதால் இப்பழக்கம் எந்த வகையிலும் தவறானதல்ல என விளக்கம் தருவர் வயோதிகத் திருமணத்தை ஆதரிப்போர். இப்படிப்பட்டவர்களை அண்ணா மிகக் கடுமையாகச் சாடுகின்றார். அவர் பலதாரமுறையினால் பாதிக்கப்படும் பெண்களின் வாழ்க்கையைத் தனது படைப்புகளில் படம்பிடித்துக்காட்டுகின்றார். வாழ்வில் ஏதோ ஒரு சூழலில் தாரமாக ஆகின்ற பெண்களின் திருமண வாழ்க்கையில் இன்பத்தை நுகரமுடியாமல் படும் துன்பத்தை மிகத் தெளிவாக விளக்கிக்காட்டியுள்ளார் அண்ணா.

## வைப்பாட்டி முறை

வைப்பாட்டி வைத்துக்கொள்ளும் ஒரு வாழ்க்கை முறை அக்காலச் சமுதாயத்தில் பெரும்பாலானவர்களால் கடைபிடிக்கப்பட்ட ஒரு பழக்கமாக இருந்தது. இப்பழக்கம், அக்காலச் சமுதாயம் ஏற்றுக்கொண்ட மதிப்புகளில் ஒன்றாக விளங்கியது. சமீன்தார், மிட்டாதார், மிராசுதார், சீமான்கள், கோவில் குருக்கள் போன்றோர் வைப்பாட்டி வைத்திருந்தவர்களில் முக்கியமானவர்கள். இவர்கள் அனைவரும் சமுதாயத்தில் உயர்ந்த நிலையில் இருந்தவர்கள். ஆதலால் இவர்களின் இப்போக்கை யாரும் கண்டிக்கத் துணியவில்லை. அவர்களே சமுதாயத்தின் மதிப்புகளை உருவாக்குபவர்களாகவும் இருந்தனர். வைப்பாட்டிகளாக இருக்கும் பெண்களை வயது காரணமாக சில காலம்

கழித்துப் புறக்கணிக்கும் நிலையில் அப்பெண்களின் வாழ்வு பாதிக்கப்படுகிறது. இதனால் அவர்கள் விபச்சாரத்தில் ஈடுபட நேரிடுகிறது. சமுதாயத்தில் விபச்சாரம் தோன்றுவதற்கான காரணிகளுள் ஒன்றாக இதுபோன்ற மதிப்புகள் விளங்குகின்றன. இத்தகைய முறை மாற வேண்டும். விபச்சாரத்தை உருவாக்கும் வைப்பாட்டி முறை ஒழிக்கப்பட வேண்டும். சமுதாயத்தில் இருந்து இப்பழக்கத்தை நீக்க ஒருவனுக்கு ஒருத்தி என்ற தமிழரின் கோட்பாட்டை வாழ்வில் ஏற்றுச் செயல்பட வேண்டும். இக்கருத்தை அண்ணா தனது படைப்புகளில் விளக்கியுள்ளார். "விபச்சாரத்தால் வரும் கேடு, சமூகத்தில் அதனால் விளையும் ஆபத்து என்பதைப் பற்றிப் பலர் பேசினர். அவர்களிலே அநேகர் அன்றிரவே தமது வைப்பாட்டிமாரிடம் விபச்சாரத்தின் கேட்டைப் பற்றியும், அதைத் தாங்கள் ஒழிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டதைப் பற்றியும் பேசுவார்கள் என்பதென்னவோ நிச்சயம்."[66] என்ற அண்ணாவின் கருத்து அன்றைய சமுதாயத்தில் உயர்குடியில் இருந்த பெரும்பாலானவர்களுக்கு வைப்பாட்டி வைத்துக் கொள்ளும் பழக்கம் இருந்துள்ளதைக் காட்டுகின்றது. இம்முறையை அக்காலச் சமுதாயம் ஏற்றுக்கொண்டு இருந்தது. வைப்பாட்டி வைத்துக்கொள்வதைத் தன்னுடைய செல்வாக்கின் அடையாளமாகச் செல்வந்தர்கள் கருதினர். வைப்பாட்டி இல்லாத செல்வந்தரை மதிக்காத நிலையும் அக்காலச் சமுதாயத்தில் இருந்தது. இத்தகைய சூழலில் விபச்சாரத்தால் ஏற்படும் தீமைகளை அண்ணா தனது இலக்கியங்களில் சாடிப்பதிவு செய்துள்ளார். விபச்சாரம் இல்லாத சமுதாயத்தை உருவாக்க அல்லது வைப்பாட்டி முறையை ஒழிக்கத் தனது பேச்சுகள், எழுத்துகள் மூலமும் பாடுபட்டுள்ளார். விபச்சாரம் இச்சமுதாயத்தில் இருந்து அகற்றப்பட வேண்டிய ஒரு மதிப்பாக அண்ணாவின் படைப்புகளில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

## தாசி முறை

தேவதாசி முறையை ஒழிக்க அண்ணா தனது இலக்கியங்களில் அதன் கொடுமைகளை விவரித்து எழுதியுள்ளார். விபச்சாரம், தாசிமுறை போன்றவை இச்சமுதாயத்தில் இருந்து அகற்றப்பட வேண்டிய மதிப்புகளாக அண்ணா கருதினார். அதன் விளைவாக முகிழ்ந்தவையே அண்ணாவின் பல படைப்புகள். அக்காலத்தில் பெண்களைக் கோயிலுக்குச் சேவை செய்யக் கொடுக்கும் பழக்கம் இருந்தது. இப்பழக்கம் சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டுப் பின்பற்றப்பட்டு வந்தது. இவ்வாறு உள்ள பெண்கள் தேவதாசிகள் என்றழைக்கப்பட்டனர். இவர்கள் கோயிலைச் சுத்தம் செய்வது, வழிபாட்டுக்குத் தேவையான பொருட்களைத் தயார் செய்வது போன்ற கோயில் சார்ந்த பணிகளைச் செய்து வந்தனர். பின்னாளில் கோவில் தர்மகர்த்தா, பூசாரி, மிட்டாமிராசு போன்றவர்களுக்கு இன்பம் அளிக்கும் இழிநிலைக்குத் தள்ளப்பட்டனர். இதுவே அவர்களது தொழிலாகவும் வாழ்வாதாரத்தைப் பெறுவதற்கான வழிமுறையாகவும் பின்பற்றப்பட்டது.

தேவதாசி முறை சமுதாயத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட பழக்கமாக இருந்துள்ளது. "காலை எட்டு மணிக்குக் கடைக்கு வருவதும், மாலை ஆறு மணிக்குக் கிளம்பி, பூமாலை வாங்கிக் கொண்டு புவனேஸ்வரி கோயிலுக்குப் போய், அங்கு வைத்தீஸ்வர ஐயரிடம் விபூதிப் பிரசாதம் வாங்கிக் கொண்டு, தாசி வேதம் வீட்டுக்குப் போய் அங்கு எட்டு, ஒன்பது மணி வரையில் கொஞ்சம் நிம்மதியாய் இருந்து விட்டுப் போவார்."[67] என்ற செய்தித் தாசிகளைச் செல்வந்தர்கள் தனக்குச் சொந்தமாக வைத்திருப்பது என்பது நடைமுறைப்பழக்கமாக இருந்திருப்பதைத் தெளிவுபடுத்துகின்றது. இப்பழக்கத்தை ஒழிக்க இக்குலத்தைச் சார்ந்த பெண்களும் திருமணம் செய்து கொண்டு தங்களின் வாழ்வை அர்த்தமுள்ளதாக்கிக் கொள்ள வேண்டும் என்பதை அண்ணா வலியுறுத்துகின்றார். தாசிக் குலத்தைச் சார்ந்த பெண்களைப் பொதுவாக யாரும் திருமணம் செய்து கொள்ள

முன்வரமாட்டார்கள். இதனால் இந்தக் குலத்தைச் சார்ந்தவர்கள் இத்தொழிலைத் தவிர வேறு தொழிலில் ஈடுபடமுடியாத சிக்கலும் இருந்தது. இச்சிக்கலை 'என் வாழ்வு' என்னும் புதினம் எடுத்துகாட்டுவதாய் அமைந்துள்ளது. இப்புதினத்தில் தாசியர் குலப் பெண்ணான விமலாவிற்கு அக்குலப் பெண்களின் வாழ்வு பிடிக்காமல் திருமணம் செய்து கொண்டு வாழ விரும்புகின்றாள். தன் எதிர் வீட்டுக்கு வரும் முத்து என்பவனைக் காதலிக்கிறாள். அவனும் அவளைக் காதலித்தான். ஆனால் அவன் விமலாவின் அழகைத்தான் விரும்பினான் உள்ளத்தை அல்ல என்பதை அறிந்த விமலா மிகவும் துயருறுகின்றாள். அதே சமயத்தில் அவள் தாசியர் குலத்தைச் சேர்ந்தவளாக இருப்பதாலும் அவளை அவன் திருமணம் செய்து கொள்ள முடியாது என மறுக்கின்றான். ஏற்கனவே காதல் தோல்வியால் ஆண்களின் மனநிலையை அறிந்திருந்த அவளது அக்கா கமலா, தங்கைக்கு ஆறுதலாக இருக்கின்றாள். "விமலா! விஷயம் தெரியாமல் வீணாக வேதனைப்படுகிறாய். தாசிகளை அனுபவிக்கத்தான் அவர்களெல்லாம் விரும்புவார்களேயொழிய, கலியாணம் செய்து கொள்ள மாட்டார்கள்."[68] எனக் கூறும் கமலாவின் மொழிகள் தாசியர் குலத்தின் மீது இச்சமுதாயம் கொண்டிருந்த எண்ணத்தைப் பிரதிபலிக்கின்றது. தாசியர் குலம் என்றால் அவர்கள் அத்தொழிலை விட்டு வேறு தொழிலில் ஈடுபடக்கூடாது என்பதே மதிப்பாக இருந்தது. இத்தகைய மதிப்புகள் மாற வேண்டும் அல்லது மறைய வேண்டும் என அண்ணா தம் படைப்புகளில் வலியுறுத்தியுள்ளார்.

## அண்ணாவின் படைப்புகளில் இரட்டை மதிப்புகள்

மனிதர்கள் சிலர் அடுத்தவர்க்கு ஒரு நியாயம் தனக்கு ஒரு நியாயம் என்ற கொள்கையோடு வாழ்ந்து வருகின்றனர். இம்மனிதர்கள் தனக்கு நன்மை உண்டாகுமானால் பிறர் செய்யும் தவறையும் சரியென எண்ணிச் செயல்படுவர். அதுவே தனக்குத் தீமை என்றால் பிறரின் செயல்களைத் தவறு என எண்ணுவர். இவ்வாறு ஒரே மனிதர் சூழலுக்கேற்ப இருவேறு விதமான முடிவுகளை உயர்வானதாகக் கருதும் போக்கு இரட்டை மதிப்புகள் எனப்படும். இத்தகைய மனிதரை அண்ணா 'பேரன் பெங்களூரில்' என்னும் சிறுகதையில் புரோகிதர் புண்ணியகோடீஸ்வர கனபாடிகள் என்ற பாத்திரத்தின் மூலம் படைத்துக்காட்டுகிறார். இக்கதையில் புரோகிதரைத் தேடி வரும் ஒருவன் தன்னைக் காட்டிலும் உயர்ந்த சாதிப் பெண்ணை மணந்து கொள்ள சாத்திரம், சம்பிரதாயங்கள் குறுக்கே இருப்பதைக் கூறுகிறான். இதற்குப் புரோகிதர் அனைத்திற்கும் பிராயச்சித்தம் உண்டு அதனை நான் கவனித்துக் கொள்கிறேன் திருமணத்தைச் சிறப்பாக நடத்துமாறு கூறி அனுப்புகிறான். பின்னர் மணமேடையில் தன் மகள் தான் மணப்பெண் என அறிந்ததும் தன் குலத்தைக் கெடுத்துவிட்டாள் என அலறுகிறார். பிறருக்கு என நினைத்த பொழுது அதனைச் சரிசெய்துவிடலாம் என்றவர், இச்சூழல் தனக்கு வந்தவுடன் அதனை எதிர்க்கும் இரட்டை நிலையை இக்கதையில் அண்ணா காட்டுகிறார்.

'கலப்பு மணம்' என்னும் குறும்புதினம் கலப்பு மணத்தைப் பற்றி ராஜாஜி பேசிய பேச்சை அடிப்படையாகக் கொண்டு அண்ணாவால் எழுதப்பட்டது. இக்குறும்புதினத்தில் கலப்பு மணத்தை ஆதரித்து ராஜாஜி மும்பையில் நடைபெற்ற பெண்கள் மாநாட்டில் பேசியதை வைதீகச் சமயத்தைச் சார்ந்தோர் வெகுவாகப் பாராட்டினர். ஆனால் இதே கருத்தை வலியுறுத்திப் பல ஆண்டுகளாகப் பேசி வரும் பெரியாரைக் கடவுளை எதிர்க்கிறார், சாத்திரங்களைப் பொய்யாக்குகின்றார், கட்டுப்பாடுகளைச் சிதைக்கிறார் என அவர்மீது பழிசுமத்தினர். இதனை, "எந்தக் கலப்பு மணப் பிரசாரத்துக்காக இன்று நீர் ஆச்சாரியாரைப் புகழ்ந்து, என்னையும் புகழும்படிக் கூறுகிறீரோ, அதே பிரசாரத்துக்காகப் பெரியாருக்குக் கல்லடி! ஆச்சாரியாருக்கோ மலர்மாலை!!"[69] என்ற செங்குட்டுவனின் கூற்று

உணர்த்தும். தங்கள் சமயத்தைச் சார்ந்தவர் சீர்திருத்தத்தைப் பற்றிப் பேசினால் அவரைக் கொண்டாடுவதும், பிறர் பேசினால் அவரைத் தூற்றுவதுமான இரட்டை வேடமிடும் மனிதர்களை அண்ணா இக்குறும்புதினத்தில் படைத்துள்ளார்.

சூதாட்டம் நடத்துபவரே சூதாட்டத்தில் ஈடுபடுபவனைக் கண்டிக்கும் நிலையை சூதாடி என்ற சிறுகதையில் அண்ணா படைத்துக்காட்டியுள்ளார். இதில் வரும் முத்துசாமி ஐயர் சூதாட்டத்தை நடத்துபவர். இவரிடம் வேலை பார்க்கும் மகிழுந்து ஓட்டுநர் மோசஸ் சூதாட்டத்தில் ஈடுபடுபவன். இவனிடம், "மோசஸ்! ஒரு விஷயம் கேள். சூதாடி என்னடா சம்பாதிக்க முடியும். இல்லை, பணமே அதிலே கிடைக்கிறதுன்னே வைச்சிக்கோ. சூதாடிப் பிழைக்கிறது ஒரு பிழைப்பாகுமா - மோசஸ்?. . ."[70] எனச் சூதாட்டத்தின் தீமைகளைப் பற்றி முத்துசாமி ஐயர் கூறுவது அவரது இரட்டைத்தன்மையை எடுத்தியம்புகின்றது.

'உடை போட்டதும்' என்ற சிறுகதையில் காவலர் பொன்னுரங்கம் வீட்டில் தன் குழந்தையை அடித்ததற்காக மனைவி மீது கோபம் கொள்கிறார். என்ன தவறு செய்தாலும் அன்பாகப் புத்திமதி கூறித் திருத்த வேண்டுமே தவிர அடிக்கக்கூடாது என அறிவுரை கூறுகிறார். அதே பொன்னுரங்கம் காவல்நிலையத்தில் சிக்கியக் குற்றவாளியை இரக்கமில்லாமல் அடித்துத் துன்புறுத்துவதோடு, "இதுகளா? திருந்தும்னு எண்ணிக்கிட்டு உபதேசம் செய்யப் போறாயா? பைத்யம்! இதுகளை ஈவு இரக்கம் பார்க்காமே கொல்லணும்"[71] எனக் கூறுகிறார். பொன்னுரங்கத்தின் இக்கூற்றின் மூலம் வீட்டில் வெளிப்பட்ட இரக்கக் குணம் காவல்நிலையத்தில் வெளிப்படவில்லை என்பதைக் காட்டுகிறார். உடை மாறியதும் மனிதர்களுடைய உள்ளமும் உரையும் மாறுகின்றன என்பதனை இச்சிறுகதை வாயிலாக அண்ணா புலப்படுத்தியுள்ளார்.

## அண்ணாவின் படைப்புகளில் மதிப்புப் போலிகள்

ஒரு சிலருக்கு சில மதிப்புகள் ஏற்காதனவாக அல்லது பேணமுடியாதனவாக உள்ள போதிலும், அதை அவர் ஏற்கும் போது சிக்கல்களைச் சந்திக்க நேரிடும். ஆனாலும் சமுதாயத்தில் தனக்கு அம்மதிப்பு தேவையாகும் போது, பேணப்படும் அப்பயனிலி மதிப்பு மதிப்புப் போலி எனப்படும். சிலர் தாம் ஏழ்மையில் வாடும் போது தன்னைச் சுற்றியுள்ளவர்கள் மதிக்கவேண்டும் என்று அவசியமற்ற ஆடம்பரப் பொருட்களைப் பயன்படுத்துபவர்களை மதிப்புப் போலிகளுக்கு உதாரணமாகக் கூறலாம்.

"மழித்தலும் நீட்டலும் வேண்டாம் உலகம்

பழித்த தொழித்து விடின்"[72]

எனும் குறள் கூறுவது போல், உலகில் அறிவுடையவர்களால் வெறுக்கப்படுகின்றனவற்றைத் தாமும் வெறுத்து ஒதுக்கவேண்டும். அதை விடுத்து புறத்தில் தவக்கோலம் பூணுவது, மொட்டை அடிப்பது, நீண்ட தாடியுடன் முனிவர் என சொல்லிக்கொண்டு, தீய செயல்களில் ஈடுபடுவது போன்றவை மதிப்புப் போலிக்கு உதாரணமாகும். அவ்வகையில் அறியாமையின் காரணமாகப் பின்பற்றப்படும் மூட நம்பிக்கைகள், மடாதிபதிகளின் போலித்தன்மை, உயிர்க்கொலை பாவம் என்று தெரிந்தும் அதனைப் பின்பற்றுவது ஆகியன அண்ணாவின் படைப்புகளில் சித்திரிக்கப்படும் மதிப்புப் போலிகளாகும்.

## மூட நம்பிக்கைகள்

"அறியாமையின் அடிப்படையில் உருவாவதும், சான்று கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் ஒன்றை நம்புவதும், காரணத்திற்கும் காரியத்திற்கும் இடையே உள்ள

உண்மையான தொடர்பை எண்ணாமல் இருப்பதும், பொருளை விட்டு ஆற்றலை நம்புவதும், அல்லது ஆற்றலை விட்டுப் பொருளை மட்டும் நம்புவதும், எண்ணத்தை, நோக்கத்தை, குறிக்கோளை, இயற்கைக்கு அப்பாற்பட்டதாகக் கருதுவதும் ஆனதே மூடநம்பிக்கை என்கிறார் இங்கர்சால்”[73] காலத்தின் வளர்ச்சிக்கு ஏற்ப மனிதன் தன் அச்சத்தை அகற்றித் தெளிவடைய வேண்டும். அப்படித் தெளிவு பெறாமல் பழைய கால நம்பிக்கைகளையே தொடர்ந்து கொண்டிருந்தால் சமுதாயம் மூடநம்பிக்கைகளால் பீடிக்கப்பட்டுள்ளது என்பது பொருள். இந்நாட்டின் நிலை உயர்ந்திருந்தும், மக்களின் மனம் உயராததற்குக் காரணம் இதுவேயாகும். மக்களுள் படித்தவர்கள் எண்ணிக்கை மிகக் குறைவாக உள்ள இன்றைய சமுதாயத்தில் பகுத்தறிவுப் பார்வையுடையவர்கள் மிகக் குறைவு. மக்களிடையே சாதி வேறுபாடும், சமய மூடநம்பிக்கையும், ஆண்டவனை நம்பி அவதியுறும் அல்லலும் மிகுந்துள்ளன. இந்த அவலத்தைப் போக்க வேண்டும். மனித வளர்ச்சியின் தடைகளாய் விளங்கும் சமுதாயச் சீர்கேடுகள், சமய மூடநம்பிக்கைகள் நீக்கப்பட்டால் தான் பொருளாதாரம் அரசியலில் முன்னேற்றம் காணமுடியும். மக்களின் வறுமைக்குக் காரணம் பொருளாதார இயந்திரக் கோளாறு ஆகும். இந்நிலை மறைய அறிவுப் புரட்சி நடைபெற வேண்டும். அறிவுப் புரட்சி ஏற்பட்டாலொழிய வேறு புரட்சியால் மாற்றம் விளைந்திடாது என்பதை மனதில் கொண்டு தன் படைப்புகளைப் படைத்தவர் அறிஞர் அண்ணா ஆவார்.

மதிப்புகள் அனைத்தும் மாற்றங்களுக்குட்பட்டதே என்பதை அறிந்த அண்ணா, பழமையான மதிப்புகளைப் பின்பற்றி வருவதால் சமுதாயத்தில் உண்டாகும் பிரச்சினைகளைத் தனது படைப்புகளில் விளக்குகின்றார். இதனால் பழமையான மதிப்புகள் காலத்திற்கேற்றவாறு மாற்றம் பெற வேண்டும் என விழைகிறார்.

மக்களின் இன்ப நிகழ்வுகளிலும் துன்பநிகழ்வுகளிலும் பிராமணர்களுக்குத் தானம் கொடுக்கும் வழக்கம் என்பது பழங்காலந் தொட்டே இருந்து வந்துள்ளது என்பதை அறிஞர் அண்ணா ‘சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்’ என்ற நாடகத்தில் பிராமணர்களின் பிரதிநிதியாகப் படைக்கப்பட்டிருக்கும் காகப்பட்டர் என்னும் கதாபாத்திரத்தின் வழி உணர்த்துவர். “ஆனந்தமோ, துக்கமோ எப்படிப்பட்ட சமயமானாலும் பிராமணர்களுக்குத் தானம் தர வேணும்டா. அதுதானே சாஸ்திரம்? சந்தோஷமான சமயத்திலே தானம் தருகிறாண்ணா அவாளோட சந்தோஷம் பல மடங்கு அதிகமாக வேணும்னு அர்த்தம். துக்க சமயத்திலே தானம் கொடுத்தா துக்கம் நீங்கிப் போகும்னு அர்த்தம். இதெல்லாம் நம்ம சாஸ்திரத்திலே இருக்குடா”[74] என ஆரியம் பேசுவதாக அமைத்திருப்பார். இந்நாடகத்தில் அண்ணாவே காகப்பட்டர் பாத்திரத்தில் நடித்தார் என்பது குறிப்பிடத்தக்கது. இப்பழக்கம் தொன்று தொட்டு இன்று வரையிலும் இந்தச் சமுதாயத்தில் நிலவி வருகின்றது. திருமண நிகழ்வுகளும் இறப்பு போன்ற துன்ப நிகழ்வுகளும் பிராமணர்கள் இல்லாமல் நடைபெறுவது கிடையாது. எனவே தான் பெரியாரும் அண்ணாவும் வேள்விகள் இல்லாத, பிராமணர்கள் அல்லாத சுயமரியாதைத் திருமணங்கள் சமுதாய மதிப்புகளாக ஆக வேண்டும் என்பதை வலியுறுத்தினர்.

வேப்பமரத்திற்கும் அரசமரத்திற்கும் திருமணம் செய்து வைக்கும் மூடப்பழக்கம் சமுதாய மதிப்பாகப் பின்பற்றப்பட்டு வருகின்றது. இத்தகைய மதிப்புகள் மக்களை மூடப்பழக்கத்திற்கு அடிமையாக்கிவிடும், அறியாமையில் இட்டுச் செல்லும் என்பதை அண்ணா தனது படைப்புகளில் சுட்டுகின்றார். இதுபோன்ற பழைய மதிப்புகள் இச்சமுதாயத்தை விட்டு அகல வேண்டும் என்ற எண்ணத்தை அவரின் பெரும்பாலான படைப்புகள் பிரதிபலிக்கின்றன. வேம்பு, அரசு திருமணம் பற்றித் தன்னுடைய ‘மூன்று கடிதங்கள்’ சிறுகதையில் கூறுகின்றார். மூடப்பழக்கவழக்கங்கள் இச்சமுதாயத்திலிருந்து

அகற்றியாக வேண்டும் என்ற எண்ணத்தின் வெளிப்பாடு இச்சிறுகதையாகும். "இந்த வேம்பு - அரசு திருமணம் இனியும் நெடுங்காலத்துக்கு நடக்கப் போவதில்லை . . . முடியுமானால், இந்த முயற்சி எவ்வளவு பைத்யக்காரத்தனமானது என்பதை எடுத்துச் சொல்லுவோம்."[75] எனக் கூறும் நடராசன் வாயிலாக அண்ணா இதுபோன்ற மூடநம்பிக்கையை வளர்க்கும் மதிப்புகளை மக்களுக்கு விளக்கி அறிவார்ந்த மதிப்புகளைச் சமுதாயத்தில் உருவாக்க முனைகிறார்.

குழந்தைப் பேறு இல்லாமல் இருக்கும் மக்கள் அதற்கு அறிவுப்பூர்வமான செயல்களில் ஈடுபடாமல் அரசமரத்தைச் சுற்றுவது, பிள்ளையாரைச் சுற்றி வருவது, கோவில் தீர்த்தங்கள் குடிப்பது, கோவில் குளங்களில் நீராடுவது, சோதிடத்தை நம்பி பரிகாரம் செய்வது, கோவில் கோவிலாகச் சென்று வழிபடுவது போன்ற பழக்கங்கள் மதிப்புகளாக இன்றும் பெருவாரியான மக்களால் பின்பற்றப்பட்டு வருகின்றன. இத்தகைய பழக்கங்களை எல்லாம் அண்ணா கடுமையாக எதிர்க்கின்றார். மக்களின் மனங்களில் விழிப்புணர்வுச் சிந்தனைகளை ஊட்ட தனது படைப்புகளைப் பயன்படுத்துகின்றார். உண்மையான மதிப்புகள் எவை என்பதை மக்களுக்கு எடுத்துக்காட்டுவனவாக இவரது படைப்புகள் விளங்குகின்றன. குழந்தை பிறக்காவிடில் சோதிடரின் பேச்சைக் கேட்டுப் பரிகாரம் செய்யும் பழக்கத்தை 'ஆற்றங்கரையிலே' நாடகத்தில் கூறுகிறார். "எங்காத்துக்காரர் கிட்டே ஜோஸ்யர் சுப்ரமண்ய ஐயர் கூட, திருமுட்டம் போய் புஷ்கரணியில் ஸ்நானம் பண்ணி அஸ்வத்த நாராயண ஸ்வாமி கோயிலில் இருக்கும் அரசு சுத்தினா சந்ததி உண்டாகும்னு சொன்னாராம். அடுத்த சோமவார அமாவாசைக்குத் தான் திருமுட்டம் போய் அரசமரம் சுத்திட்டு அப்படியே பூவராக ஸ்வாமியையும் சேவிச்சுண்டு வரலாம்னு இருக்கேன்."[76] எனக் குழந்தைப் பேறு இல்லாமல் தவிக்கும் பிராமணப் பெண்ணின் பேச்சு அக்காலச் சமுதாயத்தில் இருந்த இம்மூடப்பழக்கத்தைக் காட்டுவதாக இருக்கின்றது. இத்தகைய மதிப்புகள் காலங்காலமாகப் படித்தவர் படிக்காதவர் என்ற வேறுபாடு இல்லாமல் அனைத்துத் தரப்பு மக்களிடமும் வழங்கிவருகின்றது.

பழைய மரபுகள் அனைத்தும் தொன்று தொட்டுப் பின்பற்றிவர வலியுறுத்துகின்ற புராண பிரசங்கங்கள் பழங்கால நீதியையும் மக்களிடத்தில் விளக்குகின்றன. இதில் பழங்காலப் பழக்கவழக்கங்களை இன்றளவும் கடைபிடித்து வருகின்ற இச்சமுதாயம் பழங்கால நீதியை மட்டும் இன்றைக்கு ஏற்றுக்கொள்ளாது இருப்பதற்குக் காரணம் அது பொய் என்பது. இது புராணப் பிரசங்கம் செய்பவர்களுக்கே நன்கு தெரியும். இருப்பினும் வருமானம் ஈட்டுவதற்காக வேண்டி, பொய்யை மீண்டும் மீண்டும் பரப்பும் பணியை மேற்கொண்டு வருகின்றனர். அரசமரத்தைச் சுற்றினால் கரு உண்டாகும் என்பது நம்பிக்கை என்பதால் மக்கள் அதை நிராகரித்துவிடவில்லை. இன்றும் அரசமரத்தைச் சுற்றிக் கொண்டுதான் இருக்கிறார்கள். இதில் மருத்துவர்களின் மனைவிகளும், நீதிபதிகளின் மனைவிகளும் அடங்குவர். ஆனால் பழங்காலத்தில் பக்திக்காக கொள்ளை நடத்திய திருமங்கை ஆழ்வாரை சிறந்த பக்தராகப் போற்றுகின்றனர். இன்றைய நிலையில் கடவுளுக்குக் கற்பூரம் கூட வாங்க முடியாத ஏழைப் பக்தன் பக்தியின் காரணமாகக் கற்பூரத்தைத் திருடுகின்றான் என்றால் பக்திக்காக அல்லவா திருடுகின்றான் என இச்சமுதாயம் இத்திருட்டை ஏற்றுக்கொள்ளாது. அதேபோல் தாயின் தலையை வெட்டிய பரசுராமரையும் தெய்வத்தன்மை மிக்கவராக வழிபடும் நிலையில் வறுமையின் காரணமாக தாயின் பசியைப் போக்கக் கூட வழியில்லாத ஒருவன் தாய் படும் துன்பத்தைச் சகிக்க முடியாத நிலையில் தன் தாயின் விருப்பத்திற்கிணங்க அவளைக் கொல்கிறான். அவனை இன்றைய சூழலில் இச்சமுதாயம் தெய்வமாக வழிபடாது. நீதித்துறை அவனைத் தண்டிக்காமல் விடாது. ஆக, செயல்கள் ஒன்றுதான்; ஆனால் மதிப்பு வேறு வேறாக

இருப்பதற்குக் காரணம் ஒரு செயல் உண்மை; மற்றொரு செயல் புரட்டு என்பதாகும். புராணங்களின் புரட்டின் காரணமாக விளைந்தவை இத்தகைய நீதிகள். இப்படிப்பட்ட நீதிகளைச் சமுதாயத்தில் பரப்புகின்ற புராண இதிகாசக் கதைகளைச் சமுதாய மதிப்பிலிருந்து அகற்ற வேண்டும். இவற்றை மக்கள் மதிப்பாகக் கொண்டு துன்பத்தில் வீழ்ந்து விடக்கூடாது என்பதனை அண்ணா அவர்கள் தன்னுடைய 'வழக்கு வாபஸ்' என்ற நாடகத்தில் மிகச் சிறப்பான வாதத்திறத்தால் பதிவு செய்திருக்கின்றார். இந்நாடகத்தில் தான் வேலை பார்த்த கடையில் இருந்து கற்பூரத்தைத் திருடினான் எனக் குற்றம் சுமத்தப்பட்டு சிவநேசன் என்பவன் குற்றவாளியாக நீதிமன்றத்தில் நிறுத்தப்படுகின்றான். அந்நீதிமன்றத்தில் சிவநேசனின் வாயிலாக அண்ணா கூறும் கருத்துகள் ஒவ்வொன்றும் சிந்திக்கத்தூண்டுவன.

"குற் : . . . . . . . .ஜன சமுதாயம் அந்தக் காலத்திலே நீதி என்று எவைகளை நம்பினார்களோ அவைகளையேதானே இன்றும் நம்புகிறார்கள். அந்தக் காலத்திலே அரசமரத்தைச் சுற்றி வந்தால் கர்ப்பம் தரிக்கும் என்று தாய்மார்கள் எண்ணி வந்தார்கள். இன்றும் சுற்றிக் கொண்டுதான் இருக்கிறார்கள். ஒரு தினம் தங்கள் மனைவியார் சுற்றுவதை நானே பார்த்தேன். (கோர்ட்டில் சிரிப்பு) பக்தியைக் கேலி செய்யாதீர்கள். நமது நீதிபதி எவ்வளவு அறிவாளி! படித்தவர்! அரசமரத்தைச் சுற்றுவது சிரிப்புக்கிடமானதானால் ஐயா, அம்மாவைத் தடுத்திருப்பார்களல்லவா? நான் எவ்வளவோ, பெரிய பெரிய உத்யோகஸ்தர் வீட்டுத்தாய்மார்களை அந்த அரச மரத்தண்டைப் பார்த்திருக்கிறேன்.

மா : உன் புராணப் பிரசங்கம் போதும்.

குற் : ஐயா! என் பேச்சை நிறுத்தும்படிக் கட்டளையிடுவது போல நாட்டிலே நடைபெறும் புராணப்பேச்சை நிறுத்தியிருந்தால் நான் இன்று கள்ளன் என்று குற்றம் சாட்டப்பட்டுத் தங்கள் முன் நிறுத்தப்பட்டிருக்க மாட்டேன்.

மா : யார் உன்னைத் திருடச் சொன்னது?

குற் : பக்தி எனும் உணர்ச்சி.

மா : திருடக் கூடச் சொல்கிறதா?

குற் : கற்பூரத்தை ஏழை பக்தனான நான் திருடினேன். வழிப்பறிக் கொள்ளை நடத்தினார் திருமங்கை ஆழ்வார் பக்திக்காக.

வா.வ : இந்தக் காலத்தில் யாராவது செய்தால் 395-வது செக்ஷன்படி தண்டனை!

குற் : அந்தக் காலத்து நீதி இந்தக் காலத்துக்குச் செல்லாது என்றால் நாட்டை ஆளும் நீங்கள், அந்தக் காலத்து நீதியைப் போதிக்கும் பழைய புராணங்களை மக்களுக்குப் போதிக்கக் கூடாது; போதிப்பது சட்ட விரோதம் என்று தடுத்திருக்க வேண்டும். தங்குதடையின்றி பழைய நீதிகளைப் போதிக்கும் புராணப் பிரச்சாரம், பாட்டாகவும், கூத்தாகவும் நாட்டிலே நடப்பதால், இதை அனுமதிக்கும் சர்க்காரும், பழைய கால நீதியையே இன்றும் போற்றுகிறார்கள் என்று நான் நம்பினேன்."[77]

இவ்வுரையாடல் அக்காலத்தில் புராணங்களில் இடம்பெற்ற செய்திகள் பாமர மனிதனுக்கு எத்தகையச் செயலைச் செய்யத் தூண்டுவதாக அமைகிறது என்பதை விளக்குவதாய் அமைந்துள்ளது. புராணங்களை நம்பும் மக்கள் அதில் நடைபெறும் நிகழ்வுகளை இக்காலத்திற்கு ஒப்பிட்டு இதுபோன்ற நிகழ்வுகள் நடந்திருக்க முடியுமா என சிந்தித்து

தங்களது தற்கால மதிப்புகளை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும் என்ற கருத்தை அண்ணா வலியுறுத்துகின்றார்.

## மடாதிபதிகளின் போலித்தனம்

மடங்கள் மீதும் மடாதிபதிகள் மீதும் திராவிட இயக்கத்தார்கள் கொண்டிருந்த மதிப்பு தாழ்ந்தே காணப்படுகின்றது. அவ்வகையில் மடாதிபதிகள் என்றாலே மக்களை ஏமாற்றுபவர்கள் என்ற கருத்து அண்ணாவின் படைப்புகளில் முதன்மை பெறுகிறது. ஏனெனில் அவர்களை அண்ணா சோம்பேறித் தனத்தின் மொத்த உருவமாகக் காண்கிறார். காட்டிலும் மேட்டிலும் வெயிலிலும் துயருற்று வேலைபார்க்கும் பாமர மக்கள் தங்கள் வாழ்வு முழுவதும் வேலை பார்த்தாலும் சுகமாய் வாழ வழியில்லை. ஆனால் எந்தவொரு உடல் உழைப்பும் இல்லாமல் மக்களை ஏமாற்றி வாழும் முறையையும் மடங்களில் நடக்கும் மறைமுகச் செயல்களையும் வெளியுலகிற்கு எடுத்துக்காட்டும் விதமாக அண்ணா படைத்துக்காட்டியுள்ளார். மடாதிபதிகள் மீது மக்கள் கொண்டுள்ள மதிப்புகளை மாற்றுவதற்கு தன் எழுத்தை ஒரு கருவியாக்கி மக்களுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்தியுள்ளார்.

## உயிர்ப்பலியிடுதல்

கோயில்களில் வேண்டுதல்கள் நிறைவேறவும் அல்லது முன்னர் வேண்டிக்கொண்ட வேண்டுதல்கள் நிறைவேறினாலும் தெய்வங்களுக்கு உயிர்ப்பலி கொடுக்கும் பழக்கம் இச்சமுதாயத்தில் தொன்று தொட்டு இருந்து வருகின்றது. உயிர்ப்பலி என்பது சேவல், ஆடு போன்ற உயிரினங்களைத் தெய்வத்திற்குப் பலி கொடுப்பது ஆகும். இதுபோன்ற சமுதாயத்தில் நிலவுகின்ற மதிப்புப்போலிகளை அண்ணா தனது படைப்புகளில் பதிவு செய்துள்ளார். "அம்மன் அருளைப் பெற தெய்வப்படைப்பில் ஒரு உயிரைப் பலியிடுவது என்ன நியாயம்? கருணையில்லாதது ஒரு புறமிருக்கட்டும் கருத்தில்லையே! உணவுப் பொருளாக உட்கொள்கிறார்கள் அர்த்தமிருக்கிறது. ஆடு வெட்டுவதும், கோழி அறுப்பதும் எவ்வளவு பைத்தியகாரத்தனம்! மனித அறிவு வளராத காலத்தில் மனிதன், முழுமனிதன் ஆகாத நேரத்தில், காட்டுமிராண்டி காலத்தில் வெட்டினான் - வீழ்த்தினான் இரத்தத் துளிகளைத் தெளித்து தனது முரட்டு பக்தியை தீர்த்துக் கொண்டான். இந்தக் காலத்திலும் அது ஆகுமா?."[78] என தெய்வத்தின் பெயரால் செய்து வந்த இந்த பழக்கத்தைக் கடுமையாகச் சாடுகிறார். மனிதன் அறியாமையால் மதிப்பாகக் கடைபிடித்து வந்த ஒன்றை இன்றும் கண்மூடித்தனமாகக் கடைபிடிப்பது தவறென்பதை 'மனித மந்தை' என்ற சிறுகதையில் சுட்டிக்காண்பிக்கின்றார்.

'பேய் ஓடிப் போச்சு' என்ற சிறுகதையில் செல்லாயி என்ற பெண்ணுக்குப் பேய் பிடித்துப் பின் பூசாரியின் மந்திரத்தால் சரியானதாக நம்பப்பட்டது. அப்பெண்ணின் தந்தை பேயை ஓட்டிய செய்தியைத் தனது நண்பரிடம் சொன்னார். அதற்கு அவரது நண்பர், "சொக்கியம்மாவுக்கு அடுத்த வெள்ளிக்கு ஒரு சேவலை அறுத்துப் படையலைப் போட்டுப் போடு."[79] எனக் கூறுவதிலிருந்து தங்களுக்கு ஏற்பட்ட இன்னல்கள் நீங்கினால் அது தெய்வத்தின் கருணையெனக் கருதினர். ஆகவே தெய்வத்திற்கு சேவல், ஆடு போன்ற உயிர்களைப் பலியிடுவர். அவ்வாறு பலியிடும் உயிரைக் கோயிலிலேயே சமைத்து அனைவருக்கும் இடுவர். இப்பழக்கம் இன்றளவும் பரவலாக அனைத்து மக்களாலும் பின்பற்றப்படும் ஒன்றாக விளங்குகிறது.

## தொகுப்புரை

சமுதாயம் என்ற சொல் கூட்டம், சங்கம், பின்னணி, பொது, போர் என்ற பொருள்களைத் தருகிறது. இதில் கூட்டம், பொது, சங்கம் என்ற பொருள்கள் பொதுவானவைகளாகக் காணப்படுகின்றன. அறிவியலின் உட்பிரிவுகளான கணிதவியல், வேதியியல் போல சமுதாயவியலும் ஓர் அறிவியலே ஆகும். இது சமுதாயம் பற்றிப் படிக்க அமைக்கப்பெற்ற ஒரு கல்விமுறையாகும். இதன் அடிப்படையில் சமுதாயத்தை மாற்றவும் சமுதாயத் தேவைகளை நிறைவு செய்யவும் தேவையான ஓர் ஒழுங்கைத் தெரிந்து கொள்ளவும் முடியும்.

மதிப்புகள் மனிதர்களின் பழக்கவழக்கங்கள், விருப்பங்கள் அடிப்படையில் அமையும். இம்மதிப்பு பலராலும் ஏற்றுக்கொள்ளக்கூடியதாகவும், நன்மை தரக்கூடியதாகவும், சமுதாயத்தை வழிநடத்திச் செல்லக்கூடியதாகவும் விளங்கும். இதனை விழுமியங்கள் எனக் குறிப்பர். இது ஆங்கிலத்தில் Values எனக் குறிக்கப்படுகின்றது.

மதிப்புகள் அனைத்தும் மாறும் இயல்புடையவை. காலத் தேவைக்கேற்ப சமுதாய மதிப்புகள் மாற்றம் பெறுகின்றன. மதிப்புகள் பற்றி அறிந்து கொள்வதற்கான அளவுகோல் அந்தந்தக் கால இலக்கியங்கள் ஆகும். மதிப்புகள் நேர்மதிப்பு, எதிர்மதிப்பு, மதிப்புப்போராட்டம், இரட்டை மதிப்பு, மதிப்புப் போலிகள் எனப் பல வகைப்படும்.

சமுதாயத்தில் மனிதனுடைய விருப்பத்துக்கும் முன்னேற்றத்திற்கும் உதவுவன நேர்மதிப்புகள் ஆகும். திருமணம், ஒழுக்கம், நேர்மை, கடமை, நாட்டுப்பற்று, இரக்கம், கொடை போன்றவை அண்ணாவின் படைப்புகளில் காணப்படும் நேர்மதிப்புகள் ஆகும். சமுதாய முன்னேற்றத்திற்கும் தனிமனித முன்னேற்றத்திற்கும் தடையாக விளங்குகின்ற காரணிகள் எதிர்மதிப்புகள் ஆகும். ஊழல், திருட்டு, சூதாட்டம், மதுப்பழக்கம், கொலை, துரோகம் போன்றவை அண்ணாவின் படைப்புகளில் காணக்கிடக்கும் எதிர்மதிப்புகளாகும்.

நேர்மதிப்பிலிருந்து எதிர்மதிப்பிற்கும், எதிர்மதிப்பிலிருந்து நேர் மதிப்பிற்கும் மாற்றம் பெறுவது மதிப்புப் போராட்டம் எனப்படும். சாதியப்பாகுபாடு, கடவுள், காதல், கலப்புமணம், கைம்பெண் திருமணம், பொருந்தா மணம், பலதாரமுறை, வைப்பாட்டி முறை, தாசிமுறை ஆகியவை அண்ணாவின் படைப்புகளில் காணப்படும் மதிப்புப் பேராட்டங்களாகும்.

தொழிலடிப்படையில் தோன்றிய சாதியப் பாகுபாடு நாளடைவில் சமுதாயத்தில் நிலையான இடத்தைப் பெற்றது. அதனை மக்கள் இன்றுவரையிலும் முக்கியத்துவமான ஒன்றாகக் கருதிப் பின்பற்றி வருகின்றனர். மனிதனின் அச்சமே இறைவழிபாட்டிற்கு அடிப்படை ஆகும். கடவுள் எனும் மதிப்பு சமுதாய முன்னேற்றத்திற்குப் பெரும் தடையாக இருந்து வருகின்றது. இதனால் இச்சமுதாயத்தில் இருந்து கடவுள் எனும் மதிப்பை அகற்ற வேண்டும் என்பது அண்ணாவின் நோக்கம் ஆகும்.

தமிழர்களின் வாழ்வில் இரண்டறக் கலந்து பின்பற்றப்பட்டும் சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டும் வந்த காதல் என்னும் உணர்ச்சி பிற்காலச் சமுதாயத்தால் மறுக்கப்பட்டது. தமிழர்கள் தங்களது திருமண முறையை மறந்து ஆரியர்களின் திருமண முறையைப் பின்பற்றி வந்தனர். இத்திருமண முறையை பெரியார்

எதிர்த்தார். ஆரியர்களின் பங்கு இல்லாமலும் அவர்கள் பழக்கிவிட்ட திருமண முறையை ஒழிக்கவும் பெரியார் அவர்கள் சுயமரியாதைத் திருமணமுறையைக் கொண்டு வந்தார். அவ்வகையில் விதவை மணம், கலப்பு மணம், விலைமகளிர் மறுவாழ்வு, பலதாரமுறை, வைப்பாட்டி முறை, தாசி முறை போன்றவை அண்ணாவின் படைப்புகளில் காணப்படும் மதிப்புப் போராட்டங்களாகக் கொள்ளத்தக்கனவாகும்.

மனிதர்கள் சூழ்நிலைக்குத் தகுந்தாற்போல இரட்டைத் தன்மையுடன் நடந்து கொள்வது இரட்டை மதிப்புகள் ஆகும். இத்தகைய இரட்டை மதிப்புகள் அண்ணாவின் படைப்புகளில் படைத்துக் காட்டப்பட்டுள்ளன. சில பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், ஆடம்பரங்கள் போன்றவை வாழ்க்கைக்குத் தேவையில்லையென்றாலும் அதனை விட்டொழிக்காமல் பிடித்துக் கொண்டு மக்கள் வாழ்கின்றனர். இவை மதிப்புப் போலிகள் எனப்படும். இவ்வகையில் அறியாமையின் காரணமாகப் பின்பற்றப்படும் மூட நம்பிக்கைகள், மடாதிபதிகளின் போலித்தனம், உயிர்களைக் கொல்வது பாவம் என்று தெரிந்தும் அதனைப் பின்பற்றுவது போன்றவை அடங்கும்.

## சான்றெண் விளக்கம்

1. நா.கதிரைவேற்பிள்ளை(ப.ஆ), தமிழ் மொழியகராதி, ப.582
2. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.429
3. எஃப்.பாக்யமேரி, பண்ணன் புதினங்களில் சமுதாய மாற்றம், ப.15
4. சு.நிம்மி, நா.பா.நாவல்களில் சமூக மதிப்புகள், ப.1
5. ந.பிச்சமுத்து, - மு.வ.வின் புதினங்களில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம், ப.201
6. ம.ப.பெரியசாமித்தூரன் (தொ.ஆ), தமிழ்க் கலைக்களஞ்சியம் - தொகுதி எட்டு, ப.89
7. சி.இ.மறைமலை, - இலக்கியமும் சமூகவியலும், பக்.94-95
8. அ.மா.பரிமணம் (ப.ஆ), வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-13, ப.400
9. சேது மணியன், தமிழ் நாவல்களில் மதிப்புகள், ப.24
10. மேலது,ப.24
11. மேலது, ப.12
12. சு.நிம்மி, நா.பா.நாவல்களில் சமூக மதிப்புகள், பக்.10-16
13. சி.என்.குமாரசாமி, பெண்ணிய நோக்கில் பாரதி, ப.156
14. அறிஞர் அண்ணா, ரங்கோன் ராதா, ப.103
15. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.211
16. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.36
17. மேலது, ப.52
18. மேலது, ப.429
19. மேலது,ப.81
20. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-3, ப.89
21. புறநா.312
22. குறள் : 981
23. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-3, ப.152
24. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.1063
25. அறிஞர் அண்ணா, பார்வதி பி.ஏ., ப.155
26. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.1011

27. பேரறிஞர் அண்ணா, செவ்வாழை சிறுகதைத் தொகுதி, ப.53

28. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.1087

29. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.131

30. மேலது, பக்.44-45

31. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.567

32. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1, பக்.279-280

33. அண்ணா பரிமளம், பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.926

34. அறிஞர் அண்ணா, ஓர் இரவு, ப.13

35. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-2, பக்.348-349

36. பெ.கி.மனோகரன், பேரறிஞர் அண்ணாவின் சமூகப் பொருளாதாரச் சிந்தனைகள், ப.27

37. அண்ணா பரிமளம், பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.928

38. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.298

39. ஏ.எஸ்.வேணு, பெரியார் ஒரு சரித்திரம், ப.117

40. ஆனைமுத்து (ப.ஆ), பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் (முதல் தொகுதி), ப.219

41. சதாசிவம் (ப.ஆ), தென்பாண்டி நாட்டுப் படைப்பாளர்களின் சமூகச் சிந்தனைகள், தொகுதி-3, ப.388

42. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.389

43. அறிஞர் அண்ணா, வேலைக்காரி, ப.68

44. மேலது, ப.96

45. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.321

46. இராபர்ட் கிரீன் இங்கர்சால், கடவுள் (மொ.பெ.), பக்.33-34

47. ஆனைமுத்து (ப.ஆ), பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் (மூன்றாம் தொகுதி), ப.1304

48. ப.ஜீவானந்தம், மதமும் மனித வாழ்வும், ப.16

49. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.539

50. மேலது, ப.611

51. தொல் :1168

52. அறிஞர் அண்ணா, என் வாழ்வு, பக்.47-48

53. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.244

54. பாரதிதாசன், பன்மணித்திரள், ப.27

55. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.46

56. சாமி சிதம்பரனார், சீர்திருத்தப் பாடல்கள் (முதல் தொகுதி), ப.16

57. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.27

58. மேலது, ப.242

59. மேலது, ப.96

60. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.55

61. மேலது, ப.586

62. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1, ப.149

63. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.810

64. சி.என்.குமாரசாமி, பெண்ணிய நோக்கில் பாரதி, ப.116

65. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.811

66. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.36

67. மேலது, ப.272

68. அறிஞர் அண்ணா, என் வாழ்வு, ப.57

69. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.61

70. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.399

71. மேலது, ப.990

72. குறள் : 280

73. இரா.நெடுஞ்செழியன், மூடநம்பிக்கை என்றால் என்ன? ப.62

74. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.359

75. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.643

76. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, பக்.75-76

77. மேலது, ப.95

78. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.618

79. மேலது, ப.447

# இயல் - 3

# அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் சமுதாயச் சிக்கல்கள்

அறிவியல், தொழில்நுட்பம், வணிகம் ஒருபுறம் வளர்ந்து கொண்டே போனாலும் நாடுகளுக்கிடையிலும், நாடுதோறும் அன்றாடம் முரண்களும், போர்களும், அழிவுகளும் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன. இரண்டாம் உலகப் போரின் அழிவுகள், உயிரிழப்புகள் ஐரோப்பியச் சமுதாயத்தை அடியோடு உலுக்கி விட்டதன் விளைவாக இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் மேனாட்டு இலக்கியப் போக்கு தலைகீழான மாற்றங்களைக் கண்டது. இலக்கியத்திலிருந்து ஆற்றோட்டமும் அமைதியும் அகன்றன. வெறுப்பும் கசப்பும் அவநம்பிக்கையும், மத - கடவுள் எதிர்ப்பும், விழுமியங்களுக்கு எதிரான போக்கும் படைப்புகளில் இடம்பெறத் தொடங்கின. மிகை நடப்பியல், இருத்தலியல், அமைப்பியல் எனப் பல்வேறு இலக்கிய இயக்கங்கள் தோன்றின. இன்றைய உலக இலக்கியங்களிலும் இந்திய, தமிழ் இலக்கியங்களிலும் கூட முழு அமைதியான, மனமகிழ்ச்சி தரக்கூடிய ஒரு படைப்பைக் காணமுடியாது. இருபதாம் நூற்றாண்டில் தமிழகத்தில் எழுந்த பெரும்பாலான படைப்புகள் சமுதாயச் சிக்கல்களை எடுத்தியம்புகின்றனவாக அமைந்தன. இருபதாம் நூற்றாண்டில் அரசியல், இலக்கியம், சமுதாயம் ஆகியவற்றில் ஆதிக்கம் பெறத் தொடங்கிய திராவிட இயக்கத்தின் படைப்பாளர்களுள் முதன்மையானவராக விளங்கும் அறிஞர் அண்ணா படைப்புகள் சமுதாயத்தில் இருக்கின்ற சிக்கல்களை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளன. அவ்வகையில் அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் காணப்படும் சமுதாயச் சிக்கல்களை ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

## இலக்கியமும் சமுதாயச் சிக்கல்களும்

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே தமிழ் இலக்கியங்கள் அவ்வக்காலச் சமுதாயச் சிக்கல்களை எதிர்கொள்ளத் தொடங்கிவிட்டன. தொடக்கக் காலத் தமிழ்ப் புனைகதைகளில் விதவைகள் வாழ்நிலை, குழந்தைத் திருமணம் போன்ற கொடுமைகளை வ.வே.சு. ஐயர், மாதவையா போன்றோர் வெளிப்படுத்தினர். புதுமைப்பித்தன் தொடங்கி இன்றுவரை எழுதிவரும் படைப்பாளிகள் அவ்வப்போதைய சமுதாயச் சிக்கல்களைச் சித்திரிப்பதுடன் அவற்றுக்குக் காரணமான பழைய மரபுகளைப் புரட்டி எறிந்தும் வருகின்றனர். இவ்வகையில் இன்று தலித் இலக்கியம், பெண்ணிய இலக்கியம் என்ற தனிப் பிரிவுகள் உருவாகியுள்ளன. தலித்துகளின் வாழ்க்கைத் துயரங்களையும், பல்வேறு துறைகளிலும் பெண்கள் எதிர்கொள்ளும் சிக்கல்களையும் அவை எதிரொலிக்கின்றன.

சமுதாயத்தில் பல்வேறு முரண் சக்திகள் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. ஆளுகின்றவர் × ஆளப்படுகின்றவர், இருப்பவர் × இல்லாதவர், கற்றவர் × கல்லாதவர், நகரத்தார் × கிராமத்தார், ஆண் × பெண், உயர்சாதி × கீழ்சாதி, பெரும்பான்மையினர் × சிறுபான்மையினர், மையத்தில் வாழ்பவர் × ஓரத்தில் வாழ்பவர் இவ்வாறு இயங்கும் முரண் சக்திகளுக்கிடையே ஓயாது சிக்கல்களும் தீர்வுகளும் நடந்த வண்ணம் இருக்கின்றன. இத்தகைய புள்ளிகளில் இருந்து தான் இலக்கியம் தனக்கான கருவினைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறது. எனவே சமுதாயத்தில் சிக்கல்கள், புரிந்துகொள்ள முடியாத புதிர்கள், இவைகளால் ஏற்படும் மனத்துயரங்கள் இல்லையென்றால் இலக்கியமும் இல்லை என்று

சொல்லுமளவுக்கு இலக்கிய ஆக்கத்திலும் இலக்கிய வாசிப்பிலும் இவைகள் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றன.

சமுதாயவியல் அணுகுமுறையில் இலக்கியப் படைப்புகளைத் திறனாய்வு செய்யும் திறனாய்வாளன் இப்படைப்புகள் சுட்டிக் காட்டும் சிக்கல்களை வரலாற்று அடிப்படையில் காரண - காரிய முறையில் ஆய்வு செய்யலாம். பெண்ணடிமைத் தனத்தைத் தொடக்கக் காலத்திலிருந்து ஆராய்ந்து, அண்மைக் காலத்தில் ஏற்பட்டுள்ள விழிப்புணர்வு, எதிர்ப்புணர்வு, தீர்வுகள், சட்டங்கள் ஆகியவற்றைச் சுட்டிக் காட்டலாம். இன்று ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களைப் பட்டியலிடலாம். இன்னும் செய்ய வேண்டியவற்றைப் பரிந்துரைக்கலாம். இவை அனைத்தும் இலக்கியத்தைச் சமுதாயவியல் அணுகுமுறையில் ஆய்வதன் பயன்கள் ஆகும்.

ஒரு படைப்பே சமுதாயச் சிக்கல்களைக் காட்டுவது மட்டுமன்றி அவற்றுக்கான தீர்வுகளையும் தன்னுள் கொண்டிருக்கலாம். ஆனால் படைப்பாளியோ, விமர்சகனோ யார் தீர்வு சொன்னாலும் அத்தகைய தீர்வுகளும் காலப்போக்கில் மாறுதல்களுக்கு உட்பட்டவையே ஆகும். எனினும் தீர்வுகள் எப்போதும் சொல்லப்பட்டே வருகின்றன. இலக்கியம் இதயத்தோடு பேசுகிறது. எனவே இதயத்திற்கு இதமான இலக்கிய அழகியல் சிதைந்து விடாதபடி சிக்கல்களையும் சிக்கல்களுக்கான தீர்வுகளையும் சுட்டிக்காட்டவேண்டும். பிரச்சினைகளை மேலும் மேலும் கூர்ந்து நோக்கி, ஒவ்வொன்றிலும் காரண-காரியத் தொடர்புகளை விளங்கிக் கொண்டு எழுதும் போது, அவற்றை நீக்க வேண்டிய அவசியத்தையும் அதற்கான வழிவகைகளையும் விவரித்தல் தவிர்க்க இயலாதது. சிக்கல்களை விவரித்தால் மட்டும் போதாது; சிக்கலைக் கண்டு மனம் துடித்தால் மட்டும் போதாது; அச்சிக்கல் தீர வழியும் கூறவேண்டும்.

சமுதாய முரண்பாடுகளுக்கு வரலாற்று முறையிலான தீர்வுகளை எழுத்தாளன், தட்டிலே வைத்துத் தருவது போல மிக வெளிப்படையாக முன்வைக்க வேண்டியதில்லை. படைப்பாக்கத்தின் போக்கில் அது ஏற்படுத்தும் சூழ்நிலை, செயல்கள் முதலியவற்றின் ஊடே தானே பொதிந்தும் காணப்படும் வகையிலும் கூறலாம்.

அறிஞர் அண்ணா அவர்களின் காலக்கட்டத்தில் மேல்வர்க்கத்தினரின் அடக்குமுறைகள், தீண்டாமை, வறுமை, அரசியல் சூதாட்டம், போலித்தனம், போலிச்சாமியார்கள், பொருந்தாமணம், பலமனைவியர் மணம், வரதட்சணைக் கொடுமை, விதவைக் கொடுமை போன்ற தீமைகள் சமுதாயத்தில் தலைவிரித்தாடின. சமகாலச் சீர்கேடுகளைப் பிரதிபலிக்கும் கண்ணாடி போல் அவரது படைப்புகள் அமைந்திருந்தன. அடுத்து என்ன நடந்தது என்ற ஆர்வத்தை வாசகர்கள் மனதில் எழுப்பி, நிகழ்வுகளை அடுக்கடுக்காக விளக்கும் பாணியைக் கொண்டவர் அண்ணா. அவரது படைப்புகள் மக்களைச் சிந்திக்க வைத்தன. சமுதாயத்தின் அவலநிலையைக் கண்டு, மக்களைக் கொதித்தெழச் செய்தன. ஒவ்வொரு கதையிலும் வையம் உய்ய வழிகாட்டும் பல செய்திகளும் தீர்வுகளும் இடம்பெற்றுள்ளன.

சமுதாயச் சிக்கல்கள் என்பவை மாறிவரும் அரசியல் பொருளாதார நிலைகளின் காரணமாகச் சமுதாய உறவுகள் மத்தியிலும் மதிப்புகள் மத்தியிலும் காணப்படுபவை. சமுதாய உறுப்பினர்களான மக்களுக்கென்று சில கட்டுப்பாடுகள், ஒழுங்குகள், பழக்கவழக்கங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இவையே சமுதாய மதிப்புகளாகக் கருதப்படுகின்றன. மதிப்புகளாகப் பின்பற்றப்பட்டு வரும் பழக்கவழக்கங்கள் மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டும் எதிர்க்கப்பட்டும் வந்துள்ளன. இவ்வாறு சமுதாய மதிப்புகளோடு

மக்கள் முரண்படும் போது சிக்கல்கள் தோன்றுகின்றன. உண்மையில், சமுதாயம் என்பது ஒரே சீரான நிலையை - வளர்நிலையைக் கொண்டதல்ல. அடிப்படையில் சமுதாயம் என்பது அதன் அமைப்பிலேயே சில முரண்பாடுகளைக் கொண்டிருக்கின்றது. இதன் காரணமாக அதில் சிக்கல்கள் தோன்றுகின்றன. இவ்வாறு தோன்றுகின்ற சிக்கல்கள், சில மங்கிப் போகலாம்; சில புதிய வடிவங்கள் கொள்ளலாம்; சில புதியன தோன்றலாம். சமுதாயச் சிக்கல்களைச் சுட்டிக் காட்டுவதே படைப்பிலக்கியங்களின் நோக்கமாகும். இந்நெறி அனைத்து வகை இலக்கியங்களிலும் பின்பற்றப்படுகின்றது. சமுதாயத்தில் புரையோடிக் கிடக்கும் சீர்கேடுகளை விளக்கும் கதைகள் சமுதாயச் சிக்கல்களுக்கு உரியதாகின்றன. இத்தகைய படைப்புகள் சமுதாயச் சீர்திருத்தத்திற்கும், சமுதாய மறுமலர்ச்சிக்கும் வழிகாட்டுவனவாக உள்ளன. நாட்டில் வாழும் மக்கள் பொது அறிவு பெறுவதற்கும், பிணக்குகள், பூசல்கள் இல்லாமல் வாழ்வதற்கும் இலக்கியங்கள் உதவுகின்றன. சமுதாயச் சிக்கல்களுக்கு உரிய களங்களாகக் குடும்பம் மற்றும் பல்வேறு சமுதாய அமைப்புகள் சுட்டப்பெறுகின்றன.

குடும்பப் பிரச்சினைகளை மையமாகக் கொண்டு தோன்றும் படைப்புகளும் உண்டு. இத்தகைய படைப்புகள் மூலம் குடும்பச் சிக்கல்களுக்கான காரணங்கள் அறியப்படுகின்றன. சுயநலம், உறவுமுறைப் பிணக்கம், பொருளாதார ஏற்றத்தாழ்வு, விட்டுக் கொடுக்காமை, கூடி வாழாமை, குற்றம் காணல் ஆகியவற்றால் குடும்பச் சிக்கல்கள் உண்டாவது சுட்டப்படுகின்றது.

இவ்வகைப்பட்ட படைப்புகள் குடும்ப வாழ்வின் இன்ப, துன்பங்களை அணுகி ஆராய்ந்து சமுதாயப் பயன் விளைவிக்கின்றன. குடும்ப வாழ்வின் நிறை, குறைகளை மக்களுக்கு எடுத்துரைக்கின்றன. வாழ்வின் நன்மை, தீமைகளைப் போதிக்கின்றன. குடும்பப் பிரச்சினைகளைக் களைவதற்கு மேற்கொள்ள வேண்டிய அறிவுரைகளைக் கூறுகின்றன. இதன் மூலம் தனிமனிதக் குணநலன்களை மேம்படுத்தவும் உதவுகின்றன.

## அண்ணாவின் படைப்பு நோக்கம்

அண்ணாவுக்கு ஒரு நோக்கம் இருந்தது. அந்த நோக்கத்திற்காகத்தான் அவர் எழுதினார். கறுப்பினப் போராளி மார்ட்டின் லூதர் கிங், 'எனக்கொரு கனவு இருக்கிறது' என்று சொன்னதுபோல, 'எனக்கொரு நோக்கம் இருக்கிறது, லட்சியம் இருக்கிறது' என்று அண்ணா சொன்னார். தமிழ்ச் சமுதாயத்தை இருட்டிலிருந்து வெளிச்சத்திற்குக் கொண்டு வரவேண்டும் என்பது அண்ணாவின் இலட்சியம். சமுதாயத்தில் நிலவும் ஏற்றத்தாழ்வான முரண்பாட்டை ஒழிக்க வேண்டும் என்பது அவருடைய கனவு.

இதனடிப்படையில் வாழ்விற்கான உரிமையையும் அதற்கான வேட்கையையும் முன்னிறுத்தியே அவர் எழுதினார். தமிழ்ச்சமுதாயம் மகிழ்ச்சிகள், கொண்டாட்டங்கள் போன்றவற்றை இழந்ததற்கான காரணங்கள் என்ன, அவற்றை அடைவதற்கான வழிவகைகள் என்ன என்று தன் படைப்புகளில் அவர் ஆராய்ந்தார். ஓர் எழுத்தாளனுடைய நோக்கம்தான் அவன் எழுத்துக்கு வலிமையான ஆயுதமாக விளங்குகின்றது. இந்த வலிமை தான் எழுத்து மற்றும் எழுத்தாளனுடைய மேன்மையாக அமைகின்றது. அரை நூற்றாண்டு காலம் முடிந்துவிட்ட பிறகு இன்றும் தமிழ்ச் சமுதாயம் அண்ணாவினுடைய படைப்புகளைப் பற்றிப் பேசுவதற்குக் காரணம் அக்கதைகளின் வலிமையும் மேன்மையுமேயாகும்.

கருத்தைப் பரப்புவதற்காக, பிரச்சாரம் செய்வதற்காக எழுதப்பட்டதுதான் அண்ணாவினுடைய கதைகள் அனைத்தும். அவருடைய இயக்கச் செயல்பாடுகளில்

ஒன்றாகத்தான் அவருக்கு எழுத்தும் இருந்தது. ஆனால், பிரச்சாரத்திற்காக எழுதப்பட்டிருந்தாலும் அவருடைய கதைகள், இலக்கியங்களுக்குரிய எல்லாக் குணங்களையும் கொண்டிருக்கின்றன என்பதை மறுக்க முடியாது.

குழப்பமில்லாத தெளிவான நடை, குறிப்பாக உணர்த்துதல், நுட்பமான சித்திரித்தல், எள்ளல், அங்கதம், ஒப்பீடு, உருவகம், கவிதைக் குணம் கொண்ட வாக்கிய அமைப்புகள் என்று அனைத்துக் கூறுகளும் நிறைந்திருப்பதைக் காணமுடியும். அரை நூற்றாண்டுக் காலத்திற்கு மேலாகியும் அவருடைய கதைகளை எளிதாகப் படிக்க முடிகிறது, சுவைக்க முடிகிறது என்பதோடு அக்கதைகள் இக்காலத்திற்கும் பொருத்தமானதாக, தேவையானதாக இருக்கிறது என்பது வியப்புக்குரிய செய்தியாகும்.

அண்ணா, கதை எழுதத் தொடங்கிய காலத்திலும் எழுதிக் கொண்டிருந்த காலத்திலும் நான்கு விதமான கதை எழுதும் போக்கினர் இருந்தனர். தனி மனிதப் பிரச்சினைகள், சிக்கல்கள், பிடுங்கல்கள், மனப்போரட்டங்கள், உளவியல் பிரச்சினைகள், குடும்ப உறவுகளுக்கிடையிலான மோதல்கள், விரக்தி, நம்பிக்கையின்மை, மனக்குழப்பங்கள், சீர்குலைவுகள் போன்றனவற்றைப் பதிவு செய்வது முதல் பிரிவினர் போக்கு. தனிமனிதப் பிரச்சினைகளையும் சமுதாயப் பிரச்சினைகளையும் அப்பட்டமாகப் பதிவு செய்வதுதான் எழுத்தாளனின் வேலை. அதில் குறுக்கீடு செய்வதோ, விமர்சனம் செய்வதோ அல்ல என்பது இரண்டாவது பிரிவினர்களுடைய போக்கு. மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு, கதர் இயக்கம், நாட்டுப்பற்று, விடுதலைப் போராட்டம், தேசிய இயக்கம், காந்திய சிந்தனைகளின் அடிப்படையில் எழுதுவது மூன்றாவது பிரிவினருடைய எழுத்து வகை. நடைமுறைச் சமுதாய வாழ்வில் இருக்கக்கூடிய அசலான பிரச்சினைகளையும், பிரச்சினைகளுக்கான காரணங்களையும், அதற்கான தீர்வுகளையும் முன் வைத்து எழுதுவது நான்காவது வகையினர் போக்கு. இவர்களுள் அண்ணா, நான்காவது வகையைச் சார்ந்த எழுத்தாளர் ஆவார்.

சமுதாயத்தை முன்னேற்றுவதற்கு, விமர்சனம் செய்வதற்கு, முக்கியமாகப் பிரச்சாரம் செய்வதற்கானக் கருவியாகவும் தன்னுடைய கருத்தை - சிந்தனையை - எண்ணத்தைப் பரப்புவதற்குத் தகுந்த ஆயுதமாகவும் அண்ணா தன்னுடைய கலைப்படைப்புகளைக் கருதினார். இத்தகைய நோக்கத்திலேயே இலக்கியத்தைப் படைத்தளித்தார்.

அதோடு, இலக்கியம் மக்களுக்கானது, அது மக்களைச் சென்று சேர வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தார். சமுதாயத்தின் மீதான தன்னுடைய விமர்சனத்தைப் படைப்புகளின் வழியே செய்தார். தேவையான இடங்களில் விமர்சனத்தைக் கடுமையாகவும் வைத்தார். அவர் வாழ்வை நான்கு சுவர்களுக்குள் காணவில்லை மாறாகத் தெருவில் கண்டார்.

இதனால், அண்ணாவின் கதைகள் சராசரியான கதைகளாக இல்லாமல் கலகக் குரலாக இருந்தது. முதல் கதையிலிருந்து கடைசிக் கதை வரை இந்தக் கலகக் குரல் ஒலித்துக்கொண்டே இருந்தது. ஏனென்றால் வாழ்வினுடையதும் சமுதாயத்தினுடையதுமான நெருக்கடிகளில் இருந்து உருவானது அவருடைய கதைகள்.

அறிஞர் அண்ணா, தமிழ் மரபின் பிரதிநிதி என்பதால் தமிழர் வாழ்வு குறித்த மதிப்பீடுகளே அவருடைய கதைகள் என்றும் சொல்லலாம். கரு, அமைப்பு, நோக்கம், உள்ளடக்கம், வெளிப்பாட்டுத்திறன், ஆளுமை, மொழி போன்றவற்றை வைத்து அண்ணாவின் கதைகளை மூன்று காலக்கட்டமாகப் பிரிக்க முடியும். தொடக்கக் காலக் கதைகள் பசி, வறுமை, நோய், அறியாமை, சாதி மற்றும் பொருளாதார ரீதியிலான ஏற்றத்

தாழ்வுகள், உழைப்பு மற்றும் பொருளாதாரச் சுரண்டல்கள் போன்ற பிரச்சினைகளை நேரிடையாகவும் அப்பட்டமாகவும் பேசியதோடு அதற்கான தீர்வுகளையும் முன்வைக்கின்றன. பொதுவாகத் தமிழ் இலக்கியம் உலகப் பிரச்சினைகளையும் அவை உருவாவதற்கான காரணிகளையும் ஆராயும். ஆனாலும், முடிவை வாசகனுடைய தீர்மானத்திற்கு விட்டு விடும். இதற்கு நேர்மாறான குணத்தை அண்ணாவினுடைய தொடக்கக்காலக் கதைகள் கொண்டிருப்பது கவனத்திற்குரியது.

இடைக்காலக் கதைகள் பிரச்சினைகளை விரிவாகவும் ஆழமாகவும் ஆராய்ந்து, தீர்வை முன் வைப்பதற்குப் பதிலாக விவாதத்தையும் தர்க்கத்தையும் முன்வைத்தன. கடைசிக்காலக் கதைகளில் கருவுக்கு மட்டும் முக்கியத்துவம் தராமல் வடிவம், செய்நேர்த்தி, சொல்முறை, நுட்பம், செறிவு ஆகியவற்றிற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

பிற்காலக் கதைகளில் முதிர்ச்சியையும் தேர்ச்சியையும் காணமுடிகிறது. இதே காலத்தில்தான் ஒப்பீட்டு முறையிலான கதைகளையும் எழுதியுள்ளார். ஓர் எழுத்தாளனுடைய வாழ்க்கையில் வளர்ச்சிப் படிநிலைகள் தவிர்க்க முடியாதவை. இந்த வளர்ச்சிப்படி நிலைகள்தான் அந்த எழுத்தாளனுடைய எழுத்தின் வலிமையைக் காட்டுகிறது என்ற கோட்பாடு அண்ணாவின் கதைகளுக்கு மிகச்சரியாகப் பொருந்தும்.

அண்ணாவின் படைப்புகள் பழைய மரபுகளை உதறித்தள்ளிப் புதிய மரபுகளை ஏற்படுத்தின. திரித்துக் கூறுதல், சுற்றி வளைத்துப் பேசுதல் என்பது அண்ணாவின் இலக்கியங்களில் காண முடியாத ஒன்று. சிறுகதைகள், புதினங்கள், நாடகங்கள் என்ற எந்த இலக்கிய வகையைச் சார்ந்த படைப்புகளை எடுத்துக்கொண்டாலும் அவற்றில் எல்லாக் குணங்களும் சிறப்பாக இருந்தும், இலக்கிய விமர்சகர்கள் அவரது படைப்புகளைக் கொள்கை முழக்கங்களாகப் பார்த்ததின் விளைவு அவருடைய கதைகள் பரவலாகாமலேயே போய்விட்டன.

இலக்கிய விமர்சகர்கள் ஒரு படைப்பை அதனுடைய தரத்தை வைத்து மதிப்பிடாமல், அந்தப் படைப்பை எழுதிய எழுத்தாளனுடைய சாதி, சார்ந்துள்ள கட்சி, அவனுடைய பின்னணி போன்றவற்றை வைத்தே மதிப்பிடுகிறார்கள் என்பதால் நிகழ்ந்த துயரம் இது. ஆனால், விமர்சகர்களால் உதவாக்கரை என்று ஒதுக்கப்பட்ட அண்ணாவின் படைப்புகள்தான் இன்று அதிகமாகப் பேசப்படுகின்றன.

அண்ணாவுக்குத் தெளிவான நோக்கம் இருந்தது. அந்த நோக்கத்திலும் கொள்கையிலும் இருந்துதான் அவருடைய படைப்புகள் உருப்பெற்றன. அண்ணாவின் படைப்புகளில் வரும் கதை மாந்தர்களைப் பற்றி அறிந்து கொண்டாலே அவரின் நோக்கம் புலப்படும். அறிஞர் அண்ணாவின் சிறுகதைத்திறன் என்னும் நூலிற்கு மதிப்புரை வழங்கிய க.அன்பழகன், "எலும்பும் தோலுமாக நலியும் உழைப்பாளிகள், பட்டினியுடன் போராடும் பாட்டாளிகள், அரைவயிற்றுக் கஞ்சிக்கே திண்டாடும் உழவர்கள், குந்தக் குடிசையுமற்ற தாழ்த்தப்பட்ட மக்கள், பள்ளிக்கூடம் பார்த்தறியாத பிற்பட்ட மக்கள், வறுமையால் உடலை விலைபேச நேரிட்ட வனிதைகள், கிழவனுக்கு மாலையிட்டுக் கண்ணீரில் மிதந்த கன்னிகள், பணத்திமிரால் பகட்டுடன் திரிந்த உலுத்தர்கள், மதத் தலைவராய் மக்களை அடிமைப்படுத்திய மதோன்மத்தர்கள், சாதி ஆணவத்தால் தீண்டாமை வழிப்பட்ட கொடுமைகளைச் செய்த அக்கிரமக்காரர்கள், உலகுமாயை என ஊராருக்கு உபதேசித்து உடலை வளர்த்த கனபாடிகள், கதா காலட்சேபம் செய்து - மக்களை மயக்கி மூடநம்பிக்கையை வளர்த்த வீணர்கள், தெய்வபக்தியின் பெயரால் பாமரரைச் சுரண்டிய கபட வேடதாரிகள், கோயில் தர்மகர்த்தா, தம்பிரான், பூசாரி, அர்ச்சகர், சாமியார், சோசியர்,

மந்திரவாதி, ஊர்ப்பெரியதனம், நாட்டாண்மை என்னும் பலவகையில் மக்கள் மீது ஆதிக்கம் செலுத்தி அவர்களைக் கொடுமைக்கு ஆளாக்கிய சமுதாய விரோதிகள் முதலானோர் அவரது மனதில் பதிந்துவிட்டனர்."[1] எனக் குறிப்பிடுகின்றார். இக்கூற்று அண்ணா அவர்களின் இலக்கியப் படைப்பின் நோக்கத்தை தெளிவுபடுத்தும் சான்றாய் அமைகின்றது.

## அண்ணாவின் படைப்புகளில் சமுதாயச் சிக்கல்கள்

தமிழுக்கும் தமிழ்ச் சமுதாயத்திற்கும் கிடைத்த மிகப்பெரிய சொத்து அறிஞர் அண்ணா ஆவார். பன்முகப் புலமை கொண்ட அறிஞர் அண்ணா தனது படைப்புகளின் வாயிலாகச் செய்த புரட்சிகள் பல. 1934 ஆம் ஆண்டு முதல் இறக்கும் வரையில் அவ்வக்காலத்தில் நிகழ்ந்த நிகழ்வுகளை அவர் விளக்கிட முனைந்து தீட்டிய புனைகதைகள் பலவாகும். அவற்றுள் சமுதாயத்தில் நிலவி வரும் மூடநம்பிக்கை, அரசியல் மோசடி, பொருந்தா மணம், வறுமை, போலிச்சாமியார்கள், முதலாளித்துவம், புராணப்புளுகு போன்ற சமுதாயச் சீர்கேடுகளை அறிஞர் அண்ணாவின் புனைகதைகள் புலப்படுத்துகின்றன.

வாள் முனையை விடப் பேனா முனைதான் வலிமை வாய்ந்தது என்னும் பழமொழிக்கேற்ப, தான் வாழும் சமுதாயத்தில் வேரூன்றிக் கிடக்கும் தீமைகளையும் போலித்தனங்களையும் சிக்கல்களையும் எழுத்தில் வடித்துக்காட்டிப் பேனா முனையால் போராட வேண்டியது ஒரு எழுத்தாளனின் கடமையாகும். தமிழ் இலக்கிய உலகில் தனக்கென்று ஓர் இடத்தைப் பிடித்துள்ள அறிஞர் அண்ணா வாழ்ந்த காலத் தமிழ்ச் சமுதாயத்தில் பல்வேறு மூடப்பழக்கவழக்கங்களும் தீமைகளும் மலிந்து கிடந்தன. ஆகவே அவற்றைச் சுட்டிக்காண்பிக்கும் விதமாகச் சமுதாயக் கொடுமைகளை மையமாக வைத்து ஏராளமான இலக்கியங்களைப் படைத்தார். அழகுத் தமிழ் நடையில் அண்ணாவின் படைப்புகள் இதழ்களில் வெளிவந்த போது அதைப் படிக்க இளைஞர் பட்டாளம் காத்திருந்தது.

## தனிமனிதச் சிக்கல்கள்

தனிமனிதனின் மனப் போராட்டங்களைச் சித்திரிக்கும் சிறுகதைகள் தனிமனிதச் சிக்கலுக்கு உரியனவாகின்றன. இத்தகைய சிறுகதைகளில் நிகழ்ச்சிகளும், பாத்திரங்களும் ஒன்றோடொன்று கலப்பதில்லை. ஒரு பாத்திரம் அல்லது ஒரு சூழ்நிலையை மையமாக வைத்தே மனப் போராட்டங்கள் சித்திரிக்கப்படுகின்றன. சமுதாயக் கட்டுப்பாடு, சூழ்நிலை காரணமாக மனிதனுக்குள் உணர்ச்சிகள் அடைபட்டுக் கிடக்கின்றன. இவ்வுணர்ச்சிகளின் வெளிப்பாடு தனி மனிதச் சிக்கலுக்கு உரியதாகிறது. மனிதனின் உணர்வுகளைத் தத்துவ வகையில் வெளிப்படுத்தும் கதைகளும் இவ்வகைப்பட்டனவாகவே உள்ளன.

அறிஞர் அண்ணா, 'நாடோடி' என்னும் சிறுகதையில் ஊர் ஊராகச் செல்லும் வேலையில் இருக்கின்ற தனிமனிதச் சிக்கலை விளக்குகிறார். இதில், "அந்த நாலுநாள் நான் அலைஞ்சு திரிஞ்சது இருக்குங்களே, நாய் படாத பாடுபட்டிருக்கிறேன். நெல்லூர் எங்கே இருக்கு. அங்கு போயி மறுநாளே புறப்பட்டு, சித்தூர் போயி வருகிறேன். வழியிலே வேலூரைப் பார்த்துக்கிட்டு, மறுபடியும் ஆற்காட்டுக்குப் போயி, காஞ்சிபுரத்திலே ஒரு மணி நேரம் இருந்து, அந்த வேலையைக் கவனிச்சுக்கிட்டு, மறுபடியும் ஊருக்கு வந்தேன். நாடோடி மாதிரியாகச் சுத்தி இருக்கேன்."[2] எனச் சொல்லும் மேலாளர் மூலம் ஊர் ஊராகச் சென்று வேலைபார்க்கும் தொழிலாளர்களின் நிலையையும் அவர்களுக்கு ஏற்படும் உடல் மற்றும் உளச்சிக்கல்களையும் காணமுடிகின்றது.

மக்களுக்கு ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்க்க ஆண்டவன் வரமாட்டான். வேடிக்கை மட்டுமே பார்த்துக் கொண்டிருப்பான். தனக்கு ஆதரவாகப் பேசும்பொழுது மகிழ்ச்சியாகவும், இகழ்ந்து பேசும் போது கோபமும், மன்றாடும் போது இரக்கமும் கொண்டிருக்கும் ஆண்டவன் மக்கள் துயரப்படும்போது எவ்வித உதவியும் செய்வதில்லை. மக்களுக்கு மக்களே உதவிகளைச் செய்து கொள்ள வேண்டும். அதுவும் உதவும் மனிதர்கள் எதையாவது எதிர்பார்த்து தான் உதவுகின்றனர் உள்ளன்போடு உதவுவதில்லை என்ற கருத்தை வலியுறுத்தும் சிறுகதை 'ஆறுமுகம்' என்பதாகும். பணக்காரனால் ஏமாற்றப்பட்டுச் சொத்தை இழக்கும் ஏழைக் குடும்பத்திற்கு உதவ ஆண்டவன் வரவில்லை. மாறாகப் பிற மனிதர்கள் உதவிக்கரம் நீட்டுகின்றனர். இதனால் இழந்த சொத்தை மீண்டும் பெறுகின்றான். சொத்தைப் பெற்ற ஏழையிடம் அவனுக்கு உதவி செய்தவர்கள் உதவிக்குப் பலனாகப் பணத்தை எதிர்பார்க்கின்ற சூழலை, "ஏழையின் சொத்து திரும்பக் கிடைத்த பிறகு, அவன் களிப்புடன் காணப்பட்டான். எல்லாம் அவன் செயல்! என்று கூறி நின்றான். அவனுக்கு உதவியாக வந்தவர்கள், 'அதுசரி அப்பா அந்தக் கொடியவனிடமிருந்து, உன்னை மீட்டோமல்லவா? அப்பப்பா எவ்வளவு கடினமான காரியம்!' என்றனர். அநீதி நிலைக்குமா? ஆண்டவன், அக்ரமக்காரனை விட்டு வைப்பானா? என்றான் களிப்புடன் அந்த ஏழை. 'வேண்டியதைக் கொடுங்கள்' என்றனர் உதவி புரிந்தோர். 'நான் தருவதா? ஆண்டவன் உங்கட்கு நீண்ட ஆயுளும், நோயற்ற வாழ்க்கையும் குறைவற்ற செல்வமும் தருவார்' என்று ஏழை கூறினான். உதவி புரிந்தவர்களுக்குப் பொறுமை இல்லை. கொஞ்சம் கோபத்தோடு கேட்டனர், 'இருக்கட்டுமப்பா ஆண்டவன் கொடுக்கட்டும், நீ எடு' என்றனர்"[3] என விவரிக்கிறார் அண்ணா. உதவி செய்கின்றவர்களாலேயே சிக்கல் உருவாவதை இச்சிறுகதை எடுத்தியம்புகிறது. பத்திரிகை நடத்தி நட்டம் ஏற்பட்டு அதனால் மனநிலை பாதிக்கப்பட்ட ஒருவனைப் பற்றிய கதை 'கொக்கரக்கோ' எனும் சிறுகதையாகும். தொழில் நட்டத்தால் உருவான பிரச்சினையை இக்கதை கூறுகிறது. இவ்வாறு தனிமனிதனுக்கு ஏற்படும் சிக்கல்களையும் அண்ணாவின் படைப்புகள் இயம்புகின்றன.

## சமயச் சிக்கல்கள்

பண்டைத் தமிழருடைய சமயம் ஓர் அமைப்பாக உருவாகவில்லை. வாழ்வின் ஒரு கூறாகவே இருந்தது. கடவுள் வழிபாடு இருந்தது. ஆனால் அதன் பெயரால் போரோ பூசலோ விளைந்ததில்லை. சங்க மருவிய காலத்தில் சமயங்களால் நிகழ்ந்த மோதல்களைக் காணமுடிகிறது. புறச் சமயங்களான சமணம் பௌத்தம் ஆகியவற்றை அகச் சமயங்களான சைவமும் வைணவமும் எதிர்த்தன. சமண சைவப் போராட்டங்கள் உருவாயின. அதனால் மக்கள் பிளவுபட்டனர். அழிவுகள் நேர்ந்தன. விதியும் மூடநம்பிக்கையும் மக்களிடையே பரவின. தன்னைப் பற்றி நினைத்துப் பார்க்காத அளவுக்குக் குருட்டு நம்பிக்கைகள் தோன்றின. ஆரிய சமயமும் அதன் கொள்கைகளும் தமிழகத்தில் நுழைந்து மக்களை அடிமைப்படுத்தின. சமயம் மக்களை ஏமாற்றிச் சுரண்டிப் பிழைக்கும் கருவியாக அமைந்தது.

இந்தியாவில் சமயங்கள் ஏற்படுத்தும் பிரச்சினைகளைக் காலங்காலமாகக் கண்டுவருகின்ற நிலையில் வேற்றுமையில் ஒற்றுமை இந்தியா என மார்தட்டிக் கொண்டு இருக்கும் மக்கள் தங்கள் சமயத்திற்குப் பிரச்சினை என வரும்போது அம்மக்களிடம் ஒற்றுமை காணாமல் போய் வேற்றுமை மட்டுமே நிலவுகின்றது. இந்தியாவில் உள்ள ஒட்டுமொத்த மக்களையும் இவ்வகைக்குள் அடக்க முடியாது. இன்னும் சொல்லப் போனால் சமயவெறியர்களாலும், அரசியல் கட்சிகள் போன்றவற்றின் தூண்டுதலாலும், சமயங்களின் அடிப்படையை மக்கள் சரிவர அறியாததாலும், இப்பிரச்சினைகள் ஏற்படுகின்றன.

கல்வியறிவு வளர்ந்த இக்காலச் சூழலிலேயே பிறரின் தூண்டுதலால் எது உண்மை என ஆராய்ந்து பார்க்காமல் மோதல்கள் உருவாகின்றன எனில், கல்வியறிவில் மிகவும் பின்தங்கியிருந்த காலக்கட்டத்தில் பிறரின் தூண்டுதல்கள் எத்தகைய விளைவுகளை ஏற்படுத்தியிருக்கும் என்பதை உணரமுடிகின்றது. வைதீகச் சமயத்திற்குப் போட்டியாக புத்த சமயமும், சமண சமயமும், கிறித்தவ சமயமும், இசுலாமிய சமயமும் விளங்கின. அக்காலக்கட்டத்தில் பிற சமயங்களைப் பின்னுக்குத் தள்ளவும், அழிக்கவும் வைதீகச் சமயப் பிரதிநிதிகள் செயல்பட்ட விதத்தையும், பிற மார்க்கத்தைக் கடைபிடித்தவர்களுக்கு ஆள்பவர்களால் உண்டாக்கப்பட்ட சிரமங்களையும் எடுத்துக்கூறும் சிறுகதை 'பவழபஸ்பம்' ஆகும். இதில் வைதீகச் சமயத்தைச் சார்ந்த மருதவல்லி புத்த சமயத்திற்கு மாறி, புத்த சமயத்தின் பெருமைகளைப் போற்றி வளர்த்து வரும் செயலிலே ஈடுபடலாயினாள். மருதவல்லியோடு பல மக்களும் புத்த சமயத்திற்கு மாறினர். இதனால் ஆத்திரம் அடைந்த மன்னன் புத்த மார்க்கத்திற்கு மாறிய மக்களுக்குத் துன்பங்களை விளைவிக்கின்றான். அரசாட்சி செய்பவர்களால் புத்த சமய மார்க்கத்தைப் பின்பற்றும் மக்களுக்கு ஏற்படும் துன்பங்களையும் அதிலிருந்து மருதவல்லி எப்படி அவர்களைக் காப்பாற்றுகிறாள் என்பதையும் மையமாகக் கொண்டு எழுதப்பட்டது இச்சிறுகதையாகும்.

அறிஞர் அண்ணா 'ஒளியூரில் ஓமக்குண்டம்' என்ற குறும்புதினத்தில் புத்த சமயத்திற்கு எதிராக ஆரியத்தின் போக்கை விவரிக்கின்றார். இதில் புத்த சமயத்தினர் மீதும் அவர்கள் கொள்கைகளை ஏற்றுச் செயல்படும் இடங்கள் மீதும் நடைபெறும் கொலை வெறித் தாக்குதலை ஆரியத்தைப் பின்பற்றுபவர்கள் செய்கிறார்கள். ஆரியத்தைப் பின்பற்றியவர்கள் அதன் கொள்கைகள் பிடிக்காமல் புத்த சமயத்தின் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டு அதை நாடுவதால் ஆரிய மார்க்கத்தைப் பின்பற்றுபவர்களின் கோபத்திற்கும், இழி சொல்லுக்கும் ஆளாகின்றார்கள். இதில் புத்த சமயத்தின் பல்கலைக்கழகமாக விளங்கும் நாலந்தாவை வெடி கொண்டு இடித்துத் தள்ளத் திட்டமிட்டு அதில் வெற்றி பெறுகிறார்கள் ஆரிய மார்க்கத்தினர். இதை, "ஆரிய மார்க்கம் பிழைத்தது; பண்டிதரே, உம்மாலே நாலந்தா அழிந்தது. மலைமலையாகக் குவித்து வைத்திருந்த ஏடுகள் பிடி சாம்பலாகி இருக்கும். எந்த மன்றத்தில் அமர்ந்து அவர்கள் தமது மார்க்கத்தைப் போதித்து வந்தனரோ, அங்கேயே, பிணம் - பிணமா - வெந்து கருகிச் சாம்பலாயினர்."[4] என்ற வரிகள் இவ்விரு சமயங்களுக்கிடையே நிலவிய சிக்கல்களையும் அதனால் அப்பாவி மக்கள் பட்ட துன்பத்தையும் விளக்குகின்றன.

அறிஞர் அண்ணா நடைமுறை வாழ்வில் சமயத்தின் பெயரால் நடக்கும் கொடுமைகளைக் கண்டு கலங்கினார். சமயம், மக்களை முன்னேறவிடாமல் தடுத்து மூடநம்பிக்கைகளையும், சாதிப் பிரிவுகளையும், விதிக்கு அடிமையாகும் நிலையையும் உருவாக்கியதைக் கண்டு வருந்தினார். சமய வாழ்வில் இருப்போரின் இரட்டை வேடத்தை வெளிப்படுத்தினார். திராவிடச் சமுதாயம் ஆரியர்களால் அடிமைப்படுத்தப்பட்டு இருக்கும் துன்ப நிலையை வரலாற்றுக் கதைகள் மூலமாகவும் சமுதாயக் கதைகள் மூலமாகவும் படம் பிடித்துக் காட்டியுள்ளார். சமயப் புரட்டுகளை மட்டும் எடுத்துரைக்காமல் வாழ்வின் பல்வேறு நிலைகளிலும் மக்களை வாட்டி வதைக்கும் சமயத்தின் பன்முகக் கூறுகளின் தீங்குகளையும் சமயத்தைக் கட்டிக் காக்கும் சமயவாதிகளின் இழிசெயல்களையும் வெளிப்படுத்திக் காட்டியுள்ளார்.

## போலிச்சாமியார்கள்

சாமியார் வேடமிட்டு மக்களை ஏமாற்றிப் பணம் பறிக்கும் போலிச் சாமியார்கள் அக்காலச் சமுதாயத்தில் ஏராளம் பேர் இருந்துள்ளனர். சாமியார் வேடம் போட்டு, சொரூபானந்தசாமி என்று பெயரிட்டுக் கொண்டு நெல்லை மாவட்டத்தில் ஏழை மக்களை ஏமாற்றிப் பணம் பறித்த சொக்கலிங்கம் செட்டியின் வித்தைகளைத் 'தேடியது வக்கீலை' என்ற கதை விளக்குகிறது. சாமியார் வேடத்திலிருக்கும் ஒருவன் ஜோதி என்ற ஏழை விதவையை ஏமாற்றுகிறான். ஆனால் சமுதாயத்தில் அவனுக்கு நல்ல பெயர். இரண்டொரு மாதங்கள் சாமியார் வேடம், காணிக்கை குவியும், பூஜைகள் பெரிதாக நடக்கும். பிறகு எங்கோ வனாந்தரத்தில் தங்குவதாக வதந்திகள் பரவி விடும். ஆனால் அவனோ சொக்கலிங்கம் செட்டியார் என்ற பெயரில் பத்துமாதம் வைர வியாபாரம் நடத்துவான். ஏமாறுகிற ஆசாமிகள் இருக்கும் வரை ஏமாற்றுகிறவர்கள் இருந்துதான் தீருவார்கள். வேடதாரிகளின் பிடியில் இருந்து ஏழை எளிய மக்களைக் காக்கும் பொருட்டு இக்கதையில் இருதயநாதன் என்ற கதாபாத்திரத்தின் வாயிலாகச் சொக்கலிங்கம் செட்டியாரின் போலித் தனத்தை இச்சமுதாயத்திற்கு எடுத்துக்காட்ட விழைகிறார் அண்ணா. "புரட்டின்மேல் புரட்டுச் செய்து கொண்டு பூஜா மடங்களிலே அமர்ந்துள்ள இந்தப் பொய்யர்களைக் கூண்டோடு தொலைக்க வேண்டும் என்று எனக்கு ஆத்திரம் பிறந்தது."[5] என்ற இருதயநாதனின் கோபத்தின் காரணமாகத் தோன்றிய செயல்பாட்டின் விளைவாக எப்படிப்பட்ட துன்பங்கள் விளையும் என்பதை இக்கதையின் இறுதியில் இருதயநாதன் பித்தம் பிடித்தவனாகக் காட்டப்படுவதில் இருந்து அறிந்துகொள்ளமுடிகின்றது. போலித் தனத்தைக் கண்டறிந்து அதை இச்சமுதாயத்திற்கு எடுத்துச் சொல்வதில் இருக்கின்ற சிக்கலை இக்கதையின் வாயிலாக எடுத்துரைக்கின்றார் அறிஞர் அண்ணா.

ஆசிரமங்களின் மேன்மையை அறிந்துகொண்டவன் வறுமையில் சிக்கிக் கொண்டு வாழ வழியில்லாத மக்கள் அவ்வறுமையிலிருந்து மீள எந்தச் சமயத்தில் மார்க்கம் உண்டு எனக் கூறுங்கள் என மதுரைக்கு டிக்கெட் இல்லை என்ற சிறுகதையில் மதுரை என்ற கதாபாத்திரத்தின் வாயிலாகக் கேட்கிறார் அண்ணா. மக்கள் வாழவே வழியின்றி, அடுத்தவேளைச் சோற்றுக்கு என்ன செய்வது என்று சிந்திக்கும் வேளையில் மார்க்கத்தின் போதனைகளை எவ்வாறு செவிமடுப்பர் என்பது அண்ணாவின் கேள்வி. ஆகவே பசியின் கோரத்தைப் போக்கி விட்டு அதன்பின் தங்கள் மார்க்கத்தின் போதனைகளை மக்களுக்குப் போதியுங்கள் என்பது அண்ணாவின் வேண்டுகோளாக இங்கு அமைந்துள்ளது.

மடாதிபதிகள் புனிதமான சேவை என்ற பெயரில் மக்களை ஏமாற்றி வருகின்றனர். பக்தி எனும் சமயப் போர்வைக்குள் ஒளிந்து கொண்டு அநாகரிகமான செயல்களில் ஈடுபடுகின்றனர். இதனை, அறிஞர் அண்ணா 'மட மான்மீயம்' என்னும் நாடகத்தில், "மடாதிபதி : அம்சா! அழகான பெயர்! வசந்த மண்டபத்திலே சகல ஏற்பாடுகளும் செய்துவிடு. ரசபானங்கள் குறைவின்றி இருக்கட்டும். அம்சா! என்ன லாவண்யமான நாமதேயம்! என்னதான் அலங்காரம் செய்து கொண்டு சென்ற போதிலும், இந்தச் சடையும் முடியும் சனியனாகவன்றோ இருக்கும், விட்டகுறை, தொட்டகுறை போல, கன்னியின் கண்ணும் கருத்தும் கலங்குமோ, கச்சி ஏகம்பா!"[6] என்ற மடாதிபதியின் உரையாடல் மடாதிபதிகளின் ஒழுக்கக் குறைவைக் காட்டுகிறது. இவர்களால் சமுதாயத்தில் ஏற்படும் பிரச்சினைகளையும் இந்நாடகம் புலப்படுத்துகின்றது.

சாமியார் வேடமிட்டுப் பெண்களைக் காமப் பொருளாகப் பயன்படுத்தி வரும் போலிச் சாமியார்களையும் அவர்களால் இச்சமுதாயத்தில் ஏற்படும் அவலத்தையும் கூறும் சிறுகதை

‘யோகாப்யாசம்’. இதில் மடாலயங்களில் சாமியார் வேடமிட்டு மக்களை ஏமாற்றிவரும் மடாதிபதிகளைப் பற்றிக் கூறுகிறார் அண்ணா. மக்களும் எத்தனை முறை இதுபோன்ற போலிச் சாமியார்களிடம் ஏமாற்றம் கொண்டாலும் மீண்டும் மீண்டும் சென்று ஏமாறுவதை வழக்கமாகக் கொண்டுள்ளதை, “ஆண்டுக்கோர் முறையேனும், இத்தகைய இழிசெயல் புரியும் பரலோக ஏஜென்டுகளின் மோசடி வெளிப்படுத்தப்படுகிறது! எனினும் மக்களின் மனமயக்கம் ஒழிந்தபாடில்லை.”[7] என்ற அண்ணாவின் கூற்றின் மூலம் சமுதாயத்தில் சாமியார்களால் ஏற்படும் சிக்கல்களை உணரமுடிகின்றது.

பழைய நோட்டுக் கொடுத்தால் தங்கள் மந்திர சக்தியால் அதைப் போல ஒரு மடங்கு புது நோட்டுகளை வரவழைத்துத் தருவோம் எனக் கூறி மக்களை ஏமாற்றும் போலிச்சாமியார்களைப் பற்றிப் பத்திரிகையில் வந்த செய்தியை அடிப்படையாக வைத்துக் கொண்டு இயற்றப்பட்டது ‘எத்தன் திருவிளையாடல்’ நாடகம் ஆகும். இதிலும் போலிச்சாமியார்களை நம்புவதால் ஏற்படும் சிக்கலை எடுத்துக்காட்டுகிறார் அண்ணா.

மக்களை ஏமாற்றும் ஆசிரமங்களின் அவலநிலையை விளக்குவதோடு, போலிச் சாமியார்களின் போலித்தனத்தையும் ‘வேலைக்காரி’ நாடகத்தில் அண்ணா எடுத்துரைக்கும் பாங்கின் மூலம் சமுதாயத்தின் கீழ்நிலை வரை நிலவும் சிக்கலை அலசி ஆராய்ந்து வெளிப்படுத்தும் அண்ணாவின் படைப்பாற்றல் புலனாகும். இந்நாடகத்தில் வரும் ஆசிரமத்தின் நிலையை அண்ணா, “கடவுள் அருளுக்கு வழி காட்டப்படும் இடம் என்று பாமரர் நம்பும் அந்த இடம் காமவேள் நடனசாலையாக இருக்கக் கண்டோம். இளித்தவாயர்களுக்குப் பகலிலே உபதேசம்! இன்ப வல்லிகளுக்கு இரவிலே சரசமாம்! குருடனுக்குக் கோல் தேவையாக இருப்பதுபோல், ஊரை ஏமாற்றிக் குடி கெடுப்பவனுக்கு வேஷம் தேவைப்படுகிறது.”[8] என்று விளக்குகிறார். இதன் மூலம் மடங்கள் கடவுள் நெறி பரப்புவதற்குப் பதிலாகக் காம நெறி பரப்பிக் கொண்டிருக்கின்றன என்பதைப் படம்பிடித்துக்காட்டுகிறார் அண்ணா.

‘கடைசிக்களவு’ குறும்புதினம் மடாதிபதிகளின் காமச் சேட்டைகளை விவரிப்பதாகவும், அவற்றை மறைப்பதற்குக் கொலைகள் கூடச் செய்யும் நிலையில் மடங்கள் இருக்கும் அவலத்தை எடுத்துரைப்பதாகவும் அமைந்துள்ளது. “மனோரஞ்சிதம் - பஞ்சஜம் மடாதிபதியின் காமச் சேட்டைக்குப் பலியான பலரில் இருவர்”[9] என்ற கூற்றில் மடாதிபதிகள் தங்களை நம்பி வரும் பெண்களை ஏமாற்றி அவர்களைத் தங்களது காம இச்சைக்குப் பயன்படுத்தும் இழிநிலையைக் காணமுடிகின்றது. அறிஞர் அண்ணா இப்புதினத்தில் மடாதிபதிகள் பெண்களை நிர்வாணமாகப் படம்பிடித்து அவர்களை மிரட்டித் தங்களின் இச்சைகளுக்குப் பயன்படுத்தும் நிலையையும் கூறுகின்றார். அண்ணாவின் ‘அப்போதே சொன்னேன்’ குறும்புதினமும் போலிச்சாமியாரின் திருட்டுத்தனத்தைக் கூறுவதாக அமைந்துள்ளது.

## சாதியச் சிக்கல்கள்

ஆண்டாண்டு காலமாக அடிமைப்பட்டுக் கிடக்கும் மக்களைக் கீழ்சாதியினர் எனவும் தாழ்த்தப்பட்டவர்கள் எனவும் ஆதி திராவிடர்கள் எனவும் பல பெயர்களில் அழைத்தும் அவர்களை அடிமைகள் போல நடத்தியும் வருகின்ற சமுதாயம் இச்சமுதாயம். சமுதாயத்தில் நிலவும் இந்த அடிமை இன மக்களின் வாழ்வியல் சிக்கல்களைப் பல படைப்பாளர்களும் தங்களது படைப்புகளின் வழியாக வெளிப்படுத்தியுள்ளனர். அறிஞர் அண்ணாவும் தனது ‘தீட்டுத்துணி’ என்ற சிறுகதை வாயிலாகத் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஏற்படும் சிக்கலைக் கூறுகிறார். ஐயர் வீட்டில் வேலை பார்க்கும் அந்தோணிசாமி ஆதி திராவிட இனத்தைச்

சார்ந்தவன். கடுமையான உழைப்பாளி. ஐயரின் தாயார் இறந்து விடுகிறார். அவருக்குக் காரியங்கள் அனைத்தும் முடிந்தன. மறுநாள் மயானத்தில் சீலையைத் திருடியதாக அந்தோணிசாமி மீது குற்றம் சாட்டப்பட்டு மரத்தில் கட்டப்பட்டு விசாரிக்கப்படுகிறான். அடுத்த நாள் சீலை வந்தாக வேண்டும் எனத் தீர்ப்பாகி விடுகிறது. மறுநாள் துணிகளை வெளுத்து எடுத்து வந்த மாரிமுத்து கொண்டு வந்திருந்த துணிகளில் அந்தோணிசாமி திருடியதாகச் சொல்லப்பட்ட துணியும் இருக்கிறது. எது உண்மை என அறியாமல் தாழ்ந்த சாதியைச் சார்ந்தவன் என்ற ஒரே காரணத்திற்காக விசாரிக்காமல் தண்டனை கொடுக்கப்படுகிறது. தாழ்ந்த சாதியினருக்குப் பரிந்து பேச யாரும் முன்வராத சூழலையும் இக்கதை உணர்த்துகின்றது. பிராமணர்கள் மட்டுமே தாழ்ந்த சாதியினராகக் கருதப்படுபவர்களை இவ்வாறு எண்ணுவர் என்ற கருத்து தவறு. எந்த சாதியைச் சார்ந்த முதலாளிகளும் இப்படித்தான் நடந்து கொள்வர் என்பதனை, "அவன் அடிமை. ஐயர் அதிகாரம் பண்ணவும் அந்தோணிசாமி அடிபணியவும்தானே, பூமியில் பிறந்திருக்கின்றனர் இந்தத் தலை கர்வமும், திமிறும் அடங்கும் வேளை - சொல் தடுமாறிவிட்டது. யுகம் - என்றோ? ஐயர் மட்டும் என்ன, வேறு எந்த ஜாதி 'எஜமானன்' தான் பள்ளன் பறையன் வேலையில் பூரணத் திருப்திப்படுபவன். மனமார அன்பு காட்டுபவன்? இது பொய் எனில், அவ்வாறு இருப்பவன், கோடையில், 'கொட முறுட்டி'யில் எத்தனை உடப்பு எடுக்குமோ அத்தனை பேர், உண்மையில் உண்டு. பள்ளன் பறையன் மட்டும் கடமைக்குக் கால் பணிந்து தீர வேண்டும்."[10] எனக் குறிப்பிடுகின்றார். அண்ணாவின் இச்சொற்கள் சாதிகளால் ஏற்பட்ட இந்த அடிமைச் சமுதாயத்தில் வாழ்ந்த மக்களின் சிக்கல்களைப் புலப்படுத்துகின்றன.

சாதிய ஏற்றத்தாழ்வுகள் அற்ற சமுதாயத்தைக் காண விரும்பும் ஒவ்வொருவரும் சாதிக் கொடுமைகளை எந்த வகையிலாவது அனுபவித்து இருப்பார்கள் அல்லது அடுத்தவர்கள் அனுபவிக்கும் இந்தத் துன்பங்களை நேரிடையாகக் கண்டு இருப்பார்கள். அந்தச் சூழலில் இனி இதுபோல நடைபெற அனுமதிக்கக் கூடாது என்ற எண்ணம் கொண்டு செயலாற்றும் தன்மையைக் காணமுடிகின்றது. 'இருவர்' என்ற சிறுகதையில் வரும் காமாட்சி என்ற பெண் பருவமெய்தி ஆறு வருடம் ஆகியும் பணமில்லாதவர்கள் என்ற காரணத்திற்காக உறவினர்கள் யாரும் அவளை மணம் செய்து கொள்ள முன்வராத சூழலில், பிற சாதியைச் சேர்ந்த சுந்தரம் என்பவனுக்கு மணம் செய்து கொடுக்கின்றனர். அதுவரை அக்குடும்பத்தைக் கண்டுகொள்ளாத சமுதாயமும் உறவினர்களும், "நம் ஜாதி என்ன? அந்தச் சுந்தரத்தின் ஜாதி என்ன? அவர்களுக்கும் நமக்கும் கொள்வினை கொடுப்பினை கிடையாதே அவர்கள் முதலியார்தான் என்றாலும், எந்தத் தரத்தார்? அவர்களிடம் இவர்கள் சம்பந்தம் செய்து கொள்ளலாமா"[11] எனக் கூறி அக்குடும்பம் மீது சாதிக்கட்டுப்பாடு விதிக்கிறார்கள். தங்கையின் திருமண வாழ்வும் மகிழ்ச்சியாக அமையவில்லை. தான் விரும்பிய பெண்ணையும் சாதிக் கட்டுப்பாட்டின் காரணமாக மணம் செய்து கொள்ள முடியாது என்ற நிலையில் இரத்தினம் தனது தங்கை காமாட்சியுடன் தற்கொலை செய்து கொள்கின்றான். சாதியின் பிடியில் சிக்குண்ட சமுதாயத்தின் ஏளனப்பேச்சும் கட்டுப்பாடும் அண்ணன் தங்கை இருவரின் உயிரை வாங்கியது எனச் சாதியினால் உருவாகும் சிக்கலை இச்சிறுகதையில் அண்ணா எடுத்தியம்புகின்றார்.

ஓர் அலுவலகத்தில் வேலை பார்ப்பவர்களிடத்தில் இருக்கும் சாதிய ஒற்றுமை வேற்றுமைகளைப் பற்றி 'மேலதிகாரி' சிறுகதையில் அண்ணா விளக்கியுள்ளார். இக்கதையில் அலுவலகத்தில் வேலை பார்க்கும் பார்ப்பனர்களின் அதிகாரப் போக்கையும், பிற சாதியைச் சார்ந்தவர்கள் அவர்களுக்கு அடங்கி நடக்கும் போக்கையும் விவரித்துள்ளார். அலுவலக மேலதிகாரியாக வேலைபார்க்கும் உலகநாத முதலியார்

தன்னிடம் அலுவலக உதவியாளராக வேலை செய்யும் கச்சாபகேசனிடம் மரியாதையாக நடந்து கொள்வது அவர் பார்ப்பனர் என்ற ஒரே காரணத்திற்காகவே ஆகும். பார்ப்பனர்களைப் பகைத்துக் கொண்டு வேலை பார்க்க முடியாது என்ற சாதியச் சிக்கலை அண்ணா இச்சிறுகதையில் வரும் உலகநாத முதலியாரின் செயல்பாடுகள் மூலமும் கருத்துகள் மூலமும் உணர்த்துகின்றார்.

சாதியின் காரணமாகக் காதலை ஏற்க மறுக்கும் ஆடவரின் உள்ளத்தைப் பிரதிபலிக்கும் புதினம் 'சிங்களச்சீமாட்டி.' இப்புதினத்தில் மலர்க்கொடியை விரும்பும் சங்கரன் அவள் நாடகக்காரியின் மகள் என்று தெரிந்தபின் கொங்கு வேளாளர் குடியில் பிறந்த தான் நாடகக்காரியின் மகளைத் திருமணம் செய்து கொள்ள முடியாது என்ற முடிவுக்கு வருகின்றான். அதனால் மலர்க்கொடியை அவன் திருமணம் செய்து கொள்ள மறுக்கிறான். ஆனாலும் மலர்க்கொடியின் அழகில் மயங்கிய சங்கரன் அவளை எப்படியாவது அடைய எண்ணுகிறான். திருமணம் கூடாது; ஆனால் வைப்பாட்டியாக மலர்க்கொடியை ஆக்கிக்கொள்ளலாம்; சமுதாயம் அப்பொழுது தன்னைக் குறை கூறாது எனத் தீர்மானிக்கிறான். மலர்க்கொடியோ சங்கரனின் இம்மனமாற்றத்தை எண்ணி வேதனையுறுகின்றாள். "நான் ஒரு நாடகக்காரியின் மகள் என்ற காரணத்திற்காக என் மீது இவர் வைத்திருந்த காதல் எப்படி மாறுவது? என் தாய் நாடகக்காரி என்பதால் எனது இலட்சணத்திலே எது மாறிவிட்டது. என் உள்ளத்திலே இவர் என்ன தவறு இருப்பதாகக் கருதுகிறார். என்னே ஜாதிப்பித்து!"[12] என மலர்க்கொடியின் வேதனையையும் சங்கரனின் சாதிவெறியையும் இக்கூற்று உணர்த்துகின்றது. இப்படி சாதிவெறியர்களின் பிடியில் சிக்கித் தங்கள் வாழ்வை இழக்கும் பெண்களின் நிலையை இப்புதினத்தின் வாயிலாக அறிஞர் அண்ணா வெளிக்கொணர்கின்றார்.

## தீண்டாமை

இந்தியாவின் சமுதாய அமைப்பு சாதியை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது. உயர் சாதியினரின் மாற்ற முடியாத மனப் போக்கினால் தீண்டாமை ஒழிப்புச் சட்டம் இருந்த போதும் கிராமப் புறங்களில் அவ்வுணர்வு நீக்க முடியாத தளையாக உள்ளது. தீண்டாமையை எதிர்க்க முனைந்த பெரியார், தனிப்பட்ட மனிதர்களையோ இனத்தையோ எதிர்க்கவில்லை. மக்களைப் பிரித்தாளும் உணர்வின் தாக்கத்தால் தீண்டாமைக்கு ஆளாகிச் சிறுமைப்பட்டுக் கிடந்த மக்களின் பொருட்டு அவர் கிளர்ந்தெழுந்தார். அக்கிளர்ச்சி பார்ப்பனியத்தின் எதிர்ப்பாக உருவெடுத்தது. இது, "சாதி, மத, குல, கல்வி வேற்றுமைகளுடன் ஆண்-பெண் வேற்றுமைகளையும் படைத்து அவற்றை 3000 ஆண்டுகளாக நாட்டில் உலவ விட்டவர்களைப் புற்றுநோய் எனக் கொண்டு அந்தப் பாகத்தை அறுத்தெறிய வேண்டும்"[13] என்ற கருத்தின் மூலம் வெளிப்படுகிறது. இக்கருத்தின் ஆழம் அண்ணாவின் படைப்புகளில் வெளிப்படுவதைக் காணமுடிகின்றது.

அண்ணாவின் 'சந்திரமோகன்' நாடகத்தில் ஊர்ப் பொதுக் குளத்திலே குளித்ததாலே குளம் தீட்டுப் பட்டுவிட்டதாகவும், அந்தக் குளத்தின் புனிதத்தன்மை கெட்டுவிட்டதாகவும் கூறிப் பச்சை என்பவனை வைதீகக் கும்பல் தாக்கிக் கொடுமைக்குள்ளாக்கியது. உடலில் இரத்தக் கறையுடன் இருக்கும் பச்சையின் நிலையைப் பார்த்த ஆண்டி, "குளத்திலே நாய் தண்ணீர் குடிக்கிறதேடா நாய். நாம் என்ன நாயை விடக் குறைவா? மலம் தின்னும் நாயடா நாய். அது உரிமையோடு தண்ணீர் குடிக்கிறது குளத்தில். பச்சை, நாய்க்கும் கேடு கெட்டவனா? சேற்றிலே புரளுகின்ற எருமை குளித்தால் விரட்டவில்லை. மனிதன் தலைமுறை தலைமுறையாக மற்றவர்களுக்குப் பாடுபட்ட மேனி கருத்துப் போன சாதி நாம்.

நாம் குளித்தால் குளம் தீட்டாகிவிடுமா? என்ன அக்ரமம்? அடுக்குமா இந்த அநீதி?"[14] எனத் தீண்டாமையைப் பற்றிக் கோபத்துடன் கூறுவதாக அமைந்திருக்கும் கூற்று சமுதாயத்தில் நிலவுகின்ற தீண்டாமையின் கொடுமைகளைப் படம்பிடித்துக்காட்டுகின்றது.

## அரசியல் மோசடி

மக்களாட்சி முறையில் அனைவரும் சமம் என்ற கொள்கை இருந்த போதும் ஆளும் அரசியல்வாதிகள் சுகபோக வாழ்விலும், உழைக்கும் மக்கள் வறுமையிலும் வாடும் நிலை சமுதாயத்தில் ஒரு சாபக்கேடாக இருந்து வருகிறது. 'நடந்தது தான் நடக்கிறது' எனும் நாடகத்தில் எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் ஏழை மக்களுக்கு எதிரான அராஜகம், தொழிலாளர் மீதான அடக்குமுறை, விலைவாசி ஏற்றம் எனக் கடந்த கால ஆட்சியின் நீட்சியே தொடர்கிறது. இதனை, "ஏனா? புது ராஜா வந்ததும், பழைய கஷ்டம் தீருமென்று நம்பினார்கள். நடக்கவில்லை. ஆகவே மனம் நொந்து கூச்சலிடுகிறார்கள், ஐயா! இது நியாயமா? என்று"[15] எனும் பகுதி யார் ஆண்டாலும் மக்களுக்கு எந்த மாற்றமும் இல்லை என்பதை அறிஞர் அண்ணா சுட்டிக்காட்டியுள்ளார்.

பொது மக்களைக் காப்பாற்றுவதற்காகவும், அவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காகவும் உறுதிகொண்டு வரும் அரசியல்வாதிகள் செய்யும் செயல்கள், அரசியலின் தன்மையைச் சீர்கெட வைத்தலை அரசியல் பார்வை கொண்டு ஆராய்ந்துள்ளார் அறிஞர் அண்ணா. பாமர மக்களுக்கும் தம் கருத்தின் சாரம் சென்று சேரவேண்டும் என்ற நோக்கிலே தான் அவரது படைப்புகள் அமைந்துள்ளன. அரசியலின் புனிதத்தைக் கெடுக்கும் போலி அரசியல்வாதிகளைப் பற்றி 'பார்வதி பி.ஏ.' புதினத்தில் வரும் பார்த்திபன் வாயிலாக வெளிப்படுத்துகிறார். சாகும் வரையில் தனக்கென்று தனிவீடு கூட இல்லாத அரசியல் தலைவர்கள் வாழ்ந்து மறைந்த இந்த நாட்டில், இன்றைய அரசியல்வாதிகள் சொத்துச் சேர்ப்பதற்கென்று பதவிக்கு வருகின்றனர். பணத்திற்காக எத்தகைய இழிசெயலையும் செய்யத்துணிந்து விட்டனர். இதற்கு அமைச்சரவையும் ஒத்துழைப்பதாகக் குற்றம் சாட்டியுள்ளார் அண்ணா. இதனை, "மந்திரிசபையின் மந்த புத்தியினாலேயே, சதிச்செயல் புரியும் ஒரு கும்பலைக் கண்டுபிடிப்பது அசாத்தியமாகிவிட்டது. இந்தக் கட்சியைத் தொலைத்துவிட்டு, எங்கள் கட்சிக்கு ஆட்சி உரிமையைத் தந்தால் வெடிகுண்டு வீரர்களை அவர்கள் எங்கே ஒளிந்து கொண்டிருந்தாலும் சரி, நாங்கள் கண்டுபிடித்துத் தக்க தண்டனை தந்து, நிர்மூலமாக்குவோம். எங்களால் முடியும்; இந்தக் கோமாளிகளால் முடியாது"[16] என ஆட்சியைப் பெற அரசியல்வாதி எதனையும் தன் கட்சிக்குச் சாதகமாக்கிக் கொள்ளும் நிலையை இதில் சுட்டுகிறார். பத்திரிக்கைகளைக் கையகப்படுத்தி அதனைத் தம் புகழ்பாடும் நிறுவனமாக ஆக்கிக்கொள்வதை, பார்த்திபன் ரட்சகன் என்ற நாளிதழின் மூலம் மக்களுக்குத் தன்னை ஒரு நல்ல அரசியல் தலைவனாகக் காட்டிக்கொள்ளும் நிகழ்வைக் கொண்டு குறிப்பிடுகிறார். இந்நிகழ்ச்சி மூலம் போலி அரசியலுக்கு ஆதரவாகச் செயல்படும் பத்திரிக்கை உலகத்தைக் கடுமையாகச் சாடுகின்றார். இன்றைய நிலையிலும் இக்கருத்து இச்சமுதாயத்திற்கு மிக ஏற்புடையதாகவே இருக்கின்றது.

## முதலாளித்துவம்

தமிழ்ச் சமுதாயத்தில் ஏழை பணக்காரன், ஆண்டான் அடிமை நிலை நிறைந்து காணப்பட்டது. காலங்காலமாக ஏராளமான நிலபுலன்களை வைத்துக் கொண்டு செல்வச் செழிப்புடன் வாழும் பண்ணையார்கள் ஒருபுறம், அவர்களது பண்ணைகளில் பரம்பரை பரம்பரையாக அடிமை வேலை செய்து வாயில்லாப் பூச்சிகளைப் போல வறுமையில் உழன்று

வாழும் ஏழைகள் மற்றொரு புறம். ஏழையின் ஒரு சிறு ஆசையைக் கூட அவனால் நிறைவேற்றிக் கொள்ள முடியாத நிலையை மிகச் சிறப்பாக எடுத்துரைக்கும் அறிஞர் அண்ணாவின் சிறுகதை 'செவ்வாழை' ஆகும். பண்ணையாருக்குக் காலமெல்லாம் உழைக்கும் செங்கோடன். கால் வயிற்றுக் கஞ்சிக்கு அல்லல்படுபவன். அவனும் அவனது குழந்தைகளும் ஆயிரமாயிரம் கற்பனைகளோடு ஒரு செவ்வாழையை வளர்த்தனர். அது குலையிட்டதும், பக்குவமறிந்து குலையை வெட்டி, பதமாகப் பழுக்க வைத்துப் பிள்ளைகளுக்குக் கொடுக்க வேண்டுமென்று எண்ணிக் கொண்டிருந்தான் செங்கோடன். அவனும் குழந்தைகளும் பழத்தைப் பற்றிய இன்பக் கனவுளில் மூழ்கியிருந்த போது, பண்ணையாரின் கணக்குப்பிள்ளை சுந்தரம், இது பண்ணையாரின் மருமகளின் பிறந்தநாள் விழாவிற்கு வேண்டும் என்று கூறி வெட்டிச் சென்றான். செங்கோடனின் குடும்பமே கண்ணீர்க் கடலில் மூழ்கியது. ஓர் ஏழையின் வீட்டிற்கு ஒரு செவ்வாழைப் பழம் கிடைத்தற்கரிய புதையலைப் போன்று இருந்தது. பண்ணையாருக்கு இருக்கும் பணத்திற்கு அவர் லாரி லாரியாகப் பழம் வாங்கலாம்; எனினும் ஓர் ஏழையின் வயிற்றலடிப்பதில் அவருக்கு அளவுகடந்த மகிழ்ச்சி. செங்கோடனின் இல்லத்தில் வளர்ந்த செவ்வாழையை இழந்த வீட்டின் சூழலை அண்ணா விவரிக்கும் பொழுது, "செங்கோடனின் குடிசை அன்று பிணம் விழுந்த இடம் போலாயிற்று. இரவு நெடுநேரத்திற்குப் பிறகுதான் செங்கோடனுக்குத் துணிவு பிறந்தது வீட்டுக்கு வர! அழுது அலுத்துத் தூங்கிவிட்ட குழந்தைகளைப் பார்த்தான். அவன் கண்களிலே, குபுகுபுவெனக் கண்ணீர் கிளம்பிற்று. துடைத்துக் கொண்டு, படுத்துப் புரண்டான் - அவன் மனதிலே ஆயிரம் எண்ணங்கள். செவ்வாழையை, செல்லப் பிள்ளை போல் வளர்த்து என்ன பலன். . .! . . . . . . அந்த ஒரு குலையைக் காண அவன் எவ்வளவு பாடுபட்டான் - எத்தனை இரவு அதைப் பற்றி ஆசைக் காட்டியிருப்பான்! உழைப்பு எவ்வளவு! அக்கறை எத்துணை! எல்லாம் ஒரு நொடியில் அழிந்தன!"[17] என உழைப்பாளியின் துயரத்தை வடித்துக் காட்டுகின்றார். இவ்வாறு பற்பல சிந்தனைகள் மனதில் தோன்றினாலும் பண்ணையாரை எதிர்த்து நிற்கும் துணிவு மட்டும் தோன்றவில்லை. அக்காலச் சமுதாயம் அதனைச் செங்கோடனுக்குக் கொடுக்கவில்லை.

உழைக்கும் வர்க்கத்தினரிடம் முதலாளி வர்க்கம் நடந்து கொள்ளும் விதத்தைத் 'தனபால் செட்டியார் கம்பெனி' என்ற சிறுகதை தெளிவுபடுத்துகிறது. இச்சிறுகதையில் வரும் தனபால் செட்டியார் தன்னிடம் வேலை பார்க்கும் தொழிலாளர்களை மிகவும் ஆணவத்துடனும் அடிமைகள் போலவும் நடத்தும் மனப்பாங்கு கொண்டவர். ஆனால் குருக்களிடமும் பெண்களிடமும் செட்டியார் நடந்து கொள்ளும் விதம் தொழிலாளர்களிடம் நடந்து கொள்ளும் முறைக்கு முரணாக இருக்கின்றது. குருக்களும் செட்டியாரிடம் பணம் பெற்று வாழ்க்கை நடத்துபவர்தான். மற்ற தொழிலாளர்களும் செட்டியாரிடம் உழைத்துச் சம்பளம் பெற்று வாழ்க்கை நடத்துகின்றவர்கள் தான். ஆனால் செட்டியார் மற்ற தொழிலாளர்களிடம் நடந்து கொள்ளும் விதமும் குருக்களிடம் நடந்து கொள்ளும் விதமும் வேறுபடக் காரணம் சாதியத்தின் விளைவு ஆகும். செட்டியாரின் வீட்டில் வேலை பார்க்கும் கந்தனைச் சோம்பேறி எனக் கோபிக்கின்றார் செட்டியார். செட்டியார் கூறும் கந்தனின் சோம்பேறித்தனத்தை அண்ணா இவ்வாறு படம்பிடித்துக்காட்டுகிறார். "அந்தச்சோம்பேறி காலையிலே 4.20க்கு எழுந்திருந்தான், நடவு வேலையைச் சுருக்காக முடிக்க வேண்டுமென்று செட்டியார் சொல்லிவிட்டு வரச் சொன்னார் என்று உழவனிடம் போய்க் கூறிவிட்டு, ஒரே ஓட்டமாகத் தோட்டத்துக்குப் போனான், அங்கு மத்தியானத்துக்கு ஐயாவுக்கு ஆறு எளநீர் எடுத்துக்கொண்டு, கடைக்கு வரச் சொன்னான், அதைச் சொல்லிவிட்டு வருகிற வழியிலே, நெல்மண்டிக்கு போனான், சுமார் ஒரு பத்து வண்டிதான் வந்திருக்கு என்ற கணக்கு எடுத்துக் கொண்டான் எஜமானுக்குச் சொல்ல, குடிசைக்குப்

போனான், அங்கே கட்டை இல்லை, புளியவிரவு ஒரே முடிச்சா இருக்கு என்று குப்பி சொன்னாள். கோடாலி எடுத்து நாலு தட்டிப் போட்டுவிட்டு, ஒரு வெத்திலே காம்பு போட்டுக் கொண்டு, பழையபடி செட்டியார் பங்களா வந்து சேர்ந்தான். வண்டிக்காரனுக்கு ஐயா புறப்படப் போறாரு என்ற செய்தி கூறிவிட்டு, பிறகு வந்து கூறுகிறான் வண்டி வந்திருப்பதாக. செட்டியார் அந்தச் சோம்பேறியைக் கண்டித்துவிட்டு, மனைவி அறைக்குப் போகிறார். வெளியே வருகிறார் 11 மணிக்கு! வண்டி இதற்குள் மூன்று தடவை அவிழ்த்து அவிழ்த்துக் கட்டியாகிறது. சோம்பேறி கந்தன் குரோடன்ஸ்களுக்குத் தண்ணீர் ஊற்றி விட்டு, வேலி பக்கம் இருந்த குழியிலே மண்வெட்டிப் போட்டுச் சரிபடுத்தி விட்டு, விளா மரத்திலிருந்து பழம் பறித்து வீட்டுக்குள்ளே கொண்டு போய்ச் சேர்த்துவிட்டு, வியர்வையைத் துடைத்துவிட்டு, சாயத் துணியை உதறித் தலையிலே கட்டுகிறான், செட்டியார் கேட்கிறார் அவனை, என்ன ராங்கிடா உனக்கு! துணியை உதறுவதும், தலையிலே முண்டாசு கட்டுவதும், மாப்பிள்ளை போல, உலாத்துவதுமா இருக்கிறேயே தவிர, வேலை வெட்டி ஒழுங்காச் செய்யறியா? வரவர ரொம்பக் கெட்டுப் போய்விட்டே. உனக்கென்ன இங்கே இருந்து ஒழுங்கா வேலை செய்து கொண்டிருக்க இஷ்டமில்லையா?."[18] செட்டியாரின் இந்த ஆணவப் பேச்சு அடிமைச் சமுதாயத்தில் வாழ்ந்து கிடந்த மக்களின் வாழ்வியல் சிக்கலை எடுத்தியம்புகின்றது.

உழைக்கும் மக்களுக்கு அவர்களின் உழைப்புக்கு ஏற்ற ஊதியம் கிடைப்பதில்லை. ஆனால் அவர்கள் உழைப்பின் காரணமாக முதலாளி வர்க்கத்தினர் கொள்ளை லாபம் சம்பாதித்து செல்வச் செழிப்புடன் வாழ்கின்றனர். உழைக்கும் வர்க்கமோ அடுத்த வேலை உணவுக்கு அல்லல்பட்டு வாழும் வாழ்க்கையே வாழ்கின்றனர் என்ற கூலித் தொழிலாளர்களின் அவல நிலையை 'இம்சைக்கு ஆளான இலட்சியவாதி' என்ற சிறுகதை படம்பிடித்துக் காட்டுகிறது. இதில் அண்ணா, "கேட்கிறதா அந்தப் பெருமூச்சு, சுமக்க முடியாத பாரத்தைத் தூக்கினான் அவன், அதனால் அந்தப் பெருமூச்சு. அவன் வயிற்றுக்குப் போதுமான உணவுகூடக் கிடைக்காது. இந்த உழைப்பால்!"[19] என உழைப்பாளர்கள் படும் துயரத்தைக் காட்டுகிறார்.

அதேபோல 'ரொட்டித்துண்டு' என்னும் சிறுகதையும் உழைப்பாளர்களின் உழைப்பு முதலாளிகளை வளம் கொழிப்பவர்களாக ஆக்குதலையும் உழைக்கும் ஏழைகள் பசி பட்டினியில் வாடுபவர்களாக இருத்தலையும் உணர்த்தும். "எலும்புக் கூடாகிவிட்ட ஏழையை, ஏன் அப்பா, இப்படி இருக்கிறாய், என்று ஒருவன் கேட்க, என் சதையும் இரத்தமும் ஓநாயப்பருக்குத் தந்துவிட்டேன் என்று கூறுகிறானாம் ஏழை!"[20] எனக் கூறும் இடத்தில் முதலாளிகளைத் தொழிலாளிகளின் இரத்தத்தைக் குடிக்கும் ஓநாய்களாகக் காட்சிப்படுத்துகின்றார் அறிஞர் அண்ணா. இவற்றால் உழைக்கும் ஏழை மக்களின் துயரங்கள் புலனாகும்.

ஏழை மக்களின் வறுமையை வஞ்சகமாகப் பயன்படுத்தி அவர்களை அடிமைகளாக வைத்திருக்கும் முதலாளிகளையும், முதலாளித்துவத்தையும் மையமாகக் கொண்டு பல படைப்புகளைப் படைத்துள்ளார் அறிஞர் அண்ணா. தங்கள் முதலாளிகளுக்காகத் தன் குடும்பத்தை விட்டு அயராது பாடுபடும் தொழிலாளிகள் அம்முதலாளிகளாலேயே வஞ்சிக்கப்படுகின்றனர். தேவைப்படுகின்ற வரையிலும் பயன்படுத்தி விட்டுப் பின்னர் தூக்கி எறியப்படுகின்ற சாதனங்களைப் போல இங்கே ஏழை மக்கள் பயன்படுத்தித் தூக்கி எறியப்படுவதைக் கண்டு உளம் பதைக்கிறார். 'உடையர் உள்ளம்', 'தவளையும் மனிதனும்' போன்ற சிறுகதைகள் இத்தகையனவாகும். முதலாளிகளின் பிடியில் சிக்கியிருக்கும் ஏழை மக்கள் படும் துன்பங்களையும், அவர்களை முதலாளிகள் நடத்தும் விதத்தையும்

எடுத்துக்கூறுவதாக இச்சிறுகதைகள் அமைந்துள்ளன. ‘தவளையும் மனிதனும்’ என்ற கதையில் அமாவாசை தனது முதலாளிக்காகக் கடத்தல் தொழிலில் ஈடுபட்டுக் குண்டடிபட்டு, அவனும் அவனது மனைவியும் முதலாளியின் உதவியை நாடும்போது, முதலாளி தன் வேலையாளிடம், “நூறோ இருநூறோ கொடுத்து நாட்டு வைத்தியன் யாரிடமாவது கொண்டு போய்க்காட்டச் சொல்லு’ அவன் சம்சாரத்தை அனுப்பு அவன் கூட’ ஆசாமி ஏதாச்சும் இரகசியத்தை வெளியிட்டால் தொலைச்சிப்புடுவேன்னு சொல்லு. சரக்கு அவன் வீட்டுக் கிணற்றிலேதான் இருக்குது’ போலீசுக்குத் தகவல் கொடுத்தால், பத்து வருஷம் தீட்டிடுவாங்க. சொல்லிவை’”[21] எனக் கூறும் முதலாளியின் இரக்கமற்ற பேச்சைக் கேட்ட அமாவாசை தன் தவறுகளை உணர்ந்து திருந்தும் வேளையில் இறந்து விடுகின்றான். அவன் மனைவி பித்துப் பிடித்தவளாகிறாள். இவ்வாறு சமுதாயத்தில் முதலாளிகளின் பிடியில் ஏழை மக்கள் சிக்கித் தவிக்கும் நிலையை அறிஞர் அண்ணாவின் படைப்புகள் மூலமும், பாத்திரங்களின் வாயிலாகவும் அறியமுடிகின்றது.

## ஏழை பணக்காரன் நிலை

உலகில் வாழும் மனிதர்களில் மட்டுமே ஏழை பணக்காரன் வேறுபாடு உண்டு என்ற கருத்து தவறு. வீடுகளில் வளர்க்கும் நாய்களில் கூட இவ்வித வேறுபாடு உண்டு என்பதை எடுத்துக்காட்டும் சிறுகதை ‘இருபரம்பரைகள்’ என்பதாகும். நாய்களில் கூட பணக்காரர்களுக்குரிய நாய் ஏழைகளுக்குரிய நாய் என இருவிதமான நிலை உள்ளது என்பதைத் தனபால் செட்டியார் வீட்டில் வளரும் நாய்க்குச் செய்யும் பராமரிப்பு செலவு உணர்த்தும். தனபால் செட்டியார் வீட்டில் வளரும் அதே வகை நாயைப் பெற்று வளர்த்து வரும் சிங்காரம் அதைப் பராமரிக்க அதிகப்பணம் செலவு செய்கின்றான். இதனால் அவனுக்கும் அவனது மனைவிக்கும் சண்டைகள் ஏற்படுகின்றன. குடும்பத்தில் மகிழ்ச்சியற்ற சூழல் உருவாகின்றது. இறுதியாக அந்த நாய் விபத்தில் இறந்துவிடுகின்றது. சில வருடங்களுக்குப் பிறகு தெருக்கோடியில் பிறந்து கிடந்த ஒரு நாயை எடுத்து வளர்க்கின்றான் சிங்காரம். எதைப் போட்டாலும் சாப்பிட்டு விட்டு வீட்டிற்குக் காவல் கிடக்கும். பராமரிப்புச் செலவே கிடையாது. இதனால் சிங்காரம் வருமானத்தை மிச்சப்படுத்த முடிந்தது. குடும்பத்தில் சண்டைகள் இல்லாத மகிழ்ச்சியான சூழல் நிலவியது. இச்சிறுகதையில் தனது நிலையை உணராமல் அடுத்தவர்கள் இப்படி வாழ்கிறார்கள் தானும் இவ்வாறு வாழ வேண்டும் என்று எண்ணிச் செயல்படுவதால் ஏற்படும் பிரச்சினைகள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. வீட்டில் வளர்க்கும் பிராணிகளாலும் குடும்பங்களில் சண்டைகள் ஏற்படுகின்றன என்பதையும் இச்சிறுகதை உணர்த்துகின்றது. “மனிதர்களில் மட்டுமல்ல, சகல ஜீவராசிகளிலும், இரண்டு வகையான பரம்பரை இருப்பதை சிங்காரம் தெரிந்து கொண்டான்.”[22] என நாய்களைக் கொண்டே மனிதர்களுக்கு இருக்கும் வேற்றுமைகளை எடுத்துக்கூறுகின்றார் அறிஞர் அண்ணா. இதன்மூலம் அவர் தன் நிலைக்கு ஏற்ற வாழ்வே சிறந்தது என்ற தீர்வையும் சொல்லிச்செல்கின்றார்.

ஏழைகள், தனது வறுமைத்தனம் போகத் திருடவும் செய்வர் என்ற கருத்தை ஏழைகளே ஏற்றுக்கொள்ளும் படிச் செய்வதிலே செல்வக்குடி மக்கள் சிறந்தவர்கள். அவர்கள் எந்த தவறும் செய்யாத நிலையிலும் செல்வக்குடி மக்கள் தாங்கள் செய்யும் தவறையும் அவர்கள் மீது சுமத்தி அழகு பார்க்கும். ஏழைகளுக்கு என வாதாட வழக்கறிஞர்கள் யாரும் இல்லை என்பதை அறிந்துகொண்டு அவர்களைத் தொடர்ந்து வஞ்சிக்கும் மனம் படைத்த அதிகார வர்க்கத்தினரின் போக்கை விவரிப்பதாக, அண்ணாவின் ‘கண்ணாயிரத்தின் உலகம்’ என்னும் நாடகம் அமைந்துள்ளது. இந்நாடகத்தில், “இல்லாதவன் அகப்பட்டதை எடுத்துக் கொள்வான்! ஏழை திருடுவான்!! -

இது ஒப்புக்கொள்ளப்பட்டுவிட்ட உண்மை என்று ஏழையர் உலகினரே நம்பிக் கிடந்திடுவது கொடுமையினும் கொடுமை! அவர்களை அவ்விதம் நம்பும்படிச் செய்வதிலே செல்வர் உலகு வெற்றி பெற்றுவிட்டது."[23] என்ற அண்ணாவின் கருத்து ஏழைகள் செல்வக் குடிமக்களால் தொடர்ந்து வஞ்சிக்கப்படும் சமுதாயத்தைக் காட்டுகிறது.

**வறுமை**

பொருளாதாரம் தோற்றுவிக்கும் பிரச்சினைகளில் ஒன்று வறுமை. அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்ய முடியாதபோது ஒருவனை வறுமை வாட்டுகிறது. "சமூக அமைப்பில் தனிமனிதக் குடும்ப அமைப்பை வறுமை பாதிக்கிறது. வறுமை காரணமாக குடும்ப உறவுகள் சீர்கெட சமூக மதிப்புகள், அற மதிப்புகள் சிதைகின்றன"[24] என்று சு.வேங்கடராமன் வறுமை ஏற்படுத்தும் பாதிப்பு பற்றிக் கூறுகின்றார்.

'தீர்ப்பளியுங்கள்' எனும் சிறுகதையில் மகாலிங்கம் என்பவன் ஏழைக் குடும்பத்தைச் சார்ந்தவன். ஆனாலும் தனது இல்லற வாழ்வினை இன்பத்துடன் வாழ்ந்து வந்தான். சமுதாய நலனில் அக்கறை உடையவனாகவும், பிறரிடம் இரக்கம் காட்டுபவனாகவும் இருந்தான். பர்மாவில் இருந்து ஒருவர் தன்னிடம் பணம் இல்லாததை எடுத்துக்காட்டி, தங்கச் சங்கிலியைக் கொடுத்துப் பணம் கேட்கின்றார். அதைப் பெற்றுக் கொண்டு, மகாலிங்கமும் பணம் அளிக்கின்றான். பின்னர் தன் குழந்தைகளின் கல்விச் செலவிற்குப் பணம் கட்ட முடியாமல் இருக்கின்ற நிலையில், அந்தச் சங்கிலியை அடமானம் வைக்கச் செல்கின்றான். அந்த நகை போலி நகை என்ற காரணத்திற்காகக் கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்படுகின்றான். இவன் செய்த தவறு வயதான முதியவருக்கு உதவி செய்தது. தன் குடும்பத்தைப் பாராமல் பொது நலனில் அக்கறை கொண்டது. அதனால் அவன் குடும்பம் வறுமையால் சிக்கித் தவித்தது. இவ்வாறு இக்கதையில் மனிதநேயத்தின் காரணமாகப் பிறருக்கு உதவியதால் ஏற்படும் சிக்கல்களையும், அச்சிக்கல்களால் தோன்றும் வறுமையின் பாதிப்பினையும் அறிஞர் அண்ணா எடுத்துக்காட்டுகிறார்.

ஏழை மக்களிடம் யாருமே இரக்கம் காட்டுவதில்லை. மாறாக அவர்கள் மீது தங்கள் அதிகாரத்தையே செலுத்துகின்றனர். 'இரக்கம் ஒரு பயணம்' என்ற நாடகத்தில், "ஒடிந்த நாற்காலி, கிழிந்த பாய், அழுக்கடைந்த தலையணை, ஒழுக்குக் கூரை, அரைப்பட்டினி இந்த நிலைமையில் இருக்கும் எங்களிடம் இரக்கம் காட்டினவர்கள் யார்? யாரடா காட்டினார்கள்? ஏழையின் மனம் துடிப்பதை யார் சட்டை செய்தார்கள்"[25] எனும் கூற்றில் அறிஞர் அண்ணா ஏழைகளின் அவலங்களைப் புலப்படுத்துகிறார்.

நெசவாளர்களின் வறுமையைப் பற்றிக் கூறும் சிறுகதை 'சரோஜா ஆறணா' ஆகும். இச்சிறுகதை நெசவாளர்களுக்கு ஏற்படும் சிக்கல்களை ஆராயும் விதமாகவும், அவற்றிற்கான தீர்வையும் சொல்வதாக அமைந்துள்ளது. நெசவாளர்களின் வாழ்க்கை வறுமையில் வாட நெசவுக்குத் தேவையான நூலைப் பதுக்கி வைத்து நூல் தட்டுப்பாடு வரும்போது அதை விற்றுப் பணம் சம்பாதிக்கும் நெஞ்சுடையவர்களே காரணம் என்பதை, "ஆடை நெய்பவனுக்கு அவதி, ஆடை வாங்குபவருக்குக் கஷ்டம், ஆடைக்குத் தேவையான நூலை, அவசியமே இல்லாதவர்கள் வாங்கி அடைத்து வைத்து இலாபமடிக்கிறார்களே, இது என்ன கொடுமை! நூல் விலை இலாபப் போட்டிக்காரரால் ஏற்றப்பட்டும் இறக்கப்பட்டும் வருகிற அந்தச் சுழலிலே நெசவாளர் சிக்கிச் சிதைகின்றனர். குடும்பம் கதறுகிறது. இந்தக் கஷ்டம் எப்படி, எப்போது தீரும்."[26] என்கிறார் அறிஞர் அண்ணா.

இக்கதையில் நெசவாளர்கள் வறுமையின் காரணமாகத் தாங்கள் பெற்றெடுத்த குழந்தையையே விற்று வாழ வேண்டிய நிலைமையைக் காட்டுகின்றார். நெசவாளர்களின் துயர் துடைக்க எழுதுவதுடன் நின்றுவிடவில்லை அறிஞர் அண்ணா. 1953ஆம் ஆண்டு ஊர்தோறும் நெசவுத்துணிகளை எடுத்துச் சென்று 'துணி வாங்கலையோ துணி' எனக் கூவி மக்களிடம் துணி விற்றார். தன் இயக்கத்தைச் சார்ந்தவர்களையும் ஊர்தோறும் இதுபோல நெசவாளர்களுக்கு உதவச் செய்தார். இவ்வாறு சமுதாயத்தில் நிலவும் சிக்கலைத் தனது படைப்புகளில் பதிவு செய்வதோடும், அதற்குரிய தீர்வைக் கூறுவதோடும் மட்டுமல்லாமல் அச்சிக்கலைப் போக்கக் களத்தில் நின்று செயலாற்றும் தன்மையை இந்நிகழ்வு எடுத்தியம்புகிறது.

வறுமை மனிதனை எவ்வாறு உருக்குலைத்து விடும் என்பதை விவரிக்கும் சிறுகதையாக 'கலி தீர்த்த பெருமாள்' அமைந்துள்ளது. இதில், "ஐயோ பாவம்! சார்! இந்தப் பெரியவர் பேசினதைக் கேட்டிங்களா? ரொம்ப நல்ல பொம்பளையாம், இவங்க கஷ்ட காலமாம், தரித்திரமாம், பாவம், அதனாலேதான், இந்த அம்மா புருஷன் சோமு, இளைச்சி, உருமாறிக் கிடக்கின்றான். இந்தத் தங்கமான குணமுள்ள அம்மாவுக்கு சுபாவமே மாறிவிட்டதாம். பாபம் ஏழ்மையாலே, என்னென்ன மாறுதல் ஏற்பட்டுப் போகுது பாருங்கள்."[27] என வரும் உரையாடலின் வாயிலாக ஏழ்மை ஒருவனை உடல் இளைத்துப் போகும் நிலைக்கும், நல்ல குணவதியாக இருந்தவள் கோபக்காரியாக மாறும் நிலைக்கும் ஆளாக்கியிருக்கின்றது. வறுமை ஏற்படுத்தும் உளவியல் சிக்கலை இக்கதை விளக்குகிறது.

வறுமையால் தற்கொலை செய்து கொள்ளும் குடும்பத்தின் நிலையை எடுத்துக்காட்டுவதுடன், ஆட்சியாளர்கள் ஏழை மக்களின் வறுமையினைக் கண்டுகொள்ளாமல் மிக ஆடம்பரமான வாழ்க்கையில் ஈடுபட்டு வரும் நிலையையும் இருவேறு காட்சிகள் மூலம் வெளிப்படுத்தும் சிறுகதை 'இரு காட்சிகள்' என்பதாகும். இச்சிறுகதையில் வறுமையில் வாடும் திப்பையா தன் மனைவி மற்றும் இரண்டு மகள்களுடன் குடும்பத்தை நடத்த வருமானம் போதவில்லை. வறுமை அவர்களை வாட்டுகின்றது. இந்நிலையில் உயிரோடு இருப்பதைக் காட்டிலும் இறப்பதே மேல் என்று முடிவு செய்து தன் இரண்டு குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு குளத்தில் மூழ்கி இறக்கின்றான். கணவன் குழந்தைகளை இழந்த மனைவிக்கு உயிரோடு இருப்பது வேதனையைத் தருவதாக இருக்கின்றது. "பசிக்கிறது என்று பத்து வயதுப் பெண் பதறும்பொழுது, பசியெடுத்ததும் சிறு குழந்தை மழலை மொழியால் அதனைத் தெரிவிக்கும் பொழுது, அதனைக் கேட்ட திப்பையாவின் நெஞ்சம் என்ன பாடுபட்டிருக்கும்? யாழ்-குழல் ஓசையினும் இன்பமூட்டக் கூடியது கிள்ளையின் மழலைமொழி! ஆம் திப்பையாவின் நிலையில் உள்ள வறுமையாளர்களுக்கு இது விலக்கு. இன்பந் தரவில்லை; துன்பத்தையே பெருக்கிற்று; வேதனையையே வளர்த்தது."[28] என்ற அண்ணாவின் கூற்று வறுமையில் வாடும் குடும்பங்களின் நிலையை விளக்குகின்றது.

தான் பெற்ற பிள்ளைகளைக் கொல்லும் நிலையை உருவாக்கும் வல்லமையை வறுமை கொடுக்கிறது. குழந்தைகளைக் கொன்று பெற்றோர்களும் உயிரைவிடும் நிகழ்வுகள் இன்றளவும் நாட்டில் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. உயிரைப் பறிக்கும் வறுமையை ஒழிக்கப் பல ஆட்சியாளர்கள் வந்தாலும் அதை நிறைவேற்ற இயலவில்லை. இப்படிப்பட்ட வறுமை குடும்பங்களை சிதைக்கும் நிலையை அண்ணா தனது படைப்புகளில் எடுத்தியம்பியுள்ளார். அந்த வகையில் 'கொலைகாரி' என்ற சிறுகதை வறுமையின் காரணமாகத் தன் குழந்தைகளைக் கொன்று தானும் உயிரை மாய்த்துக் கொள்ளும் முன் ஊரார்களால் காப்பாற்றப்பட்டு கொலைகாரி என்ற பட்டத்துடன் நீதிமன்றத்திலே

குற்றவாளியாக நிறுத்தப்பட்ட ஒரு பெண்ணின் கதையைக் கூறுகின்றது. வறுமையில் உழன்று கிடந்தபோதும் அவளது கணவன் ஒவ்வொருவரின் காலைப் பிடித்து வேலை கேட்ட போதும் அதைக் கண்டுகொள்ளாத சமுதாயம் இன்று அவளைக் கொலைகாரி எனத் தூற்றுகிறது. இதனை, "வேலை கிடைக்காத கொடுமையைக் கூறினான், சீ, போடா தடியா என்று சீறி வீழ்ந்தது சமுதாயம். வாடி வதங்கிப் போய் இருக்கிற வயிற்றைக் காட்டி வாதாடினான், 'வீணனே வேறு இடம் தேடு!' என்று வெடுக்கென்று பேசிற்று சமுதாயம். மனைவி உண்டு என்று வேலைக்குக் கெஞ்சி நின்றான். 'மனைவி ஒரு கேடா' என்று கிண்டல் செய்தது சமுதாயம். பசியால் வாடும் இளஞ்சிறார் மூவர் உண்டு என்று தனக்குள்ள பொறுப்புணர்ச்சியை விளக்கி வேலை தேடினான், அப்பொழுதாவது இரக்கம் காட்டியதா இந்தச் சமுதாயம்? இல்லை! ஆனால், நீதி பேசமட்டும் அதன் நாக்கு நீண்டு விடுகிறது!"[29] எனப் பச்சம்மாளின் எண்ண ஓட்டத்தின் மூலம் அண்ணா இந்தச் சமுதாயத்தைப் பிரதிபலிக்கின்றார். இதுபோல வறுமையில் வாடும் குடும்பங்களின் பரிதாபக் குரலைச் சமுதாயமும் கண்டு கொள்வதில்லை, ஆட்சியாளர்களும் கண்டு கொள்வதில்லை என்ற சமுதாய அரசியல் சிக்கல்களை எடுத்துக்கூறுகின்றார்.

இத்தகைய கருத்தை வலியுறுத்தி இயற்றப்பட்ட சிறுகதை 'குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தினால்...' என்பதாகும். இச்சிறுகதையில் தந்தை தனது குழந்தைகளை வறுமையின் காரணமாக கொலை செய்த நிகழ்வைக் கூறியுள்ளார் அண்ணா. 'கொலைகாரி' சிறுகதையில் தாய் தனது குழந்தைகளை வறுமையின் காரணமாகக் கொலை செய்த நிகழ்வைக் கூறியிருப்பார். இவ்விரண்டு சிறுகதைகளுமே உண்மை செய்திகளை அடிப்படையாக வைத்து தீட்டப்பட்ட சிறுகதைகளாகும். 'கொலைகாரி' சிறுகதை 19.12.1948ல் 'மெயில்' பத்திரிக்கையில் வந்த வழக்கு விபரத்தை அடிப்படையாக வைத்து எழுதப்பட்டது. 'குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தினால்...' சிறுகதை ஈரோடு மாவட்டத்தைச் சேர்ந்த கருமகவுண்டன் பாளையத்தில் நடைபெற்ற உண்மை நிகழ்வைக் கருவாகக் கொண்டு படைக்கப்பட்டது. இச்சிறுகதைகள் சமுதாயத்தில் நிலவுகின்ற வறுமையினால் ஏற்படுகின்ற தாக்கத்தின் கொடுமையினை விளக்குகின்றன.

தாங்கள் பெற்ற குழந்தைகளையே வறுமை காரணமாகக் கொன்ற செய்திகளை இச்சிறுகதைகளின் வாயிலாக அறியமுடிகின்றது. ஆனால் தன்னைப் பெற்றெடுத்த தாயையே ஒருவன் கொன்றான் என்ற பத்திரிகைச் செய்தியை அடிப்படையாக வைத்துப் படைக்கப்பட்ட சிறுகதை 'ஒருவன்தான் பிடிபட்டான்' என்பதாகும். கோவை மாவட்டம் நாயக்கன் பாளையம் என்ற ஊரில் பதினேழு வயதுடைய நாச்சிமுத்து என்பவன் தன் தாய் வீரம்மாளைக் கத்தியால் குத்திக் கொலை செய்தான். அவனுக்கு ஆயுள் தண்டனை வழங்கப்பட்டது. இந்தச் செயலுக்குக் காரணம் எது? என்பது பற்றி ஆராயும் விதமாக அண்ணா இச்சிறுகதையைப் படைத்துள்ளார். அதில், "வேலையை இழந்த மகன்! வேறு கதியற்ற தாய்! இந்தக் குடும்பம், கொட்டும் வறுமையை எப்படிச் சமாளிக்கும்? பசி! பட்டினி! திகைப்பு! உலகமே இருண்டு கிடந்தது, அவ்விருவருக்கும்."[30] எனக் குற்றத்திற்கான காரணமாக வறுமையைக் கூறுகிறார் அண்ணா. இதில், "என் தாயாருக்கு என்னால் வாழ்வளிக்க முடியவில்லை. என்னால் மட்டுமே அந்தக் கடமையை உணர முடியும்."[31] எனத் தாயைக் கொலை செய்த மகனின் துயரத்தையும் சிறப்பாக விளக்கியுள்ளார்.

சமுதாயத்தில் இல்லாமை தோன்றும் போதுதான் திருடர்கள் தோன்றுகிறார்கள். அனைவருக்கும் உண்ண உணவு கிடைத்துவிட்டால் சமுதாயத்தில் திருடர்கள் தோன்றுவது குறைந்துவிடும். வறுமையே திருடர்களை உருவாக்குகின்றது என்பதை 'குற்றவாளிக் கூண்டுக்கு வெளியே' என்னும் சிறுகதை உணர்த்துகின்றது.

## மூட நம்பிக்கைகள்

மனித வாழ்க்கை நம்பிக்கையின் அடிப்படையில், பட்டறிவால் சிறப்பது. அதில் அச்சங் காரணமாகப் பிறந்த சில நம்பிக்கைகளே, ஆராய்ச்சிக்கும் அறிவியலுக்கும் இடந்தராத எண்ணங்களே, உண்மைக்கு மாறானவைகளே, சமுதாயத்தில் மூடநம்பிக்கைகளாகக் கல்லாதவர்களிடத்தும் கற்றும் எதனையும் ஆய்ந்து பார்க்காது கண்மூடிப் பின்பற்றுவோரிடத்தும் காணப்படுகின்றன. "மனிதனுக்குச் சில பொருட்களோ நிகழ்ச்சிகளோ விளங்காவிட்டால் அச்சமடைகின்றான். அறியாமையினால் எழுந்த இத்தகைய நம்பிக்கை மூடநம்பிக்கை எனப்படும்"[32]

"அறியாமையே மூடநம்பிக்கைக்கு அடிப்படையாகும். அது நம்பிக்கையை மேல்தளமாகக் கொண்டது. வீண் கனவே அதன் கோபுரக்கலசமாகும். அறியாமையென்ற தாய் பெற்ற குழந்தையே மூடநம்பிக்கையாகும்"[33] என்ற இங்கர்சாலின் கருத்து அண்ணாவுக்கு வழிகாட்டுவதாக அமைந்துள்ளது.

நாட்டு மக்களிடம் கடவுள் தொடர்பான மூடநம்பிக்கைகள் குடி கொண்டுள்ளன. பெரியாரின் வழிவந்த அறிஞர் அண்ணா இதை வன்மையாகக் கண்டித்தார். 'அவன் பித்தனா?' எனும் நாடகச் சித்திரத்தில் ஒருவன் வேண்டியது நிறைவேறாததால் ஆத்திரம் கொண்டு தெய்வச்சிலையைத் தாக்குகின்றான். இதனால் குற்றவாளியாக்கப்பட்டு நீதிமன்றத்திலே நிறுத்தப்பட்டுள்ளான். அந்நிலையில் நீதிபதிக்கும் அவனுக்குமான உரையாடலில் அறிஞர் அண்ணா,

"நீதிபதி : உன்னைக் கும்பிடக் கூத்தாடச் சொன்னது யார், பிறகு கோபித்துத் தாக்கச் சொன்னது யார்?

சில்ஹாட்வாசி : விளக்கமாகக் கூறட்டுமா? என்னைக் கும்பிடச் சொன்னது, என் மூடத்தனம்; அடிக்கச் சொன்னது என் ஆத்திரம்:"[34]

என்பர். கடவுளை நம்பி ஏமாற்றம் அடைந்த ஒருவன் நாத்திகனாக மாறும்போது இச்சமுதாயத்தால் பைத்தியக்காரன் என ஏசப்படுகின்றான். மக்கள் பஞ்சத்தால் பட்டினி கிடந்து உயிரை விடும் சூழலில் தனவான்கள் கடவுளுக்குத் தங்கக் குடையைக் காணிக்கையாகச் செலுத்துகின்றனர். சமுதாய ஏற்றத் தாழ்வையும் மனித நேயமற்ற தன்மையையும், கடவுள் என்னும் மூட நம்பிக்கையையும் பத்திரிகையில் வந்த உண்மை சம்பவத்தின் அடிப்படையில் அண்ணா இந்நாடகத்தில் பதிவு செய்துள்ளார்.

1943-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் வடநாட்டில் ஒரு கோவிலில் ஒரு வாலிபன் தெய்வபக்தியின் காரணமாகத் தன்னுடைய நாக்கை அறுத்துக் கொண்டான் என்ற சுதேசமித்ரன் இதழில் வெளிவந்த செய்தியைக் கருவாகக் கொண்டு எழுதப்பட்ட சிறுகதை 'நாக்கிழந்தார்' என்பதாகும். சமுதாயத்தில் இருக்கும் மூடநம்பிக்கைகளையும் அதனால் விளையும் சிக்கல்களையும் எடுத்துக்கூறும் சிறுகதையாக இது விளங்குகிறது. மூடநம்பிக்கையில் ஊறிக்கிடக்கும் நாட்டிலே எதை மக்கள் அதிசயமாகப் பேசுவர் என்பதையும், மக்களின் அறியாமையைப் பயன்படுத்திக் கொண்டு பணம் சம்பாதிக்கும் ஏமாற்றும் பேர்வழிகள், அவர்களின் சொகுசு வாழ்க்கை போன்றவை பற்றி விளக்குவதாக இக்கதை அமைந்துள்ளது. இக்கதையில் மக்கள் அதிசயமாக எண்ணுவதை, "ஒரு அதிசயம் தெரியமா? நமது ஊருக்கு ஓர் சாமியார் வந்திருக்கிறார். அவர் சாப்பிட்டுப் பத்து வருஷமாச்சாம். அவர் விபூதி மந்திரித்துக் கொடுத்தால் தீராத வியாதியே கிடையாதாம். ............... மாரி கோயில் பூஜாரி, குறிசொல்லும் அதிசயம், சாமியாடி மந்திரித்துக் கொடுக்கும்

எலுமிச்சையால் கரு உண்டாகும் அற்புதம், நாக்கில் வேல்குத்திக் கொண்டவனின் மகிமை என்ற இவைகளையே பிரமாதமாகப் பேசுவர்."[35] என அறிஞர் அண்ணா விவரிப்பர்.

மனதில் இருக்கின்ற கவலைகள் முகத்தின் வெளிப்பாடாய் அமைகின்றன. மனதளவில் கவலை கொண்ட ஒரு பெண்ணின் நிலை அவளை உடலளவில் பாதிப்பை ஏற்படுத்துகின்றது. ஆனால் மூடநம்பிக்கைகள் நிரம்பிய இச்சமுதாயத்தில் அப்பெண்ணுக்குப் பேய் பிடித்திருப்பதாகக் கூறி, கோயில்களுக்கு அழைத்துச் சென்று பூசாரிகளின் வேப்பிலையாலும், அவர் போடும் மந்திரங்களாலும் பேயை ஓட்டும் செயல்களில் ஈடுபடுகின்றனர். இச்செயல்கள் அப்பெண்ணுக்கு மேலும் மனதளவில் சிக்கலைத் தான் உருவாக்குமே தவிர தீர்வை ஏற்படுத்தாது. இது போன்ற மூடநம்பிக்கைகள் மக்களை இன்னும் அறியாமையிலேயே மூழ்கியிருக்கச் செய்யுமே தவிர முன்னேற்றப் பாதையில் இட்டுச் செல்லாது. அண்ணாவின் 'பேய் ஓடிப் போச்சு' என்ற சிறுகதையில் காதலனைப் பிரிந்த சோகத்தில் இருக்கும் செல்லாயியின் நடவடிக்கைகளைக் கண்ட பெற்றோர் அவளுக்குப் பேய் பிடித்திருப்பதாக எண்ணிப் பேயோட்டும் பூசாரியிடம் அழைத்துச் செல்லும் செயல் அக்காலச் சமுதாயத்தில் நிலவிய மூடநம்பிக்கைகளைக் காட்டுகின்றது. பேய் பிடித்திருப்பதைப் பற்றி, "மாமரத்துப் பிசாசு இலேசுபட்டதா? ஆமா! அந்தப் பய, தூக்குப் போட்டுகிட்டவன்; உசிரோட இருக்கச்சயே ரொம்பப் பொல்லாத பயலாச்சே! பிசாசு ஆனா கேட்கணுமா சேஷ்டையை!"[36] எனக் கூறும் மக்களின் கூற்று சமுதாயத்தில் நிலவுகின்ற மூடநம்பிக்கைகளை வெளிப்படுத்தும்.

நாட்டில் மழை பெய்யவில்லை என்றால் அதற்கான அறிவியல் பூர்வமான உண்மைகளை உணராமல் எதிர்மறையான சிந்தனைகள் தோன்றுவதற்குக் காரணம் சமுதாயத்தில் கடைபிடிக்கப்பட்ட மூடப்பழக்கவழக்கங்களே ஆகும். மழை பெய்யாததற்கு வருண பகவானின் கோபமே காரணம் என எண்ணி அவரைக் குளிர்விக்க வேள்விகளும், சடங்குகளும் நடத்தப்படுகின்றன. சமுதாயத்தில் நிலவுகின்ற இதுபோன்ற மூடநம்பிக்கைகளை அண்ணா தன் படைப்புகளில் பதிவுசெய்துள்ளார். காசியில் மழை வர வைப்பதற்காகச் சூரியனைக் கல்லால் அடிக்கும் சடங்கு முறை நடைபெற்றது எனத் தினமணி நாளிதழில் 1947 ஆம் வருடம் சூன் மாதம் 28 ஆம் தேதி வெளிவந்த செய்தியை அடிப்படையாக வைத்து நாட்டில் நடக்கும் மூடப்பழக்கவழக்கத்தை 'கதிரவன் கண்ணீர்' என்ற சிறுகதையில் அண்ணா சுட்டிக்காட்டுகின்றார்.

சாதகப் பலனை நம்புவதாலும், சாமியார் கூறுவதையே வேத வாக்காக எடுத்துக் கொள்வதாலும், மூடப்பழக்கவழக்கங்களுக்கு ஆதரவு நல்குவதாலும் ஏற்படும் சிக்கல்களை 'மூன்று கடிதங்கள்' என்னும் சிறுகதை மூலம் உணர்த்துகின்றார் அறிஞர் அண்ணா. இக்கதையில் மூடப்பழக்கவழக்கங்களின் மொத்த உருவமாக சுந்தர வாத்தியார் என்பவரைப் படைத்துள்ளார். இதில் வீட்டில் புதையல் இருக்கின்றது எனக் கூறும் சாமியாரின் பேச்சைக் கேட்டு ஐந்து வயதுப் பையனைப் பலியிடுகின்றான் சுந்தர வாத்தியாரின் மருமகன். அதனால் கைது செய்யப்படுகின்றான். தனது மருமகன் வீட்டிற்குச் சாமியாரை அனுப்பியது சுந்தர வாத்தியார்தான். சாமியாரின் வாக்கே தெய்வ வாக்காகக் கொண்டு மூடநம்பிக்கைகளில் திளைத்த குடும்பத்தின் நிலையை இச்சிறுகதை காட்டுகின்றது.

இந்தச் சமுதாயத்தில் திருமணம் ஆகிய சில காலங்களில் குழந்தை பெற வேண்டும். அப்படி இல்லையென்றால் சமுதாயம் அப்பெண்ணை வசைபாடியே வஞ்சம் தீர்த்துக் கொள்ளும். குழந்தை பெறுவது என்பது ஆண் பெண் இருவரையும் சார்ந்ததாகும். ஆனால் சமுதாயத்தில் குழந்தைப் பிரச்சினை என்பது பெண்ணுக்கு மட்டுமே உரியதாகப் பார்க்கப்படுகிறது. பெண்ணை மட்டுமே இச்சமுதாயம் இழிவுபடுத்தும். குழந்தை

பிறக்காமைக்கு ஆண் பெண் உடல் சார்ந்த பிரச்சினைகள் தான் காரணம் என்பதை அறியாத மக்கள் இன்றும் அரசமரத்தைச் சுற்றி வந்தால் குழந்தை உருவாகும், அந்தக் கோவில் சென்று வழிபட்டால் குழந்தை உருவாகும் எனச் சோதிடர்களின் பொய்யான வழிகாட்டுதல்களை நம்புவது சமுதாயம் சார்ந்த சிக்கல்களாகக் கருதப்படுகின்றன. இதை 'ஆற்றங்கரையிலே' என்ற நாடகத்தில், "எங்காத்துக்காரர் கிட்டே ஜோஸ்யர் சுப்ரமண்ய ஐயர் கூட, திருமுட்டம் போய் புஷ்கரணியில் ஸ்நானம் பண்ணி அஸ்வத்த நாராயண ஸ்வாமி கோயிலில் இருக்கும் அரசு சுத்தினா சந்ததி உண்டாகும்னு சொன்னாராம். அடுத்த சோமவார அமாவாசைக்குத்தான் திருமுட்டம் போய் அரசமரம் சுத்திட்டு அப்படியே பூவராக ஸ்வாமியையும் சேவிச்சுண்டு வரலாம்னு இருக்கேன், அவன் செயல் எப்படியோ?"[37] என இரு பெண்களின் உரையாடல் வழி அறிஞர் அண்ணா விளக்குகிறார்.

பழைய புராணங்கள் அதில் வரும் கதைகள் சமுதாயத்தில் ஏற்படுத்தும் சிக்கல்களை 'வழக்கு வாபஸ்' என்ற நாடகத்தின் வாயிலாக எடுத்துரைக்கிறார். இந்நாடகத்தில் புராணக் காலங்களில் செய்யப்பட்டு மேன்மையாகக் கருதப்பட்டு வந்தவை இக்காலத்தில் ஏற்றுக்கொள்ளப்படாதவையாக உள்ளதைச் சுட்டிக்காண்பிக்கின்றார் அண்ணா. மூடத்தனத்தைப் பரப்பும் கதைகள் சமுதாயத்தில் ஏற்படுத்தும் சிக்கலையும் வெளிப்படுத்துகின்றார்.

இதேபோல கும்பகோணத்தில் இருக்கின்ற மகாமகக் குளத்திலே குளித்தால் புண்ணியம் சேரும் என்ற மூடப்பழக்கத்தை 'கைலாயம் வேண்டாம்' என்ற நாடகத்தில் சாடுகிறார் அறிஞர் அண்ணா. சேரு நிறைந்த சாக்கடைத் தண்ணீரிலே குளிப்பதால் வியாதிகள் தான் தோன்றுகிறதே தவிர புண்ணியம் ஏற்படாது என்பதையும் கூட்டம் கூட்டமாக இந்தச் சாக்கடையிலே கிடந்து புரளும் மக்களின் மூடத்தனத்தையும் இந்நாடகத்தில் பதிவு செய்கிறார்.

## ஆணாதிக்கம்

கற்புக் கொள்கையைப் பெண்களுக்கு மட்டும் ஆண்கள் வற்புறுத்துவதற்கும் அவர்களே பெண்களின் கற்பிற்கு இடையூறு செய்துவிட்டு அவளைக் கற்பிழந்தவள் எனப் பழிப்பதற்கும் காரணம் ஆணாதிக்கமே ஆகும். இவ்வாறு பெண்களுக்கு மட்டும் கற்புக்கொள்கையை உருவாக்கக் காரணம், "மனித சமுதாய வரலாற்றில் ஏற்பட்ட சொத்துரிமை, தன் காலத்திற்குப் பின் தனக்குப் பிறந்த குழந்தைகளே அனுபவிக்க வேண்டும் என்று ஆணினம் எண்ணியதேயாகும்"[38] என்கிறார் எங்கெல்ஸ். ஆணின் பாலியல் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவே பெண்ணினம் வாழ்வதாக ஆடவர் சமுதாயம் எண்ணிக் கொள்கின்றது. அத்துடன், பெண்கள் தம்மைக் காட்டிலும் தாழ்ந்தவர்கள் என்ற எண்ணம் ஆண்களது மனதில் இயற்கையாகவே பதிந்துள்ளது. பெண்களை விடத் தாம் உயர்ந்தவர்கள் என்ற கருத்துடன் பொருளாதார, அதிகார, ஆதிக்கப் பலங்களும் சேரும் போது ஆடவர்கள் தம்மை மிகுந்த வலிமையுடையவர்களாக உணர்கின்றனர். ஆண் பெண் சமத்துவமற்ற சமுதாய அமைப்பினையே இவை காட்டுகின்றன. இவ்வாறு தலைமுறை தலைமுறையாக ஊறிவிட்ட ஆணாதிக்கத்தின் விளைவாகத்தான், பெற்றோர் பாதுகாப்பில் இருக்கும் போதும், அன்பற்ற கணவனுடன் வாழும் பொழுதும், ஆதரவற்றுத் தனித்து வாழும் பொழுதும், பெண்கள் பாலியல் வன்முறைகளுக்கு ஆளாகின்றனர்.

சமுதாயத்தில் தொடர்ந்து பெண்கள் அடிமையாக நடத்தப்படுகிறார்கள். இவ்வடிமைத்தனம் அவர்கள் பிறந்தது முதலே தொடர்கிறது. திருமணத்திற்குப் பிறகும்

கணவன் வாயிலாக அது மேலும் அதிகரிப்பதைக் காணமுடிகிறது. திருமணத்திற்கு முந்தைய நிலையைக் காட்டிலும் திருமணத்திற்குப் பிந்தைய நிலை பெண்ணை மிக மோசமான நிலையில் வைத்திருப்பதை, "பொறந்தேன், பொம்பளையா வளர்ந்தேன். வயசு வந்ததும் ஒருத்தன்கிட்ட பிடிச்சுக் கொடுத்தான் எங்க அப்பன். தாலி கட்டின அண்ணைக்கு மறுநாளே அவன் ஆரம்பிச்சிட்டான், அதிகாரம் பண்ண. நின்னா உதை, குனிஞ்சா குத்து; இவ்வளவுதான் கதையே. பொம்பளை கதை இவ்வளவு தானேம்மா இருக்கும்"[39] என்று 'ரங்கோன் ராதா' புதினத்தில் வரும் வேலைக்காரியின் கூற்று வெளிப்படுத்துகிறது. பெண்கள் என்றாலே அவர்கள் வாழ்வு சிக்கல்களைக் கொண்டதாக அமைந்துள்ளதால் அறிஞர் அண்ணா தனது படைப்புகளில் பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்களை மிகுதியாகப் படைத்துக் காட்டியுள்ளார்.

காலங்காலமாகப் பெண்களை அடிமைகளாகப் பாவிக்கும் சமுதாய அமைப்பு முறைகளால் பெண்கள் பல இன்னல்களுக்கு ஆளாகின்றனர் என்பதனை அண்ணா 'பாவையின் பயணம்' என்னும் நாடகத்தில், "பெண்களுக்கு ஆடவரால் ஏற்படும் கொடுமையை, கருணையான முறையினால் மட்டும் நீக்கி விட முடியாது. பெண்கள், திருமணத்தின் மூலம் வாழ்விலே ஒரு தோழமையை விரும்புகிறார்கள் - ஆனால் 'அடிமை'யாக இருக்கச் சம்மதித்தால் மட்டுமே, அவர்களுக்குக் குடும்பத்தில் இடம் கிடைக்கிறது. மற்ற எத்தனையோ பிரச்சினைகளிலே ஓரளவுக்கேனும், நீதி நேர்மையைக் கடைப்பிடிப்பவர்கள் கூட இந்த விஷயத்தில் மட்டும், அடக்கி ஆள்பவர்களாக, ஆளடிமை கொள்பவர்களாகவே இருக்கிறார்கள். தற்கொலை செய்து கொள்வது, தன்மானம் இழப்பது, தத்தளித்துக் கிடப்பது, - இப்படி ஏதேனும் ஒரு நிலையில் தான் பெண்கள் தள்ளப்படுகிறார்களே தவிர, அவர்களுக்கு வாழ்வில் இன்பம் - வாழ்வில் சமத்துவம் - உரிமை - தரப்படுவதில்லை - தருவதற்கான முறையில், நமது தர்மமோ, ஆட்சிமுறையோ, சமுதாய அமைப்பு முறையோ இல்லை."[40] எனச் சமுதாயத்தில் நிலவும் யதார்த்த உண்மையைக் கூறிப் பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்களை எடுத்தியம்புகின்றார்.

பெண்களைப் பேணிப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு ஆண் மக்களுக்குரியது. பெண் மக்கள் ஒழுக்கம் கெடுவதற்கு ஆண்களே காரணமாக அமைகிறார்கள். பெண்கள் கற்போடு இருக்க வேண்டுமானால் ஆண்களும் கற்பு நெறியை உறுதியாகக் கடைபிடிக்க வேண்டும். இல்லையானால் ஆண் ஆதிக்கச் சமுதாயத்தில் பெண்மைக்குப் பாதுகாப்பில்லை. ஆண் துணையில்லாததால் பெண்கள் வஞ்சிக்கப்படுவதைப் 'பிரார்த்தனை', 'அவள் விபச்சாரியானாள்' போன்ற சிறுகதைகளில் அண்ணா விளக்குகிறார். பெண்கள் வாயில்லாத பூச்சிகளாக ஆண்களால் கொடுமைப்படுத்தப்படுபவர்களாகவே காட்டப்பட்டுள்ளனர். 'பார்வதி பி.ஏ.'வில் வரும் பார்வதி, 'கலிங்கராணி'யில் வரும் நடனராணி, 'சிங்களச் சீமாட்டி'யில் வரும் மலர்விழி போன்ற படித்த பெண்கள் கூடத் தங்களது கற்பைக் காத்துக் கொள்ள இடையறாது போராட வேண்டிய சூழலிலேயே உள்ளனர். பெண்கள் காலங்காலமாக ஆண்களின் கொடுமைக்குப் பலியாவதைக் கண்டு யாரும் கவலைப்படாததை எண்ணி வருந்துகின்றார். இதனை, "நாய், பூனை இவைகளிடம் கூட இரக்கம் காட்டும் ஆடவர்களை நான் பார்த்திருக்கின்றேன். அப்படிப்பட்ட கருணாகரன் கூட மனைவியை அடித்துத் துன்புறுத்தும் பொழுது குறுக்கிட்டுத் தடுக்கமாட்டார்கள்"[41] என ரங்கம் வாயிலாக வெளிப்படுத்துகிறார்.

## பெண்ணியச் சிக்கல்கள்

சமுதாய அமைப்பில் ஆண்களைவிடப் பெண்கள் தாழ்ந்தவர்களாகவே கருதப்படும் நிலையுள்ளது. பெண்கள் வாழ்வில் பல்வேறு நிலைகளில் இடர்ப்பாடுகள் நேர்ந்து வருவதைக் காணமுடிகின்றது. காதல் உரிமையின்மை, திருமண ஏற்பாட்டில் இடர்ப்பாடுகள், வரதட்சணைச் சிக்கல், பெண் கற்பு மட்டும் வலியுறுத்தப்படுதல், மணவாழ்க்கை இடர்ப்பாடுகள், விதவை நிலை முதலான சிக்கல்கள் பெண்களுக்கு நேரிடுகின்றன. பெண்களின் வாழ்வில் இக்குறைகளை நீக்குவது சமுதாய மாற்றத்திற்கு உறுதுணையாக அமையும்.

அறிஞர் அண்ணா காலத்தில் பெண்கள் எல்லா நிலையிலும் அடிமைப்படுத்தப்பட்டிருந்தனர். பெண்கல்வி மறுக்கப்பட்டிருந்தது. அக்காலத்தில் பெண்கள் உயர்குலத்தினரின் அடக்குமுறைகளுக்குப் பயந்து வாழ்ந்தனர். வரதட்சணைக் கொடுமையில் வாடினர்; பொருந்தா மணத்தால் வாழ்வை இழந்தனர்; செல்வம் படைத்தவர்களால் வஞ்சிக்கப்பட்டனர்; ஆடவர் பன்மனைவியரை மணந்து கொண்டனர்; விலைமகளிர் வேதனையுற்றனர்; கைம்பெண்டிர் கலக்கமடைந்தனர். இவற்றையெல்லாம் தனது புனைகதைகளில் வெளிப்படுத்தியதோடு அமையாது அதற்கு மாற்று வழிகாணவும் புனைகதை வடிவத்தை அண்ணா பயன்படுத்தினார். பெண்களுக்கு ஏற்பட்ட சிக்கல்களை இச்சமுதாயம் உணரக் கதைகளைக் கருவியாக்கினார்.

பாதுகாப்பற்ற ஏழைக் குடும்பத்தில் பிறக்கும் அழகிய பெண்கள் மேட்டுக்குடிச் சமூகம் விரிக்கும் நய வஞ்சக வலையில் சிக்கிக் கற்பைப் பறி கொடுத்துக் கண்ணீர் வடிக்க நேரிடும் அவலத்தை எடுத்துரைக்கிறது 'சொல்லாதது' என்னும் சிறுகதை. ஆப்பக்காரி தனபாக்கியத்தின் மகள் சுந்தரி. அழகான பதுமை. அதனாலேயே லோகு முதலியார் மகன் கனகசபேசன் சுந்தரியை விரும்பினான். அவன் சுந்தரியின் அழகைத் தான் விரும்பினானே தவிர சுந்தரியின் உள்ளத்தை அல்ல. அதனால் அவன் எந்த நோக்கத்திற்காகச் சுந்தரியுடன் பழகினானோ அந்த நோக்கம் நிறைவேற சுந்தரி கர்ப்பமானாள். சுந்தரியின் வயிற்றில் பிள்ளையைத் தரிக்கச் செய்து விட்டு, இலுப்பப்பட்டி மிராசுதாரருக்கு மருமகன் ஆனான் கனகசபேசன். இது காலங்காலமாகப் பெண்களுக்கு ஏற்படும் சிக்கலாகும். இது சமகாலச் சமுதாயத்தின் எதார்த்தப் போக்காக இன்றும் நிகழ்ந்து வரும் பெண்களுக்கு எதிரான பாலியல் வன்கொடுமை ஆகும்.

பணத்தாசையாலும், பொறாமைக் குணத்தாலும், மூடநம்பிக்கையாலும் ஒரு பெண் தன் வாழ்வை இழந்த நிலையில் அப்பெண் சமுதாயத்தில் சந்திக்கும் பிரச்சினைகளை எடுத்துக்காட்டுவதாய் அமைந்துள்ளது 'ரங்கோன் ராதா' என்னும் புதினம். இப்புதினத்தில் கணவனின் பேராசையால் பல துன்பங்களுக்கு ஆளாக்கப்படுகிறாள் ரங்கம். பேய் பிடித்தவள் என ஊராரை நம்ப வைத்து அனைவரும் அவளை வெறுக்கவும், அவளைக் கண்டால் பயம் ஏற்படும்படியும் செய்கிறான் அவளது கணவன் தர்மலிங்க முதலியார். கணவனுக்கு எதிராகப் பல போராட்டங்களையும் நடத்திக் கொண்டிருந்த ரங்கம் தன் குழந்தை நலமாக வாழ வேண்டி, தான் இறந்ததாக ஊரை நம்ப வைத்துத் தன் குடும்ப வாழ்க்கையைத் துறந்து தலையை மொட்டையடித்துக் காவி உடை தரித்துப் பிச்சைக் காரியாக ஊரைவிட்டு வெளியேறுகிறாள்.

சமுதாயத்தில் ஆதரவற்ற இளம் பெண்கள் எந்த அளவிற்குத் துன்பத்தைச் சந்திக்கின்றார்கள் என்பதை ரங்கத்தின் வாழ்க்கையின் அடுத்த பகுதியின் மூலம் விளக்குகிறார் அண்ணா. காலத்தின் கட்டாயத்தால் விபச்சாரியாக்கப்பட்டு நாயுடுவால்

அவ்வாழ்க்கையிலிருந்து விடுபட்டு ரங்கோன் சென்று மீண்டும் ஒரு குழந்தைக்குத் தாயாகி ரங்கோன் குண்டு தாக்குதலால் தாய்நாடு திரும்பும் ரங்கம் தன் முதல் மகனைச் சந்திக்கிறாள். அவன் மூலமாக ரங்கத்தின் மகளான ராதாவிற்கு நல்வாழ்வு அமைவதாகக் கதை முடிகிறது. கதையின் பெரும்பகுதி ரங்கம் தன் வாழ்க்கையில் ஏற்பட்ட பல்வேறு நிகழ்வுகளைத் தன் மகன் நாகசுந்தரத்திற்கு விளக்கும் முறையில் அமைந்துள்ளது. தன் தாழ்நிலைக்குப் பேராசை பிடித்த கணவனும் மூடநம்பிக்கையில் மூழ்கிய சமுதாயமும் காரணமாக அமைந்ததை மிகத் தெளிவாக எடுத்துரைக்கின்றாள். ரங்கம் என்னும் இப்பாத்திரத்தின் வாயிலாகப் பெண்களின் அனைத்துத் துயரங்களையும் வெளிப்படுத்துவதுடன் ஒரு பெண், சமுதாயத்தை நோக்கிக் கேட்க விரும்பும் கேள்விகளையும் மிக அழகாக அண்ணா வெளிப்படுத்துகிறார். "சொந்த வீட்டிலேயே கைது செய்யப்பட்டேன். ஒரு குற்றமும் செய்யாத நான், எவனோ பூஜாரி, குடிவெறியில் எவனோ உளறினால், அதற்காக என்னை இப்படிக் கொடுமை செய்வதா? பெண் இனத்தின் தலைமீது இருக்கும் இந்தப் பெரிய ஆபத்தைப் பற்றி யார் கவலை எடுத்துக்கொள்கிறார்கள்? உலகிலே, எதை எதையோ சீர்திருத்தம் செய்வதாகப் பேசிக் கொள்கிறார்கள். என்னென்னவோ கொடுமைகளை நீக்க வேலை செய்கிறார்கள். இந்தக் கொடுமை இருக்கிறதே, ஆண், பெண்ணைப் படுத்தும்பாடு, இதனை நீக்குவதற்கு யார் வேலை செய்கிறார்கள். .......... குடியனிடம் குணங்கெட்டவனிடம் சிக்கிய பெண்கள், எவ்வளவு பாடுபடுவார்கள்! நமது ஊர்களிலே பார்க்கிறோமே இந்தக் கோரத்தை, குடித்துவிட்டுக் கூத்தாடும் புருஷனுக்கு வாழ்க்கைப்பட்ட பெண்கள் வடிக்கும் கண்ணீரை யார் கவனிக்கிறார்கள்? அவள் வாயாடி, புருஷனுக்கு அடங்குவதில்லை. அவன்தான் குடிகாரன் என்று தெரியுமே, அதற்கேற்றபடிதானே இவள் நடந்துகொள்ள வேண்டும் என்று, பெண்ணுக்குப் புத்தி கூற வருவார்களே தவிர புருஷனைக் கண்டிக்கத் துணியமாட்டார்கள்."[42] என ரங்கம் கூறுவதிலிருந்து பெண்களின் வாழ்வில் சந்திக்கும் துன்பங்களை அறியமுடிகின்றது. பெண்களுக்கு ஏற்படுகின்ற அவலநிலைகளைப் போக்குவதற்கு யாரும் முன்வராத சமுதாயச் சூழலையும் காணமுடிகின்றது. தவறு செய்பவர்கள் ஆணாக இருந்தாலும் பெண்ணையே குற்றம் சாட்டும் சமுதாயத்தின் அவலநிலை இத்தகைய பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்களுக்குக் காரணமாகின்றது என்பதை இப்புதினத்தின் வழியாக உணரமுடிகின்றது.

அண்ணாவின் படைப்புகளில் பெண்கள் சார்புநிலையில் உள்ளவர்களாகவும், ஆண்களின் காதல், காம இச்சை, இன்ப நுகர்வு போன்றவற்றிற்குப் பலியாகின்றவர்களாகவும் படைக்கப்பட்டுள்ளனர். தான் விரும்பும் வாழ்வை ஏற்படுத்திக் கொள்ள முடியாத சூழலில் பெண்கள் இருந்துள்ளனர் என்பதை அண்ணாவின் பல படைப்புகள் கூறுகின்றன. அவ்வகையில் 'குமாஸ்தாவின் பெண்' என்ற புதினத்தில் குமாஸ்தாவின் மகளாக வரும் காந்தா தான் விரும்பிய சோமுவிடம் தன் காதலைச் சொல்கின்றாள். ஆனால் சோமு அதனை ஏற்கவில்லை. மேலும் காந்தாவை இழிவாகப் பேசிக் கேலி செய்கின்றான். இதற்குப் பதிலாகக் காந்தா கூறும் சொல் பெண்ணினத்தின் குரலாகவே அமைந்துள்ளது. "ஒரு பெண் தன் உள்ளன்பை எடுத்துக்கூறியும் அது கேலி செய்யப்படுவது கண்டால் பிறகு உலகில் ஏன் உயிரோடு இருக்க வேண்டும்? ..... சமைப்பதும், படுப்பதும், அழுவதும், கண்களைத் துடைத்துக் கொள்வதும் இவைகளே என் நித்திய கர்மங்கள் .... கூனோ, குருடோ, செவிடோ, ஊமையோ யாரோ ஒருவனுக்குப் பெண்டாகி அவனிடம் சோறு பெற்று, சாவு வந்ததும் சுகம் பெறுவதற்காகக் காத்துக்கொண்டிருக்கும் பெண் தான் மிச்சம்"[43] என்று அந்நாட்களில் நாட்டிலிருந்த

பெண்களின் நிலையினையும் தாம் விரும்பும் வாழ்வைப் பெறுவதற்குத் தடையாயிருந்த சமுதாயச் சிக்கல்களையும் எடுத்துரைக்கின்றார்.

வறுமையில் வாடி, பண்ணையார்களுக்கு அடிமைகளாக வாழும் குடும்பங்களிலுள்ள பெண்களின் வாழ்க்கை கண்ணீர்க் கதையாகத்தான் இருந்தது. இதனை அண்ணாவின் 'குமரிக்கோட்டம்' என்னும் கதை விளக்குகிறது. இதில் பரம பக்தனாகக் காட்சியளிக்கும் வயதான குழந்தைவேல் செட்டியார், கோவில் பணிக்காக வந்திருக்கும் ஏழைப் பெண்ணான குமரியை ஏமாற்றிப் பாழ்படுத்திவிடுகின்றார். அவளை ஊரறியத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று குமரியின் அண்ணன் சொக்கன் போராடிய போது, "நான் வைசிய குலம். ஊருக்கெல்லாம் ஜாதியாச்சாரத்தைப் பற்றிப் பேசுபவன். . . . . . . பரம்பரை பரம்பரையாக வாழ்ந்த குடும்பம். எங்கள் குடும்பத்தில் ஜாதியை விட்டு வேறு ஜாதியில் கல்யாணம் செய்வதில்லையே"[44] எனக் கூறித் திருமணம் செய்து கொள்ள மறுக்கிறார். இதனால் அப்பெண்ணின் வாழ்வு கேள்விக்குரிய ஒன்றாக ஆகின்றது. இப்பெண்ணை அவர் மணக்க முன் வராத சூழலில் அப்பெண்ணுக்கும் அவள் சார்ந்த குடும்பத்திற்கும் ஏற்படும் சிக்கல்களை இக்கதையில் காட்டுகிறார்.

## வரதட்சணைக் கொடுமை

முரண்பட்ட பொருளாதார நிலையையும், பிற்பட்ட மரபையும் கொண்ட சமுதாய அமைப்பில் ஒரு பெண்ணின் வாழ்க்கை அவள் பெற்றுள்ள உடைமை நிலையை வைத்தே அமைகிறது. பொருளில் மிகுந்தவர் சிறக்கிறார். குறைந்தவர் ஒதுக்கப்படுகிறார். வரதட்சணைக் கொடுமையால் ஏழைப் பெண்களின் வாழ்க்கை கண்ணீரோடு கரைகிறது. பெற்றவர்களும் அவ்வேதனையில் கரைகின்றனர். பெண்ணைப் பெற்றவர்களைப் பெரிதும் கலங்கச் செய்வது இக்கொடுமை. எழில் நிறைந்திருந்தும் ஏழ்மை காரணமாக உரிய காலத்தில் திருமணம் நடைபெறாது பல பெண்கள் அல்லலுறுகின்றார்கள். இன்பமான இல்லற வாழ்விற்குத் துன்பமாக அமைந்திருப்பது இந்தச் செயல். மணமகன் மருத்துவரானால், பொறியாளரானால், அரசு அலுவலகத்தில் பணிபுரிபவராக இருந்தால் அவருடைய தகுதிக்கேற்ப வரதட்சணை தரவேண்டுமென்ற அவலநிலை உள்ளது. இக்கொடுமையைக் கண்டிக்காத அறவோர் இல்லை. ஆயினும் இப்பழக்கம் வளர்ந்து கொண்டே வருகின்றது. "திருமணத்தின் போது வரதட்சணையை ஒரு நியதியாகக் கொள்ளும் இளைஞன் அவனது கல்வியையும், நாட்டையும், பெண்மையையும் பழிப்பவனாகின்றான்"[45] என்று காந்தியடிகள் கூறியுள்ளார். சமுதாயத்தில் திருமணம் என்பது வரதட்சணையால் தன் புனிதத் தன்மையை இழந்து கேவலமான வணிக நிலைக்கு மாறிவிட்டது. வரதட்சணை பற்றி 'மாப்பிள்ளை விலை' என்ற தலைப்பில் பாரதி, "மாப்பிள்ளைகளோ உயர்ந்த கிரயங்கள் கொடுத்தாலொழிய அகப்படுவதில்லை. முக்கால்வாசி குடும்பத்தார் நித்திய ஜீவனத்துக்கு வழியில்லாத ஏழைகள். நாலைந்து பெண்களைப் பெற்றுவிட்டால் இந்த ஏழைகள் என்ன செய்வார்கள்?"[46] எனக் குறிப்பிடுவது அவர் காலச் சமுதாயத்தைப் பிரதிபலிக்கும்..

திருமணத்தில் வரதட்சணையும் சீர்வரிசையும் குறைந்து விட்டால், மனைவியைப் பிறந்த வீட்டிற்கு அனுப்பி மீதமுள்ள வரதட்சணையைப் பெற்றுக்கொண்டுதான் வரவேண்டும் என அனுப்பிக் கொடுமைப்படுத்தும் நிலையை, 'சோணாசலம்' என்ற கதை விளக்குகிறது. இக்கதையில், வரதட்சணை குறைவாகக் கொடுத்த பெண்ணின் தந்தையிடம், "வருஷம் ஏழானாலும் சரி, சீர் சரியாகச் செய்தாலொழிய உன் மகளை நான் வீட்டிக்கு அழைத்துச் செல்ல முடியாது"[47] என்று கொக்கரிக்கும் மருமகனான தீனதயாளனுக்குக் கைவிலங்கிட

அக்காலத்தில் காவலர்கள் இல்லை. திருமணமாகியும் மூன்று வருடங்களாகப் பிறந்த வீட்டில் கண்ணீர் வடிக்கும் மகளுக்கு எப்படிச் சீர் வரிசை செய்வது என்று தெரியாமல் தன் முயற்சிகள் எல்லாம் தோற்றுவிட்ட நிலையில் திருட முயற்சிக்கின்றான் சோணாசலம். கலெக்டர் வீட்டுக் குழந்தையின் சங்கிலியைத் திருடுகின்றான். வரதட்சணைக் கொடுமையால் வாழ வேண்டிய இளம் பெண்களின் வாழ்வு கருகிப் போவதோடு, பெற்றவர்களும் தன்மானமிழந்து தகாத செயல்களில் ஈடுபட வேண்டிய சூழல் ஏற்படுகின்றது என்பதை இக்கதையின் மூலம் உணர்த்துகின்றார் அண்ணா.

அதே போல நாடகச் செல்வர் டி.கே.சண்முகம் ஈரோட்டில் நடத்திய 'குமாஸ்தாவின் மகள்' என்ற நாடகத்தை அண்ணா பார்த்தார். அந்நாடத்தின் முடிவு அவருக்கு மனநிறைவைத் தரவில்லை. எனவே 'குமாஸ்தாவின் பெண் தான்' அல்லது 'கொலைகாரியின் குறிப்புகள்' என்ற தலைப்பில் ஒரு குறும் புதினத்தைத் தீட்டினார். அதில் ஐம்பது வயது நிறைந்த கணபதி சாஸ்திரிக்குப் பதினாறு வயது நிறைந்த எழில் நங்கை காந்தா நான்காம் தாரமாக வாழ்க்கைப்படுகிறாள். வரதட்சணை கொடுக்க முடியாத காரணத்தால் வயோதிகரை மணந்த ஏழைக் குமாஸ்தாவின் மகள் காந்தாவின் உள்ளக் குமுறலை அண்ணா, "என்னை மனைவியாகப் பெற்ற மகானுபாவருக்கு ஐம்பது வயதுக்கு மேலிருக்கும். நரைமயிர், நல்ல கறுப்புச் சாயம் பூசிக் கொண்டிருந்தார்; பல் பல போய்விட்டன. பொய்ப்பற்கள் கட்டிக் கொண்டிருந்தார்; கன்னங்களில் குழி; கை கால்களில் படை; அதனை மறைக்கச் சந்தனம் பூசிக் கொண்டிருந்தார். அதன் மீது பளபளப்பான ஜரிகைப் போர்வைகள் அவருக்கு. இந்த லட்சணத்தில் காசநோய். எனக்கு முன்பு அவருக்குப் படுக்கையறைப் பதுமையாக இருந்துவிட்டுப் பரந்தாமன் திருவடி நிழலை அடைந்த பத்தினிமார் மூவர். நான் நான்காந்தாரம் அவருக்கு."[48] என்று வெளிப்படுத்துகிறார்.

## பொருந்தா மணம்

திருமணத்திற்கு மனப்பொருத்தமே சாலச் சிறந்தது ஆயினும் அதனை மனதில் கொள்பவர் அரிதாகவே உள்ளனர். வயது கடந்த முதியவர் இளம் பெண்களை மணந்து கொள்ளும் வழக்கம் அக்காலத்தில் நிலவியது.

அண்ணாவின் படைப்புகளில் பொருந்தா மணங்கள் கடுமையாகச் சாடப்பட்டுள்ளன. அவர் காலத்தில் நாட்டில் பொருந்தா மணங்களே மலிந்திருந்தன என்பதை அவரது கதைகள் சுட்டுகின்றன. பொருந்தா மணங்கள் எங்காவது நடைபெற்றால் அதனை எதிர்த்துத் தனது எதிர்ப்புக் குரலை எழுத்து வடிவில் தந்துள்ளார். அவர் நோக்கமெல்லாம் இது போன்ற சமுதாயக் கேடுகளை எதிர்காலத் தலைமுறையினர் களைய வேண்டுமென்பதேயாகும்.

நாட்டில் பழங்காலந்தொட்டுப் பெண்மைக்கு எதிரான பல சதிகள் நடந்துவருகின்றன. இவற்றுள் வறுமையின் காரணமாக ஏழைப் பெண்களை, பணக்கார வயோதிகர்களுக்கு மணம் முடித்து வைக்கும் கொடூரமும் ஒன்று ஆகும். இக்கொடூரத்தை 'இரக்கம் ஒரு பயணம்' என்னும் நாடகம் விளக்குவதாய் உள்ளது. ஆண்கள் ஏழைப் பெண்களைக் காதலித்து விட்டுப் பணத்தையும், சாதியையும் காரணம் காட்டி ஏமாற்றி விடுவதால் அப்பெண்களின் வாழ்க்கை சீரழிந்துவிடுகிறது. வறுமையின் காரணமாக அப்பெண் கிழவனுக்கு வாழ்க்கைப்படும் துயரத்தை இந்நாடகம் காட்டுகிறது. விரும்பியவன் அப்பெண்ணை ஏற்றுக்கொள்ளாததும் பொருந்தா மணம் ஏற்படுவதற்கான காரணங்களில் ஒன்றாக அமைகின்றது என்ற கருத்தை அண்ணா சுட்டிக்காண்பிக்கின்றார். இதனை,

"தாமரைக்கண் - பவளஇதழ் - பவுன் நிறமேனி என்றெல்லாம் பசப்பினானே அது அவ்வளவும் பங்களா, தோட்டம், மோட்டார், பணம் கிடைத்ததும் பறந்தோடின."[49] என்ற பகுதியால் அறியமுடிகிறது.

அறிஞர் அண்ணா 'காமக்குரங்கு' என்ற சிறுகதையில் பொருந்தாத் திருமணம் பற்றிக் குறிப்பிடுகிறார். வயதான மிட்டாதாரருக்கு இருபது வயது நிரம்பிய இளமங்கையைத் திருமணம் செய்வதால் அப்பெண் அடையும் சிக்கல்களை இதில் எடுத்துரைத்துள்ளார். அக்காலச் சமுதாயத்தில் திருமணம் பெண்களின் விருப்பத்துடன் நடைபெறவில்லை. பெரும்பாலான திருமணங்கள் பெண்களின் மனமும் வயதும் ஒத்துப் போகாத திருமணங்களாகவே இருந்துள்ளன. "குதிரையை இழுத்து வண்டியிலே பூட்டுவதைப் போலத்தான், குமரிகளையும் பிணைத்து விடுகிறார்கள். வாழ்க்கைச் சவாரியும் நடந்து கொண்டுதான் இருக்கிறது. விபத்துக்கள் நேரிடும்போது, இருக்கவே இருக்கிறது, 'விதி' என்ற வெட்டிப்பேச்சு!"[50] என்ற அண்ணாவின் சிந்தனை அக்காலச் சமுதாயத்தில் நிலவிய திருமண முறை பற்றியும் அதிலுள்ள சிக்கல்கள் குறித்தும் தெளிவாக விளக்குகின்றது.

பணம் என்ற ஒன்றிற்காக இளம் பெண்களை வயோதிகர்களுக்குத் திருமணம் செய்து வைத்து அவர்களின் வாழ்வைத் துன்பத்திற்கு ஆளாக்கும் நிகழ்வை 'வாலிப விருந்து' என்ற சிறுகதையில் அண்ணா, "இளமை மெருகும் எழில் மணமும் வீசிட அவள் உலவினாள். இவர் காலத்தால் கசக்கப்பட்டு, முதுமை என்னும் முற்றத்திலே கிடந்தார். ஐயருக்கு மட்டும் அறுபது வேலி நிலமும், அரை இலட்சம் ரொக்க லேவாதேவியும் இல்லாவிட்டால், இந்தப் பேத்தி, பெண்டாகியிருக்க முடியாது."[51] என்று எடுத்துரைக்கின்றார். இச்சிறுகதையில் மோகனாவைத் திருமணம் செய்து கொண்ட ஐயருக்கு உடல்நிலை சரியில்லாது போக இனி அவர் தனது மனைவியுடன் இன்ப வாழ்வு வாழ முடியாது என்பதை அறிந்து அவளின் வாலிப உணர்ச்சி போக, ஊமத்தை கலந்த மருந்தை அவளுக்குக் கொடுக்கின்றார். இதனால் அவளின் உடல் இளைக்க ஆரம்பித்தது. இறுதியில் டாக்டர் ரகுராமன் அவளது நோய்க்குரிய காரணத்தைக் கண்டறிந்து காப்பாற்றுகின்றார். அன்று முதல் ரகுராமனும் மோகனாவும் வாலிப விருந்தை உண்டு வருகின்றனர். இதை அறிந்தும் கேட்கத் துணிவில்லாமல் ஐயர் இருக்கின்றார். இக்கதையில் வயோதிகத் திருமணம் பெண்களின் வாழ்வில் எத்தகைய துன்பத்தையும் மன உளைச்சலையும் ஏற்படுத்துகின்றது என்பதையும், அது பெண்களின் ஒழுக்கக்கேட்டிற்குக் காரணமாக அமைவதையும் எடுத்துக்காட்டியுள்ளார்.

'தசாவதாரம்' புதினத்தில் வரும் சொர்ணம் ஜமீன்தார் செல்லப்பாவை மணந்து கொள்கிறாள். வயதான செல்லப்பாவால் சொர்ணத்தின் உணர்வுகளைப் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்நிலையில், அவளுடைய அழகை இரசிப்பதற்கு மாறாக அவளை யாரும் பார்க்காமல் இருக்கப் பெட்டியில் பூட்டி வைக்கின்றார். பொருந்தாத திருமணத்தினால் சொர்ணம் போன்ற பெண்கள் மிகவும் பாதிக்கப்படுகின்றார்கள் என்ற அண்ணாவின் மனக்கொந்தளிப்பு இப்புதினத்தில் வெளிப்பட்டுள்ளது.

பொருந்தா மணத்தின் காரணமாக வாழ்வை இழக்கும் பெண்ணைப் பற்றிய சிறுகதை 'கன்னி விதவையான கதை'. இதில் வயதானவருக்கு வாழ்க்கைப்படும் பெண்ணின் சூழலை, "செல்லிக்கு வயது, அழகு, குணம் எனும் எதிலும் துளியும் பொருத்தமில்லாத சோமசுந்தரம், கணவனானார் - அவருக்கு ஆலையுடன் ஆறேழு இலட்சம் பொறுமானமுள்ள சொத்து இருந்த காரணத்தால்."[52] என அண்ணா விவரிக்கிறார். பணம் இருக்கின்ற ஒரே காரணத்திற்காக நடக்கும் பொருந்தா மணங்கள் பெண்களுக்கு ஏற்படுத்தும் சிக்கல்களை இதுபோன்ற அண்ணாவின் சிறுகதைகள் புலப்படுத்துகின்றன.

‘கபோதிபுரத்துக் காதல்’ புதினத்தில் பதினாறு வயது நிரம்பிய பெண்ணை அறுபது வயது முதியவருக்கு மணம் செய்து வைப்பதால் ஏற்படும் சிக்கலைக் காட்டுகின்றார் அண்ணா. இதில் பொருந்தாத இத்திருமணத்தைப் பற்றி அண்ணா கூறும்போது, "அவருக்கு மூன்றாந்தாரமாக, ராதா ஏற்பாடாகிவிட்டது. ராதாவுக்கு வயது பதினாறுகூட நிரம்பவில்லை. அவள் அழகு, அழகாபுரிக்கே அழகு செய்தது. நல்ல பஞ்சவர்ணக்கிளி என்றாலும் சோலையில் பறக்க விடுகிறார்களா தங்கக் கூண்டிலே போட்டுத்தானே அத்துடன் கொஞ்சுவார்கள். அதைப்போலத் தான் ராதாவுக்கு, மாரியப்பபிள்ளை கூண்டு, அவருடைய பணம் பேசுமே தவிர வயதா பேசும்?"[53] எனக் கூறுகிறார். மேலும் இப்புதினத்தில் திருமணத்திற்குப் பின் ராதா சந்திக்கும் துயரங்களை விளக்குகின்றார். நல்ல குணமுள்ளவளாக இருந்த ராதாவை ஒழுக்கக்கேடு உடையவளாக அவளது சூழல் மாற்றுகிறது. இதன் காரணமாக ராதா படும் இன்னல்களை இதில் எடுத்துரைக்கிறார் அண்ணா.

அண்ணாவின் ‘பாவையின் பயணம்’ என்னும் நாடகம் முழுக்க முழுக்கப் பொருந்தா மணத்தினால் உண்டாகும் கொடுமைகளை விவரிப்பதாக அமைந்துள்ளது. பாவையை வயதான அரசருக்குத் திருமணம் செய்து வைக்கிறார்கள். அரசரும் பாவையிடம் மிக அன்பாகவே நடந்து கொள்கிறார். அரசர் வயது மூப்பின் காரணமாகச் சில நாட்களிலேயே இறந்துபடுகின்றார். கணவனை எரியூட்டும் சிதையிலே பாவையும் விழுந்து உயிர் துறக்கிறாள். அப்பொழுது அவள், "பெற்றோரே! பேரன்பு காட்டிய கனகபுரிப் பெரியவர்களே! ஆருயிர்த் தோழிகாள்! எனக்கு விடை கொடுங்கள் என் பெற்றோர், வயோதிகருக்கு மண முடித்துத் தருவது பெருந்தீங்கு என்று எண்ணாமலே என்னை இக்கதிக்கு ஆளாக்கினர். நான் அவர்களையும் குறை கூறவில்லை. பெண்களின் நிலைமையே இது. நான் அதற்கு விதிவிலக்கல்ல."[54] என்கிறாள். உள்ளன்பு கொண்டாலும் வயது ஒத்துப் போகாத திருமணத்தினால் பெண்கள் தங்கள் உயிரை இழக்க நேரிடுகிறது என்பதை அண்ணா இப்பாவையின் கூற்றின் மூலம் உணர்த்துகின்றார்.

இவ்வாறு பொருந்தாத் திருமணம் பற்றியும் அதனால் பெண்களின் வாழ்வு இருண்ட நிலையை அடையும் என்பன போன்ற கருத்துகள் ‘குமாஸ்தாவின் பெண்’ ‘பாவையின் பயணம்’ போன்ற பல படைப்புகளிலும் இடம்பெற்றுள்ளன. பொருந்தாத் திருமணம் ஒழுக்கக் கேட்டிற்கும் வழிவகுக்கும் என்பதை அண்ணா ‘கபோதிபுரத்துக் காதல்’, ‘காமக் குரங்கு’, ‘சுடுமூஞ்சி’, ‘வாலிப விருந்து’ முதலான சிறுகதைளில் எடுத்துரைப்பதைக் காணமுடிகின்றது.

## விலைமகளிர் அவலம்

சமயமும் நிலவுடைமையும் முதலாளித்துவமும் சுவைத்துச் சுவைத்துச் சுரண்டிய கொடுமையால் உருவானவர்களே விலைமகளிராவர். அவர்களின் அவலத்தை அண்ணா தம்முடைய கதைகளில் வெளிப்படுத்தியுள்ளார். பெண்ணினத்தினை இழிவு செய்யும் விபச்சாரத்தை ஒழிக்கும் சட்டம் வந்த போது அண்ணா எல்லையில்லாத மகிழ்ச்சி கொண்டார். வழிவழி வந்த பிறப்பால் விலைமகளாகப் பிறந்தவர்களையும், தனிமனிதச் சமுதாயக் கொடுமைகளால் விலைமகளிராக ஆனவர்களையும், ஆண் துணையில்லாமல் வறுமை, பொருளாதாரமின்மை காரணமாக வாழவழியற்று தன்னை ஆதரிக்க எவருமில்லாத நிலையில் விலைமகளிர் ஆனவர்களையும், இளவயதில் விதவையாகி மறுவாழ்வு பெறாமல் ஆண்களின் வஞ்சகத்தால் வழுக்கி விழுந்தவர்களையும் தம்முடைய கதைகளில் படைத்துள்ளார். சமீன்தாரர்கள், செல்வந்தர்கள் பற்றிய கதைகளிலெல்லாம் விலைமகளிர் இடம் பெற்றுள்ளனர். நிலவுடைமைச் சமுதாயத்தில் இத்தீமை தவிர்க்க முடியாததாகவே

இருந்தது. சமுதாயக் கொடுமையால் பெண்கள் விபச்சாரத்தை விரும்பி ஏற்பதை 'என் வாழ்வு', 'கோமளத்தின் கோபம்' முதலிய கதைகளில் காட்டியுள்ளார்.

ஆண்களின் கொடுமையால் பெண்கள் விபச்சாரத்தில் ஈடுபடுவதை 'ரங்கோன் ராதா' புதினம் எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ளது. புதினத்தில் இடம்பெறும் ரங்கம் தன் கணவனின் பணத்தாசையால் பைத்தியம் என்ற பழிச்சொல்லை ஏற்று, கணவன் செய்த கொலைக் குற்றத்தைத் தானே ஏற்றுக்கொண்டு தன் குழந்தையை அவனிடமே கொடுத்துவிட்டு ரங்கோன் செல்கிறாள். ஆண் வேடம் போட்டிருந்த போதிலும் கூடப் பர்மா நாயுடுவிடம் அகப்பட்டுப் பின் அவனையே மணந்து கொள்கிறாள்.

"சேற்றிலே கால் வைத்தாகிவிட்டது. ஆழப் புதைந்து கொண்டது. காலைச் சேற்றிலே இருந்து எடுத்துக்கொள்ளச் சக்தியுமற்றுப் போயிற்று. பிறகு அந்தச் சேறு, சந்தனம் ஆகிவிடத்தானே வேண்டும்."[55] என்று தான் விபச்சாரக் குழியில் விழுந்ததை எண்ணி வருந்துகிறாள். கணவனால் பாதிக்கப்பட்ட ரங்கத்தைப் பர்மா நாயுடு சகோதரியாகப் பார்க்காமல் அவளைக் காமக் கிழத்தியாக்கிக் கொள்ள நினைத்த காரணத்தையும், ஆண்களின் காமப்பசிக்கு இரையாகும் பெண்களின் அவலத்தையும் இப்புதினத்தில் காட்டுகிறார்.

இப்புதினத்தில் ரங்கம் தன் தங்கை மேல் அளவு கடந்த பாசம் வைத்திருக்கிறாள். ஆனால் தங்கம் அக்காளின் வாழ்க்கையில் பங்குப் போட்டுக் கொள்கிறாள். இதனால் பெண்களே பெண்களுக்கு எதிரியாக இருப்பது விளங்கும். சமுதாயத்தில் ஆண்களால் மட்டும் பிரச்சினை வருவதில்லை, பெண்களாலும் பெண்களுக்குச் சிக்கல் வருவதைத் தங்கம் வாயிலாகப் புலப்படுத்துகின்றார் அண்ணா.

'என்வாழ்வு' புதினத்தில் விமலா முத்துவைக் காதலிக்கிறாள். அவன் திருமணம் செய்து கொள்ள மறுக்கின்றான். பிறகு கணபதி சாஸ்திரிக்கு மூன்றாம் தாரமாக வாழ்க்கைப்படுகிறாள். விமலாவின் அக்கா கமலாவும் காதலித்து ஏமாந்து ஜமீன்தாருடன் நாயகியாக வாழ்கிறாள். பிறகு ஜமீன்தாரின் பகையினால் தற்கொலை செய்து கொள்கிறாள். விமலா ஜமீன்தாரைப் பழி வாங்க அவருக்கு மருமகனாக வரப்போகும் இளைய பூபதியை மணக்கின்றாள். பிறகு சாஸ்திரி அரசியலில் இடம் வாங்கித் தருவதாக இளைய பூபதியையும் விமலாவையும் டில்லிக்கு அழைத்துச் செல்கிறார். இளைய பூபதியை விமலாவிடம் சேராமல் பிரித்து விடுகின்றார். சாஸ்திரியிடம் அகப்பட்டுக் கொண்ட விமலா சென்னை வந்து ரௌடி ரங்கனை மணந்து கொள்கிறாள். ரௌடி ரங்கன் அடித்ததால் வீங்கிய உதடுடன் மருத்துவர் சுந்தரேசனிடம் வருகிறாள். தன் வாழ்க்கையில் நிகழ்ந்த கதையை மருத்துவரிடம் சொல்கிறாள். இக்கதையில் பரிதாபத்திற்குரிய பெண்ணாக விமலா படைக்கப்பட்டுள்ளாள். விமலாவை விரும்பிய முத்து அவளை மணந்திருந்தால் விமலா விபச்சாரியாக ஆகியிருக்கமாட்டாள் என்பது அண்ணாவின் கூற்று. இவ்வாறு விமலா தன் வாழ்வில் எத்தனை ஆண்களால் பாதிக்கப்பட்டுள்ளாள் என்பதையும், அவளுக்கு உதவி செய்ய ஒருவரும் முன் வரவில்லை என்பதையும் சுந்தரேசனிடம் கூறி வேதனையுறுகின்றாள். இதில் பெண்களை விபச்சார வாழ்க்கைக்கு விற்கப் பலர் முன் வருகின்ற அவலத்தை அண்ணா வன்மையாகக் கண்டிக்கிறார்.

ஆண்களால் கைவிடப்படும் பெண்களின் நிலையும் விபச்சாரம் தோன்றுவதற்கான காரணம் என்பதை அண்ணா தனது பல கதைகளில் எடுத்துக் கூறியுள்ளார். அந்த வகையில் 'தங்கத்தின் காதலன்' என்ற சிறுகதையில் தங்கத்தைக் காதலித்த பொன்னம்பலம் அவளை ஏமாற்றியதால் தங்கத்திற்கும் பொன்னம்பலத்திற்கும் பிறந்த சுந்தரி

விபச்சாரியானாள். ஆண்கள் தான் காதலித்த ஒரு பெண்ணுக்கு மட்டும் சிக்கலை உருவாக்கவில்லை. அது அப்பெண்ணின் சந்ததியையே பாதிக்கின்றது என்ற வாழ்வியல் எதார்த்தத்தை இச்சிறுகதையின் வாயிலாகப் புலப்படுத்துகின்றார் அண்ணா. "விபச்சாரம் ஏன் ஏற்பட்டது என்பதைப் பற்றி யோசித்து ஆராய்ந்தாலன்றி அதனை ஒழிக்க முடியாது. விபச்சாரம் நடக்கும் இடத்தை மட்டும்தான் மாற்ற முடியும். விபச்சாரம் உண்டாவதற்குக் காரணம் ஏழ்மை முதலாவது. ஆனால், அதுமட்டும் தான் என்று எண்ண வேண்டாம். பண ஆசை கூட விபச்சாரம் செய்யும்படித் தூண்டும். அத்தோடு ஆடவரின் ஆணவச் சேட்டைகள்தான் விபச்சார உற்பத்திக்கே காரணம்."[56] என விபச்சாரம் தோன்றுவதற்கான காரணங்களை அடுக்கிக் காட்டுகிறார் அண்ணா. இருப்பினும் பெரும்பாலும் ஆண்களே விபச்சாரம் தோன்றுவதற்கான காரணியாக அண்ணாவின் படைப்புகளில் காட்டப்பட்டுள்ளனர். அண்ணா இப்பிரச்சினைக்குத் தன்னுடைய பல படைப்புகளிலேயே தீர்வையும் சொல்லிச் சென்றுள்ளார். இச்சிறுகதையிலேயே விபச்சாரம் தோன்றுவதற்கு முதல் காரணமாக அமைவது ஏழ்மை எனக் கூறியுள்ளார். சிக்கலுக்கு உரிய காரணங்களைக் கண்டுபிடித்துவிட்டாலே பாதிச் சிக்கலைத் தடுத்துவிடலாம் என்ற அடிப்படையில் ஏழ்மை நிலையைச் சரிப்படுத்திவிட்டால் விபச்சாரத்தைத் தடுக்கலாம் என்ற சிந்தனையை இக்கதையின் வாயிலாக எடுத்துரைத்துள்ளார். "காதல் மணங்கள் நிகழ்ந்து ஜோடிகள் சரியாக அமைந்து, காதலுக்கு ஜாதியோ, பீதியோ மற்ற ஏதோ தடையாய் இல்லாதிருப்பின் உள்ளபடி நாட்டில் விபச்சாரம் வளராது"[57] எனக் காதல் மணங்களையும் தீர்வாகச் சுட்டியுள்ளார்.

ஆண்களின் காதல் மொழியினால் ஏமாறிய பெண் தன் வாழ்வை இழந்து விபச்சாரியான கதை 'பிரார்த்தனை' என்ற சிறுகதை ஆகும். இக்கதையில் தாயம்மாளும் மலையப்பன் என்ற மிராசுதார் வீட்டு மகனும் காதலிக்கிறார்கள். காதலிக்கும் போது உன்னைத்தான் திருமணம் செய்து கொள்வேன் என்று ஆணையிட்டுக் கூறும் மலையப்பன் தாயம்மாள் கருவுற்ற உடன் அவளை ஏமாற்றி விட்டுச் செல்கிறான். தாயம்மாள் அன்னத்தைப் பெற்றெடுக்கிறாள். தாயம்மாள் விபச்சாரியாக வாழ்கிறாள். ஆனால் தனது மகளும் இந்நிலையை அடையக் கூடாது என்பதில் மிகுந்த கவனமுடன் இருக்கிறாள். இருப்பினும் அவள் வீட்டிற்கு வந்த ஒருவன் தாயம்மாள் மது அருந்தி மயக்கமுற்று இருந்த வேளையில் அன்னத்தைத் தன் இச்சைக்கு இணங்க வைத்துவிடுகிறான். காலையில் அன்னத்தின் அறைக்குச் சென்ற தாயம்மாள் அடிவயிற்றில் அடித்துக் கொண்டு நீயும் இந்த வழிக்கு வந்து விட்டாயா என்று அலறுகிறாள். "தாயின் வழி மகளும் ஆடவரின் காம உணர்வும், கட்டுப்பாட்டுக்காகக் காதலைக் கருக்கும் உள்ளமும், விபச்சாரிகளை உண்டாக்குகிறது. தாயம்மாளும் அன்னமும் அதற்குச் சாட்சிகள். ஆனால், உத்தமர்கள் வாழும் இந்த உலகிலே, அந்த ஊமைகளின் கண்ணீரைக் காணவா போகிறார்கள்?"[58] என்ற அண்ணாவின் கருத்து அக்காலச் சமுதாயத்தில் வாழ்வை இழந்தப் பெண்களுக்கு ஆதரவாக யாரும் இல்லாத ஒரு சூழல் இருந்துள்ளதை நன்கு வெளிப்படுத்துகின்றது.

ஆண்களினால் பெண்கள் விபச்சாரியாக ஆவது என்பது ஒரு தொடர்கதையாக இருந்து வந்துள்ளது. இதை அண்ணாவின் பல படைப்புகள் வெளிக்காட்டுகின்றன. 'குற்றவாளி யார்?' என்ற சிறுகதையும் ஆண்களால் காம இச்சைக்கு ஆளாக்கப்படும் பெண் எப்படி விபச்சாரியாக ஆகின்றாள் என்பதை விளக்குவதாய் அமைந்துள்ளது. இதே போல் 'ஓர் இரவு' நாடகமும் சமுதாயக் கட்டுப்பாட்டிற்கு அஞ்சித் தேவரால் கைவிடப்பட்ட விதவைப் பெண் சொர்ணம் விபச்சாரியான கதையைக் கூறுகின்றது. இதில் தேவர் தன் கதையைக் கூறும்பொழுது, "ஒரு அழகிய இளம் விதவையைக் காதலித்தேன். அவள் என்னைப் பரிபூரணமாக நம்பினாள். காதலில் மூழ்கினோம். கடைசியில் சமூகக் கட்டுப்பாட்டுக்கும்

குடும்பக் கௌரவத்துக்கும் பயந்து, நான் அவளைக் கைவிட்டேன் ...... கர்ப்பவதியாக ......"[59] எனக் கூறுகிறான். தான் காதலித்த பெண் மிட்டாதாரரின் வைப்பாட்டியாக இருப்பதைக் கண்டு வேதனையடைகின்றான். இவ்வாறு அண்ணாவின் படைப்புகளில் விலைமகளிர் அவலம் பெரிதும் சித்திரிக்கப்பட்டுள்ளது.

## கைம்பெண் கொடுமை

பெண்கள் தொடர்பான இந்தியர்களின் கண்ணோட்டம் மிகவும் வித்தியாசமாக இருந்தது. கணவன் மரணித்துவிட்டால் அவனோடு சேர்த்து அவனது மனைவியையும் தீக்குளிக்கச் செய்து விடுவர்.. இது 'உடன்கட்டை ஏறுதல்' எனப்படும். அதேபோல், கணவன் இறந்து விட்டால், கணவனை இழந்த அப்பெண்ணை மொட்டையடித்து வெள்ளாடை உடுத்தி ஒரு மூலையில் மூளி என்று முடக்கி வைத்தனர். பாயில் படுக்க விடாமல், கூழாங்கற்களில் படுக்க வைத்தனர். சுவையான உணவும் உடுத்த உடையும் வழங்காமல் இருட்டறையில் அடைத்தனர்.

ஒரு பெண் கணவனுடன் வாழ்ந்தால் சுமங்கலி, கணவனை இழந்து விட்டால் அமங்கலி, தாலி அறுத்தவள், நல்ல காரியத்திற்குச் செல்வோருக்கு முன்னால் அவள் குறுக்கே வந்து விட்டால் அது தற்குறி, சாபக்கேடு, கெட்ட சகுனம் என்றெல்லாம் விதவைப் பெண்களை வதை செய்கின்ற கொடுமை இந்திய நாட்டில் தற்போதும் நடந்து கொண்டிருக்கிறது.

உடன் கட்டை ஏற்றி, உயிருடன் ஒரு பெண்ணைக் கொலை செய்யும் கொடுமை இந்து சமயத்தில் உள்ள நடைமுறையாகும். இச்சமுதாயத்தில் பன்னெடுங்காலமாக விதவைகளுக்கு நிகழ்ந்து வரும் கொடுமைகள் பல. அவற்றுள் அவர்கள் விரும்புகின்ற வாழ்வைப் பெற முடியாத நிலையையும் அதனால் அவர்கள் சமுதாயத்தில் சந்திக்கும் சிக்கல்களையும் '1938-1940 ஒரு வசீகர வரலாறு' என்ற சிறுகதையில் எடுத்துரைக்கிறார் அண்ணா. இச்சிறுகதையில் வரும் விதவைப் பெண்ணான கலியாணி, "நடந்தது நடந்துவிட்டது என்னை வேண்டுமானால் கொன்று போட்டுவிட்டு நீங்கள் சுகமாக வாழுங்கள். உங்கள் கௌரவம் நிலைக்க வேண்டுமல்லவா என் யௌவனம் பாழாவதைப் பற்றிக் கவலை வேண்டாம். என்னைக் கொன்று விடு அப்பா. குலம், குடும்பம், கௌரவம் இவற்றுக்கு ஆபத்து இராது. ஒரு மங்கை சாவாள் ஒரு சிசுவும் கருவிலே சாகும். ஸ்திரிஹத்தி சிசுஹத்தி மகாபாதகம் என்று பயப்பட வேண்டாம். விதவைகளைக் கொடுமை செய்து பழக்கப்பட்ட இந்தத் தர்மவான்களுக்கு இந்தப் பாதகங்கள் பழையசோறு, பயப்பட வேண்டாம்."[60] எனக் குமுறுவதிலிருந்து விதவைத் திருமணத்திற்கு அக்காலச் சமுதாயத்தில் இருந்துள்ள எதிர்ப்புகளை அறியமுடிகின்றது. பெற்ற தந்தைக்குத் தன் மகளின் வாழ்வைக் காட்டிலும் தன்னுடைய குலம், குடும்ப கௌரவம், சமுதாயக் கட்டுப்பாடு தான் பெரிது என்று எண்ணி அவளைக் கொலை செய்யும் அளவிற்கும் துணிந்துள்ளனர் என்பதை இக்கதையில் காணமுடிகின்றது.

கணவனை இழந்த பெண் மறுமணம் செய்து கொள்ள மறுக்கும் இச்சமுதாயம் மனைவியை இழந்த ஆணுக்கு மட்டும் மீண்டும் திருமணம் செய்து கொள்ளும் உரிமையைக் கொடுத்துள்ளது. இவ்வாறு ஆணுக்கு ஒரு நிலை பெண்ணுக்கு ஒரு நிலை என்ற கோட்பாடு பெண்களின் வாழ்வை எந்த அளவிற்குப் பாதிப்புக்கு உள்ளாக்கியது என்பதனை விளக்கும் சிறுகதை 'அவள் முடிவு' என்பதாகும். இச்சிறுகதையில் கணவனை இழந்தவள் அமிர்தம். மனைவியை இழந்து இருக்கின்ற அமிர்தத்தின் அண்ணன் மாதவன். மாதவனுக்குச் சில மாதங்கள் கழித்து மறுமணம் நடைபெறுகிறது. "அவன் 'மாதவம்' தான் செய்திருக்க

வேண்டும். இந்த இந்து மதத்திலே ஆணாகப் பிறப்பதற்கு! பெண்ணாகப் பிறந்திருந்தால் மறுமணம் செய்து கொள்ள அவளுக்கு உரிமை இருந்திருக்குமா "எந்தையர்" ஏற்றுள்ள இந்து மதத்திலே!"[61] எனப் பெண்களுக்கு எதிராகச் சமுதாயத்தில் நிலவும் இச்சூழலை அண்ணா மிகத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறார். இச்சிறுகதையில் விதவை நிலையில் தான் காதலிக்கும் வாலிபன் தன்னை ஏமாற்றி விடவே தன்னுயிரை இழக்கிறாள். சமுதாயக் கட்டுப்பாட்டை உடைக்க முயலும் ஒரு பெண்ணைச் சமுதாயத்தின் அமைப்பு வெற்றி கண்டுவிட்டதாக அமிர்தத்தின் இறப்பு பற்றிக் கூறும் அண்ணாவின் கூற்று சமுதாயக் கட்டுப்பாடு என்கின்ற பெயரில் பெண்களுக்கு எதிராகச் சமுதாயத்தில் நிலவுகின்ற வன்முறையைப் பறைசாற்றுவதாக அமைகின்றது.

விதவையின் அவலநிலையைக் கண்ணாடி கூறுவதாக அமைக்கப்பட்டிருக்கும் சிறுகதை 'கல்லும் கண்ணாடித்துண்டும்' ஆகும். இதில் சிறுவயதிலிருந்து அப்பெண்ணின் ஒவ்வொரு நிலையையும் கண்டுவந்த அந்தக் கண்ணாடி, சிறுவயதிலிருந்து அவளின் அழகைப் பிரதிபலித்த கண்ணாடி இன்று அவள் தன் கணவனை இழந்து களையிழந்து காணப்படும் காட்சியினைக் காணத் தாங்காது இனி நான் அவளுக்குத் தேவையில்லை என்று கூறுவதாக அமைந்துள்ளது. இதனை, "அந்தக் காரிகையோ பூவிழந்தாள், பொட்டு இழந்தாள், புன்னகை இழந்தாள். எந்தக் கண்கள் மலர் போல் இருந்தனவோ, அவைகளிலிருந்து இரத்தக் கண்ணீர் குபுகுபுவென வழிகிறது...... மணாளனைப் பெற்று மகிழ்ந்திருந்த அவளுக்கு நான் தேவையாக இருந்தேன். அவளோ விதவையானாள் - இனி அவளுக்கு நான் ஏன்? விதவை இருக்கும் இடத்தில் இருந்துகொண்டு - அவள் சிறுமியாக, கன்னியாக, மணப்பெண்ணாக, மணாளனை முதன் முதல் சந்தித்தபோது வெட்கித் தலை குனிந்த பாவை நான், அவள் இளைத்து, கருத்து, ஏங்கி, பெருமூச்செறிந்து, கண்ணீர் வடித்துக் கலங்கும் நிலையைக் காணவும் வேண்டுமா?"[62] எனக் கண்ணாடியின் வாயிலாகப் படம்பிடித்துக் காட்டுகிறார் அண்ணா.

அண்ணாவின் 'காதல் ஜோதி' நாடகத்தில் மறுமணம் மறுக்கப்பட்ட நிலையில் பெண்கள் வாழ்வு இழப்பது மட்டுமன்றித் தற்கொலை செய்து கொள்ளும் நிலைக்குத் துரத்தப்படுவதையும், பழமைப் பிடிப்பு மகளிர் வாழ்வுரிமைக்குக் கேடாவதையும் தெளிவாக்குகின்றது. "விதவைகளைக் கெடுத்து, கைவிட்டு விடுகிற பாவிகளாலே, எத்தனை கொழந்தைகள் கிணத்திலேயும் காடு மேட்டிலேயும் பிணமாகுது - எத்தனை பெண்கள் தூக்கு மாட்டிக்கிடுது - உயிரையாவது போக்கிக் கொள்ள வேணும், இல்லே, மானத்தையாவது அழிச்சிக் கொள்ள வேணும் - இதுதானே விதவைக்கும் கதியா இருக்கு - ஏன் விதவைக்கும் கல்யாணம் செய்யலாம்னு இருந்தா ...."[63] என்ற விதவைப் பெண்களின் நிலையை அண்ணா இந்நாடகத்தில் வரும் தங்கவேலுவின் கூற்று வாயிலாகப் புலப்படுத்துகிறார். காதல் உணர்வும் அதன் ஈர்ப்பும் ஆற்றலும் அனைவருக்கும் பொதுவாயினும், அதை நிறைவேற்றிக்கொள்ளும் முறையில் ஏழையின் மனமும் செல்வக்குடியின் மனமும் வெவ்வேறு தளங்களில் இயங்குவதையும், மேட்டுக்குடி வீசும் காசுக்காகத் தன்னைப் போலவே பாடுபட்டுப் பசியாறும் ஏழை உழைப்பாளிகளை தாக்கத் துணியும் வன்னெஞ்சத்தையும் இந்நாடகம் காட்டுகிறது.

## கல்விச் சிக்கல்கள்

பழையன கழிதலும் புதியன புகுதலுமே கல்வி முறையாக இருக்க வேண்டும். அவ்வாறு புதியனவற்றைப் புகுத்த முடியாது போனாலும் பொய்களைக் கூறும் புராணங்களையாவது மாணவர்களுக்குக் கற்றுக்கொடுக்காமல் இருப்பது நல்லது.

பொய்களையும் புரட்டுகளையும் தாங்கி நிற்கும் புராணங்கள் மாணவர்களின் புத்தகங்களில் இடம்பெற்றிருப்பதைக் கடுமையாகச் சாடுகிறார் அண்ணா. உலக நாடுகள் அறிவியலோடு இணைந்து முன்னேறிக் கொண்டிருக்கும் வேளையில் பழைய புராணங்களின் பெருமைகளைப் பேசிக்கொண்டு இன்னும் பின்னோக்கி மக்கள் சென்று கொண்டிருப்பதை எண்ணி வருந்துகின்றார். வருங்கால மாணவர்களே சமுதாய மாற்றத்தை இம்மண்ணில் விதைக்க முடியும் என்ற நிலையில் அவர்களுக்கான கல்வி முறை, பாடத்திட்ட முறைகள் ஏற்படுத்தும் சிக்கலையும், மாணவர்களுக்கு இவை உண்மை, இவை பொய் என விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டிய ஆசிரியர்கள் அரசாங்கத்தின் சட்டங்களுக்குப் பயந்து பாடத்தில் உள்ள செய்திகளை மாணவர்களுக்கு ஆராய்ந்து கற்றுக்கொடுக்காமல் உள்ளபடியே கற்றுக் கொடுக்கின்றனர். பாடப்புத்தகங்களில் உள்ள புராண, இதிகாசம் பற்றிய செய்திகள் பொய் என மாணவர்களுக்கு உரைத்தால் ஆசிரியர் பணிநீக்கம் செய்யப்படுவார் என்ற அரசின் உத்தரவு அக்காலக்கட்டத்தில் கல்வி அமைச்சராக இருந்த அவினாசிலிங்கம் என்பவரால் கொண்டுவரப்பட்டது. இச்சட்டத்தை எதிர்க்கும் பொருட்டும், தமிழகத்தில் பாடத்திட்ட முறையில் உள்ள சிக்கல்களால் பள்ளிகளில் மாணவர்கள் எத்தகைய கல்வியறிவைப் பெறுவர் என்பதனை அமைச்சர் அவினாசிலிங்கம் அறிந்து கொள்ளும் விதமாக 'அவனாசியார் காணவேண்டிய காட்சி' என்ற நாடகத்தைப் படைத்துள்ளார் அண்ணா.

இந்நாடகத்தில் தமிழாசிரியரும் வரலாற்று ஆசிரியரும் மாணவர்களுக்குப் பாடம் சொல்லும் முறையிலிருந்து கல்வி முறையில் உள்ள சிக்கலை எடுத்துக்காட்டுகிறார். இக்கதையை "கங்கை, பிரம்மபுத்ரா, சிந்து முதலிய ஜீவநதிகள், இமயமலையிலிருந்து உற்பத்தியாகி....(அவர் பாடம் சொல்லிக் கொண்டிருக்கும்போது மாணவர்கள் செவியில், ஏற்கனவே தமிழாசிரியர் சொன்ன பாடம் ஒலிக்கிறது.) இமயமலையிலே, பரமசிவனானவர், பக்கத்திலே பார்வதிதேவி நின்று கொண்டிருக்க, ஜடாமுடியிலே கங்கா தேவி இருக்க எதிரே ஆறுமுகனும், விநாயகனும், விளையாடுவதைக் கண்டு.... (வகுப்பு நடந்து கொண்டிருக்கிறது)"[64] என முடிப்பார் அண்ணா. தமிழ்ப் பாடத்தின் மூலம் கங்கை ஆறு பரமசிவன் தலையிலிருந்து உருவாகிறது என்ற செய்தியையும், வரலாற்றுப் பாடத்தின் மூலம் கங்கை ஆறு இமயமலையிலிருந்து உருவாகிறது என்ற செய்தியையும் மாணவர்கள் அறிந்து கொள்கின்றனர். ஆனால் இதில் எது உண்மை என்பதை மாணவர்கள் அறியாவண்ணம் இரண்டும் உண்மைதான் என்பதையே ஏற்றுக்கொள்ளும் விதமாக ஆசிரியர்களும் தங்களது பாடத்திட்டத்தில் உள்ள செய்திகளை மட்டும் எடுத்துக் கூறுகின்ற பணியையே மேற்கொள்கின்றனர். இந்நாடகம் மாணவர்களுக்குக் கல்வியில் இருக்கும் சிக்கலை மிகத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது.

குழந்தைகளுக்கு வீட்டில் பெற்றோர்களால் ஒரு கல்வியும், பள்ளியில் ஆசிரியர்களால் வேறொரு கல்வியும் கற்றுத் தரும் சூழலில் அக்குழந்தையின் மனநிலையை எடுத்தியம்பும் விதமாக எழுதப்பட்ட சிறுகதை 'முகம் வெளுத்தது' என்பதாகும். தன்னை விடக் கீழ்சாதியினர் குழந்தைகளுடன் சேரக்கூடாது, அவர்களிடம் இருந்து எதையும் வாங்கி உண்ணக்கூடாது அவர்கள் தொட்ட எதையும் தொடக்கூடாது எனப் பள்ளி செல்லும் தன் குழந்தைக்குத் தாய் கூறும் அறிவுரை இது. இதைக் கேட்டுச் செல்கின்ற அம்மாணவன் பள்ளியில் எல்லோரும் ஒரே குலம்; சகோதரர் போல வாழ வேண்டும் எனக் கல்வி பயில்கின்றான். இந்நிலையில் அவனது மனம் குழப்பமடையும் என்ற கல்விச் சிக்கலை, "வீட்டுப்பாடமும் பள்ளிக்கூடப் பாடமும் இம்முறையில் சேரும்போது, மாணவனின் மனம் குழப்பமடையுமா, தெளிவு பிறக்குமா, என்பதை எண்ணிப் பாருங்கள். சருக்கு நிலத்திலே

நடத்தும் ஓட்டப் பந்தயம்போல அவன் திண்டாட வேண்டும்."[65] என எடுத்துரைக்கின்றார் அண்ணா.

## சட்டச் சிக்கல்கள்

குற்றவாளியாகக் கருதப்படும் ஒருவன் குற்றம் செய்தானா இல்லையா என்பதை உறுதிப்படுத்தும் நோக்கிலே தான் நீதி விசாரனை அமையுமே தவிர அவன் குற்றம் செய்வதற்கான காரணத்தை நீதிமன்றங்கள் ஆராய்வதில்லை என்பதனை, "பொதுவாகவே, கோர்ட்டாரும், சர்க்காரும், குற்றம் புரிபவர்களைத் தண்டிக்கத்தான் முன் வருகிறார்களே தவிர, குற்றம் செய்ய வேண்டிய சூழ்நிலை எப்படி ஏற்பட்டது என்பதை ஆராய்வதே இல்லை."[66] எனச் சட்டத்தில் இருக்கும் சிக்கலை 'பல்லிளிக்கும் பரப்பிரம்மங்கள்' என்ற சிறுகதையில் எடுத்துக்கூறுகின்றார் அண்ணா.

## நீதித்துறையில் சிக்கல்

யாருக்கும் அஞ்சாமல் ஏழை பணக்காரன், வேண்டியவன் வேண்டாதவன், இரக்கம் போன்றவற்றையெல்லாம் பார்க்காமல் சட்டத்தின் துணையையும் தனது அறிவையும் கொண்டு வழக்கினை விசாரித்து நீதி காண வேண்டிய நீதிபதிகள் ஆட்சியாளர்களின் பிடியில் சிக்கிக் கொள்வதாலும் அல்லது நீதிபதிகள் ஆட்சியாளர்களிடம் இணங்கி நடந்து கொள்வதாலும் எந்தக் குற்றமும் செய்யாத மனிதர்கள் குற்றவாளியாக்கப்பட்டுத் தண்டனைக்கு உள்ளாகின்றனர். இதை அண்ணா 'ஜனநாயக சர்வாதிகாரி' என்ற நாடகத்தில் விளக்கியுள்ளார். இதில் குற்றவாளி எனக் கருதப்படும் ஒருவன் வழக்கு, விசாரணைக்கு வரும் முன்னே நீதிபதிக்கு ஒரு தொலைபேசி வருகிறது அதில் பேசும்பொழுது, "மேன்மை தாங்கிய பிரபுவே, வழக்கு ஆரம்பமாகப் போகிறது. நான் அவன் குற்றவாளி என்று கண்டறிந்து கூறி, அவனுக்கு மரணதண்டனை விதிக்கிறேன் - நிச்சயமாக, விரைவில்."[67] எனக் கூறி, தொலைபேசியைக் கீழே வைக்கிறார். வழக்கு விசாரணை தொடங்கும் முன்பே குற்றவாளி எனத் தீர்மானித்து அவனுக்கு மரணதண்டனை அறிவிக்கிறார் நீதிபதி. இந்த செயல் யாருக்கும் அடிபணியக் கூடாத நீதித்துறை அதிகார வர்க்கத்தினரின் பிடியில் சிக்கித் தவிக்கும் அவல நிலையை விளக்குகிறது.

## ஏமாற்றுக்காரர்கள்

ஊரை ஏமாற்றி வாழும் ஏமாற்றுக்காரர்களைப் பற்றி விளக்கும் சிறுகதை 'கைதிகள்' ஆகும். இக்கதையில் வைத்தீஸ்வர முதலியார் என்பவர் சமுதாயத்தில் மிகுந்த புகழுடன் வாழ்ந்து வருகின்றவர். அவரைப் பற்றிச் சிறைச்சாலையில் கைதிகளில் சிலர் அவரது அருமைபெருமைகளைப் பேசிக்கொண்டு இருந்தனர். கைதிகளில் ஒருவன் வைத்தீஸ்வரனால் பாதிக்கப்பட்டு சிறை வந்தவன். அவன் வைத்தீஸ்வரனின் சுயரூபத்தை மற்ற கைதிகளுக்கு எடுத்துச்சொல்லி அவன் எப்படிப்பட்டவன் என்பதை விளக்கினான். இக்கதையில் வரும் வைத்தீஸ்வரன் அபின் விற்றுத் தொழில் நடத்தியவன். அதில் கிடைத்த வருமானம் கொண்டு ஊரில் பெரிய மனிதராக வலம் வருபவன். கோயில் நகைகளில் போலிகளைச் செய்து வைத்து ஊரை ஏமாற்றும் ஏமாற்றுக்காரன். ஆனால் யாரும் தன் மீது குற்றம் கூறாதவாறு நடந்துகொண்டான். அதனால் இவன் செய்யும் குற்றங்கள் மக்களுக்குத் தெரியாமல் இருந்தது. பல குற்றங்கள் செய்தாலும் அவன் சிறைச்சாலைக்கு வெளியே இருக்கின்றான். ஆனால் குடும்ப வறுமையின் காரணமாகப் பசியைப் போக்க வழியின்றித் திருடியவர்கள் சிறையில் அடைபட்டுக் கிடக்கின்றனர். திருடுகின்றவர்கள் யாராயினும் தண்டிக்கப்பட வேண்டுமே தவிர சட்டம் யாருக்கும் எதற்காகவும் வளைந்து

கொடுக்கக் கூடாது. சமுதாயத்தில் சட்டம் காட்டுகின்ற பேதம் மக்களின் வாழ்வில் சிக்கல்களை விளைவிக்கும். வைத்தீஸ்வரன் போன்ற ஏமாற்றுப் பேர்வழிகளால் பாதிக்கப்படும் மக்களின் வாழ்வியல் சிக்கலை இச்சிறுகதை உணர்த்துகின்றது.

பெண்ணால் ஏமாற்றப்படும் ஓர் ஆணின் கதை ‘கோமளத்தின் கோபம்’. கோமளத்தின் மீது அளவு கடந்த அன்பு வைத்திருந்தான் லிங்கம். அந்த அன்பைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்த எண்ணி லிங்கத்திடம் தன் கணவனைக் கொலை செய்துவிட்டால் நாம் இன்பமாக வாழலாம் எனக் கூற, லிங்கமும் அதற்கு ஒப்புக்கொள்ள இடையில் கோமளம் கார் டிரைவர் பரந்தாமனுடன் உல்லாசமாகப் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்ட லிங்கம் பரந்தாமனைக் கொலை செய்கின்றான். இதனால் ஐந்து வருட சிறைத் தண்டனை பெறுகிறான் லிங்கம். சிறையிலிருந்து வெளிவரும் லிங்கம் கோமளத்தைப் பழிவாங்க எண்ணுகிறான். இதில் ஒரு பெண்ணால் ஏமாற்றப்படும் ஒருவன் அனுபவிக்கும் துன்பங்களையும், கணவனைப் பிரிந்து இருக்கும் பெண்ணின் ஒழுக்கக்கேட்டினால் பரந்தாமனை இழந்து வாடும் அவனது குடும்பத்தின் நிலையினையும் காட்சிப்படுத்துகின்றார் அண்ணா.

செல்வச் சீமான்கள் ஏழைகளின் துயரங்களைத் துடைக்கக் கூடிய மனமில்லாதவர்களாக இருப்பதோடு, அந்த ஏழை மக்களை ஏமாற்றி வாழும் சீமான்களை ‘சந்த்ரோதயம்’ எனும் குறும்புதினத்தில் அண்ணா காட்டுகிறார். இப்புதினத்தில் மக்களின் வறுமையைத் தனக்குச் சாதகமாக ஆக்கிக் கொண்டு அதனால் செல்வம் பெறும் சீமானாகச் சிங்காரவேலர் இருக்கிறார். இவரின் செயலை விளக்குமிடத்து அண்ணா, “ஏழைகளின் வறுமையைப் பயன்படுத்திக் கொள்ளும் அவர் இதனை ‘வாழும் முறை’ என்று எண்ணினாரேயன்றி, தவறு என்றோ, பாபம் என்றோ கருதவில்லை. அவர் மட்டுமா, சிங்காரவேலர்களின் சித்தாந்தமே அது! ஏழை புழுப்போலத் துடிக்கிறான் - அவன் வயிற்றிலடிக்கிறோமே, தவறல்லவா, பாபமல்லவா என்று எவனாவது கேட்டால் - யாரும் கேட்கமாட்டார்கள்!”[68] என வறுமையில் உழலும் மக்களுக்கு ஏற்படும் சிக்கலை விளக்குகிறார்.

உழவுத் தொழிலின் மேம்பாட்டிற்காக உழவைப் பற்றித் தெரியாத வக்கீல் உலகம் சுற்றப் போகிறார். அரசு அவருக்கு அனைத்து ஏற்பாடுகளையும் செய்து தருகிறது. பணத்தை வாரி இரைக்கிறது. ஆனால் உழவைப் பற்றி நன்கு அறிந்த, பிறந்ததிலிருந்து உழவுத் தொழிலைச் செய்து வந்த உழவர்கள் மேற்கொண்டு அத்தொழிலைச் செய்ய முடியாமல் பட்டினியுடன் போராட முடியாமல் மாற்றுத் தொழில் தேடி நகரத்திற்குச் செல்லும் அவலத்தை ‘அறுவடை’ சிறுகதை கூறுகின்றது.

பொதுமக்களுக்கு ஒரு திட்டத்தைச் சாதாரணக் குடிமகன் கொண்டு வருவதிலே உள்ள சிக்கல்களை ஆராய்வது ‘மக்கள் தீர்ப்பு’ என்கின்ற குறும் புதினம் ஆகும். இதில் லஞ்சம் பெற்றுக் கொண்டு அனுமதி வழங்கும் அதிகாரிகள், மக்களைப் பற்றிச் சிந்திக்காமல் பணம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு செயல்படும் அரசியல்வாதி, அவர்களுக்குத் துணைபோகும் பத்திரிகை போன்றவர்களை இப்புதினத்தில் காட்டுகிறார் அண்ணா.

பணத்திமிர் பிடித்துத் திரியும் செல்வக்குடிமகனின் காமச் சேட்டைகளையும் அதனால் பெண்கள் ஏமாறும் விதத்தையும் ‘தழும்புகள்’ புதினத்தில் சித்திரிப்பர். இதனை நளினாவைக் காதலிப்பது போல ஏமாற்றி அவளைத் தன் இச்சைக்குப் பயன்படுத்தி விட்டு அதைப் பெருமையாகத் தனது நண்பர்களிடம் பேசும் சோமுவின் பேச்சால்

அறியமுடிகின்றது. இப்புதினத்தில் சோமுவிடம் அவன் நண்பன் தாமு நளினாவைத் திருமணம் செய்து கொள்ளும் முடிவுக்கு வந்துவிட்டாயா எனக் கேட்க, அதற்கு சோமு, "முட்டாள் வருவான் அந்த முடிவுக்கு ....... நானா? நளினா ஒரு 'ஒன்வீக்'...... ஒரு வார விருந்து"[69] என்கிறான். இதுபோன்ற பெண்களைச் சீரழிக்கும் ஏமாற்றுக்காரர்கள் ஏற்படுத்தும் சிக்கலை விவரிக்கிறார் அறிஞர் அண்ணா.

தன் நண்பன் எழுதிய கதையைத் திருடி தான் எழுதியதாகக் கூறிப் புகழ் பெறும் சீமான் வீட்டுப் பிள்ளையினால் அவன் நண்பன் பல இன்னல்களுக்கு ஆளாகி இறுதியில் பைத்தியக்கார மருத்துவமனையில் அனுமதிக்கப்படுகிறான். புகழுக்கு ஆசைப்பட்டு நண்பனை ஏமாற்றுவதோடு அவனைப் பைத்தியம் என உலகம் கூறும் அளவுக்குப் பல கொடுமைகளைச் செய்யும் ஒருவனை 'ரொட்டித்துண்டு' நாடகத்தில் படைத்துக் காண்பிக்கின்றார் அண்ணா. அதேபோல் 'சொர்க்கவாசல்' நாடகம், மடாதிபதிகள் சொர்க்கவாசல் திறப்பு நிகழ்ச்சிக்காக மக்களிடம் பொய்யான நம்பிக்கைகளைப் பரப்பி பணம் வசூலித்து ஏமாற்றுவதை விளக்குவதாய் உள்ளது.

## சூதாட்டம்

அக்காலச் சமுதாயத்திலிருந்த சூதாட்டத்தின் தீமைகளைச் 'சூதாடி' என்ற கதை விளக்குகிறது. "இந்தச் சூதாடும் புத்தி உனக்கிருக்கும் வரைக்கும் நீ ஏதுடா உருப்படுவது?... சூதாட்டக்காரப் பயலிடம் எப்படிடா நாணயம் இருக்கும்"[70] என்று தன் கார் ஓட்டுநர் மோசஸிடம் சீறும் ஐயரே, சூதாட்டம் நடத்துவதை இக்கதை விளக்குகிறது. தன் குறைகளை மறைத்துவிட்டு ஓட்டுநருக்கு அறிவுரை கூறும் ஐயர் போன்றவர்களால் சமுதாயத்திற்கு ஏற்படும் கேடுகளை மோசஸ் போன்ற ஏழைகள் அறிவர். அறிந்தும் அவர்களால் ஐயர் போன்றவர்களை எதிர்த்துப் பேச முடியாது. அதற்குக் காரணம் மோசஸ் போன்றவர்கள் ஐயர் போன்றவர்களிடம் ஊழியக்காரர்களாக இருப்பதாலேயாகும்.

## போலி விளம்பரங்கள்

லேகியம் மக்களின் நோய்களைத் தீர்க்கும் அருமருந்து என மக்களை நம்ப வைத்து லேகியத்தில் வேறுபல போதைப் பொருட்களைச் சேர்த்துக் கொடுக்கின்றனர். உண்மை அறியாத மக்கள் அவற்றை வாங்கி உண்டு துன்பங்களை அனுபவிக்கின்றனர். இவ்வாறு பணம் சம்பாதிப்பதாக மக்களின் உயிருடன் விளையாடும் போலி மருந்துக் கம்பெனிக்காரர்களால் சமுதாயத்தில் ஏற்படும் சிக்கல்களை எடுத்துக்கூறும் சிறுகதை 'அன்னதானம்' ஆகும். இச்சிறுகதையில் வரும் சொக்கன் என்பவன் சொக்கநாத செட்டியார் பெயரிலே லேகியம் தயாரிக்கும் கம்பெனி நடத்துபவன். நோய் தீர்க்கும் மருந்துகள் என அபின் கலந்த லேகியத்தை விற்கின்றான். இவனைப் போன்றவர்கள் சாமானிய மக்களை மட்டுமல்லாது படித்தவர்களையும் ஏமாற்றிவிடுகிறார்கள். "ஒரு டப்பா சாப்பிட்டவர்கள், தேவாமிருதம் சாப்பிட்டவர்கள் பெறக்கூடிய திவ்யதேஜசும், புதிய பலமும் பெறுவதோடு நெடுநாளைய நோய் போக்கப் பெற்று, தங்கம் போன்ற மேனியும் இரும்பு போன்ற வலிவும் பெறுவதுடன் சிவானுக்கிரமும், இஷ்டசித்தியும் பெறுவார்கள். இந்த லேகிய முறையை, நமது தர்ம பூபதிக்கு, அவருடைய பதினாறாம் வயதிலே, பாம்பு உடலும், மனித முகமும் கொண்ட சர்ப்பதேவர் சொப்பனத்திலே சொன்னது. இந்த லேகிய வியாபாரம், நமது அகிலம் புகழும் அன்னதான அரசரின் சொந்த இலாபத்துக்கு அல்ல; இதிலே கிடைப்பது அவ்வளவும் அன்னதான கைங்கரியத்துக்கே செலவழிக்கப்படும்."[71] போன்ற விளம்பரங்கள் மக்களைச் சிந்திக்க விடாமல் செய்கின்றன என்ற நடைமுறைச் சிக்கலை அண்ணா எடுத்துக்காட்டுகிறார். இதுபோன்ற விளம்பரங்கள் இன்றளவும் நாளேடுகளிலும்

தொலைக்காட்சிகளிலும் வந்துகொண்டிருக்கின்றன. இவ்விளம்பரங்கள் சமுதாயத்தில் புரையோடிக் கிடக்கும் மூடநம்பிக்கைகளை வளர்த்தெடுத்துச் செல்ல முனைகின்றனவே தவிர மக்களின் வாழ்வை ஏற்றம் பெறச் செய்ய முன்வரவில்லை என்ற செய்தியை இச்சிறுகதையின் வாயிலாக அண்ணா புலப்படுத்துகிறார்.

## சோதிடம்

சோதிடம் என்பது மக்களின் வாழ்வில் இன்றியமையாத ஒன்றாக மாறிப்போய்விட்டது என்பதை இன்றைய சூழலில் சாதாரண மக்களின் வாழ்க்கை முறையை ஆராயும்பொழுது அறியமுடிகின்றது. படிப்பறிவும் பகுத்தறிவும் அதிகரித்துள்ள இக்காலக்கட்டத்திலேயே சோதிடம் என்பது தவிர்க்க முடியாத ஒன்றாக இருக்கின்ற நிலையில் படிப்பறிவும் பகுத்தறிவும் அற்ற அல்லது ஒருங்கே பெறாத சமுதாயத்தில் சோதிடம் எத்தகைய இடத்தைப் பெற்றிருக்கும் என்றும் அது மனித வாழ்வில் எத்தகைய சிக்கல்களை ஏற்படுத்தியிருக்கும் என்பதையும் 'சுடுமூஞ்சி' என்ற சிறுகதை விளக்குகிறது.

இராமி என்ற முதலியார் குடும்பத்துப் பெண், தான் காதலித்த இளைஞன் ஏதோ ஒரு காரணத்தால் தன்னைக் கைவிட்டுவிட, அரிசி மண்டி ஏகாம்பரத்திற்கு இரண்டாம் தாராமாக வாழ்க்கைப்படுகிறாள். இச்சிறுகதையில் காதலுக்குச் சாதி வேறுபாடு, பெற்றோர்களின் எதிர்ப்பு, பொருளாதார பேதம், வயது, மத வேறுபாடு என எதுவும் தடையாக இல்லை. சமுதாயத்தில் சம வசதி பெற்ற ஆண்-பெண் இருவரிடையே மலர்ந்த காதல் தோல்வியைத் தழுவக் காரணமாய் அமைகிறது சோதிட நம்பிக்கை. சோதிடம் மீது சமுதாயம் வைத்துள்ள நம்பிக்கையைப் பயன்படுத்தி, இராமியை அவளின் காதலனுடன் சேர விடாமல் தடுத்து, தானே இரண்டாம் தாரமாகத் திருமணம் செய்து கொள்கின்றான் ஏகாம்பரம். திருமணத்திற்குப் பின் இதை அறிந்து கொண்ட இராமி சுடுமூஞ்சிக் காரியாகி விடுகிறாள். கணவன் வீட்டில் இல்லாத பொழுது தன் ஆசைக் காதலனை வரவழைத்துத் தன் இச்சையைத் தீர்த்துக் கொள்கிறாள். இவ்வாறு சோதிடம் என்கின்ற பெயரில் காதல் திருமணத்திற்குத் தடை ஏற்படுத்திப் பெண்ணின் வாழ்வியல் உரிமைக்கு எதிராகச் சிக்கலை உண்டாக்குவதோடு அப்பெண்ணும் தான் விரும்பிய வாழ்க்கை கிடைக்கவில்லை என்கின்ற ஆதங்கத்தால் தன் கணவனைப் பழிவாங்கும் எண்ணத்தில் தவறான நடத்தைக்கு ஆளாக்கப்படுகின்றாள். இச்சூழலில் ஒழுக்கக்கேடு என்கின்ற சமுதாயச் சிக்கலும் இங்கு உருவாகின்றது. இதுபோல சோதிடத்தை நம்பிக் கெடும் பாத்திரங்களைத் தனது இலக்கியங்களில் அண்ணா படைத்துக் காட்டியுள்ளார். 'பாமா விஜயம்', 'அவள் முடிவு' போன்ற கதைகள் இத்தகையன.

## முதியோரின் சிக்கல்

வயதான காலத்தில் மனிதர்களுக்கு ஏற்படும் சிக்கலை 'யார் மீது கோபித்துக் கொள்வது?' என்ற சிறுகதையில் அண்ணா தெளிவாக எடுத்துரைக்கின்றார். இச்சிறுகதையில், "பாட்டியம்மா 'பாட்டி' ஆகி, பிறகு 'கிழவி'யாகி, பிறகு 'ஏ! யாரது!' ஆகி, பிறகு 'போ! போ!' என்றாகி, பிறகு, 'இதேதடா தொல்லை' என்றாகி, 'பெரிய சனியன்' என்றாகி, 'பிசின், இலேசில் விடாது' என்றாகி இப்போது, கவனிப்பார், கவலைப்படுவாரற்ற ஓர் உருவமாகிவிட்ட நிலை!!"[72] என அண்ணா முதியோரின் நிலையைக் காட்டுகிறார். பழமைகளிலிருந்து மாறாத முதியோரின் நிலையையும் அதனால் அவர்களுக்கு உண்டாகும் சிக்கல்களையும் இதில் காண்பிக்கின்றார்.

## உளவியல் சிக்கல்கள்

உளவியல் என்பது உள்ளத்தில் ஏற்படும் பிரச்சினைகளைப் பற்றி ஆராய்வது ஆகும். காதலனைப் பிரிந்த காதலியிடம் ஏற்படும் உள்ளம் சார்ந்த பிரச்சினைகளைப் படம்பிடித்துக் காட்டுவதாக 'பேய் ஓடிப் போச்சு' என்ற சிறுகதை அமைந்துள்ளது. இக்கதையில் உள்ளத்தில் கவலையுடன் இருக்கும் தன் மகளைப் பார்த்து, "செல்லா உடம்பு என்னமா செய்யுது? - அம்மா கேட்பாள் அன்புடன். கண்களிலே மிரட்சியுடன் செல்லாயி மௌனமாக இருப்பாள். தாய் மேலும் மேலும் கேட்டால் செல்லாயியின் கண்களிலே நீர் பொலபொல வென்று உதிரும். சாப்பாடு சரியாகக் கிடையாது. அழுக்குப் புடவைதான் - துவைப்பது கிடையாது - சமையல் செய்கிற இடத்தருகேயோ, புறக்கடை நடைப்பக்கமோ படுத்தபடி இருப்பாள். 'எழுந்திரம்மா செல்லம்' - 'உஹும்'- 'ஏம்மா!' - 'மயக்கமா இருக்கு' - இதேதான் பேச்சு."[73] எனச் செல்லாயியினுடைய செயல்களை அண்ணா விளக்குகிறார். இச்சிறுகதையில் செல்லாயியின் செயல்கள் வாயிலாகக் காதலனைப் பிரிந்த பெண்களுக்கு ஏற்படும் உளவியல் சார்ந்த சிக்கல்கள் எடுத்தியம்பப்பட்டுள்ளன.

மனிதர்களின் உள்ளங்கள், உணர்ச்சிகளைச் சேகரித்து வைக்கும் குப்பைக் கிடங்குகள் அல்ல. அவ்வாறு சேகரித்து வைப்பதால் ஏற்படும் சிக்கலையும் மனிதர்களை மனிதர்கள் மதிக்க வேண்டும் என்ற சிந்தனையையும் 'சாது' என்னும் சிறுகதை எடுத்துரைக்கும். உள்ளுக்குள் புகைந்து கொண்டிருக்கும் எரிமலை வெடித்துக் கிளம்புவது போல உள்ளங்களில் கோபத்தை அடக்கி வைத்துக் கொண்டு இருக்கும் மனிதர்களின் உள்ள வெளிப்பாட்டை இச்சிறுகதை விளக்குகிறது. ஓரிடத்தில் சாதுவாக இருக்கும் மனிதர்கள் வேறோரு இடத்தில் அதற்கு எதிராக நடந்துகொள்ளும் விதத்தையும், அவ்வாறு நடந்து கொள்வதற்கான காரணத்தையும் உளவியல் சார்ந்து ஆராய்ந்து அண்ணா தீர்வு கூறுகின்றார். முதலாளியிடம் திட்டு வாங்கும் தொழிலாளி தன் மனைவியிடம் அந்தக் கோபத்தைக் காட்டுகின்றான். கணவனிடம் திட்டு வாங்கும் மனைவி கிணற்று அடியில் தன் கோபத்தைப் பிறரிடம் காட்டுகிறாள். இவ்வாறு ஓர் இடத்தில் அடக்கப்படும் கோபம் வேறோரு இடத்தில் வெளிப்படும். கோபம் மட்டுமல்ல எந்தவொரு உணர்ச்சியும் ஓர் இடத்தில் அடக்கப்பட்டு வேறொரு இடத்தில் வெளிப்படும் என்ற உளவியல் சிந்தனையை அடிப்படையாக வைத்து இச்சிறுகதையைப் படைத்துள்ளார் அண்ணா. எந்தவொரு உணர்ச்சியையும் வெளிப்படுத்துவது தான் இச்சிக்கலுக்குத் தீர்வாக இருக்கும் என்பதை இச்சிறுகதையின் மூலம் தெளிவுபடுத்துகிறார்.

இதேபோல கோபம் ஏற்படுவதற்கான மூலகாரணத்தை ஆராயும் விதமாக எழுதப்பட்ட சிறுகதை 'மூலகாரணம்' ஆகும். உள்ளத்திலே வேறு சமயங்களில் வேறு ஒருவரிடம் பல காரணங்களினால் ஏற்படும் கோபங்கள் தங்கள் இல்லங்களில் மனைவியரிடம் வெடித்து வெளிப்படுகின்றது. கோபம் என்பது திடீரென ஏற்படும் உணர்ச்சி அல்ல. வெடிமருந்துக் குழாயில் ஏற்கனவே வெடி மருந்தைப் போட்டு அழுத்தி வைத்திருந்தால்தான், தீப்பொறி பட்டவுடன் வெடி வெடித்துக் கிளம்புகிறது. அது வெறும் தீப்பொறியின் செயலல்ல. அதுபோலவே கோபம் மெல்ல மெல்ல பல்வேறு காரணங்களாலும் சேர்ந்திருக்கும். தீப்பொறி போன்ற சிறு சம்பவம் குடும்பத்தில் நிகழும் போது கோபம் உருவாகிச் சிக்கலை உருவாக்குகின்றது என்ற உளவியல் சார்ந்த பிரச்சினைகளை இக்கதையிலும் விளக்கியுள்ளார் அண்ணா.

## தொகுப்புரை

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே தமிழ் இலக்கியங்கள் சமுதாயத்தில் நிலவிய சிக்கல்களை எடுத்துக்கூறத் தலைப்பட்டன. தொடக்க காலத் தமிழ்ப் புனைகதைகளில் விதவைகளின் நிலை, குழந்தைத் திருமணம், சாதியப் பாகுபாடு பெண்ணுரிமை போன்றவை காணப்பட்டன.

அண்ணா காலச் சமுதாயத்தில் மேல் வர்க்கத்தினரின் அடக்குமுறைகள், வறுமை, அரசியல் ஏமாற்றம், போலித்தனம், தீண்டாமை, போலிச்சாமியார்கள், பொருந்தா மணம், பல மனைவியர் மணம், வரதட்சணைக் கொடுமை, விதவைக்கொடுமை போன்றவை அதிகமாகக் காணப்பட்டன. இத்தகையச் சீர்கேடுகளைப் பிரதிபலிக்கும் கண்ணாடி போல் அண்ணாவின் படைப்புகள் அமைந்துள்ளன.

சமுதாயச் சிக்கல்களைச் சுட்டிக்காட்டுவதே படைப்பிலக்கியங்களின் நோக்கமாகும். இந்நெறி அனைத்து வகை இலக்கியங்களிலும் பின்பற்றப்படுகிறது. இத்தகைய படைப்புகள் சமுதாயச் சீர்திருத்தத்திற்கு வழிகாட்டுகின்றன.

தனிமனிதனின் மனப்போராட்டங்களைச் சித்திரிக்கும் சிறுகதைகள் தனிமனிதச் சிக்கலுக்கு உரியனவாகின்றன. வேலை பார்க்கும் இடத்தில் நிகழும் பிரச்சனைகள், தொழில் நட்டத்தால் ஏற்படும் சிக்கல்கள் ஆகியன தனிமனிதச் சிக்கலை ஏற்படுத்துகின்றன.

சமயப் புரட்டுகளை மட்டும் எடுத்துரைக்காமல் வாழ்வின் பல்வேறு நிலைகளிலும் மக்களை வாட்டி வதைக்கும் சமயத்தின் பன்முகக் கூறுகளின் தீங்குகளும் சமயத்தைக் கட்டிக் காக்கும் சமயவாதிகளின் இழி செயல்களும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

நடைமுறை வாழ்வில் சமயத்தின் பெயரால் பல கொடுமைகள் நிகழ்ந்துள்ளது. சமயம் மக்களை முன்னேறவிடாமல் தடுத்து மூடநம்பிக்கைகளையும், சாதிப் பிரிவுகளையும், விதிக்கு அடிமையாகும் மனநிலையையும் உருவாக்கியுள்ளது. சமுதாயத்தில் சாதிகளால் தீண்டாமை, ஏற்றத்தாழ்வு போன்றவை உருவாகியது.

அரசியல்வாதிகளின் ஏமாற்று வேலையும், முதலாளித்துவத்தின் அதிகாரப் போக்கும், ஏழை பணக்காரன் வேறுபாடும் மிகுதியாகின. வறுமை ஒரு மனிதனை எந்தச் செயலையும் செய்யத் தூண்டவல்லது. நேர்மையான மனிதனைக் கூடத் திருடனாக மாற்றும் வல்லமை கொண்டது.

மனித வாழ்க்கை நம்பிக்கையின் அடிப்படையிலேயே அமைந்தது. அச்சம் காரணமாகப் பிறந்த சில நம்பிக்கைகள் ஆராய்ச்சிக்கும் அறிவியலுக்கும் இடந்தராத நிலையில் சமுதாயத்தில் மூடநம்பிக்கைகளாகப் பின்பற்றப்பட்டன. இதில் கடவுள் சார்ந்த மூடநம்பிக்கைகளே அனைத்திற்கும் அடிப்படையாக அமைந்துள்ளன.

அவ்வக்காலச் சமுதாயத்தில் இருந்த பெண்கள் பல்வேறு நிலைகளில் இடர்ப்பாடுகளைக் சந்தித்தனர். வரதட்சணைக் கொடுமை, பொருந்தா மணம், விலைமகளிர் அவலம், கைம்பெண் கொடுமை, காதல் உரிமையின்மை, திருமண ஏற்பாட்டில் இடர்ப்பாடுகள், மணவாழ்க்கை இடர்ப்பாடுகள் போன்ற பிரச்சினைகள் பெண்கள் வாழ்வில் துயரத்தை ஏற்படுத்தின. காதல் திருமணம், கலப்புத் திருமணம் செய்து கொண்ட தன் பெண்ணின் வாழ்வைக் காட்டிலும் குடும்பக் கௌரவமே

பெரிது என எண்ணி அப்பெண்ணைக் கொலை செய்யவும் அக்காலச் சமுதாயம் துணிந்திருந்தது.

கல்வி பயிலும் மாணவர்களுக்கு சாதியப் பாகுபாடும், பாடங்களில் உள்ள முரண்களும் சிக்கலை ஏற்படுத்தின. சட்டம் குற்றத்தைக் கண்டறிந்து தண்டிக்கின்றது. ஆனால் குற்றம் நடப்பதற்கான காரணிகளைக் கண்டறிய தவறிவிடுகிறது. நீதித்துறையில் அரசியல்வாதிகளின் தலையீடு சிக்கலை ஏற்படுத்துகின்றது.

ஏமாற்றுக்காரர்களின் ஏமாற்றுத்தனம், சூதாட்டம் போன்றவை சமுதாயத்தில் சிக்கலை உருவாக்குகின்றன. போலி விளம்பரங்கள், சோதிடம் போன்றவைகளால் மக்கள் ஏமாறும் நிலை உருவானது. முதியோர்களைக் கவனிக்காத நிலை சமுதாயத்தில் வளர்ந்தது.

காதலன் காதலியைப் பிரியும் போதும் காதலி காதலனைப் பிரியும் போதும் ஏற்படுகின்ற மனப்போராட்டங்கள் உளவியல் பிரச்சினைகளை உருவாக்குகின்றன. சில தனிமனிதச் சிக்கல்களும் உளவியல் பிரச்சினைகள் தோன்றக் காரணமாகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. பா.உதயக்குமார், அறிஞர் அண்ணாவின் சிறுகதைத்திறன், பக்.4-5
2. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.369
3. மேலது, ப.374
4. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-3, ப.79
5. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.302
6. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.216
7. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.684
8. பேரறிஞர் அண்ணா, வேலைக்காரி, ப.86
9. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-3, ப116
10. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.386
11. மேலது, ப.638
12. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1, ப.110
13. ஏ.எஸ்.வேணு, பெரியார் ஒரு சரித்திரம், ப.154
14. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.274
15. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.102
16. பேரறிஞர் அண்ணா, பார்வதி பி.ஏ., ப.123
17. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.576
18. மேலது, பக்.227-228
19. மேலது, ப.413
20. மேலது, ப.624
21. மேலது, ப.1084
22. மேலது, ப.258
23. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.874
24. அ.பிரின்ஸ் (ப.ஆ), அண்ணா ஒரு சமுதாயச் சிற்பி-1, ப.621

25. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.131

26. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.91

27. மேலது, பக்.404-405

28. மேலது, ப.527

29. மேலது, ப.531

30. மேலது, ப.675

31. மேலது, ப.676

32. பெரியசாமிதூரன் (ப.ஆ), தமிழ்க்கலைக்களஞ்சியம், தொ.8 ப.466

33. இரா.சேது, அண்ணாவின் புனைகதைத் திறன், ப.53

34. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.39

35. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.83

36. மேலது, பக்.446-447

37. மேலது, பக்.75-76

38. பி.எங்கெல்ஸ், குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம், ப.120

39. அறிஞர் அண்ணா, ரங்கோன் ராதா, பக்.102-103

40. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.801

41. அறிஞர் அண்ணா, ரங்கோன் ராதா, ப.74

42. அறிஞர் அண்ணா, ரங்கோன் ராதா, ப.46

43. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1, ப.147

44. மேலது, ப.218

45. இரா.சேது, அண்ணாவின் கதை இலக்கியம், பக்.54

46. மேலது, பக்.54-55

47. பேரறிஞர் அண்ணா, செவ்வாழை சிறுகதைத் தொகுதி, ப.53

48. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1, ப.148

49. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.130

50. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.183
51. மேலது, ப.39
52. மேலது, ப.882
53. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1, ப.10
54. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.820
55. அறிஞர் அண்ணா, ரங்கோன் ராதா. பக்.156-157
56. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.36
57. மேலது, ப.36
58. மேலது, ப.58
59. அறிஞர் அண்ணா, ஓர் இரவு, ப.51
60. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, பக்.169-170
61. மேலது, ப.242
62. மேலது, ப.984
63. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.566
64. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.142
65. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.322
66. மேலது, ப.714
67. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.456
68. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-2, ப.266
69. மேலது, தொகுதி-4, ப.33
70. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.394
71. மேலது, ப.238
72. மேலது, ப.744
73. மேலது, ப.452

# இயல் - 4

# அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் சமுதாய மாற்றங்கள்

தனிமனிதன், சமுதாயம், அரசு இம்மூன்று கூறுகளின் ஒருங்கிணைந்த பணியில் ஒரு சமுதாயத்தின் வளர்ச்சி அமையும். ஒவ்வொரு காலக்கட்டத்திலும் ஒவ்வொரு துறையிலும் முன்னோடிகள் தோன்றித் தனிமனித மேம்பாட்டுக்கும், சமுதாய வளர்ச்சிக்கும் அரசின் பணிக்கும் கருத்துரைகள் வழங்கிச் செம்மையுறச் செய்வதுண்டு. ஒரு சமயம் அதன் மேனியில் மாசுபடிந்து விடுகிறது. இன்னொரு சமயம் அதற்குத் தளர்ச்சி ஏற்பட்டுவிடுகிறது. மற்றோர் சமயம் ஒருவிதமான அடிமை இருளில் அது அகப்பட்டுக் கொண்டு தத்தளிக்கின்றது. இதுபோன்ற சமயங்களில் அதன் சுயநிலைமையை நினைவுபடுத்த, அதனை அடிமை இருளிலிருந்து விடுவிக்கச் சிலர் தோன்றுகின்றனர். அவர்கள் சமுதாயச் சிற்பிகள் எனப்படுவர். தனிமனிதன், சமுதாயம், அரசு இம்மூன்று நிலைகளின் கடமை, உரிமை உணர்வுகள் சிதையும் போது அந்த உணர்வைச் செம்மைப்படுத்த அரசியல் நெறிமுறையின் வாயிலாகவும், மதக்கோட்பாட்டின் வாயிலாகவும், இலக்கியத்தின் வாயிலாகவும், சமுதாய வளர்ச்சிக்குத் துணைபுரிவது உண்டு. ஒரு காலத்தில் நியாயப்படுத்தப்பட்டு நடைமுறைப்படுத்தப்படும் வாயில்கள், நெறிமுறைகள், சிந்தனைகள் மற்றொரு காலத்திலே மறுக்கப்பட்டு ஒதுக்கப்படலாம். காலம், சூழல், மனித மனம் இவற்றின் அடிப்படையில் ஒரு கொள்கை மனிதச் சிந்தனையுடன் பின்னிப் பிணைந்து விடுகிறது. சனநாயகக் கோட்பாடு நடைமுறைப்படுத்தப்படுகின்ற நாட்டில் பல்வேறு தளத்திலிருந்து தலைவர்கள் தோன்றுதல் இயல்பு. சமுதாய மேம்பாட்டை நோக்கமாகக் கொண்டு எழும் தலைவர்களை மக்கள் கொண்டாடுவர். அவ்வகையில் இருபதாம் நூற்றாண்டின் சமுதாயச் சிற்பியாக விளங்கியவர் பேரறிஞர் அண்ணா ஆவார். அவரின் படைப்புகளில் சமுதாய மாற்றங்களை ஆராய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

## இருபதாம் நூற்றாண்டு

சீர்திருத்தச் சிந்தனையில் இருவகை உண்டு. ஒன்று புரட்சி. மற்றொன்று மறுமலர்ச்சி. ஐரோப்பியரின் வரவு தமிழ்ச் சமுதாயத்தில் மாபெரும் மறுமலர்ச்சியை உருவாக்கியது. தமிழ்ச் சமுதாயத்தில் மட்டுமன்றி இந்தியச் சமுதாயத்தில் மறுமலர்ச்சியை உண்டாக்கிய நூற்றாண்டு இருபதாம் நூற்றாண்டு. இம்மறுமலர்ச்சியானது அரசியல், அறிவியல் விளைவுகளால் உருவாக்கம் பெற்றது. புதிய மாற்றத்தையும் புதுநிலை வளர்ச்சியையும் மறுமலர்ச்சி என்று சுட்டுவதுண்டு. தமிழகத்தைப் பொருத்தமட்டில் மறுமலர்ச்சி என்பது இருபதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட மாற்றத்தையே சுட்டுகின்றது. பல்வேறு துறைகளில் வளர்ச்சிகள் ஏற்பட்ட போதிலும் மறுமலர்ச்சி என்பது சமுதாயத் துறையில் ஏற்பட்ட மாற்ற நிலை, வளர்ச்சி நிலையைச் சுட்டுவதாகவே அமைந்துள்ளன. தமிழ்ச் சமுதாய மறுமலர்ச்சிக்கு வழிகோலியவர்களுள் அரசியலையும் சமுதாயச் சீர்திருத்தத்தையும் ஒருங்கிணைத்துப் பார்த்த மறுமலர்ச்சி இயக்க எழுத்தாளர்களுள் அறிஞர் அண்ணாவும் ஒருவர் ஆவார்.

சமுதாயம் என்பது ஆற்றுக்கு ஒப்பாகக் கருதப்படுகிறது. "ஒரே ஆற்றில் நேற்று மூழ்கிய நீரில் இன்று நீராடல் இயலாது."[1] நேற்றுக் குளித்த நீர் இன்று எவ்வளவோ தூரம் ஓடிப் புதுப்புது ஊர்களைக் கடந்து சென்றிருக்கும். அதே ஆற்றில் இன்று வேறு புதிய நீரில்தான் குளித்தெழ வேண்டும். இதனைப் போலவே சமுதாயத்திலும் பழையன கழிந்து

புதியன புகுந்த வண்ணம் இருக்கும். பழையன புதியனவாய்ப் பழகுதலும் உண்டு. புதியன பழையனவாய்ப் போதலும் உண்டு. பழைய மரபின் பெயரால் பற்றிக் கொண்டிருக்க நினைப்பது, பழைய நாட்காட்டியைக் கொண்டு காலமெல்லாம் நாள் பார்ப்பதற்கு ஒப்பாகும். தெளிவான சமுதாய மாற்றங்கள் நிகழ்ந்த வண்ணம் இருக்கும்.

## மாற்றம் - சொல் விளக்கம்

மாற்றம் என்ற சொல்லுக்குச் "சொல், பகை, வேற்றுமை"[2] என்ற பொருள்களைத் தமிழ்மொழியகராதி வழங்குகிறது. "சொல், பகை, விடை, வஞ்சின மொழி, மாறுபட்ட நிலை, பரிகாரம்"[3] என்னும் விளக்கங்களைக் கழகத் தமிழ் அகராதி கூறுகின்றது. தற்காலிகமானது தான் நிலைக்கும் என்பது பிரெஞ்சுப் பழமொழி. இந்த உலகத்தில் மாற்றம் ஒன்றுதான் மாறாததும் நிலைத்து நிற்பதுமானதாக இருக்கின்றது. ஆயின், உலகம் மாற்றத்தை உடனடியாக ஏற்றுக் கொள்வதில்லை. முடிந்த வரையிலும் எதிர்க்கின்றது. எனினும், அது ஒன்று தான் முன்னேற்றத்தைத் தரவல்லது. மாறுதல் இன்றேல் மனித வாழ்க்கை இல்லை. மாற்றத்தின் வழி கிடைத்த முன்னேற்றத்தின் காரணமாகத் தான் மனிதன் கடல்களை அளக்கிறான்; காடுகளைக் கடக்கிறான்; விண்ணில் பறக்கிறான்; குகையில் வாழ்ந்த மனிதன் விண்ணில் குடும்பத்துடன் வாழ வழி தேடுகிறான்.

## சமுதாய மாற்றம்

சமுதாய மாற்றம் என்பது இலக்கியத்தைப் பொறுத்த அளவில் படைப்பாளனுடைய சமுதாய உணர்வினையும் உலகக் கண்ணோட்டத்தையும் பொறுத்தே அமைகின்றது. பொதுவாகச் சமுதாயம் என்பதே அதன் தன்னிலைகளினாலும் புறவயத் தாக்கங்களினாலும் மாறுதலுக்குரியது. இம்மாற்றம் முன்னோக்கி அமைவது. நல்ல இலக்கியம் என்பது சமுதாய மாற்றத்தை உள்வாங்கியிருக்கும். அவ்வழி, நிகழ்கின்ற சமுதாய மாற்றத்தைக் காரண காரியங்களுடன் சித்திரிப்பது ஒருவகை. படைப்பின் திறத்தோடு இணைந்து சமுதாய மாற்றத்தை முன்மொழிவது இன்னொரு வகை. இவையல்லாமல் முன்னோக்கிய மாற்றத்தை எதிர்கொள்ள அல்லது ஏற்றுக்கொள்ளாதது போல காட்டுவதும் உண்டு. புனைகதைகளில் சமுதாய மாற்றத்தை மிக எச்சரிக்கையாக அணுகவேண்டும். கலைப்படைப்பு ஆதலின் எல்லாம் வெளிப்படையாக இருக்கும் என்று எதிர்ப்பார்க்க முடியாது. கதையை அல்லது நிகழ்ச்சியை நகர்த்திக் கொண்டு செல்லும்போதே அதன் உடன்விளைவாக இது தோன்றலாம்; அல்லது இறுதியில், எச்சப் பொருளாகவோ குறிப்புப் பொருளாகவோ வெளிப்பட்டும் தோன்றலாம். படைப்பினுடைய தன்மையைச் சார்ந்தது இது. குறிப்பிட்ட படைப்பு வெளிப்படுத்தும் சமுதாய மாற்றம் அந்தப் படைப்பினுடைய உள்ளமைப்பிலும் அக்காலச் சூழ்நிலை அமைவிலும் பொருத்திப் பார்க்க வேண்டும்.

சமுதாயத்தின், சமூகவியல் - பொருளியல் - அரசியல் மாற்றங்கள் தொடர் நிகழ்வுகள் ஆகும். இம்மாற்றங்கள் மனிதர்களின் தேவைக்கேற்ப மாறி அமையும். ஒரு காலத்தில் ஏதேனும் ஒன்றைப் பின்பற்றி வந்த சமுதாயம் பின்னர் மாறிப் பிறிதொன்றைக் கையாளுவது சமுதாய மாற்றமாகும். ஆங்கிலேயர்கள் இந்தியாவிற்கு வந்தபின் இந்தியர்களிடையில் ஏற்பட்ட உடை, உணவு, பழக்கவழக்கங்கள், நாகரிகம் முதலியவற்றில் உண்டான மாற்றங்களைச் சமுதாய மாற்றங்களாகக் கொள்ளலாம். சமுதாய வளர்ச்சி அல்லது சமுதாய மாற்றம் என்ற கருத்தாக்கம் 19-ஆம் நூற்றாண்டில் எழுச்சி பெற்றது. இதனைப் பரிணாம வளர்ச்சி எனவும் கூறுவர். இயற்கையில் உள்ள எல்லாப் பொருள்களும் மாற்றங்களைப் பெறுகின்றன. இந்த மாற்றங்கள் சமுதாயத்திலும் நிகழ்கின்றன. இம்மாற்றங்கள் நிகழக் காரணம் என்ன என்பதை ஸ்பென்ஸர் ஆராய்ந்தார். அவர் 'The

Study of Society' என்ற தமது நூலில் ஒவ்வொரு பொருளும் மாற்றத்தன்மைக்கு உட்பட்டே இருக்கிறது. அதனைச் சமுதாயவியல் உள்வாங்கிக் கொள்ள வேண்டும் என்று வலியுறுத்துகின்றார். இந்த வளர்ச்சிக் கோட்பாட்டைச் சமுதாயவியல் ஏற்கவில்லையெனில் அது அறிவியலாக மாற முடியாதென்றும் திட்டவட்டமாகக் கருதினார்.

காலந்தோறும் பல்வேறு புறக்காரணங்களாலும் அகக்காரணங்களாலும் சமுதாயங்களில் மாற்றங்கள் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. பத்தாண்டுகளுக்கு முன்பிருந்த சமுதாய நிலையில் ஏற்பட்ட பல்வேறு மாற்றங்களை இன்று காண்கிறோம். வாழ்க்கை முறைகள், வசதி வாய்ப்புகள், எண்ணங்களில் மாற்றங்கள் எனச் சில முன்னேற்றங்களும் தோன்றியுள்ளன. வறுமை, குடியிருப்பு வசதியின்மை, சுகாதாரக் குறைவு, பல்வேறு பற்றாக்குறைகள், பண்பாட்டுச் சீரழிவுகள் போன்ற எதிர்மறை மாற்றங்களும் நேர்ந்துள்ளன. இந்த இருவிதப் போக்கு தொடர்ந்து நீடிக்கும் வகையில்தான் இன்றைய உலகப் பொருளாதார, அரசியல், சமுதாய நிலைகள் உள்ளன. முன்னேற்றமான மாற்றங்களை மட்டும் உருவாக்கி உலகச் சமூகத்தையும், நாட்டுச் சமூகத்தையும் சீர்படுத்த அறிஞர்கள், சிந்தனையாளர்கள், சமூக ஆர்வலர்கள் முயன்று வருகின்றனர். இவை அனைத்தையும் இலக்கியப் படைப்பாளி நன்கு உணர்ந்திருக்கிறான்.

இந்த மாற்றங்களின் பார்வையாளனாக மட்டுமல்லாமல், பங்குகொள்பவனாகவும் படைப்பாளி இருக்கிறான். தன் படைப்புகளில் சமுதாய மாற்றங்களைக் காரண காரியங்களுடன் சித்திரிப்பது, நல்ல மாற்றங்களைப் பரிந்துரைப்பது ஆகிய இருவகைகளில் அவனுடைய பங்களிப்பு நிகழ்கிறது.

சங்க இலக்கியத்தைத் தொடர்ந்து தோன்றிய பதினெண்கீழ்க்கணக்கு அறநூல்கள், சங்ககாலத்தின் பின் தமிழ்நாட்டின் வரலாற்றில் ஏற்பட்ட இருண்ட காலத்தை எதிர்கொண்டவை என இலக்கிய வரலாற்றறிஞர்கள் கூறுகின்றனர். தமிழ் வேந்தர்கள், சிற்றரசர்களின் ஆட்சி சிதறி, வேற்றினத்தவரின் ஆட்சி தோன்றி மக்கள் வாழ்வில் அமைதியும் ஒழுங்கும் சிதைவு கொண்ட நிலையில், சமுதாயக் குறைபாடுகள் பலவற்றையும் எதிர்த்துத் தாக்கி அழித்து அறமும் நேர்மையும் கொண்ட சமுதாயத்தை உருவாக்கவே திருக்குறள், நாலடியார் போன்ற நூல்கள் தோன்றின. கொலை, களவு, கள், காமம், சூது போன்ற குற்றங்களை அவை கண்டித்தன. கற்பைப் பேணுதல், பிறன்மனை விழையாமை, பொருள்பெண்டிர் தொடர்பை ஒழித்தல், மனத்துக்கண் மாசிலனாக வாழ்தல், வையத்து வாழ்வாங்கு வாழ்தல் போன்ற விழுமியங்களை உயர்த்திப் பிடித்தார் வள்ளுவர். பிறப்பால் உயர்வு தாழ்வு கூறும் ஆரிய வைதீகத் தொடர்பு ஏற்பட்டிருந்த அந்தக் காலத்தில் 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்று முழங்கினார். சமுதாய மாற்றங்களை மிகவும் துணிவாக முன்வைத்த முதல் படைப்பாளியாக விளங்கினார் அவர். பிற்காலத்தில் சித்தர்களும், இராமலிங்க அடிகளும், பாரதி, பாரதிதாசன் போன்றோரும் சமுதாய மாற்றங்களுக்காகத் தம் எழுத்தைப் பயன்படுத்தினர். இன்றும் தற்கால உரைநடை, கவிதை இலக்கியங்கள் பல கலையுணர்வு குன்றாத வகையில் சமுதாய மாற்றங்களைப் போற்றுவதும், முன்மொழிவதுமாக உள்ளன.

## சமுதாய மாற்றத்திற்கு எதிரான தடைகள்

நீர், நில, மலை வளங்களுடன் அரண்களும் மிக்க நாடு, சமுதாய வளர்ச்சி குன்றி சவலைப் பிள்ளையாகக் காட்சி தருமானால் அந்நாட்டில் பின்வரும் தடைகள் சமுதாய மாற்றத்திற்கு எதிரானதாக இருப்பதாகக் கருதப்படும். அவையாவன,

1. தனி மனிதத் தேக்கம்
2. தலைமைத் தேக்கம்
3. சமுதாயத் தேக்கம்

## தனிமனிதத் தேக்கம்

மனித சமுதாயத்தை மாற்றுவது பற்றிப் பேசும் தனிமனிதரில் பலர் தமது சிந்தனையைச் சிறையிலிட்டுக் கொடுமை கோலோச்ச உடந்தையாக இருக்கின்றனர். இவ்வாறு சிந்திக்க மறுத்து, சிந்திப்போரை நிந்திக்கக் கூடிய நிலையே 'தனிமனிதத் தேக்கம்' எனப்படும்.

## தலைமைத் தேக்கம்

தலைமைத் தன்மைக் கொண்டோரும், தலைமைப் பதவி வகிப்போரும் தமக்குரிய சமுதாயக் கடமைகளிலிருந்து விடை பெற்றிருத்தல் 'தலைமைத் தேக்கம்' எனப்படும். இதனைச் சமூகவியலார், நுண்ணறிவுச் சோம்பல் மற்றும் நிருவாகக் குறைபாடு (Intellectual Laziness and Administrative Defects) எனச் சுட்டுவர்.

## சமுதாயத் தேக்கம்

சமுதாயத்தில் மக்கள் அனைவரும் சேர்ந்து, நம்பிக்கைகளை உருவாக்கிக் கொண்டு செயல்படுகிறார்கள். அந்நம்பிக்கைகளில் நல்லனவும் உண்டு. அறிவுக்கு ஒவ்வாதனவும் உண்டு. அறிவுக்கு ஒவ்வாத மூடநம்பிக்கைகள் மனித சமுதாயத்தைத் தாக்கும் பொழுது அச்சமுதாய இயக்கத்திற்கு அது தடையாகிறது. எனவே இது 'சமுதாயத் தேக்கம்' எனப்படும்.

## திராவிட இயக்கப் படைப்புகள்

ஈ.வெ.ரா பெரியார் காங்கிரசு இயக்கத்திலுள்ள சிலரின் நடைமுறைத் தவறுகளைக் கண்டித்து அவ்வியக்கத்தில் இருந்து வெளியேறித் தனி இயக்கம் கண்டார். சில ஆண்டுகள் கழித்து நீதிக்கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். நீதிக்கட்சித் திராவிடர் கழகமாக மாறியது. திராவிடர் இயக்கமும் தனது கொள்கைகளைப் பரப்ப நாடகங்களையும் சிறுகதை, புதினம், கட்டுரை, கடிதம் போன்ற இலக்கிய வகைகளையும் பயன்படுத்திக் கொண்டது. பகுத்தறிவுக் கொள்கைகளைப் பரப்பவும் அரசியல் கருத்துகளை விதைக்கவும் இவ்வகை இலக்கியங்கள் உதவின.

சமுதாயச் சீர்திருத்தம், மூடநம்பிக்கை எதிர்ப்பு, பிராமணிய எதிர்ப்பு, இதிகாச புராண எதிர்ப்பு, சாதி சடங்கு எதிர்ப்பு, ஜமீன்தார் எதிர்ப்பு, இந்தி எதிர்ப்பு, தனித்திராவிட நாடு, பெண்கல்வி, பெண் முன்னேற்றம், கைம்மை மறுமணம், தமிழ் வளர்ச்சி, சீர்திருத்த மணம், கலை வளர்ச்சி எனப் பல உள்ளடக்கங்கள் திராவிட இயக்கப் படைப்புகளில் இடம்பெற்றன.

தமிழ் மாகாண நாடகக் கலை அபிவிருத்தி மாநாடு ஈரோட்டில் நடைபெற்றபோது அறிஞர் அண்ணா தம் பேச்சில் குறிப்பிட்ட ஒரு கருத்து, திராவிட இயக்க நாடகங்களின் உள்ளடக்கங்கள் குறித்து அறிய உதவுகிறது.

"எலும்பு பெண்ணுருவான அருட்கதைகளைப் பற்றிப் பாடியும் ஆடியும் வந்தது போதும். நமது பெண்மக்கள் எலும்புருவானது தவிரப் பயன் எதுவுமில்லை. இனிப் பெண்கள்

எலும்புருவாகும் பரிதாப வாழ்வைச் சித்திரிக்கும் நாடகங்களை நடத்துங்கள். கண்ணைப் பெயர்த்தெடுத்து அப்பிய கண்ணப்பர் கதையை ஆடியது போதும். இனிக் கோயில்களில் கும்பாபிஷேகம் செய்பவன் ஊரில் கொள்ளையடிக்கும் விஷயத்தை விளக்கும் நாடகத்தை நடத்திக் காட்டுங்கள். வாழ்க்கையைச் சித்திரித்துக் காட்டுங்கள். ஏழையின் கண்ணீர், விதவையின் துயரம், மதத் தரகர்களின் மமதை ஆகியவற்றை விளக்கும் அறிவு வளர்ச்சி நாடகங்களை நடத்துங்கள்”[4] என்று அண்ணா குறிப்பிட்டார். இது திராவிட இயக்க நாடக மரபைப் புரிந்துகொள்ள உதவுகிறது.

புராண வரலாற்று நாடகங்களில் கூடச் சனாதனத்திற்கும் ஆரியத்திற்கும் எதிரான கருத்துகள் வலியுறுத்தப்பட்டன. தமிழ்ப் பண்பாட்டை நிறுவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. உரையாடல்களிலும் தமிழ்மொழி நடை புதுப்புனைவுடன் வெளியிடப்பெற்றது. பாரதிதாசன், அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, ப.கண்ணன், ஏ.கே.வேலன், தில்லை வில்லாளன், சி.பி.சிற்றரசு, இரா.செழியன், ஏ.வி.பி.ஆசைத்தம்பி, முரசொலி மாறன், எஸ்.எஸ்.தென்னரசு, இராதா மணாளன், திருவாரூர் கே.தங்கராசு முதலானோர் திராவிட இயக்க நாடகங்களைப் படைத்தனர்.

## அண்ணாவின் படைப்புகள்

அண்ணா விரும்பிய சமுதாயச் சீர்திருத்தம் மேற்போக்கானதன்று. ஆழமானது. அதனால் தான் தம் புனைகதைகளில் சமுதாய அவலத்தை வெளிப்படுத்தினார். தமிழ்ச் சமுதாயத்தை அரித்துக் கொண்டிருக்கும் வேர்ப்புழுக்களான பெண்ணடிமைத்தனம், சமயப் பொய்மை, சாதிக் கொடுமை, மூடநம்பிக்கை, போலித்தனம், பொருளியல் ஏற்றத்தாழ்வு ஆகிய கொடுமைகளைத் தம் புனைகதைகளில் எடுத்துக்காட்டி மக்களைச் சிந்திக்கத் தூண்டினார். அதன்மூலம் சமுதாய மாற்றத்தை உருவாக்க முனைந்தார்.

## மாற்றம் குறித்த அண்ணாவின் கருத்து

மாற்றம் என்பதற்கான விளக்கத்தை அண்ணா அவர்தம் இலக்கியங்களில் எடுத்துரைப்பர். தம்பிக்கு எழுதிய கடிதத்தில், “மாறுதல் இருக்கிறதே தம்பி, மிகமிகச் சுவை தருவது. ஒன்று மற்றொன்று ஆகிறது, ஒன்றுடன் ஒன்று கலந்து புதிதொன்று ஆகிறது. ஒன்றே வளர்ந்து புதிய மாற்றம் கொள்கிறது. அதாவது, ‘தம்பி’ மாறுதல், வளர்ச்சியால் ஏற்படலாம். கலப்பால் ஏற்படலாம். களைவதால் ஏற்படலாம். மாறுதல், வளர்ச்சியால் ஏற்படலாம். மாறுதல் உண்மையானதாகவும் இருக்கலாம்; போலியாகவும் இருக்கலாம்.”[5] என்கிறார்.

## அண்ணாவின் படைப்புகளில் சமுதாய மாற்றங்கள்

அறிஞர் அண்ணா படைப்புகளில் பழைய மதிப்புகளை மாற்றத்திற்குள்ளாக்குகின்றார். சமுதாயத்தில் நிலவும் எண்ணற்ற சிக்கல்களுக்குத் தீர்வு காணும் நோக்கில் மாற்றத்தைக் கூறுகிறார். அதேபோல் தான் சார்ந்திருந்த இயக்கத்தின் சமுதாயச் சீர்திருத்தச் செயல்பாடுகளைத் தனது படைப்புகளில் விளக்கிக்காட்டுகின்றார்.

அவ்வகையில் சமய விழிப்புணர்வு, சாதி ஒழிப்பு, கலப்புமணம், பகுத்தறிவுச் சிந்தனைகள், போலிச் சாமியார்களை இனங்கண்டறிதல், மக்கள் புரட்சி, முதலாளித்துவம் ஒழிதல், அரசியல் மாற்றங்கள், நீதித்துறையில் மாற்றம், பெண் விழிப்புணர்வு, சொத்துரிமை, கைம்பெண் மறுவாழ்வு, கைம்பெண் மறுமணம், விலைமகளிர் மறுவாழ்வு, சுயமரியாதைத் திருமணம் என்பன குறிப்பிடத்தக்கனவாகும்.

## சமய விழிப்புணர்வு

மனிதனைப் பண்படுத்தி நன்னெறியில் செலுத்துவது சமயம் ஆகும். மனிதனை மனிதன் கடவுளின் பெயரால் சுரண்டுவதற்கு ஏற்ற களமாகவுமம், சுகமான வாழ்வுக்குத் தக்கநெறியாகவும் இத்தகைய சமயத்தைத் தூய்மையான சமயச் சான்றோர்கள் எண்ணுவதில்லை. இதனால் மனிதனின் அறியாமையைப் பயன்படுத்திக் கொண்டு இன்பமான வாழ்வை மேற்கொண்டு வரும் போலிச்சமயவாதிகளையும், சமயத்தின் நோக்கத்தையும் பற்றி மக்களுக்கு எடுத்துக்கூறும் விதமாக அண்ணா தம் படைப்புகளைப் படைத்துக்காட்டினார். தந்தை பெரியாரின் வழியில் தமிழகத்தில் மண்டிக் கிடந்த மூடப்பழக்க வழக்கங்களைச் சாடினார். 'சந்த்ரோதயம்' என்னும் நாடகத்தில் காளி வழிபாட்டையும், கடவுள் மறுப்புக் கொள்கையையும் ஆன்மீகவாதிகளின் இழி செயலையும் பதிவு செய்துள்ளார். ஆனந்தனின் நண்பனாக வரும் மணி என்ற பாத்திரத்தைப் படைத்து அவரின் வாயிலாக காளி வழிபாட்டால் ஏழைகளுக்கு எந்த நன்மையும் கிடைக்கப் போவதில்லை; மாறாக துன்பமே மேலிடும் என்றும் பொய் சத்தியம் செய்வதால் ஒன்றும் காளி தண்டித்து விட மாட்டாள் என்றும் மூடநம்பிக்கைகளுக்கு எதிரான விழிப்புணர்வை ஏற்படுத்துகின்றார். மணி என்னும் பாத்திரத்தின் மூலம் சமய விழிப்புணர்வை உருவாக்கிச் சமுதாய மாற்றத்தை ஏற்படுத்த முற்படுகிறார்.

இந்து சமயத்தில் இருக்கக்கூடிய பல பிரச்சினைகளைத் தனது படைப்புகளில் காட்டியுள்ளார். இப்பிரச்சினைகளிலிருந்து மக்களைத் தெளிவுபடுத்தும் நோக்கில் தன் படைப்புகளில் விழிப்புணர்வு ஏற்படுத்தும் கருத்துக்களையும் கூறியுள்ளார். இந்த வகையில் இந்து சமயத்தில் பின்பற்றப்படுகின்ற வேதம் ஓதுதல் மக்களைப் பிரிக்கும் செயல் எனக் கூறுகிறார் அண்ணா. வேதம், சாதி போன்றவைகளிலிருந்து மக்கள் விடுபட வேண்டும் என்ற நோக்கில் 'வேலை போச்சு' என்ற சிறுகதையில், "வேதம் உண்மையிலேயே, ஜாதி, குலம் முதலிய பேதத்தை ஏற்படுத்தத் தோன்றியதே. அதுமட்டுமில்லை. அன்று வேதம் ஓதினார்களே பார்ப்பனர்கள், அவர்கள் ஓதியது சரியான வேதமல்ல; ரொம்ப ரொம்ப பேதம் இருந்தது."[6] எனக் கூறுகிறார். வேதங்களினாலும் அதனை ஓதும் பார்ப்பனர்களினாலும் திராவிடச் சமுதாயம் கட்டுண்டு கிடப்பதை ஏற்க மறுத்ததுடன் அனைவரும் இதிலிருந்து விடுபட வேண்டும் என்ற சமுதாய மாற்றச் சிந்தனையை இச்சிறுகதை வலியுறுத்துகின்றது. மக்கள் மக்களாக மதிக்கப்பெற்று, அறியாமை, மூடநம்பிக்கை, வறுமை ஆகியவற்றிலிருந்து விடுதலை பெற்று, மக்களை வாழ்விக்கும் சமயத்தையே தாம் வரவேற்பதாக உரைத்த அண்ணா, இந்து சமயத்திலே கூறப்பெறும் வாழ்க்கை நெறிமுறையைக் கடுமையாகச் சாடியுள்ளார். இந்து சமயத்தில் கூறப்பெறும் பிரம்மச்சரியம், கிருகசதராசரமம், வானப்பிரசதம், சன்யாசம் என்று கூறப்பெறும் நான்கு வகை நெறிகள் சமயத்தால், பொருளாதாரத்தால் நலிந்த மனிதனின் வாழ்க்கையைச் சிதைத்து விடுகின்றன என்பதைச் சுட்டும் வகையில் பின்னப்பட்டதே 'மதுரைக்கு டிக்கெட் இல்லை!' என்னும் சிறுகதையாகும். இச்சிறுகதையில் இல்லற வாழ்வில் இன்பமில்லாமல் துறவு வாழ்க்கையைத் தேடிச் செல்லும் மதுரை மடங்களில் சேர்ந்து சன்யாசி ஆகின்றான். மடங்களில் நடக்கும் சீர்கேடுகளைச் சகிக்காமல், "நாலு ஆஸ்ரமங்களின், மேன்மையை நானறியேன் துரைமார்களே! ஆனால் நானும், என்னைப் போல எண்ணற்ற மக்களும், இந்த ஆஸ்ரமங்களின் அவலட்சணத்திலே புரண்டிருக்கிறோம். புனிதமல்ல"[7] என்ற முடிவுக்கு வரும் மதுரையைக் கொண்டு சமயம் சார்ந்த நிகழ்வுகளில் மாற்றத்தை விளைவிக்கிறார் அண்ணா.

## சாதி ஒழிப்பு

சமுதாயத்தில் உள்ள மூடப்பழக்க வழக்கங்களுக்கு ஆணி வேராக இருப்பவை சாதிப் பிரிவினைகள். சாதிப் பிரிவுகளும் சமயப் பிரிவுகளும் இருக்கின்ற வரையில் சமுதாயத்தில் மூடப்பழக்க வழக்கங்களும் இருக்கவே செய்யும். புத்தர் முதல் பெரியார் வரை தோன்றிய சீர்திருத்த அறிஞர்கள் பலரும் சாதிப் பிரிவினைகளைச் சாடியே வந்தனர். சாதிப் பிரிவுகளால் சமுதாயத்தில் பலர் மணம் புரிந்து வாழ முடியாத அவல நிலைக்கு ஆட்படுகின்றனர். காந்தியடிகள், இராஜாஜி போன்றோர் இத்துன்பங்கள் நீங்கச் சிறந்த வழி கலப்புத் திருமண முறைதான் என்று பேசியதோடு செயலிலும் காட்டினர். இருப்பினும் இந்த நாட்டில் இருந்து சாதிகளையும் சாதிகளால் ஏற்படும் தீமைகளையும் ஒழிக்க மட்டுமல்லாது கட்டுக்குள் கொண்டு வருவது என்பதே மிகச் சிரமமான ஒன்றாக விளங்குகின்றது. இத்தகைய சாதிப் பிரிவினைகளைச் சாடியும் அதனால் உண்டாகும் தீமைகளை எடுத்துக்கூறியும் சாதியற்ற அல்லது சாதி பேதமற்ற சமுதாயத்தை உருவாக்கத் தனது படைப்புகள், பேச்சுகள், செயல்கள் என எல்லா வகையிலும் முயற்சிகளை மேற்கொண்டவர் அறிஞர் அண்ணா ஆவார்.

"ஜாதியால், மதத்தால், குலத்தால், அரசியல் நிலையால், பொருளாதாரத்தால் பேதம் ஏற்படுகிறது. இவையனைத்தையும் அகற்றியாக வேண்டும். ஆனால் இந்த நாட்டிலே, ஜாதிதான் மக்களுக்குள் பேதத்தை ஏற்படுத்தும் முதல் சாதனம். மக்களின் இரத்தத்திலே கலக்கப்பட்டிருக்கும் கடு விஷம். மனத்திலே இடக்கு நோயைப் புகுத்தி விட்ட முறை - எனவேதான் பேதமற்ற சமுதாயத்தை - சமத்துவத்தை - சமதர்மத்தை நாம் காண வேண்டுமானால் முதலில் ஜாதி தொலைந்தாக வேண்டுமென்று நான் சார்ந்துள்ள அறிவியக்கம் பல காலமாகக் கூறி வருகின்றது."[8] என்ற அண்ணாவின் பேச்சு சாதியச் சமுதாயத்தில் இருந்து மக்களை விடுவிக்கும் எண்ணத்தைப் பிரதிபலிக்கின்றது. இந்த எண்ணமே அண்ணாவின் படைப்புகளிலும் எதிரொலிக்கின்றது. சாதியக் கட்டுப்பாட்டின் காரணமாக உயிரைத் துறக்க முடிவெடுக்கும் அண்ணன் தங்கையின் கதையைக் கூறுவது 'இருவர்' என்ற சிறுகதையாகும். இக்கதையில் அண்ணன் கதாபாத்திரத்தில் வரும் இரத்தினம் இறப்பதற்கு முன் கூறும் கருத்துக்கள் சிந்திக்க மட்டுமல்ல இச்சமுதாய மாற்றத்திற்கான கருத்துக்களாகவும் விளங்குகின்றன. இச்சிறுகதையில், "இறப்பது குற்றமல்லவா என்று கேட்பீர்கள். யோசித்துக் கூறுங்கள் இது யார் குற்றமென்று ஏழை என்று எள்ளி நகையாடி, என் தங்கையை மணம் செய்து கொள்ள முன்வராத உறவினர்கள் குற்றமா? அந்த உறவினர்கள் மனதிலே ஜாதி என்ற பாகுபாட்டைப் புகுத்தி வைத்திருக்கும் சமுதாயத்தின் குற்றமா? யார் குற்றம் எங்கள் சாவின் முடிவிற்கு? என்று நீங்கும் இந்த நாட்டை விட்டு, இக்குற்றம்? எங்களைப் போன்றவர்கள் இறந்த பிறகாவது இக்குற்றம் நீங்குமா?"[9] என இரத்தினம் கேட்கும் கேள்விகள் வாயிலாகச் சமுதாய மாற்றத்திற்கான சிந்தனைகளை விதைக்கிறார் அறிஞர் அண்ணா.

'குமரிக்கோட்டம்' குறும்புதினத்தில் சாதியைக் காரணம் காட்டித் தன் மகனின் காதல் திருமணத்தை ஏற்க மறுத்து தன் மகனையும் மருமகளையும் வீட்டை விட்டு அனுப்பும் குழந்தைவேல் செட்டியாரால் கீழ்நிலை சாதிப் பெண் கற்பை இழக்கும் போது வேறு வழியில்லாமல் அப்பெண்ணை மணம் செய்து கொண்டு மனம் திருந்துகிறார். தன் மகனின் காதலையும் ஏற்றுக்கொள்கிறார். இத்தகைய சாதிய மாற்றத்தை இக்கதையில் காட்டுகிறார். இதுகுறித்து அண்ணா இந்நூலின் முகவுரையில், "காலம் மாறுகிறது என்பதை அறிய மறுக்கும் வைதீகர்களின் சிலருக்குத் தமது சொந்த வாழ்க்கையில் நேரிடும் சிலபல சம்பவங்கள் மனமாற்றத்தை ஆச்சரியமான விதத்திலும் வேகத்துடனும் தந்து

விடுகின்றன."[10] எனக் குறிப்பிடுகின்றார். இப்புதினத்தில் சாதிய வெறி ஊறிப்போன செட்டியார் ஏழைப் பெண்ணை ஏமாற்றி விட்டுத் திருமணம் செய்து கொள்ள சாதியைக் காரணம் காட்டினார். இறுதியில் செட்டியார் மனம் மாறி அவரால் ஏமாற்றப்பட்ட பெண்ணைத் திருமணம் செய்து கொள்கிறார். திருமணம் செய்து கொண்டதோடு, "நம் சொத்தைப் பாழாக்கிக் கோயில் கட்டி, குலம் ஜாதி பேசி சமூகத்தைக் குலைத்து வரும் வைதீகர்களிடம் கொடுப்பதா?"[11] என்று கூறுமளவிற்கு மாறிவிடுகிறார். கோவில் கட்ட வேண்டிய இடத்தில் சிறுவர் பள்ளிக்கூடமும், பிரகாரத்தில் ஏழைகள் குடியிருப்பும், உற்சவமும் அபிசேகமும் நடப்பதற்குப் பதில் அன்பும் அறிவும் பரப்பும் பிரச்சார அமைப்பும் அமைப்பதாக இக்கதையில் அண்ணா காட்டியுள்ளார். மேல்வர்க்கத்தினரின் அடக்குமுறைகள் சாதியின் பெயரால் செய்யப்படும் தீமைகள், ஏழைப் பெண்களின் வாழ்க்கையைச் சீரழித்தல் போன்றவற்றை இக்கதையில் விளக்குவதோடு அதற்கான தீர்வுகளாகக் கலப்புமணம், சுயமரியாதைச் சங்கம் ஆகியவற்றையும் காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

'சிங்களச் சீமாட்டி' குறும்புதினத்திலும் காதலித்த பெண் வேறு சாதி என்பதால் முதலில் திருமணம் செய்து கொள்ள மறுக்கும் சங்கரன் பிறகு வாழ்க்கையில் பல துன்பங்களையும் அனுபவித்த பின் இறுதியில் காதலித்த பெண்ணையே திருமணம் செய்து கொண்டு இன்பமாக வாழ்கின்றான் என அமைத்து, சாதிவிட்டுத் சாதி திருமணம் செய்து கொள்ளும் நிலையை விவரிக்கின்றார் அண்ணா.

## கலப்பு மணம்

சமுதாய நலன் நாடுவோர் திருமணத்தில் ஆதிக்கங் கொண்டிருந்த சாதிச் சிக்கலை வீழ்த்துவதற்குக் கலப்பு மணத்தைச் சிறந்ததொரு படைக்கலனாகக் கண்டறிந்தனர். திரு.வி.கல்யாணசுந்தரமும், "சாதி நோயை அறவே நீக்கவல்ல மருந்து தேவை என்று நினைந்தேன்; நினைந்தேன்; பன்னெடுநாள் நினைந்தேன். ஒன்று கண்டேன். எது? கலப்பு மணம். சாதி நோயின் வேரை அறவே கல்லவல்ல மருந்து கலப்பு மணமே என்று முடிவுக்கு வந்தேன்."[12] என்கின்றார்.

"கலப்பை மூலம்

நிலத்தில் நாம் உண்டாக்கும் கலப்பை; மாந்தர்

நெஞ்சத்தில் உண்டாக்கி விடுவோமாயின்

கலப்பு மணம் உருவாக வழியுண்டாகும்

கலப்பு மணத்தால் சாதி செத்தே போகும்"[13]

என்பர் கவிஞர் சுரதா. சமுதாயத்தில் வேரூன்றியுள்ள சாதியும், பொருளாதார வேறுபாடுகளும் மறையக் கலப்பு மணம் தேவையென்பதை அண்ணா தம்முடைய பல படைப்புகளில் படம்பிடித்துக் காட்டியுள்ளார். கலப்பு மணத்தின் தேவையை மக்களுக்கு உணர்த்துவதற்காகப் படைக்கப்பட்டது 'வேலைக்காரி' என்னும் நாடகம். இந்நாடகம் இருவேறு சாதிகளுக்கு இடையே நிகழும் திருமணம் பற்றிப் பேசுகிறது. வேதாசல முதலியார், சுந்தரம்பிள்ளை, முருகேசன் நாயக்கர் ஆகியோர் குடும்பங்களில் நடைபெறும் திருமணங்களைக் காட்டுவதன் வழியாகச் சாதியை ஒழிக்கத் தீவிர முயற்சி எடுத்துள்ளார் அண்ணா.

வேதாசல முதலியாரின் சாதிவெறி காதலர்கள் கலப்புமணம் புரிந்துகொள்ளத் தடையாக இருக்கின்றது. அவரின் மகன் மூர்த்தி தனது வீட்டில் வேலை பார்க்கும் வேலைக்காரி அமிர்தத்தைக் காதலிக்கிறான். அவர்களது திருமணத்திற்குச் சாதியும் பணமும் தடையாக இருக்கின்றது. பல்வேறு தடைகளைக் கடந்து மூர்த்திக்கும் அமிர்தத்திற்கும் திருமணம் நடைபெறுகிறது. வேதாசல முதலியாரின் அனுமதியுடன் நடைபெறும் திருமணத்தில் மணப்பெண் அமிர்தம் எனத் தெரியாமலேயே அவர் அத்திருமணத்தை நடத்தி வைக்கிறார். இறுதியில் உண்மைகளை அறிந்துகொள்ளும் நிலையில் வேதாசலம் முதலியாரிடம் ஆனந்தன், "உமது மருமகள் யார்? வேலைக்காரி அமிர்தம். வேற்று ஜாதிப் பெண், எங்கே உம் ஜாதித் திமிர்? பணம் பத்துநாளில் ஜாதியைப் பட்சணமாக்கிவிட்டது பார்த்தீரா? பணத்திமிர் ஒழிந்தது; ஜாதித் திமிரும் ஒழிந்தது; என் வேலையும் முடிந்தது நான் வருகிறேன்"[14] எனக் கூறி மாற்றத்திற்கான சிந்தனையைத் தூண்டிவிடுகின்றார் அண்ணா. இறுதியில் வேதாசல முதலியார் சாதித் திமிராலும் பணத் திமிராலும் பல தவறுகள் செய்ததை எண்ணி வருந்துகிறார். சாதிகள் இல்லாத சமுதாயத்தையும், பொருளாதார வேறுபாடற்ற சமுதாயத்தையும் இந்நாடகத்தின் மூலமாக அண்ணா உருவாக்கிக் காட்டுகிறார்.

கணவனை இழந்த இளம் பெண்களும் வாழ்க்கையில் இன்பங்களை அனுபவிக்க வேண்டும்; விதவை நிலையிலிருந்து மாற வேண்டும்; மற்ற பெண்களைப் போல கணவருடன் வாழ வேண்டும் என்ற ஆசைகள் அவர்கள் மனதில் தோன்றும், நிலையில் அது பிற்காலத்தில் ஆடவரைக் கண்டதும் காதலாக மாறும். அக்காதல் கலப்புத் திருமணத்திற்கு வித்திடும். இத்தகைய சூழலை, அண்ணா 'பேரன் பெங்களூரில்' என்ற சிறுகதையின் மூலம் விளக்குகிறார். இச்சிறுகதையில் புரோகிதரின் மகளாக வரும் ஏமலதா விதவை. அவ்வூரில் பள்ளி ஆசிரியராக வேலை பார்க்கும் கனகசுந்தரத்தைக் காதலிக்கிறாள். கனகசுந்தரமும் ஏமலதா மீது காதல் கொள்கிறான். இருவரும் திருமணம் செய்து கொள்ள முடிவெடுக்கிறார்கள். கனகசுந்தரம் ஏமலதாவின் தந்தையிடமே சென்று நல்ல நாள் பார்த்து தனது திருமணத்தை நடத்தி வைக்க வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறான். அவரிடம் அவர் மகள்தான் மணப்பெண் என்பதைக் கூறாமல் தான் மணக்கவிருக்கும் பெண் தன்னைக் காட்டிலும் உயர்ந்த சாதி என்று கூறுகிறான். அவரும் பெரிய இடம் தட்சணை நிறைய கிடைக்கும் என்று எண்ணிச் சம்மதம் தெரிவிக்கிறார். ஒரு புரோகிதரே முன்னின்று கலப்பு மணத்தை நடத்தித் தர வந்துள்ளதைத் திருமணத்திற்கு வந்திருந்தவர்கள் அனைவரும் புகழ்கின்றனர். "காலம் போகிற போக்கின்படி செய்ய முன்வந்தீர். இதுதான் முறை என்றும் ஜாதிபேதம் ஒழியத்தானே வேண்டும். கலப்பு மணம் பரவ வேண்டும். கனபாடிகளே இதற்குச் சம்மதித்த பிறகு ஒரு வைதீகனாவது இனி வாய்திறக்க முடியுமா."[15] என்று புரோகிதரை வெகுவாகப் பாராட்டிக் கலப்பு மணத்தின் அவசியத்தைப் பலரும் எடுத்துரைக்கும் விதமாக இச்சிறுகதை அமைந்துள்ளது. இதன் மூலம், காலத்தின் கட்டாயத்தின்படி சாதிகளைக் கட்டிக் கொண்டு அழும் வைதீகர்கள் முதலில் சாதிகளிலிருந்து விடுபட வேண்டும் என்றும், கலப்பு மணங்களை ஆதரிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டிருக்கின்றார். இக்கதையில் திருமணத்திற்குப் பின் பெங்களூரில் சென்று வாழும் ஏமலதாவுக்கும் கனகசுந்தரத்திற்கும் ஆண் பிள்ளை பிறக்கிறது. இதைத் தனது தந்தைக்குத் தெரிவிக்கின்றாள் ஏமலதா. பேரன் பிறந்த செய்தி அறிந்த புரோகிதர் பூரிப்படைகின்றார். நாட்டில் நடக்கும் சீர்திருத்தங்களைக் கண்டு கோபங்கொள்ளும் புரோகிதர் தனது பேரன் நினைவு வந்தால் மட்டும் மனதில் புன்னகை தோன்றும் என்று கூறுவதன் மூலம் அண்ணா, சமுதாய மாற்றங்கள் மெல்ல மெல்ல அனைவருக்கும் சென்று சேரும் என்பதை உணர்த்துகிறார்.

‘குமரிக்கோட்டம்’ என்ற குறும் புதினத்தில் வரும் குழந்தை வேலுச் செட்டியார் தன் மகன் பழநி தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த கிறித்தவப் பெண்ணை மணந்து கொண்டதை எதிர்க்கிறார். அவரே குமரக்கோட்டம் கட்டிய போது உப்பிரசாதிப் பெண்ணின் புன்னகையில் சாதி சம்பிரதாயங்களைப் பறக்கவிடுகிறார். அதனால் குழந்தைவேலுச் செட்டியார் உப்பிரசாதியைச் சார்ந்த கீழ்சாதிப்பெண்ணை மணக்க வேண்டிய சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டு, பெண்ணை மணந்தபோது தன் மகனை உடன் அழைத்து ஒரே வீட்டில் வாழ்கிறார். இவ்வாறு காதல் மலர்கிறபோது மற்ற பாகுபாடுகளெல்லாம் மறைந்துவிடும் என்பதை அண்ணா எடுத்துக்காட்டுகின்றார்.

பம்பாயில் பெண்கள் மாநாட்டில் இராஜாஜி, “கலப்பு மணம் பரவ வேண்டும், பரவினால்தான் இந்த தேசத்துக்கே விமோசனம் உண்டு. ஜாதி, குலம், மதம் முதலியவற்றால் நாம் இனி பாழாகக் கூடாது”[16] எனப் பேசிய பேச்சைக் கருவாகக் கொண்டு ‘கலப்பு மணம்’ என்ற நாடகத்தை அண்ணா படைத்துள்ளார். இதற்கு முன் இராஜாஜி சாதி வேறுபாடு பார்க்காமல் தன் மகளைக் காந்தியின் மகனுக்கு மணம் செய்து வைத்தது சமுதாயத்தில் கலப்பு மணத்திற்கு முன்னுதாரணமாகப் பார்க்கப்பட்டது. அதேபோல அனைவரும் கலப்பு மணத்தை ஆதரிக்க வேண்டும் என அவர் பேசிய பேச்சு அவர் குலத்தைச் சேர்ந்தவர்களாலேயே விமர்ச்சிக்கப்பட்டது என்பதை அண்ணா இந்நாடகத்தில் பதிவுசெய்துள்ளார். இதில் சைவ குலத்தைச் சேர்ந்த ஆடவன் பிற குலத்துப் பெண்ணைக் கலப்பு மணம் செய்துகொண்டு வாழ்வதாகப் படைத்துக்காட்டி மாற்றத்தை விளைவிக்கின்றார்.

‘பாமா விஜயம்’ என்ற சிறுகதையில் வரும் சரசா, தன் தாயிடம் ஒரு படத்தைக் காண்பித்து இவரைத்தான் நான் மணம் செய்துகொள்ளப்போகிறேன் என்கின்றாள். அதற்கு அவள் தாயார் இவர் யார்? என்ன சாதி எனக் கேட்க. சரசா, “இவர் தானம்மா எனக்கு கணவராக வரப்போகிறவர். ஜாதி ஆண் ஜாதிதான் - எனக்கு அவ்வளவுதான் தெரியும்.”[17] என்கிறாள். இவ்வாறு கலப்பு மணத்தின் முன்னோடியாகச் சரசாவைப் படைத்துள்ளார் அறிஞர் அண்ணா.

‘தங்கத்தின் காதலன்’ சிறுகதையில் சாதி உணர்வு காரணமாகத் தங்கத்தை மணந்துகொள்ள மறுக்கும் பொன்னம்பலம் தன் மகளின் காதலை வரவேற்றுக் கலப்பு மணத்தை நடத்தி வைக்கிறார்.

‘பாமா விஜய’த்தில் பாமா மனம் விரும்பிய காதலனைச் சாதி கடந்து கலப்பு மணம் செய்து கொள்கிறாள். சிங்களச் சீமாட்டியில் நாயுடு வகுப்பைச் சேர்ந்த மலர்க்கொடியை கொங்கு நாட்டு வேளாளர் குடியில் பிறந்த சங்கரன் மணந்து கொள்கிறான். ரங்கோன் ராதாவில் பரந்தாமன் - ராதா திருமணம் கலப்பு மணமாகவே சிறக்கிறது. தசாவதாரம் என்ற கதையில் தேசபக்தன் பத்திரிகை ஆசிரியர் தேவர், பிராமணக் குலத்தில் பிறந்தவரை மணக்கிறார். இத்திருமணத்தால் தேவர் பல இன்னல்களுக்கு ஆட்படுவதைக் காட்டுகின்றார். இருப்பினும் கலப்பு மணத்தை ஆதரிக்கும் விதமாக இக்கதை அமைக்கப்பட்டுள்ளது.

பெண் யாரிடம் அன்பைச் செலுத்துகிறாளோ அவரோடு இணைந்து வாழ்வதில் தான் மகிழ்ச்சியும் பேரின்பமும் காண்கின்றாள் என்ற உண்மையை வலியுறுத்தவே இக்கதைகளை எழுதியுள்ளார். ஆண், பெண் காதலுக்குத் தடையாய் உள்ள இந்தியச் சமுதாயத்தின் நால் வருண வேறுபாட்டையும் பொருளாதாரச் சீர்கேட்டையும் அழித்தொழித்துப் பொய்யான கட்டுப்பாடுகளைத் தகர்க்கவே அண்ணாவின் உணர்வு முன்னால் நின்றது. இருமனங்கள்

இணைகின்றபோது பொய்யான கட்டுப்பாடுகள் அகன்று கலப்பு மணத்தைச் சட்ட வடிவமாக்கி ஏற்றம் அளித்தார். கலப்பு மணம் செய்து கொண்டவர்களுக்குப் பொற் பதக்கம் அளித்தார். அரசு அலுவலகங்களில் கலப்பு மணம் செய்து கொண்டவர்களுக்குப் பல சலுகைகள் வழங்கினார். பின்வரும் தலைமுறை கலப்புமணம் செய்து கொள்ள விழிப்புணர்ச்சியை உருவாக்கினார்.

## பகுத்தறிவுச் சிந்தனைகள்

'பகுத்தறிவு' என்னும் சொல்லில் பகு என்பது வேர்ச்சொல். பகுத்தல், அறிதல் என்னும் இரு தொழிற்பெயர்கள் புணர்ந்து 'பகுத்தறிவு' என்னும் சொல் உருவாயிற்று. பகுத்தறிவு என்பதற்குப் பகுத்தலின் பயனாய்ப் பெறப்படும் அறிவு என்பது பொருள். எந்தச் செயலையும் நன்மை - தீமை, வளர்ச்சி - வீழ்ச்சி, ஆக்கம் - தேக்கம், இன்பம் - துன்பம் ஆகியவற்றின் அடிப்படையில் ஆராய்ந்து பார்த்து அறிவின்வழி விடை காண்பதே பகுத்தறிவு எனப்படும்.

"சிந்திக்கும் தன்மையின் கூர்மையே பகுத்தறிவு"[18] என்பார் பெரியார். "குருட்டுத்தனமாக மனிதனையோ, மதத்தையோ, பின்பற்றுவது மானங்கெட்ட செயல். பகுத்தறிவுப்படி நடப்பது மிகவும் கண்ணியமானது"[19] என்பது அறிஞர் இங்கர்சாலின் கருத்தாகும். ஆய்ந்தறிந்து ஏற்றுக்கொள்ளும் பகுத்தறிவினைச் சரியான விதத்தில் பயன்படுத்த வேண்டும். வாழ்க்கைப் பாதைக்கு ஒளி பாய்ச்ச வல்லது பகுத்தறிவு என்பதனை,

"பச்சை விளக் காகும் - உன்

பகுத் தறிவு தம்பி

பச்சை விளக் காலே - நல்ல

பாதை பிடி தம்பி"[20]

எனப் பாரதிதாசன் பாடுகின்றார். பகுத்தறிவின் தேவையை உணர்ந்த பெர்ட்ராண்டுரசல், "ஆய்ந்தறிதல் வேண்டும்; அதற்கேற்ற அஞ்சாமை வேண்டும்; இன்றேல் சிந்தனையைச் சிறையிலிட்டுக் கொடுமையைக் கோலோச்சச் செய்வதற்கு உடந்தையானோர் ஆகி விடுவோம்"[21] என அறிவுறுத்துகின்றார்.

பெரியாரின் பகுத்தறிவுப் பாசறையில் இருந்த அண்ணாவும் தனது பகுத்தறிவுக் கருத்துக்களைப் பல்வேறு தளங்களில் பதிவு செய்துள்ளார். தனது படைப்புகளில் பகுத்தறிவுச் சிந்தனைகளைப் பெரிதும் இடம்பெறச் செய்துள்ளார். இதன்மூலம் இச்சமுதாயத்தில் உள்ளவர்களின் மனங்களில் இருந்து அறியாமை இருளை அகற்றிப் பெரியார் கண்ட கனவை நனவாக்கத் தம் இலக்கியங்களைப் பயன்படுத்தியுள்ளார்.

மக்கள் ஆதி தொட்டு இன்று வரை மூடநம்பிக்கையில் மூழ்கிக் கிடக்கின்றனர். இந்நிலை மாற வேண்டும். மாற்றம் பெற்றால் வளர்ச்சி உண்டு என்பதை 'சொர்க்கவாசல்' என்னும் நாடகத்தில் வரும், ".....கோதானம் செய்து, புண்ணியம் தேடுவது ஒரு விதமான வியாபாரம்...."[22] என்னும் உரையாடல் உணர்த்தும். இறந்த பின் மேலுலகத்திற்குச் செல்லும் ஆவியானது அங்கே இருக்கும் நெருப்பு ஆற்றைக் கடக்க இந்த உலகத்தில் கோதானம் செய்ய வேண்டும். அவ்வாறு செய்திருந்தால் மேலுலகத்தில் பசு தன் வாலைக் கொடுத்து நெருப்பு ஆற்றைக் கடக்க உதவும் என்ற நம்பிக்கையில் கோதானம் செய்வது

நடைபெறுகின்றது. இதுபோன்ற மூடப்பழக்கவழக்கங்களில் இருந்து மக்களை விடுவிக்க அண்ணா கவிராயர் என்ற பாத்திரத்தைப் படைத்துள்ளார். இப்பாத்திரத்தின் மூலம் சமுதாய மாற்றத்தை ஏற்படுத்த விழைகிறார்.

ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் திருமணம் செய்து வைப்பதற்காகச் சோதிடம் மூலம் பல்வேறு பொருத்தங்கள் இன்றும் பார்க்கப்படுகின்றன. அவ்வாறு பார்த்து நடைபெறும் திருமணங்களில் எத்தனை திருமணங்கள் நீடிக்கின்றன என்ற கேள்வியை 'குமாஸ்தாவின் பெண்' என்ற புதினத்தின் வாயிலாக முன் வைக்கின்றார் அண்ணா. "எனக்குத் திருமணம் நடந்தது. திவ்வியமான நாளாம். மங்களகரமான முகூர்த்தமாம். லட்சணம் மறுமாதமே தெரிந்து விட்டது. கழனியைச் சுற்றிப் பார்த்துவிட்டு வரச்சென்ற கணபதி சாஸ்திரிகள் (என் கணவர்) கால் வழுக்கி விழுந்து சில நாட்கள் படுக்கையில் இருந்துவிட்டுப் பரலோகப் பிராப்தியானார்"[23] எனக் குறிப்பிடும் காந்தா மூலம் சமுதாயத்தில் சோதிடம் பற்றிய நம்பிக்கையைப் பொய் என அழுத்தமாகப் பதிவு செய்கிறார் அண்ணா. இதன் மூலம் மூடப்பழக்க வழக்கங்கள் அற்ற சமுதாயமாகத் தமிழ்ச் சமுதாயம் திகழ வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றார்.

இப்புதினத்தில் மனித சமுதாயத்தில் நிலவும் பக்தி, தெய்வத்தின் பெயரால் நடத்தப்படும் சடங்குகள், நம்பிக்கைகள், இம்மை மறுமைச் சிந்தனைகள் முதலியவற்றையும் சாடுகின்றார். இவற்றுக்கு அடிமையாகாது மக்கள் மாற வேண்டும் என்ற சிந்தனையைக் காந்தாவின் காதலனாக வரும் சோமுவின் மூலம் உணர்த்துகின்றார் அண்ணா. தனக்கு இல்லற வாழ்க்கை வேண்டாம் என்றும் தான் சன்னியாசியாகச் செல்ல இருப்பதாகவும் கூறிக் காந்தாவை நிராகரித்து விட்டு, வடநாட்டுக்குச் செல்கிறான் சோமு. அங்கு ஆன்மீகத்தின் பெயரால் நடைபெறும் சுரண்டல்களையும் பொய்யையும் புரட்டையும் கண்டு ஆன்மீகத்திலிருந்து மீண்டு இல்வாழ்க்கைக்குத் திரும்புகிறான். இவ்வாறு சோமுவின் மூலம் ஆன்மீகத்திலிருக்கும் பொய்களையும் மூடநம்பிக்கைகளையும் சமுதாயத்திற்கு எடுத்துக்காட்டுகின்றார் அண்ணா.

ஆரியர்களின் வருகைக்குப் பின், தமிழர்களின் நிலை தாழ்ந்தது. கடவுள், பக்தி என்ற பெயரில் ஆரியர்கள், தமிழர்களை அடிமைப்படுத்தினர். இத்தகைய சூழலில் திராவிட இயக்கத்தினரால் பகுத்தறிவு தமிழ் மக்களிடையே புகுத்தப்பட்டது. கைலாயம் செல்வதே மிகப் புண்ணியம் என்று எண்ணி இருந்த மக்கள் புராணத்தின் இழிவையும், பொய்யையும் உணர்ந்து பகுத்தறிவுவாதிகளாக மாறினர். இதனை, 'கைலாயம் வேண்டாம்' எனும் நாடகத்தில்,

"மாசிலாமணி : மூக்கருத்தவன் பேரு, செருத்துணை; கையை வெட்டினவன் பேரு, கழற்சிங்கம். காலட்சேபம் செய்யலே. அவர்களை வேணுமானா கேளு, பெரிய புராணத்திலே இது இருக்கா, இல்லையான்னு, இந்த மாதரி ஆசாமிகளெல்லாம் போயிருக்காங்க, கைலாயத்துக்கு. ஏண்டா நாம்ப போகணும்?

வீராச்சாமி : எஜமான்! நான் என்னமோ நினைச்சிக்கிட்டு இருந்தேன், கைலாயம்னா, இப்பத்தான் தெரிஞ்சுது விஷயம். இந்த மாதிரி ஆசாமிக இருக்கிற இடமா இது? நமக்கு வேண்டாம் எஜமான் அந்த மாதிரி இடம்!

மா: . . . . . . . . . . . புராண பிடிப்பு குறையக் குறைய, தமிழ் இலக்கியத்தின் மீது ஆர்வம் வளருகிறது. பத்தாண்டுகளுக்கு முன்பு திருக்குறளை அறிய மறுத்தவரெல்லாம் இன்று புதுப்பொருள் அறிகின்றனர்."[24]

என்னும் உரையாடல் உணர்த்தும்.

‘பாமா விஜயம்’ என்ற சிறுகதையில் சமுதாய மாற்றத்தை உருவாக்கும் பெண்ணாகவும், பழமைகளிலிருந்து மக்களை விடுபட வைக்கும் உயர்ந்த நோக்கம் கொண்ட புரட்சிப் பெண்ணாகவும் சரசாவை அண்ணா படைத்திருக்கின்றார். படிப்பறிவில்லாத கிராமத்தில் வசிக்கும் படித்த பெண்ணான சரசா, அவ்வூர்ப் பெண்களுக்குப் பொல்லாதவளாகவும், எதைச் சொன்னாலும் குற்றம் கண்டுபிடிப்பவளாகவும் தெரிகிறாள். நல்ல பண்புடையவளாகவும், துணிவுடன் செயலாற்றும் திறனுடையவளாகவும் மூடப்பழக்கங்களை ஏற்க மறுக்கும் புரட்சிச் சிந்தனை உடையவளாகவும் அண்ணா இப்பாத்திரத்தைப் படைத்துள்ளார். தன்னுடைய அம்மா பக்தி, சோதிடம் என்ற பெயரில் ஏமாறுவதைக் கேலி செய்கின்றாள். அறிஞர் அண்ணாவின் பகுத்தறிவுச் சிந்தனை வெளிப்பாடாக இப்பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது.

‘சந்த்ரோதயம்’ என்னும் நாடகம் சமுதாயத்தின் அவலநிலைகளை அடிப்படையாகக் கொண்டு அமைந்தது. சாதியத்தால் உண்மைக்காதலை மறுக்கும் நிலையையும், கைம்மையின் கொடுமையையும், மக்களைச் சுரண்டும் ஆதினங்களின் இழிநிலையையும், வயோதிகத் திருமணத்தின் விளைவையும் அண்ணா எடுத்துரைக்கின்றார். இந்த இழிநிலைகள் சமுதாயத்திலிருந்து அகற்றப்பட வேண்டும் என்ற நோக்கில் ஒவ்வொரு அவலத்திலும் சீர்திருத்தத்தை ஏற்படுத்துகின்றார் அண்ணா. வயோதிகத் திருமணத்தினால் சில நாட்களிலேயே விதவை ஆகும் சந்திராவைத் திருமணத்திற்கு முன் விரும்பிய சாம்பசிவம் மறுமணம் செய்து கொள்ள முன்வருகிறான். விதவைகளின் வாழ்வில் மாற்றத்தை உருவாக்க விரும்பிய அண்ணா விதவை மறுமணம் என்ற சமுதாய மாற்றத்தைச் சாம்பசிவத்தின் வாயிலாகக் கொண்டு வருகின்றார். இந்நாடகத்தில் சாதி வேறுபாடற்ற சமுதாயம் அமையக் காதல் மணம் ஒரு வழியாக அமையும் என அவர் கருதுவதை அறியமுடிகின்றது. துரைராசு என்ற கதாபாத்திரம் இந்நாடகத்தில் அண்ணாவின் குரலாகவே ஒலிக்கிறது. பெண் வாழ்வு பெறக் கழகத்தோழர்கள் உதவுவதாகக் காட்டி, சமுதாய மாற்றத்தில் தம் இயக்கத்தின் பங்களிப்பைக் கூறுகிறார். இந்நாடகத்தில் சிங்காரவேலன் கூறுவதாக, “இனி நான் வஞ்சகத்துக்கு அடிமையாக மாட்டேன். வைதீகத்துக்கு இடமளிக்க மாட்டேன். பார்ப்பனியத்தைப் பாதுகாக்க மாட்டேன். பகுத்தறிவு பரப்புவேன்; ஜாதி பேதம் ஒழியட்டும்; மூடநம்பிக்கை ஒழியட்டும். புரட்டர்களின் கொட்டம் அழியட்டும்.”[25] என்கிறார். இதுவரையில் பார்ப்பனியத்தைப் பாதுகாத்து வைதீகத்தை ஆதரித்து சாதிகளையும், மூடநம்பிக்கைகளையும் வளர்த்து வந்தவர்களிடம் இருந்தே மாற்றத்தை விளைவிக்க எண்ணியதன் விளைவே இந்நாடகத்தில் ஏற்படும் சிங்காரவேலரின் மனமாற்றம் ஆகும்.

தாம் வாழ்ந்த காலத்திலேயே புதுமையைப் புகுத்தி வெற்றி கொண்ட புதுமையாளர்களுள் அறிஞர் அண்ணாவும் ஒருவர் என்பதற்கு ‘சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்’ என்ற நாடகம் சான்றாகும். இதில், “மாடா போ, மரமா போ, பூச்சியா போ, புழுவாகப் போ என சாபம் கொடுக்கிற காலமா? இது! இல்லே நம்ம கையில அக்கினி இருக்குன்னு சொன்னா ஊரார் கேட்டு பயப்படற காலமா? காலத்தை அறிஞ்சுண்டு பேசும்.”[26] என வரும் உரையாடல் காலத்தால் நிகழ்ந்துள்ள மாற்றத்தை உணர்த்தும். இது இந்நாடகத்தில் வரும் பாலச்சந்திரப்பட்டர் என்ற பிராமணப் பெரியவரின் கூற்றாகும். அதுபோலவே இந்நாடகத்தில் சாதாரணக் குடியானவன் பாலச்சந்திரப் பட்டர் என்ற பிராமணப் பெரியவரிடம் பேசும்போது, “என்னமோ போங்க வரவர எங்களுக்கு இந்தப் புராணம் இதிகாசம் இதிலெல்லாந் சந்தேகம் வலுத்துக் கிட்டுத்தான் வருது”[27] என்று சொல்லுவதை ஆராயும்போது சாதாரண

மக்களிடத்தில் இருந்து இந்த விழிப்புணர்வு வர வேண்டும் என்ற நோக்கத்துடன் தனது படைப்புகளை அறிஞர் அண்ணா படைத்துள்ளார் என்பதை உணர இயலும்.

மூடநம்பிக்கையில் திளைத்து வரும் இச்சமுதாயத்தை இளைஞர்கள் தான் மீட்டெடுக்க வேண்டும் என்ற சிந்தனையை 'நாக்கிழந்தார்' என்னும் சிறுகதை மூலமாக விதைக்கிறார். மூடநம்பிக்கையை இப்படியே வளரவிட்டால் அது நாட்டுக்குக் கேடு விளைவிக்கும் என்ற கருத்தை, "இந்தப் பித்தம் போக மருந்துண்ணாத வரையில் நாடு, நயவஞ்சகருக்கு வேட்டைக்காடாகவே இருந்து தீரும். வாலிபர்கள் விரைந்தெழுந்து இந்த வீணர்களை அடக்காவிட்டால், வாழையடி வாழையென்றிருந்துவிட்டால், எதிர்காலத்திலே இந்நாடு, காட்டு மிராண்டிகளின் கூடமென்றே நாகரிக மக்கள் கருதி எள்ளி நகையாடுவர்."[28] என்பதில் எடுத்துக்காட்டுகிறார். சமுதாய மாற்றத்திற்கான செயலில் இளைஞர்கள் முனைந்து செயலாற்ற வேண்டும் என்கிறார். இப்படிப்பட்ட சமூகக் கேடுகளை உருவாக்கும் மூடநம்பிக்கைக் கோட்பாடுகளைத் தகர்க்கப் பிரச்சாரம் செய்ய முன்வராதவர்கள் நாக்குடையவர்களாக இருந்தாலும் அவர்கள் நாக்கிழந்தவர்களே ஆவர் எனச் சாடுகிறார். அவ்வாறு சாடுவதன் மூலமாக இளைஞர்களை எழுச்சி கொண்டவர்களாக மாற்ற முயல்கின்றார். அதிலிருந்து மூடநம்பிக்கைகள் அற்ற சமுதாயம் மலர்வதற்கான மாற்றத்திற்கு வித்திடுகிறார் அறிஞர் அண்ணா.

வரலாறு என்பது உண்மைகளின் உறைவிடமாக இருக்க வேண்டுமே தவிர, பொய்களின் கூடாரமாக விளங்கக்கூடாது. தமிழில் உள்ள புராணங்கள் அனைத்தும் பல பேருடைய கனவுகள் என்கிறார் அண்ணா. இந்தக் கருத்தைப் 'பள்ளியறையில் பரமசிவன்' என்ற கதையில் புலப்படுத்துகிறார். இக்கதையில் வரும் வீரன் பரமசிவனும் பார்வதியும் உரையாடுவதைப் போல கனவு காணுகிறான். அதைத் தன் நண்பனிடம் கூறுகிறான். அக்கனவில் வரும் பரமசிவன், பார்வதி ஆகிய இருவரின் உரையாடல் மூலமாகப் பல்வேறு விழிப்புணர்வுச் சிந்தனைகளை அளிக்கின்றார் அண்ணா. இறுதியாக வீரனின் வாயிலாகப் பகுத்தறிவுச் சிந்தனையை ஊட்டுகிறார். இயற்கையின் விசித்திரத்தால் இயற்கைக்கு மாறாகச் சில சம்பவங்கள் நிகழ்ந்திருக்கும். அதனைக் கடவுளாலேயே நடந்தது என்று எண்ணுவது தவறு என்பதை வலியுறுத்துகின்றார். இச்சிறுகதையில், "சிவலிங்கம் சாட்சி சொல்வது, எலும்பு பெண்ணுருவாவது, பனைஓலைத்துண்டு வெள்ளத்தை எதிர்த்துச் செல்வது, கருங்கல் பாறை மிதப்பது, நரி பரியாவது, அறுத்துக் கறி சமைத்த பிள்ளை உயிர் பெற்று எழுந்து வருவது, பன்றியும் அன்னமும் அடிமுடி தேடுவது, ஒருவர் முதுகில் பிரம்பால் அடித்ததும் அனைவர் முதுகிலும் அடி விழுவது, யானை கதறினதும் ஆண்டவன் வருவது, சிலந்தி பந்தல் போடுவது, சிவனாரைப் பூஜித்த யானை சிவபதம் அடைவது போன்றவைகள் எங்கும் எக்காலத்திலும் நிகழ்ந்திருக்குமா? நிகழ்ந்திருக்க முடியுமா? என் வேலை முடிந்தது. இனி சிந்திப்பது உங்கள் வேலை!!"[29] எனச் சிந்திக்க வைக்கும் கருத்துகள் சமுதாய மாற்றத்திற்கான சிந்தனைகளாக விளங்குகின்றன.

அவ்வாறே 'கதிரவன் கண்ணீர்' என்ற சிறுகதையின் வாயிலாக இச்சமுதாயத்தில் வழிபடக்கூடிய தெய்வங்களின் எண்ணிக்கை பற்றியும், மூடப்பழக்கவழக்கங்கள் பற்றியும் விளக்கியுள்ளார் அண்ணா. இராமநாதபுரம் மாவட்டம் பரமக்குடி தாலுகா மஞ்சப்பட்டினத்தில் உள்ள மக்கள் தாங்கள் கட்டிய கோயிலைத் தாங்களே இடித்த செய்தியைக் கொண்டு படைக்கப்பட்டது இச்சிறுகதையாகும். இச்சிறுகதையில் வாலிபன் ஒருவன் தன் தாத்தாவிடம் உரையாடும் விதமாக ஒரு பகுதி அமைகின்றது. அதில் அவ்வாலிபன், "தாத்தா! நமக்கு மட்டும் ஏன் ஆயிரக்கணக்கான சாமி, மற்ற நாடுகளிலே ஒரே சாமி இருக்கிறதே. அவர்களெல்லாம் நன்றாக வாழ்கிறார்களே, நாம் இப்படி வதைகிறோமே காத்தாயி,

மாரியாயி, மூக்காயி என்று மூலைக்கு மூலை இருக்கிறது. ஓயாமல், பூஜை செய்கிறோம் ஒரு பலனும் காணவில்லையே கஷ்டம் குறையவில்லையே .....விதிப்படி காரியம் நடக்குமென்றால், நடுவிலே, இந்தக் காத்தாயி, கருப்பன் ஏன் தாத்தா? நடப்பது நடக்கட்டும் என்று நாம் சும்மா இருந்துவிடலாமே, இந்த வீண்செலவு ஏன்? ..... எரு போட்டால், விளைச்சல் காட்டணுமே. பூஜை செய்தால் பலிக்கணுமே. அறுவடை காணோமே. காத்தாயி கோயில் கட்டி 15 வருஷமாகிறதே பஞ்சம் வருவது நின்றுவிட்டதா, காலரா போச்சா, நம்ம கஷ்டம் நீங்கிவிட்டதா?"[30] என்று கேட்கும் அடுக்கடுக்கான கேள்விகள் அனைத்தும் அண்ணா இச்சமுதாயத்தைப் பார்த்துக் கேட்க விழைந்தவை. இந்நாட்டில் பல தெய்வங்கள் இருந்தும் எந்தப் பிரச்சினையும் தீர்ந்தபாடில்லை என்ற அண்ணாவின் கூற்று சிந்திக்கத்தக்கது. அதுமட்டுமின்றி அண்ணா சமுதாய மாற்றத்திற்கான வித்தை மக்கள் மனதில் ஊன்றச் செய்யும் விதம் போற்றுதற்குரியது.

ஆசிரமங்கள் வைத்துக் கொண்டு மக்களின் நோய்களைத் தீர்ப்பதாகக் கூறி ஏமாற்றிவரும் ஏமாற்றுக்காரர்களை அடையாளம் காண்பித்து அவர்களிடம் மக்கள் சிக்கிக் கொள்ளாமல் இருக்க விழிப்புணர்வை ஏற்படுத்தும் சிறுகதையாக அண்ணாவின் 'அன்னதானம்' என்ற சிறுகதை அமைந்துள்ளது. இச்சிறுகதையில் நோய்களைத் தீர்க்கும் லேகியம் என மக்களை ஏமாற்றி லேகியத்தில் அபினைக் கலந்து கொடுத்துப் பணம் சம்பாதிக்கும் ஏமாற்றுப் பேர்வழிகளைச் சொக்கன் என்ற கதாபாத்திரத்தின் வழி அடையாளம் காட்டுகிறார். அதுவும் பழைய நம்பிக்கைகளில் ஊறிக்கிடக்கின்ற ஒருவன், சாது வேடத்தில் இருந்த சொக்கனிடம் மதிப்புக் கொண்டு அவனுக்கு ஆசிரமம் அமைத்துக் கொடுக்க முன்வருகின்றான். பின் சொக்கனின் கயமையை உணர்ந்து மக்களுக்கு விழிப்புணர்வு உண்டாக்கும் வகையில் மக்களைப் பார்த்து,

"பகுத்தறிவுள்ளவர்களே!

சாது, பண்டாரம், யோகி என்று கூறிக்கொண்டும், காஷாயம் தரித்துக் கொண்டும், ரசவாதம், மாந்தரீகம் தெரியுமென்று சொல்லிக்கொண்டும், சர்வரோக நிவாரணி சூரணம், சகல சித்திலேகியம் தருவதாகக் கூறிக்கொண்டும், அன்னதானம், அபிஷேகம் ஆராதனை செய்வதாகச் சொல்லிக் கொண்டும், ஆஸ்ரமம் வைக்கிறேன் அருள் தருகிறேன் என்று பேசிக் கொண்டும் வரும் வேஷதாரிகளை நம்பாதீர்! நம்பாதீர்! நம்பாதீர்!! காசு தராதீர்! காலில் விழாதீர்! ...... ஆகவே, அறிவுள்ள அன்பர்களே! இனியேனும், இத்தகைய ஆஷாடபூதிகளை நம்பி மோசம் போக வேண்டாம்.

இப்படிக்கு,

விழித்துக்கொண்டவன்"[31]

எனக் கூறுகின்றான். ஏமாற்றுக்காரனிடம் ஏமாற இருந்த தான் உண்மையை உணர்ந்து பழமைகளில் இருந்து விடுபட்ட நிலையில் மற்றவர்களும் போலிகளை ஆராய்ந்து பார்க்கும் பகுத்தறிவைப் பெற்று சமுதாய மாற்றத்திற்குத் தன் பங்கை ஆற்றிட வேண்டும் என்ற சிந்தனையை அறிஞர் அண்ணா இக்கதாபாத்திரத்தின் மூலம் ஊட்டுகின்றார்.

கோவில்களில் வருடத்திற்கு ஒருமுறை தெய்வத்தை ஏற்றிச் சுற்றிவர வெள்ளித்தேரைக் காணிக்கையாக வழங்கும் செல்வச்சீமான்களின் கண்களுக்கு ஏழைகளின் பசியும் அறியாமையும் தெரியாமல் போவது ஏனென்று தெரியவில்லை. அவர்களின் பிரச்சினைகளை அறிந்து உதவ யாரும் முன் வருவதில்லை. இந்நிலை மாற வேண்டும் என்ற நோக்கில் தான் சொன்னால் இந்த சமுதாயம் ஏற்றுக்கொள்ளாது

என்பதையறிந்த அண்ணா சிவபெருமானும் பார்வதிதேவியும் இந்தச் சமுதாயப் பொறுப்பற்ற செல்வந்தர்களைப் பார்த்துக் கூறுவதாய் அமைத்திருப்பது 'வெள்ளி ரதம்' என்னும் சிறுகதை. இதில் வெள்ளித்தேர் வாங்கிக் கொடுத்த பணத்திற்குத் தொழிற்சாலைகளோ அல்லது கல்லூரிகளோ அமைத்துக் கொடுத்திருந்தால் அது மக்களுக்குப் பயன்பட்டிருக்கும். என்றோ ஒருநாள் பயன்பாட்டிற்குப் பிறகு அறையில் அடைத்துகிடக்கும் வெள்ளித்தேரை வாங்குவது எதற்கு எனச் சிவபெருமானே கேட்பது போல இக்கதையை அமைத்திருக்கின்றார் அண்ணா.

மக்களுக்கு வேண்டியதைச் செய்து கொடுக்காமல் மக்களின் வழிபாட்டை மட்டும் ஏற்றுக்கொள்ளும் காளியின் சிலையை உடைத்த இளைஞன் மீது மாரி வழக்குத் தொடுக்கிறாள். அந்த வழக்கில் இளைஞனின் கேள்விகளுக்கு மாரியின் சார்பில் வாதாடும் வழக்கறிஞர் பதில் கூற முடியாமல் திணறுகிறார். வழக்கைப் பற்றி மாரி, பூசாரி, வழக்கறிஞர் ஆகியோர் கலந்து பேசுகையில் வழக்காடு மன்றத்திலே நடந்தவற்றை வழக்கறிஞர் கூறுகையில் அதற்கு மாரி, "உண்மைதானே, அவன் கேட்பது. ஊரைக் கெடுப்பவர்கள் கோரிக்கை வைக்கிறார்கள், உழைப்பவர்களும் பூஜிக்கிறார்கள், ஏமாற்றிப் பிழைப்பவனும் என் தாயே என்றுதான் சொல்லுகிறான். ஏமாறுபவனும் என் அம்மே என்றுதான் சொல்லுகிறான். என்னால் யாருக்கு, என்ன செய்ய முடிகிறது. கெட்டவர்களைத் தண்டிக்க முடியவில்லை. நல்லவர்களை ரட்சிக்கவும் முடிவதில்லை. என்னால் ஆவது ஒன்றுமில்லையப்பா ..........(பூசாரி வருகிறான்) இந்தப் பாவிகளோ, ஓயாது, உடுக்கை அடித்து, நான் இதைச் செய்வேன், அதைச் செய்வேன் என்று கூறி, என்னை முன்னால் நிறுத்தி, இவர்கள் வயிற்றை நிரப்பிக் கொள்ளுகிறார்கள்."[32] எனப் பதிலுரைக்கிறாள். அண்ணாவின் இந்தச் சிந்தனை, தெய்வங்களால் எதுவும் செய்ய முடியாது என்பதையும் கோயில் பூசாரிகளே இந்தத் தெய்வத்துக்கு இவ்வளவு சக்தி எனவும், அந்தத் தெய்வத்திற்கு அவ்வளவு சக்தியெனவும் புரட்டுகளை ஏற்படுத்திப் பிழைப்பு நடத்துகின்றனர் என்பதையும் தெளிவுபடுத்துகிறது. இதனால் பூசாரிகளின் புரட்டுக்களை மக்கள் அறிந்துகொள்ள வேண்டும்; அதன்மூலம் சமுதாயத்தில் தெய்வங்களின் பெயரில் நடைபெறும் ஏமாற்று வேலைகளை மக்கள் புறக்கணிக்கும் சமுதாய மாற்றத்தை உருவாக்க வேண்டும் எனக் கருதும் அண்ணாவின் விழைவு புலப்படும்.

இச்சிறுகதையின் முடிவில் அண்ணா சார்ந்திருந்த பெரியாரின் தலைமையிலான சுயமரியாதை இயக்கம் தன்னால் அனுப்பிவைக்கப்பட்ட கூட்டம் எனச் சிவபெருமான் கூறும் செய்தி சமுதாய மாற்றத்தை உருவாக்க அண்ணா பயன்படுத்தும் உத்தியாகும். தெய்வம் இல்லையென்று கூறும் இயக்கமானது, தெய்வ அருள் பெற்ற இயக்கம் என அண்ணா கூறக்காரணம் தாங்கள் கூறவரும் செய்திகளை மக்கள் கேட்க வேண்டும். காது கொடுத்து கேட்டால் தானே சிந்திக்க முடியும். அதன் அடிப்படையில் மக்களைச் செவிமடுக்கச் செய்வதற்குக் கடவுளை ஒரு கருவியாகப் பயன்படுத்துகிறார் அண்ணா. அவரது எண்ணம் தெய்வத்தை ஏற்றுக் கொள்வது அன்று. தெய்வத்தை ஏற்றுக்கொண்ட மக்கள் தெய்வத்தன்மையை அடைய முயலவேண்டும்; சிந்திக்க வேண்டும்; அதன் காரணமாகச் சமுதாயத்தில் மாற்றம் நிகழ வேண்டும் என்ற ஒற்றைக் காரணமேயாகும்.

மூடப்பழக்கவழக்கத்தில் திளைத்தோங்கி இருக்கும் ஒருவர் மூன்று கடிதங்களின் மூலமாக விழிப்புணர்வு பெறுவதாய் அமைந்திருக்கும் சிறுகதை 'மூன்று கடிதங்கள்' ஆகும். இக்கதையில் மூடப்பழக்கவழக்கங்களைப் பின்பற்றியும் பாதுகாத்தும் வருபவராக சுந்தர வாத்தியார் இருக்கின்றார். இதில் இவருக்கு மூன்று கடிதங்கள் வருகின்றன. முதலாவது கடிதம் அவரது சாதகப் பலனைக் கணித்து எழுதப்பட்டிருந்த கடிதம். அதில் அவருக்கு

அன்று முதல் மிகப் பிரமாதமான வாழ்வு அமையப் போவதாகக் கூறப்பட்டிருந்தது. இரண்டாவது கடிதம் சாமியாரால் கொலைகாரனாகி மருமகன் சிறையில் இருக்கிறார் என்ற செய்தி தாங்கிய கடிதம். மூன்றாவது கடிதம் வேம்புக்கும் அரசமரத்திற்கும் கல்யாணம் செய்து வைக்க ஏற்பாடுகள் செய்து தர வேண்டும் என்ற கடிதம். இம்மூன்று கடிதங்களையும் படித்த பின் கடிதங்களைக் கிழித்துப் போட்டுவிட்டு, "இந்த ஜோசியக் காரனுங்க, சாமியாடற பசங்க, கொளம் குட்டையைக் காட்டி மூட்டை அடிக்கிறவனுங்க இவனுங்களை நம்பினா, நம்பினவன் தலையிலே இடிதான் விழும். இதோ என் தலையிலே விழுந்ததே, தெரியவில்லையா"[33] எனக் கூறும் சுந்தர வாத்தியார் மூலமாக இதுபோன்ற மூடநம்பிக்கைகளை மக்கள் மனத்தில் இருந்து நீக்கி மாற்றத்தை விளைவிக்க முற்படுகின்றார் அண்ணா.

இருபதாம் நூற்றாண்டிலும் பிள்ளை பெற வேண்டி நடக்கும் மூடப்பழக்கவழக்கங்களை எடுத்துக்காட்டி அவையெல்லாம் வைதீகர்கள் தங்களது பிழைப்பிற்காக ஏற்பாடு செய்தவை என்பதை வைதீகக் குடும்பத்தைச் சார்ந்த பெண்கள் வாயிலாகவே உணர்த்தும் நாடகம் 'ஆற்றங்கரையிலே' ஆகும். இதில் பிள்ளை பெற அரசமரத்தைச் சுற்றி வருமாறு சோதிடர் கூறியதை புவனா தன் சக தோழியான அகிலாவிடம் கூறுகிறாள். அதைக் கேட்ட அகிலா, "அடி அசடே, வர வர சுத்த பைத்தியமா போயிட்டியே! பகுத்தறிவுச் சுடர் விட்டெரியும் இந்த 20வது நூற்றாண்டில் கூட நீ இதை நம்பறியே. என்னமோ நம் பெரியவாளெல்லாம் நம்ம சந்ததிகளும் நாமும் சுகமா சாப்பிட்டுண்டு இருக்கச் செய்த ஏற்பாடுகளிலே இதுவும் ஒண்ணுன்னு தெரிஞ்சுக்காம இருக்கயே! அந்த அரசமரங் கூடப் பட்டுப் போயிடுத்துடீ, வேர்தாண்டி இருக்கு, இந்த வேரைச் சுத்தினா பிள்ளை வரும்னு நம்பி இந்த சூத்ரப்பயல்கள்தாண்டீ சுத்துவா, ....... பட்டுப்போன வேரைச் சுத்திட்டு சும்மா இருந்தாளானா புள்ளே பொறந்துருமாடி. அதைச் சுத்தாமலே எத்தனையோ கோடி முஸ்லீம்களுக்கும், கிருஸ்தவர்களுக்கும், ஆதிதிராவிடர்களுக்கும் பிள்ளைகள் சலிக்க பொறக்கல்லியாடீ."[34] எனக் கூறுகிறாள். அகிலாவின் இந்தக் கருத்து சமுதாய மாற்றத்திற்கான அண்ணாவின் குரலாக அமைந்துள்ளது.

பழைய புராணங்களை நம்பி ஏமாறும் மக்களின் மூடத்தனத்தைப் பற்றியும் புராணங்களில் வரும் செயல்கள் அக்காலத்தில் மேன்மையாகக் கருதப்பட்ட நிலையில் அதே செயல்கள் இன்றைய சூழலில் தண்டனைக்குரியதாக மாறியுள்ளதையும் எடுத்துக்காட்டிப் புராணங்கள் வழிப்பட்ட கதைகளிலிருந்து விழிப்புணர்வு ஏற்படுத்தும் நோக்கில் அண்ணா இயற்றிய நாடகம் 'வழக்கு வாபஸ்' என்பதாகும். புராணங்கள் வாயிலாக வழங்கப்படும் கதைகள், அதை நம்பி சமுதாயத்தில் நிலவும் மூடநம்பிக்கைகள் ஆகியவற்றைச் சாதாரண மக்கள் ஏற்றுக்கொள்வது மட்டுமல்லாமல் படித்த சான்றோர்களும் ஏற்றுக்கொண்டு பின்பற்றுவது என்பது வருந்தத்தக்கதான ஒன்றாகும். இத்தகைய சூழலில் இருந்து மக்கள் விடுபட வேண்டும் அதற்கு முதலில் படித்தவர்கள் விழிப்புணர்வுப் பணியை மேற்கொள்ள வேண்டும் என்பதை இந்நாடகத்தில் நீதிபதியின் கூற்றில், "இந்த நாட்டிலே படித்தவர்கள் குறைவு, படிக்காதவர்கள் அதிகம். படிக்காத மக்கள் நம்மைப் போன்ற படித்தவர்களைப் பார்த்து நடப்பது நல்லது என்று எண்ணுகிறார்கள். படித்த நாமும் அந்தப் பழைய சேற்றிலே புரண்டால், படிக்காத கூட்டம், 'அவ்வளவு படித்தவரே புரளுகிறாரே' என்று கும்பலாகக் குட்டையிலே விழுகின்றன. இந்த மக்களைத் திருத்த வேண்டுமானால் முதலிலே நாம் திருந்த வேண்டும் சார். உதாரணமாக, வீணான ஜாதிமதச் சின்னத்தைக் காட்டுகிற விபூதி உமக்கும் தேவையில்லை எனக்கும் இந்த நாமம் தேவையில்லை; பாருங்க! இது மட்டும் போதாது. இந்தப் பழைய ஏற்பாடுகளைக் கண்டித்துப் பேச வேண்டும் நாமெல்லாம்."[35]

என்கிறார் அண்ணா. இதனால் சமுதாய மாற்றத்திற்கான அண்ணாவின் சிந்தனை நீதிபதியின் கருத்தாக வெளிப்படுவது தெளிவாகும்.

சிலப்பதிகாரம் தந்த இளங்கோவடிகளின் வாழ்க்கையைக் கொண்டே சோதிடம் பொய் என விளக்கிக் காட்டிய அண்ணாவின் நாடகம் 'இளங்கோவின் சபதம்' ஆகும். சேரன் செங்குட்டுவன் இருக்க இளையவன் இளங்கோவடிகள் முடிதரிக்குமாறு சோதிடம் உரைப்பதாகவும் அதனால் இளங்கோவடிகள் தான் முடிதரிக்க வேண்டும் எனவும் சோதிடர் உரைத்ததை இளங்கோவடிகள் ஏற்றுக்கொள்ளவில்லை. மாறாக, தன் அண்ணன் முடிதரிக்கத் தான் தடையாக இருப்பேனென்றால் இந்த அரச வாழ்வில் இருந்து விடுபட்டுத் துறவு வாழ்வை மேற்கொள்வேன் எனத் துறவு வாழ்க்கையில் ஈடுபடலாயினார் என்பது அவரது வாழ்க்கை வரலாற்றின் அடிப்படையில் அறியும் செய்தியாகும். இதன் அடிப்படையில் இந்நாடகத்தில் இளங்கோவடிகள் தான் இந்நாட்டை ஆளப்போகிறார் என உரைக்கும் சோதிடரிடம், "உம் வார்த்தைகள் அத்தனையும் வடிகட்டின பொய்யென்று நாட்டிற்குச் சொல்ல இன்று முதல் நான் காவியேற்கிறேன் - துறவியாகிறேன்! ஆம், நாட்டின் மீதுள்ள ஆசையை மட்டுமல்ல, இந்த நானிலத்தின் மீதுள்ள எப்பொருள் மீதும் ஆசை வைக்கப் போவதில்லை - காவியுடையுடன் கவியாக உலவுவேன்."[36] எனக் கூறும் இளங்கோவடிகளின் வாயிலாக, சோதிடத்தின் பொய்மைத் தனத்தை எடுத்துக்காட்டுகிறார். அரசராகப் பதவியேற்காமல் போனதால் இளங்கோவடிகளின் வாழ்வு ஒன்றும் இழிநிலை பெறவில்லை என்றும் மாறாக செங்குட்டுவனைக் காட்டிலும் இன்று புகழுடையவராக விளங்குகிறார் என்ற உண்மையை அனைவரும் அறிந்த வரலாற்றைக் கொண்டு விளக்குகிறார்.

தாயின் தலையை வெட்டிய பரசுராமரைத் தெய்வமாக வழிபடும் இச்சமுதாயத்தின் அவல நிலையைக் 'குறும்புக்காரன்' என்ற நாடகத்தில் எடுத்துக்காட்டுகிறார் அண்ணா. இந்நாடகத்தின் இறுதியில் குறும்புக்கார வாலிபனின் பகுத்தறிவுச் சிந்தனை அந்த ஊர்ப் பெரியவர்களை மனமாற்றத்திற்கு உள்ளாக்குவதாய் அமைந்துள்ளது. ஊர்ப் பெரியவர்களின் மனமாற்றம் சமுதாயத்தில் உள்ள அனைவரது மனமாற்றமாக மாறவேண்டும் என்ற அண்ணாவின் விருப்பத்தைப் பிரதிபலிப்பதாக உள்ளது.

## மூடநம்பிக்கை ஒழிதல்

மக்களுக்கு வரும் இன்ப துன்பங்கள் அனைத்தும் கிரக பலன்களால் தான் ஏற்படுகின்றன என்ற கருத்து பழங்காலத்தொட்டே நிலவிவருகிறது. இதனைச் சோதிடத்தால் யார் யாருக்கு எப்பொழுது கிரகப் பலன்கள் எப்படி இருக்கின்றது என்பதை கணித்துக் கூறமுடியும் என்ற கருத்தும் உள்ளது. இதில் முன்கூட்டியே வரும் பிரச்சினைகளைக் கண்டறிந்து அதற்குப் பரிகாரம் செய்தால் நமக்கு வராது என்பது போன்ற பல நிலைகள் உள்ளன. இதுபோன்ற செயல்களை அண்ணா மூடப்பழக்கவழக்கங்களாகக் கருதுகிறார். இம்மூடப்பழக்கத்தைத் தன்னுடைய பல படைப்புகளிலும் சாடியிருக்கின்றார். இதிலிருந்து மக்கள் விழிப்புணர்வு அடைய வேண்டும் என்ற எண்ணத்தில் தனது கதைகளில் இப்பழக்கத்திற்கு எதிரான சிந்தனைகளை விதைத்துள்ளார். அதனடிப்படையில் 'பலாபலன்' என்ற சிறுகதையில் கடன் பிரச்சினையால் உடல்நலம் குன்றியிருக்கும் சின்னப்பனின் மனைவியிடம் சோதிடர் குப்பய்யர் பரிகாரம் கூறிப் பதினைந்து நாளில் சரியாகி விடும் என்று வாக்குக் கூறி அனுப்புகின்றார். இந்நிலையில் அவனுக்கு ஏற்பட்டுள்ள பணப்பிரச்சினை தீர வழி ஏற்பட்டதால் மனம் மகிழ்ச்சி அடைந்து உடல்நிலை சீராகின்றது. இதற்குக் காரணம் சோதிடர் குப்பய்யரின் வாக்குத்தான் எனப் பலரும் பேசிக்கொண்டனர். ஆனால் சின்னப்பனுக்குத் தெரியும் உடல்நிலை வருத்தத்திற்கும் சீரானதற்கும் உள்ள

காரணம். அவனே தனது மனைவியிடம், "இதனாலே எல்லாம் ஒன்றுமில்லை. விஷயம் தெரியாமல், நீங்கள் ஆளுக்கொரு தப்புக் கணக்குப் போட்டுக் கொண்டு கிடக்கிறீர்கள். சூரியன் பார்க்கிறானாம்; சனியன் மாறுகிறானாம் - பைத்யம்! இதனாலே எல்லாம் என்ன வரப் போகுது!"[37] எனக் கூறுவதிலிருந்து சோதிடத்தாலும் குப்பய்யரின் வாக்காலும் எதுவும் நடைபெறவில்லை; அதெல்லாம் பொய் என்ற சிந்தனையை ஏற்றுக்கொண்டு சோதிடத்தில் இருந்தும் பிற மூடப்பழக்கத்திலிருந்தும் விடுபடுபவனாக சின்னப்பனைப் படைத்துக்காட்டியுள்ளார் அண்ணா.

சமுதாயத்தில் மூடநம்பிக்கை நிறைந்திருப்பதற்குக் காரணம் சாதி, சமயம், நெறி என்னும் சமுதாய அமைப்பு முறைகளேயாகும். இவ்வமைப்பு முறைகளே சமுதாயத்தில் பல்வேறு பிரிவுகளையும், உயர்வு, தாழ்வு, மேல்கீழ் என்ற எண்ணப் போக்குகளையும் உருவாக்கியுள்ளன. இவற்றின் அடிப்படையில் உருவாகிய மூடப்பழக்கவழக்கங்களே நாட்டு மக்களின் சீர்கெட்ட வாழ்விற்கு அடிப்படைக் காரணங்களாக அமைந்துள்ளன என்றும், சமயத்துறைகளில் சீர்திருத்தம் கண்டு மக்களின் மனநிலையில் மாற்றம் உருவாக்கிப் புதிய சமுதாய அமைப்பை உருவாக்குவதே தம் இயக்கத்தின் குறிக்கோள் என்றும் குறிப்பிட்டுள்ளார் அண்ணா.

## போலிச்சாமியார்களை இனங்கண்டறிதல்

சமுதாயத்தில் ஆன்மீகத்தின் பெயரால் நடந்து வருகின்ற அட்டூழியங்கள் அதிகம். அவற்றில் சாமியார் வேடமிட்டு மக்களை ஏமாற்றும் கபடதாரிகளை இனம் கண்டு அவர்களிடமிருந்து மக்கள் தங்களைக் காத்துக் கொள்ளும் விழிப்புணர்வை ஏற்படுத்தும் கருத்துக்கள் அண்ணாவின் படைப்புகளில் அதிகம் காணப்படுகின்றன. 'தேடியது வக்கீலை' என்ற சிறுகதையில் வரும் போலிச் சாமியாரை இனங்கண்டறிந்த ஒருவன், "புரட்டின்மேல் புரட்டுச் செய்து கொண்டு பூஜா மடங்களிலே அமர்ந்துள்ள இந்தப் பொய்யர்களைக் கூண்டோடு தொலைக்க வேண்டும் என்று எனக்கு ஆத்திரம் பிறந்தது."[38] எனக் கூறுவதாகப் படைத்துக் காண்பிக்கின்றார். இதில் இக்கதாபாத்திரத்தின் வாயிலாக மடங்களில் வாழும் ஆசாமிகளின் உண்மைத் தன்மையை அறிந்து கொண்டு மனம் மாறும் மக்களின் எண்ணத்தை வெளிப்படுத்துகிறார் அண்ணா.

## மக்கள் புரட்சி

பொதுமக்களை ஏமாற்றிப் பிழைப்பு நடத்தும் வர்க்கத்தினரை அடையாளம் கண்டு மக்களே அவர்களைத் தண்டிக்கும் புரட்சி ஏற்பட வேண்டும் என்ற கருத்தை அண்ணா தன்னுடைய படைப்புகளில் பதிவு செய்துள்ளார். மக்கள் புரட்சியினால் மட்டுமே எந்தச் செயலும் சாத்தியமாகும் என அண்ணா உணர்ந்திருந்தார். அதனாலே அடிமைகளாய் வாழும் மக்கள், ஏமாளியாக வாழும் அப்பாவிகள், தனக்கென்று வாழும் சுயநலக்காரர்கள் போன்றோரைப் படைத்து இறுதியில் அம்மக்கள் எழுச்சி பெற்று, தங்களுக்குத் துரோகம் செய்பவர்களை இனங்கண்டறிந்து அவர்களைத் தண்டிக்கும் விதமாகக் கதைகளை படைத்துக்காட்டியுள்ளார். 'மக்கள் தீர்ப்பு' என்ற குறும் புதினத்தில் பொது மக்களுக்குத் தீங்கு விளைவிக்கும் திட்டத்தைப் பணத்திற்கு ஆசைப்பட்டு செய்யும் கும்பல் மக்களை ஏமாற்றுவது என்பது எளிது எனவும், அவர்கள் எதைச் சொன்னாலும் சிந்திக்காமல் ஏற்றுக் கொள்பவர்கள் என்றும் எக்காளமிட்டனர். மக்களும் அவ்வாறே இருந்தனர். நன்மை செய்ய வரும் மருத்துவரை அவர்கள் மக்கள் விரோதியாகக் கருதினர். அந்த அளவுக்கு மக்களைத் தங்களது ஊடகங்களால் மயக்கி வைத்திருந்தனர் விரோதிகள். இறுதியில் உண்மையான மக்கள் விரோதி யார் என்பதை அடையாளம் கண்டு மக்களே தண்டிக்கும் விதமாக

இக்கதை படைக்கப்பட்டுள்ளது. "பொதுமக்கள், முழு உண்மை தெரியாதபோது அவசர முடிவுக்குத்தான் வருகிறார்கள் - உண்மை தெரிந்தாலோ அவர்கள் தக்க தீர்ப்பைத் தருகிறார்கள்."[39] என்ற கூற்று மக்கள் எழுச்சியின் காரணமாக ஏற்படும் மாற்றத்தைக் காட்டுவதாக உள்ளது.

உலகத்தில் நிகழ்ந்த மக்கள் புரட்சிகளைக் கருவாகக் கொண்டும் படைப்புகளைத் தந்துள்ளார் அண்ணா. இதயம் இரும்பானால், மக்கள் கரமும் மன்னன் சிரமும், அரசாண்ட ஆண்டி ஆகிய குறும் புதினங்கள் உலக வரலாற்றில் நடைபெற்ற மக்கள் புரட்சியைக் கொண்டு எழுதப்பட்டவையாகும். மக்கள் புரட்சியைக் கூறும் இவ்வரலாற்றுப் படைப்புகள் மூலம் தான் சார்ந்திருந்த சமுதாயத்திலும் ஒரு புரட்சி தோன்ற வேண்டும் என்ற அண்ணாவின் எண்ணம் பிரதிபலிக்கின்றது.

## முதலாளித்துவம் ஒழிதல்

ஏழை மக்களின் உழைப்பை உறிஞ்சிக் கொழுத்து வாழும் முதலாளிகளின் பிடியில் இருந்து உழைக்கும் மக்களை விடுவிக்க வேண்டும் என்ற சிந்தனையைக் கொண்ட அண்ணா, முதலாளிகளின் வளர்ச்சி தொழிலாளிகளின் முயற்சியாலும் உழைப்பாலும் மட்டுமே ஏற்படுகின்றது என்பதைத் தன்னுடைய இலக்கியங்களில் பதிவு செய்யத் தவறவில்லை. ஆனால் அந்த உழைப்பாளிகளை முதலாளிகள் தங்கள் அடிமைகளாகக் கருதி இழிவாக நடத்தும் செயலை அண்ணா மிகக் கடுமையாகச் சாடுகின்றார். தங்களது கடுமையான உழைப்பால் செல்வத்தை ஈட்டித் தரும் உழைப்பாளிகளின் வாழ்வோ வறுமை, பஞ்சம், பட்டினி, தற்கொலை என்ற நிலையிலேயே இருக்கின்றது. இந்நிலை மாற உலகத்தில் நடைபெற்ற தொழிலாளர் புரட்சிகளை தனது படைப்புகளில் கூறி மக்களை எழுச்சி பெறத் தூண்டுகின்றார். மக்கள் புரட்சி ஒன்றின் மூலமாகவே இந்த முதலாளித்துவத்தை அழிக்க முடியும் என்பதை உணர்ந்த அண்ணா அதனைத் தனது படைப்புகளில் வெளிப்படுத்துகிறார். 'பூபதியின் ஒருநாள் அலுவல்' என்ற சிறுகதையில், "பஞ்சம் பரவி, பட்டினி அதிகரிக்கவே, பாட்டாளிக் கூட்டம் படைபோலத் திரண்டு மாளிகைகளில் நுழைந்து கொள்ளை அடிக்கவும், தடுத்தவர்களைத் தாக்கவும், கைது செய்ய வந்த காவலரைப் பார்த்து, 'நீங்களும் ஏழைகள்தானே' என்று சொந்தம் கொண்டாடவும் தொடங்கிற்று. சீமான்கள் அலறி ஓடினர். 'சக்திக்கேற்ற உழைப்பு! தேவைக்கேற்ற வசதி' என்ற முழக்கம் எங்கும் கேட்டது . . . "[40] எனப் புரட்சியின் காரணமாக ஏற்பட்ட நிலையை வெளிப்படுத்துகின்றார்.

ஆண்டான் அடிமையாக வாழும் ஏழைகளுக்காக வாதாட எவரும் வரமாட்டார்கள். தங்களைத் தாங்களே எழுச்சி பெறச் செய்து கொள்ள வேண்டிய நிலைதான் இன்று நிலவுகிறது. முதலாளிகள் கூறும் வேலையைச் செய்யலாம், அதற்குத் தான் அவர்கள் நமக்கு ஊதியம் தருகிறார்களே தவிர அடிமையாக வாழ அல்ல என்பதை உழைப்பாளிகள் உணரத் தலைப்பட வேண்டும் என்கின்ற நோக்கில் அண்ணா அவர்கள் தனது இலக்கியங்களில் முதலாளித்துவத்தை ஒழிக்க உழைப்பாளிகளின் உரிமைக் குரல்களை எழுப்பியுள்ளார். 'பல்லிளிக்கும் பரப்பிரம்மங்கள்' என்ற சிறுகதையில் அடிமையாக நடத்தும் ஆண்டையிடம், "சும்மா ஒண்ணும் தரவில்லிங்களே. உழைக்கிறோம் கொடுக்கிறீங்க. மட்டுமரியாதை இருக்கவேணுங்க. மாடா வாய்திறந்து எதுவும் பேசாமலிருக்க."[41] என அந்தோணிசாமி கூறுவதாக அமைக்கப்பட்டிருப்பது, அடிமைச் சமுதாயத்திலிருந்து விடுபட்டுக் கொண்டிருக்கும் உழைக்கும் வர்க்கத்தினரின் எழுச்சியைப் பிரதிபலிக்கின்றது.

'செவ்வாழை' என்னும் சிறுகதையின் மூலம் உழைப்பவர் படும் துன்பம் உணர்த்தப்படுகிறது. பண்ணையார் நிலத்தில் உழைக்கும் செங்கோடன் விளைச்சலில் ஒரு

பகுதியை மட்டுமே பெறுகிறான். ஆனால் தனது வீட்டில் தனது உழைப்பாலும் தனது பிள்ளைகள் உழைப்பாலும் உருவாக்கப்பட்ட செவ்வாழையைக் கூட உண்ணமுடியாமல் பண்ணையாருக்குத் தாரை வார்க்கின்றான் செங்கோடன். பாடுபட்டும் பலனை அனுபவிக்க முடியாத நிலையில் இருப்பதை எண்ணி மனவருத்தப்படும் செங்கோடனின் நிலை அன்றைய கால உழைக்கும் வர்க்கத்தினரின் நிலையாக இருப்பதை, "பாடுபட்டோம், பலனைப் பெறப் போகிறோம், இதிலே ஏற்படுகிற மகிழ்ச்சிக்கு ஈடு எதுவும் இல்லை. இதைப் போலவே, வயலிலும் நாம் பாடுபடுவது நமக்கு முழுப்பயன் அளிப்பதாக இருந்தால் எவ்வளவு இன்பமாக இருக்கும்!. . . . . . . உழைப்பவனுக்கே நிலம் சொந்தம் - பாடுபடாதவன் பண்ணையாராக இருக்கக்கூடாது என்று சொல்லும் காலம் எப்போதாவது வருமா என்றெல்லாம்கூட இலேசாகச் செங்கோடன் எண்ணத் தொடங்கினான்."[42] என்னும் கூற்று உணர்த்தும். அதோடு உழைப்பவனுக்கே நிலம் சொந்தம் என்ற செங்கோடனின் மனதில் தோன்றும் சிந்தனை வழியாக உழைப்பவர்களுக்குக் காலத்தால் ஏற்பட வேண்டிய மாற்றத்தின் வித்தை விதைக்கின்றார் அறிஞர் அண்ணா. இக்கதை புதிய சமத்துவ சமுதாயத்தைக் காணும் பொதுவுடைமைச் சிந்தனையை மனதில் எழுப்புகின்றது.

"மக்கள் மன்றத்திலே, காசி க்ஷேத்ரமகாத்மியம் பேசப்படுவது குறைக்கப்பட்டு, மாஸ்கோ மணத்தின் மாண்பு எடுத்துரைக்கப்பட வேண்டும் அதிகமாக. உதவி செய் - உத்தமன் என்று புகழப்படுவாய் என்று பேசப்படுவதற்குப் பதிலாக, உரிமையைக் கொடு உலகத்தைக் கெடுக்காதே என்று பகுத்தறிவு மொழி கூறப்பட வேண்டும்."[43] என்ற அண்ணாவின் புரட்சி மொழிகள் சமுதாயத்தில் மக்கள் புரட்சியைத் தோற்றுவிக்கும் காரணியாக விளங்குகின்றது.

## அரசியல் மாற்றங்கள்

நாட்டில் நிலவும் இருவேறு காட்சிகளின் தன்மையை எடுத்துக்கூறுவதாக அமைவது 'இரு காட்சிகள்' என்னும் சிறுகதையாகும். ஒரே நாட்டில் மன்னர் வாழ்க்கையும் சாதாரண மக்கள் வாழ்க்கையும் இருக்கும் நிலையை எடுத்துக்கூறுகிறது இச்சிறுகதை. வசதியின் உச்சத்தில் இருக்கும் மன்னர், அமைச்சர்கள் அவர்தம் உறவினர்கள் போன்றோரது நிலையையும் அதே நாட்டில் வாழும் மக்களின் நிலையையும் ஆராயும் விதமாக அண்ணாவால் எழுதப்பட்டது. நாட்டை ஆளும் மன்னர்கள் மக்களின் வறுமையை அறிய இயலவில்லை. அதற்கு மாறாக ஆடம்பர விழாக்களில் கலந்து கொள்வது, விருந்து உபசரிப்பு நிகழ்வுகளில் நேரத்தைப் போக்குவது போன்ற பொழுதுபோக்குகளில் ஈடுபடும் இவர்கள் மக்களின் நிலையை அறிந்திருக்கவில்லை. நாட்டில் வறுமையின் காரணமாகப் பல குடும்பங்கள் தற்கொலை செய்து கொள்வது வாடிக்கையாகிவிட்டது. இதைத் தடுத்து நிறுத்த ஆட்சியாளர்கள் முன்வரவில்லை என்ற கோபத்தின் வெளிப்பாடாக அண்ணா இச்சிறுகதையைப் படைத்துள்ளார். இதில் ஆட்சியாளர்களின் வாழ்வு ஏழை மக்களின் வாழ்வு என்ற இருகாட்சிகளை அண்ணா காட்டுகின்றார். "இந்த இரு காட்சிகளைக் கண்டும், ஆளுவோர் அசட்டையாக இருப்பார்களேயானால், நேரிய முறையைக் கடைபிடித்து, ஆளவந்தார்களை வேறு வேலையைக் கவனிக்க அனுமதிச் சீட்டுக் கொடுத்தனுப்புவது, பொதுமக்களுக்கு என்றும் உள்ள கடமையாகும். இதுவும் புரட்சிதான்; பொதுமக்கள் விழிப்புணர்ச்சியின் மீதும், வாக்குரிமையின் துணை கொண்டும், புதியதோர் சமுதாயத்தைப் புவி மீது ஏற்படுத்துவது இதனாலும் சாத்தியமாகும். வெல்க புரட்சி! வாழ்க சமுதாயம்!"[44] என அரசியல் மாற்றத்திற்கான விழிப்புணர்வு முழக்கங்களை மக்களுக்கும், எச்சரிக்கை ஓசையை ஆட்சியாளர்களுக்கும் தந்து செவிமடுக்கச் செய்கின்றார்.

அதேபோல வறுமையின் காரணமாகத் தனது குழந்தைகளைக் கொன்ற தாயைப் பற்றிய கதை 'கொலைகாரி' என்பதாகும். கொலைகாரியாகக் குற்றம் சாட்டப்பட்டு நீதிமன்றத்தில் நிற்கும் அப்பெண்ணின் மனநிலையை எடுத்துக்கூறும் பொழுது அண்ணா அப்பெண்ணின் சார்பாக வாதாடும் வழக்கறிஞராகத் தென்படுகிறார். இக்கதையில் பச்சம்மாள் சமுதாயத்தில் கொலைகாரி என்ற பெயர் பெறக் காரணமாக இருந்த வறுமையை ஒழிக்காத அரசின் மீது தன் விமர்சனத்தைப் பதிவு செய்கிறார் அண்ணா. "தனது மக்களைக் காக்க வழிவகுக்க வகையற்ற சர்க்காருக்கு, மக்கள் அனைவருக்கும் பிழைப்பளிக்கும் பொறுப்பற்ற சர்க்காருக்கு, மக்களைத் தண்டிக்க மட்டும் உரிமை எங்கிருந்து வந்துவிட்டது."[45] என அண்ணா கூறும் மொழிகள் ஆட்சியாளர்கள் மீதும் சட்டத்தின் மீதும் அண்ணாவிற்கு இருந்த கோபத்தின் வெளிப்பாடாக அமைவது மட்டுமல்லாமல் மக்களைத் சிந்திக்கத் தூண்டுவதாகவும் அமைகிறது. அதன்மூலம் மக்களுக்கான அரசியலையும் சட்டங்களையும் உருவாக்குவதற்கான மாற்றத்தின் வித்தை அண்ணா இச்சிறுகதையின் வழியாக மக்கள் மனத்தில் விதைத்துச் செல்கின்றார்.

## **நீதித்துறையில் மாற்றம்**

சட்டத்தைக் கூடத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு ஏழைகளை அல்லல்படுத்தும் ஆதிக்கக்காரர்களின் பிடியில் இருந்து மக்களைக் காப்பாற்றி நீதியை நிலைநாட்ட நீதிபதி வக்கீலாகும் கதையைச் சமுதாய மாற்றமாக அண்ணா படைத்துக்காட்டியுள்ளார். "உங்களுக்காக! ஆம்! உண்மை! ஆனால், நீங்கள் குற்றம் செய்து கொண்டே இருக்கவும், நான் வாதாடவும் அல்ல! நீதிக்காக! உமக்கும், உம்மை அடக்கி அழிக்க எண்ணும், ஆதிக்கக்காரருக்கும், நீதியை மதித்து நடந்திடும், மனப்போக்கு, செயல்முறை ஏற்பட நான் வக்கீலானேன்."[46] என நீதிபதியாக இருந்து வக்கீலாகும் பாதிரியப்பன் கூறுவது ஏழைகளின் துயர் துடைக்க நீதித்துறையில் நிகழும் மாற்றத்தை அண்ணா தனது 'நீதிபதி வக்கீலானார்!' என்ற சிறுகதையில் காட்டியுள்ளார்.

## பெண் விழிப்புணர்வு

'பார்வதி பி.ஏ.' என்ற புதினத்தில் புரட்சிப் பெண்ணாகப் பார்வதியைப் படைக்கின்றார் அண்ணா. ஆண்களுக்குச் சமமாகப் பெண்கள் செயல்படவேண்டும் என்ற கருத்துக்களைப் பெண்களிடம் பரப்புபவள் பார்வதி. அவள் பார்த்திபனைக் காதலிக்கின்றாள். பின் கைவிடப்படுகின்றாள். வயதான மிராசுதாரர் ஆலாலசுந்தரரும் பார்வதியை மணக்க விரும்புகிறார். சொத்துக்களை எல்லாம் அனாதைகளுக்கு எழுதிக் கொடுத்தால் மணக்கிறேன் என்று கூறிய பார்வதியை மணக்காமல் விட்டு விடுகின்றார். பார்வதியின் வாயிலாக ஒரு புரட்சியைப் பெண்கள் சமுதாயத்தில் ஏற்படுத்த எண்ணிய அண்ணா, "நானே ஓர் அபலை. படித்தேன் - சமுதாயம் பாழ்பட்டுக் கிடப்பதைக் கண்டேன். இதனைச் சீர்திருத்த என்னாலான அளவு முயலுகிறேன்."[47] எனப் பார்வதி கூற்றில் அதனை வெளிப்படுத்துவர்.

பார்த்திபன் சுயநல மிருகம் என்பதை உணர்ந்த பார்வதி அவனை விட்டு விலகி, குமாரை மணந்து கொள்கிறாள். திருமணத்திற்குப் பிறகு குமாருடன் சேர்ந்து சீர்திருத்தவாதியாகச் செயல்படுகின்றாள். ஆண்கள் சிலரால் ஏற்பட்ட சிக்கல்களை எதிர்கொண்டு இறுதியில் குமாருடன் மகிழ்ச்சியாக இருக்கும்படி அண்ணா படைத்துக் காட்டுகிறார். நடைமுறை வாழ்வில் பெண்கள் இத்தகைய கொடுமைகளைச் சந்திக்கின்றனர். அவற்றிலிருந்து அவர்கள் எத்தகைய மாற்றத்தைத் தனது வாழ்வில்

ஏற்படுத்திக்கொள்ள வேண்டும் என்ற சிந்தனையைப் பார்வதி வாயிலாகவும் டாக்டராக வரும் லலிதா குமாரியின் வாயிலாகவும் எடுத்துக்காட்டியுள்ளார்.

"பெண்ணடிமை தீருமட்டும் பேசுந்திருநாட்டு

மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே"[48]

என்ற பாவேந்தரின் கருத்தை ஏற்றுச் செயல்படுபவராக அண்ணா விளங்குவதை இதன் மூலம் உணரமுடிகின்றது. அரசியலில் பெண்களும் ஈடுபட வேண்டும், தங்களுக்கு ஏற்படும் துன்பங்களைத் துடைத்தெறிந்து விட்டுத் துணிச்சலுடன் போராடி வாழவேண்டும் என்ற கருத்தையும் பார்வதி என்ற பாத்திரத்தின் வாயிலாகப் புலப்படுத்துகின்றார். ஆடவரால் ஏமாற்றப்படும் பெண்கள் தற்கொலை செய்துகொள்வதைத் தடுத்து மேற்கொண்டு சமுதாயத்திற்குப் பயன்படும் வகையில் தங்கள் வாழ்வை அமைத்துக் கொள்ளலாம் என்ற வழிமுறையையும் உத்தமி என்ற பாத்திரத்தின் மூலம் சொல்கின்ற தன்மை பெண்களின் முன்னேற்றத்திற்கும் சமுதாய முன்னேற்றத்திற்கும் அண்ணா தரும் அறிவுரையாகவும் உள்ளது.

முதலில் சமுதாயத்தில் பிறப்பின் பெயரால் உள்ள வேறுபாடுகளை ஒழிக்க வேண்டும். அதுவே இந்நாட்டின் சமதர்மத்திற்கு முதற்படியாகும். சமுதாயத்தில் மேல் சாதி, கீழ் சாதி, அடிமை சாதி என்பன இருப்பதோடு ஆண் பெண் தலைமைகளில் உயர்வு, தாழ்வு இருந்து வருகிறது. இவை தவிர ஏழை, பணக்காரன் என்னும் வேறுபாடும் இருந்து வருகின்றது. இவ்வேறுபாடுகளில் சில இயற்கையாக ஏற்பட்டது என்றும் இவற்றுக்கெல்லாம் காரணம் மனிதன் அல்ல என்றும் மேல்நிலையில் உள்ளவனும், கீழ்நிலையில் உள்ளவனும் நம்பிக்கொண்டிருக்கின்றான். இம்மூடநம்பிக்கை மனித சமுதாயத்தில் எவ்வித மாற்றத்தையும் உருவாக்க விடாமல் தடை செய்கிறது என்பதே அண்ணாவின் எண்ணவோட்டமாக இருந்தது. ஆகவேதான் அவரது படைப்புகள் அனைத்திலும் சமுதாய மாற்றம், வீறுகொண்ட சமுதாயம் அமைதல் போன்றவை அடிக்கருத்தாக அமைந்துள்ளன.

'ரங்கோன் ராதா' புதினத்தில் தலைமைப் பாத்திரமாக வரும் ரங்கம் பரம்பரை பரம்பரையாகச் செல்வச் செழிப்புடன் வாழ்ந்து, வழக்கு காரணமாக நொடித்துப் போன குடும்பத்தில் பிறந்த பெண். வறுமையில் வளர்ந்திருந்தாலும் செல்வச் சிறப்புடன் வாழ்ந்த கோட்டையூர் தர்மலிங்க முதலியார் என்பவரை மணந்து கொண்டு இல்லற வாழ்வைச் சிறப்பாக வாழ்ந்து வருகின்றாள். இதற்கிடையில் வழக்கில் ரங்கத்தின் அப்பா வெற்றி பெறவே சொத்துக்கள் அனைத்தும் மீண்டும் கிடைத்தன. இந்தச் சொத்துக்கள் அனைத்தையும் தானே அனுபவிக்க வேண்டும் என்ற நோக்கில் ரங்கத்தின் தங்கை தங்கத்தையும் திருமணம் செய்து கொள்வதற்குத் தர்மலிங்க முதலியார் எண்ணினார். ஏற்கனவே தன் அக்கா ரங்கத்தின் மீது பொறாமையில் இருந்த தங்கம் இத்திருமணத்திற்குச் சம்மதம் தெரிவித்தாள். இதை எதிர்த்த ரங்கத்தை, நோய் வாய்ப்பட்டவள் என்றும் பேய் பிடித்தவள் என்றும் கூறி ஊராரை நம்ப வைத்து அவளுக்குப் பல்வேறு சிக்கல்களை உருவாக்குகின்றார்கள். தர்மலிங்கத்தின் இத்தகைய இழிசெயல்களால் அமைதியான பண்பு கொண்ட ரங்கம் பின்னர், போராட்டக் குணத்தை அடைகிறாள். தன் கணவனிடம் போராடி அவனைத் துன்புறுத்த எண்ணங்கொள்கிறாள். "எனக்குச் சாகத் துணிவு இல்லை என்பதல்ல, இஷ்டம் இல்லை. உயிரோடு இருந்து போராட வேண்டும் என்று தோன்றிவிட்டது. இனி அவர் என் கணவரல்ல, என்னை வஞ்சித்து வாழ விரும்புபவர். இனி அவருடைய வஞ்சனையுடன் போராடி, ஒரு பெண்ணை அவ்வளவு எளிதாகத் தோற்கடிக்க முடியாது என்பதைக் காட்ட வேண்டும் என்ற உறுதி பிறந்தது."[49] என்று ரங்கம் தனக்கேற்பட்ட

மனமாற்றத்திற்கான காரணத்தைக் கூறுகின்றாள். இக்கருத்து ரங்கத்தின் மனமாற்றம் மட்டுமல்லாது, எக்காலத்திற்கும் பெண்கள் கொண்டிருக்கக் கூடிய மன உறுதியையும் விழிப்புணர்வையும் புரட்சிகர எண்ணத்தையும் உருவாக்கும் சமுதாய மாற்றச் சிந்தனையாக விளங்கவேண்டும் என்பதே அண்ணாவின் நோக்கமாகும்.

இப்புதினத்தில் இலட்சியப் பெண்ணின் குணங்களோடு படைக்கப்பட்டுள்ள பாத்திரம் ரங்கத்தின் மகள் ராதா. தான் ஒரு விபச்சாரியின் மகளாகப் பிறந்தது அறிந்தும் அவள் அதற்காக எந்தவித வருத்தமும் அடையாமல், வெகு இயல்பாய் அதனை ஏற்றுக்கொள்வதும், தன்னைத் திருமணம் செய்து கொள்ள முன்வரும் பாத்திரமான பரந்தாமனை மணந்துகொள்ளும் போதும் அதே இயல்புநிலையைக் கைக்கொள்வதும் புதுமையானவை. ராதாவின் பாத்திரப்படைப்பின் மூலம் புதுமைப்பெண்கள் கைக்கொள்ள வேண்டிய பண்பு நலன்களை அண்ணா வெளிப்படுத்தியுள்ளார். சமுதாயத்தில் ஆண்களால் வஞ்சிக்கப்படும் பெண்கள் தங்களைத் தாங்களே காத்துக்கொள்ளும் மனவலிமை பெற வேண்டும். பெண்களுக்கு எதிரான சமுதாயக் கொடுமைகளை எதிர்த்துப் போராடும் இலட்சியவாதிகளாகப் பெண்கள் உருவாகவேண்டும் என்பதே அண்ணாவின் கருத்தாக உள்ளது. இவற்றால் பெண்களைச் சமுதாய மேல்தட்டுக்கு இட்டுச் செல்ல விழைவதை அறியமுடிகின்றது. பெண்கள் ஆண் சமுதாயத்தின் அவலப்பிடியில் சிக்கித் தவிக்காமல் கால வெள்ளத்தில் எதிர்நீச்சலிட்டு மேலே வர உறுதியேற்க வேண்டும் என்ற அவரது எண்ணத்தை இப்புதினம் பிரதிபலிக்கின்றது.

பெண்களை நயவஞ்சகத்தால் ஏமாற்றும் அல்லது காதலின் பெயரால் ஏமாற்றும் ஆண்களை இனம் காணவும் பெண்கள் அவர்களிடமிருந்து தங்களைக் காத்துக் கொள்ளும் வழிகளை உணர்த்தும் வகையிலும் 'சிங்களச் சீமாட்டி' என்ற புதினத்தில் மங்கம்மாள் என்னும் பாத்திரத்தைப் படைத்துக்காட்டியிருக்கின்றார் அண்ணா. மங்கம்மாள் மலர்க்கொடியின் தாய். மலர்க்கொடியை விரும்பும் சங்கரனின் சுயதன்மையை மலர்க்கொடி அறிந்து கொள்ளும் விதமாகச் சில செயல்களை மங்கம்மாள் செய்கின்றாள். இதனால் சங்கரனின் சாதிய அடையாளம் வெளிப்படுகின்றது. மலர்க்கொடியை ஏமாற்றித் தன் வைப்பாட்டியாக வைத்துக்கொள்ளும் எண்ணத்தையும் மங்கம்மாள் முறியடிக்கிறாள். "சங்கரா! ஜாதியை நீ காப்பது போலத்தான் நானும் என் மகளைக் காப்பேன். மலர்க்கொடியும் தன் மானத்தைக் காப்பாள்"[50] என்ற மங்கம்மாளின் கூற்று ஆண்களால் ஏமாற்றப்பட்டு வரும் பெண்கள் விழிப்புணர்வு பெற்றுத் திகழ்கின்ற சமுதாய மாற்றத்தைப் புலப்படுத்துவதாகும்.

நாட்டிற்காகப் போராடிக் காலிழந்தவனைப் பெண் தன் வாழ்க்கைத் துணையாக ஏற்றுப் பெருமையுடன் வாழும் வாழ்வைச் சித்திரித்துக் காட்டியுள்ளார் அண்ணா. 'காலிழந்தான்' என்ற சிறுகதையில், "நாட்டுப் பாதுகாப்புக்காக காலிழந்தவரைக் கணவராகக் கொள்வதிலே நான் பெருமை அடைகிறேன்."[51] எனக் கூறி அவனைத் திருமணம் செய்து கொள்ளும் பெண்ணின் மூலம் சமுதாயத்தில் மணமகன் பார்க்கையில் நல்ல உடற்கட்டு உள்ளதா? பணம் உள்ளதா? அழகா இருக்கின்றாரா? என்ற அடிப்படையிலே தான் பார்ப்பர். அவ்வாறு இல்லாமல் தாய்த்திரு நாட்டின் பாதுகாப்பிற்காக தன் உறுப்புகளை இழந்து தவிக்கும் இதுபோன்ற ஆடவரைப் பெண்கள் முன்வந்து ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற கருத்தை இச்சிறுகதை வாயிலாக வலியுறுத்துகின்றார்.

## சொத்துரிமை

பெண் அடிமைப்பட்டிருப்பதற்கு அடிப்படைக் காரணம், அவளுக்குச் சொத்துரிமை இல்லாததேயாகும். அண்ணா பச்சையப்பன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது, செங்கற்பட்டில் நடைபெற்ற முதல் சுயமரியாதை மாநாட்டில் பார்வையாளராகக் கலந்து கொண்டார். முதல் சுயமரியாதை மாநாட்டில் பெண்களுக்கு ஆண்களைப் போலவே சமமாகச் சொத்து உரிமைகளும் வாரிசுப் பாத்தியதைகளும் கொடுக்கப்பட வேண்டும் எனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பெரியார், "பெண் அடிமை யென்பதற்கு உரிய காரணங்கள் பலவற்றில் சொத்துரிமை இல்லாதது என்பதே மிகவும் முக்கியமான காரணம் என்பது நமது அபிப்பிராயம். ஆதலால் பெண்கள் தாராளமாகவும் துணிவுடனும் முன் வந்து சொத்துரிமைக்குக் கிளர்ச்சி செய்ய வேண்டியது மிகவும் அவசியமும் அவசரமுமான காரியமுமாகும்"[52] எனக் கூறியிருப்பது சிந்திக்கத்தக்கதாகும். செங்கற்பட்டில் நடைபெற்ற முதல் சுயமரியாதை மாநாட்டுத் தீர்மானமும் பெரியாரின் துணிவுரையும் அண்ணாவின் எண்ணத்தில் பதிந்தன. ஆண்களைப் போலவே பெண்களுக்கும் சொத்துரிமை அளிக்கப்பட வேண்டுமென்று மத்திய சட்ட சபையில் மசோதா கொண்டு வந்தனர். 1943ஆம் ஆண்டு நாடாளுமன்றத்தில் பெண்களுக்குச் சொத்துரிமை தரப்படவேண்டும் என்கின்ற மசோதா வந்தபோது இலட்சுமணபுரி வைதீகர்கள் அந்த மசோதாவைக் கடுமையாக எதிர்த்தனர். அவர்களது மனைவியர் பெண்களுக்குச் சொத்துரிமை உண்டென்ற மசோதாவை நிறைவேற்ற வலியுறுத்தி உண்ணாவிரதம் இருந்தனர். அதனை எதிர்த்து ஆண்கள் உண்ணாவிரதம் இருந்த வேடிக்கையை அடிப்படையாகக் கொண்டும் பெண்ணுக்கு சொத்துரிமை வழங்குவதைக் கருப்பொருளாக்கியும் 'உண்ணாவிரதம் ஒரு தண்டனை' என்ற சிறுகதையைப் படைத்துள்ளார் அண்ணா. இச்சிறுகதையில் பெண்களுக்கும் சொத்தில் சமபங்கு உண்டு என்ற சட்டத்தை எதிர்த்து ஆண்கள் உண்ணாவிரதப் போராட்டம் இருக்க எண்ணிய குடும்பத் தலைவரிடம் தலைவி பேசுமிடத்து, "ஆண்களுக்குத்தான் சொத்து உண்டு பெண்களுக்கு சொத்துக்கூடாது எனப் பேசுகிறவா மடையரான்னோ? பெண்ணில்லாம ஆண்கள் வாழ்வாளோ? வாழரது கிடக்கட்டும்? இவாளுடைய ஜெனனமே, பெண்களால் தானே! சொத்து இவாளுக்கு, சுகம் இவாளுக்கு, உழைக்க நாங்க. இந்தக்கேடு கெட்ட புத்தி இருக்கும் வரையிலே நாடு உருப்படாது, நாசமாகத்தான் போகும்."[53] என்று கூறும் கருத்து ஆணாதிக்கச் சமுதாயத்தில் அடிமைப்பட்டுக் கிடக்கின்ற பெண்களை விழிப்புணர்வு பெறத் தூண்டுகின்ற வகையிலே அமைந்துள்ளது. பெண்களுக்குச் சொத்துரிமை கிடையாது என்ற பழங்காலக் கொள்கையைப் பிடித்துக் கொண்டு இருப்பதைத் தவிர்த்துவிட்டு அறிவுக்குச் சரியெனப்படுகின்றவற்றை அனுசரிக்கத்தான் வேண்டும். ஆகவே இச்சட்டம் விரைவில் வரவேண்டும் என வலியுறுத்துகின்றார் அண்ணா. ஆண்களோடு பெண்கள் சமமாக வைத்து எண்ணப்படும் நிலையில் முன்னேற்றம் அடைய வேண்டுமெனப் பெரும்பாலான கதைகளில் கூறியுள்ளார்.

## கைம்பெண் மறுவாழ்வு

கணவனை இழந்த பெண்கள் மறுமணம் செய்து கொள்ளாது தங்களது வாழ்வைத் தங்களுக்குப் பிடித்தமான முறையில் அமைத்துக் கொள்ளும் பாங்கு அவர்களின் மறுவாழ்வைக் குறிப்பதாகும். 'எங்கும் அவன்' என்ற சிறுகதையில் கணவனை இழந்த பெண் கனிமொழி. இக்கதையில் அவள் மீதமுள்ள தன் வாழ்க்கையை ஏதேனும் தொண்டாற்றிக் கழித்திடக் கருதினாள். இந்நிலையில் நாட்டில் சீனப்படை தாக்குதல் நடத்தியது. அந்தப் போரில் எல்லைக்குச் சென்று இந்தியப்படைக்குத் தொண்டாற்றிட எண்ணிய கனிமொழி தன் தந்தையிடம் அனுமதி வேண்டுகிறாள். இதனை, "நாட்டுக்குப் பேராபத்து வருகிறபோது,

நம்மைப் போன்ற விவரம் அறிந்தவர்கள்கூட வீறு கொண்டு எழாவிட்டால், நாடு என்ன கதியாவது அப்பா! பயனற்ற வாழ்வு என்று கிடந்தேன்; இப்போது நாட்டுக்குப் பயன்படும் நல்ல வாய்ப்பு கிடைக்கிறது. கலங்காதீர்கள். களிப்புடன் விடைகொடுத்து அனுப்புங்கள். களத்திலே போராடிக் காயமுற்று உயிருக்கு மன்றாடும் உத்தமர்களுக்குத் தொண்டாற்றுவதைக் காட்டிலும் தூய்மையான தொண்டு இல்லை."[54] என்ற கனிமொழியின் கூற்று உணர்த்தும். இதில் விதவைப் பெண்கள் தங்கள் வாழ்வை இதுபோன்ற பயனுள்ள வகையில் அமைத்துக் கொள்ளலாம் என்ற சமுதாய மாற்றச் சிந்தனையை வலியுறுத்துவதோடு கனிமொழி வாயிலாக அதனை நிகழ்த்திக்காட்டியிருக்கிறார் அண்ணா.

## கைம்பெண் மறுமணம்

சமுதாயத்தில் பெண்களின் நிலை வருந்தத்தக்கதாகவே இருந்தது. கணவனை இழந்த பெண்கள் நெருப்பில் மாய்த்து உயிர் துறந்தனர் என்பதனைப் புறநானூறு கூறுகின்றது. இன்றும் இந்தியாவில் பல மாநிலங்களில் இக்கொடுமை நிகழ்ந்த வண்ணம் இருக்கின்றது. கணவனை இழந்த மகளிர் உடன்கட்டை ஏறும் பழக்கம் வடநாட்டில் இருப்பதை ஏடுகளில் வரும் செய்திகளால் அறியமுடிகின்றது. கைம்பெண்களுக்கு மறுவாழ்வு தரவேண்டுமென ஆரிய சமாஜம் போன்ற அமைப்புகளும், வித்யா சாகர், இராசாராம் மோகன்ராய் போன்ற சீர்திருத்தவாதிகளும் இடையறாது போராடினர். இந்து சமயத்தில் இப்பழக்கம் நெடுங்காலமாக இருந்து வந்திருப்பதால் மக்களிடையே எளிதில் மாற்றங்காண முடியவில்லை.

1856ஆம் ஆண்டு விதவைகளின் மறுமணச் சீர்திருத்தச் சட்டம் (Widow's Remarriage Reform Act) உருவாகியது. தமிழ்நாட்டில் சுயமரியாதை இயக்கம் மகளிர் விடுதலைக்காக அயராது போராடியது. 1931ஆம் ஆண்டு ஆகஸ்டில் நடைபெற்ற விருதுநகர் சுயமரியாதை இரண்டாவது மாநாட்டில் விதவா விவாகத்தை ஆதரித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. "உலகில் மனித வர்க்கத்தினருக்குள் இருக்கும் அடிமைத் தன்மை ஒழிய வேண்டுமானால் பெண்ணுலகை அடிமையாகக் கருதி நடத்தும் அகம்பாவமும் கொடுமையும் அழிய வேண்டும். அது அழிந்த நிலையே சமத்துவம் சுதந்திரம் எனும் முளை முளைக்கும் இடமாகும். இதற்கு விதவைகளுக்கு மறுமணம் செய்து கொள்ள உரிமை ஏற்படுத்துவதே முதல் காரியமாகும்."[55] என்றார் பெரியார். கைம்பெண் துயர் துடைக்க யாரும் முன் வராத நிலையில் சுயமரியாதை இயக்கத்தைச் சார்ந்த பலர் விருதுநகர் மாநாட்டிற்குப் பின் விதவைகளை மணம் புரிந்தனர். செட்டிநாட்டைச் சார்ந்த சொ.முருகப்பா என்ற சுயமரியாதைக்காரர் விதவையை மணந்து கொண்டார். தமிழிலக்கியத்திலும் மாதவையாவின் முத்து மீனாட்சி தொடங்கி, பாரதியின் சந்திரிகை வரை விதவை மணம் குறித்து வற்புறுத்தி வந்தனர். பாரதியாரின் தலைமாணவரான வ.ரா.வும் 'சுந்தரி' என்ற புதினம் வாயிலாக விதவை மணத்தை மிகுந்த ஆற்றலோடு வெளிப்படுத்தினார். அவ்வாறு அவர் வலியுறுத்தியதாலேயே அவரை அண்ணா 'அக்கிரகாரத்து அதிசய மனிதர்' எனப் போற்றினார். விதவைகளுக்கு மறுமணம் வேண்டுமென்ற சீர்திருத்த எண்ணம் அவர் மனதில் பதிந்ததால் தம்முடைய கதைகளில் விதவைகளின் மறுமணத்தை வரவேற்று எழுதினார். எந்த இனம் சாத்திரத்தையும் சம்பிரதாயத்தையும் காட்டி விதவை மணத்தைத் தடுத்ததோ அந்த இனத்தின் வாழ்விலிருந்தே விதவைகள் மறுமணத்தைத் தொடங்கிக் கதைகளை வரைந்தார். இதற்கு எடுத்துக்காட்டுகளாக முன் நிற்பவை 'பேரன் பெங்களூரில்' 'பாமா விஜயம்' ஆகிய சிறுகதைகள் ஆகும்.

'பேரன் பெங்களூரில்' சிறுகதையில் விதவைப் பெண்ணான ஏமலதாவைத் திருமணக் கோலத்தில் கழுத்தில் தாலியுடன் பார்த்த அவளது தந்தையான கனபாடிகள், "பாதகி! கல்லைப் போட்டாயே தலையிலே; உன்னைப்போல விதவைகள் இப்படியா காரியம் செய்கின்றனர். இலைமறை காயாக ஏதோ நடப்பதுண்டு. இப்படி விவாகமா! அதற்கு நான் புரோகிதமா! என்ன துணிவு! எவ்வளவு அக்கிரமம்! என் மதிப்பு என்ன ஆவது! மதம் என்ன ஆவது! பிழைப்பும் போச்சேடி பேதையே."[56] எனக் கூறுகிறார். திருமணத்திற்குப் பின் ஏமலதா கணவனுடன் பெங்களூர் சென்று குடியேறினாள். அப்பாவுக்கு அடிக்கடி கடிதம் வரைகிறாள். திருமணத்தின் போது சீற்றம் கொண்ட கனபாடிகள் பேரன் பிறந்துள்ளான் என்பதை அறிந்து மகிழ்ச்சியுறுகின்றார். வெளி உலகிற்குத் தன் பெண்ணை வெறுப்பதாக நடந்து கொள்ளும் கனபாடிகள் மனதிற்குள் தன் பேரனை எண்ணி ஆனந்தமடைவதாக அண்ணா படைத்திருப்பது கனபாடிகளின் மனதை மட்டுமல்லாமல், இச்சமுதாயத்தில் பெரும்பாலான பெற்றோர்களின் மனதையும் பிரதிபலிப்பதாக அமைந்துள்ளது. ஏனெனில் பல பெற்றோர்களும் இதுபோன்ற நிகழ்வுகளுக்கு, இச்சமுதாயம் என்னென்ன இழிசொற்களை வழங்கும் என அஞ்சியே பெற்றோர் தங்கள் குழந்தைகளின் காதலையும் திருமணங்களையும் ஏற்றுக்கொள்ளாது எதிர்க்கின்றனர். ஆனால் சிறிது காலம் கழிந்தபின் பேரனோ பேத்தியோ பிறந்துவிட்டால் அப்பெற்றோர்களின் ஆனந்தத்திற்கு அளவே இல்லை. இத்தகைய நிலைகளைச் சமுதாயத்தின் அன்றாட வாழ்விலிருந்து காணமுடிகின்றது. இதன் மூலம் விதவைகளுக்கான மறுவாழ்வைத் திருமணத்திற்குப் பின் இச்சமுதாயம் ஏற்றுக்கொள்ளும் என்ற கருத்தை இக்கதையில் வெளிப்படுத்துகின்றார் அண்ணா.

காதல் ஜோதி நாடகத்திலும் அறிஞர் அண்ணா விதவைகள் மறுமணத்தைப் படைத்துக் காட்டுவர். இதனை, "மணமக்களே பெரியோர்களே நண்பர்களே இந்தத் திருமண விழாவுக்கு என்னைத் தலைவனாக இருக்கும்படி அழைத்தார்கள். மகிழ்ச்சியோடு ஒப்புக் கொண்டேன். . . . . கண்ணுக்கும் கருத்துக்கும் இனிமையான காட்சி இது. கலப்புத் திருமணம். விதவைக்கு மறுமணம். காலப்போக்கை உணர்ந்து அறிவுக்குப் பொருத்தமான முறையில் நடத்தப்பட்ட காதல் மணம். அம்மி மிதித்து அரசாணைக்கால் வைத்து அக்னி சாட்சியாக நடத்தப்பட்டது தோழியர் சுகுணாவின் திருமணம். . . . இந்தத் திருமணம், அறிவுப்புரட்சியின் விளைவுதான். புரட்சித் திருமணம் இது. புது உலகை நோக்கி நாடு மெள்ள மெள்ளச் செல்கிறது என்பதைக் காட்டும் திருமணம் மணமக்களை வாழ்த்துகிறேன். இதுபோல், சீர்திருத்தத் திருமணம், விதவைக்கு மறுமணம், நாட்டிலே எங்கும் நடைபெற வேண்டும்."[57] என்னும் விழாத்தலைவர் கூற்று உணர்த்தும்.

சமுதாயத்தில் காணப்படும் மூடப்பழக்கங்கள் சமுதாய முன்னேற்றத்திற்குத் தடைக்கற்கள் என்பதை உணர்ந்த அண்ணா, அதைத் தன் படைப்புகளின் மூலம் களைய முற்படுகின்றார். அந்த வகையில் 'பாமா விஜயம்' சிறுகதையில் இளம் விதவையாக வரும் புரோகிதரின் மகளான கமலாவுக்கு சரசா மறுமணம் செய்து வைக்கிறாள். இதனைக் கண்ட புரோகிதர் நீ இவ்வாறு செய்ததற்குப் பதிலாகக் கிணற்றில் விழுந்து தற்கொலை செய்து கொண்டிருக்கலாம் என்றும் குலப்பெருமையைக் கெடுத்துவிட்டாய் என்றும் மகளைச் சாடுகிறார். மகளின் வாழ்க்கை மறுமணத்தினால் துளிர்த்திருப்பது அவருக்குப் பெரிதாகப் படவில்லை. தன்னுடைய குலப்பெருமை கெட்டுவிட்டது என்று வருந்துகிறார். இதுபோன்ற எண்ணம் கொண்டோர் மாற வேண்டும் எனும் கருத்தினையும், விதவையர் மறுமணம் போன்ற சமுதாயத்தில் நிகழ வேண்டிய சீர்திருத்தத்தையும் சரசாவின் மூலம், "பிரபல சாஸ்திரியின் மகள் ஸ்ரீமதி கமலத்திற்கும், சிவன் கோயில் நாதஸ்வர வித்வான் சுப்பிரமணியப் பிள்ளைக்கும் சீர்திருத்த மணம். ஸ்ரீமதி சரசாவின் முயற்சியால் இனிதே நடந்தேறியது"[58] என்று வலியுறுத்துகிறார். இச்சிறுகதையின் வாயிலாகப் பழமையின்

பெயரால் சமுதாயத்தில் புரையோடிக்கிடக்கும் மூடப்பழக்கவழக்கங்களைச் சாடுகிறார். பெண்களுக்குரிய உரிமைகள், விதவைத் திருமணம், இளமைத் திருமணம், பகுத்தறிவுச் சிந்தனைகள் போன்றவற்றை இச்சிறுகதையின் மூலம் வெளிப்படுத்துகிறார். மிகப்பெரிய சமுதாய மாற்றத்திற்கு அடிகோலுகின்றார்.

காதல் மணங்களை எதிர்க்கும் நிலையைக் குறிப்பாக விதவை மறுமணத்தை எதிர்க்கும் சூழலைச் சமுதாயத்தின் அறியாமை என மொழிகிறார் அண்ணா. சாதியாலும், மதத்தாலும் சமுதாயக் கட்டுப்பாடுகளாலும் காதல் மணங்கள் தடை செய்யப்படுகின்றன. காதல் என்பது மனித வாழ்வில் நிகழும் இயற்கையான ஒரு நிகழ்வாகும். மேலும் அது உடலியல் மாற்றங்களால் ஏற்படும் ஒன்றிய உள்ளங்களின் விளைவு ஆகும்.

இளம் விதவைப் பெண்ணின் மனதில் காதல் தோன்றியதற்குக் காரணம் அவளது பருவமே தவிர அவளல்ல. அவ்வாறு தோன்றிய காதலின் விளைவாகத் தான் விரும்பிய ஆடவனுடன் இணைந்து வாழ முடிவெடுத்து அவனைத் திருமணம் செய்து கொண்டால், இச்சமுதாயம் அவர்களை ஏற்றுக்கொள்வதில்லை. சமுதாயத்தின் பழிச்சொற்களுக்கு அஞ்சிப் பெற்றோரும் தன் பிள்ளைகளின் வாழ்வை விடச் சமுதாயக் கட்டுப்பாட்டிற்கே முக்கியத்துவம் அளிக்கின்றனர். இது போன்ற சமுதாயச் சூழலில் உள்ள விதவைப் பெண் தான் காதலித்த ஆடவனைத் திருமணம் செய்து கொள்ளும் நிலையில் அப்பெண்ணின் தந்தை அவளைக் கொல்ல வேண்டும் என நினைத்து அவளிருப்பிடம் செல்கின்றார். அங்கு தன் மகளின் மகிழ்ச்சிகரமான வாழ்வைக் கண்ட அவர் தான் கொண்ட எண்ணத்தைக் கைவிட்டுத் திரும்புகிறார். 'இவர்கள் குற்றவாளிகளா?' என்ற சிறுகதையில், "உள்ளம் ஒன்றாத ஒருவனும் ஒருத்தியும் கூடி வாழ்வது எவ்வளவு பெரிய துன்பம். ஒன்றிய உள்ளத்தின் விளைவு, இன்ப வாழ்வு. அதைத்தானே நாம் இங்குக் காண்கிறோம். அத்தகைய இன்ப வாழ்விற்களிக்கும் இவர்களை நாம் ஆதரிப்பதா? அல்லது சாத்திரத்தை இகழ்ந்து சமூகக் கட்டுப்பாட்டை மீறி, சாதித் தடையைக் கைவிட்டுக் குலத்திற்கிழுக்குத் தேடிய இவர்களைக் கொல்வதா? ............ சிறு பெண்களை விதவையாக்கி இவர்கள் வாழ்வைச் சீரழிப்பது மகாபாபம். விதவை நிலை, ஆண்டவனுக்கே ஒப்ப முடிந்ததென்றால் அவர்கட்குக் காதல் உணர்வை ஏன் அளிக்க வேண்டும்? இது சமூகத்தின் அறியாமை."[59] எனச் சமுதாயத்தின் கட்டுப்பாடுகளைக் கண்டிக்கிறார் அறிஞர் அண்ணா. அதோடு சமுதாயத்தில் இருக்கும் ஒவ்வொரு தந்தையும் தனது மகளின் இன்ப வாழ்வு எதில் அடங்கியிருக்கிறது என்பதை எண்ணிச் செயல்பட வேண்டும் என்பதை வலியுறுத்துகிறார். இக்கதையில் வரும் கோகிலத்தின் தந்தையை, மகளின் அன்பு நிறைந்த வாழ்வைக் காட்டிலும் சமுதாயக் கட்டுப்பாடு அவசியமில்லை என எண்ணி அவர்களின் திருமணத்தை ஏற்றுக்கொள்கிறார். இதன்மூலம் விதவையின் மறுமணத்தை அப்பெண்ணின் தந்தை ஏற்றுக்கொள்ளும் மாற்றத்தை இக்கதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

'1938-1940 ஒரு வசீகர வரலாறு' என்ற சிறுகதையில் விதவைப் பெண்ணான கல்யாணி தன் தந்தையின் கடையில் வேலை பார்க்கும் கண்ணுச்சாமியைக் காதலித்துத் திருமணம் செய்து கொள்கிறாள். விதவையைக் காதலித்துத் திருமணம் செய்து கொள்ளும் மன உறுதியை இளைஞர்கள் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தைக் கண்ணுச்சாமியின் வாயிலாக விதைக்கிறார். இதன் மூலம் விதவைப் பெண்களுக்கான வாழ்வியல் மாற்றத்திற்கு வித்திடுகின்றார்.

'திறப்பு விழா' என்ற சிறுகதையில் வரும் மன்னன் தன் தங்கையை ஒரு கிழவனுக்குத் திருமணம் செய்து வைக்கிறான். சில காலத்தில் அக்கிழவன் இறந்துவிட விதவையாகின்றாள் அப்பெண். தான் விரும்பும் மணமகனைத் தனக்கு மறுமணம் செய்து

வைக்க அண்ணனிடம் போராடித் தோற்று இறுதியில் இறக்க முடிவெடுக்கிறாள். இந்நிலையில் அந்நாட்டிற்கு வரும் சிற்பி விதவைப் பெண்ணின் நிலையறிந்து உதவ முன்வருகின்றான். அவன் மன்னனின் உருவத்தைச் சிற்பமாக வடிக்கின்றான். அதில் மன்னனைக் கண் இல்லாதவனாகப் படைத்துக் காட்டுகிறான் சிற்பி. அதன்மூலம் தன்நிலை உணர்ந்த மன்னன் மனம் திருந்தி தன் விதவைத் தங்கையை அவள் விரும்பும் கதிரவனுக்கு மறுமணம் செய்து வைக்கிறான். இதில், "ஆம், நான் குருடன்தான். . . சமூகக் கட்டுப்பாடு, போலிக் கௌரவம் என்பவைகள் என் கண்ணைக் குருடாக்கி விட்டன - சந்தனத்தேவன், என்னைக் குருடனாகச் சமைத்தது முற்றிலும் பொருத்தமே . . . . கதிரவனுக்குத் தங்கையைக் கடிமனம் செய்விக்கிறேன். இன்றே, இங்கேயே, இப்போதே. . . ."[60] எனக் கூறும் மன்னனின் வாயிலாக விதவைகளுக்கான மறுவாழ்வை அமைத்துக்காட்டியுள்ளார் அண்ணா.

குடும்பத்தின் சூழல் காரணமாகத் தான் விரும்பும் ஆடவனை மறந்து பெற்றோர்கள் பார்க்கும் மணாளன் வயோதிகனாக இருந்தாலும் அவனைத் திருமணம் செய்து கொண்டு விதவையாகி அல்லல்படும் ராதாவை மறுமணம் செய்து கொள்கிறான் பரந்தாமன். "விதவை ராதாவுக்கும் விழியிழந்த பரந்தாமனுக்கும் மணம் நடந்தேறியது"[61] என்ற கபோதிபுரத்துக் காதல் என்ற குறும் புதினத்தில் வரும் கூற்றின் வாயிலாக விதவை மறுமணத்தை அண்ணா படைத்துக்காட்டியுள்ளமை விளங்கும்.

## விலைமகளிர் மறுவாழ்வு

குடும்பச் சூழல், பணத்தாசை, ஆண்களின் வலை போன்ற காரணங்களால் பெண்கள் விலைமகளிராகும் நிலை ஏற்படுகின்றது. ஏதோ ஒரு சூழலில் அந்த நிலைக்குத் தள்ளப்படும் பெண்கள் சிலர் அதை மகிழ்ச்சிகரமான வாழ்வு என எண்ணி வாழ்கிறார்கள். சில பெண்கள் நரகத்தில் சிக்கிவிட்டோம் என்ற வேதனையோடு பிழைப்பை நடத்துகின்றனர். இதுபோன்ற பெண்களின் துயரை உணர்ந்த அண்ணா இப்பெண்கள் தங்கள் வாழ்வை மீண்டும் கட்டமைத்துக் கொள்ள இந்த நிலையிலிருந்து மீளவேண்டும் என வலியுறுத்துகின்றார். வாழ்க்கைச் சூழலால் இதில் ஈடுபட்ட பெண்களை ஏற்றுக்கொள்ளும் மனம் ஆண்களுக்கு ஏற்பட வேண்டும். அதேசமயம் பெண்கள் தங்களை ஆதரிக்கும் ஆடவனுக்கு உண்மையாக நடந்துகொள்ள வேண்டும் என்ற கருத்தையும் வெளிப்படுத்துகின்றார். இதன்மூலம் விலைமகளிர் மறுவாழ்வு பெற வேண்டும் என விழைகிறார். இந்தச் சமுதாய மாற்றத்தை 'என் வாழ்வு' புதினத்தில் வரும் விமலா என்னும் பாத்திரத்தின் வழி உணர்த்துகிறார். விமலா தேவதாசி குலத்தில் தோன்றியவள். இருப்பினும் அதை வெறுப்பவள். சந்தர்ப்பச் சூழல் காரணமாக விமலாவும் தாசித் தொழிலில் ஈடுபட வேண்டியதாயிற்று. பல துயரங்களைச் சந்தித்த பின் விமலா தன் வீட்டில் அடியாளாக வேலைபார்த்து வந்த ரங்கனிடம் அடைக்கலமாகின்றாள். அதிலிருந்து அவள் ரங்கனுடன் மட்டுமே வாழும் நிலையை, "என் இளமையை இழந்துவிட்டேன். இனிமேல் எவரையும் மடக்கி வளமாக வாழவேண்டும் என்ற எண்ணமும் போய்விட்டது. அதனால்தான் ரௌடி ரங்கனுடன், இந்த வாழ்க்கையே போதும் என்ற நிம்மதியோடு, நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்."[62] என விமலா கூறுமிடத்து விபச்சார வாழ்வில் வாழ்க்கையை இழந்த விமலா ரங்கனின் ஆதரவால் புதுவாழ்வு பெறுவது விளங்கும். இந்நிகழ்வு விலைமகளிரின் வாழ்வில் ஏற்படும் மாற்றம் மட்டுமல்லாது புதிய சமுதாய மாற்றத்தையும் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது.

விபச்சார வாழ்வில் ஆண்களால் வீழ்த்தப்பட்ட பெண் மறுவாழ்வு பெறுவது என்பது அப்பெண் திருமணம் செய்து கொண்டு வாழ்வதே ஆகும். சந்தர்ப்பச் சூழலால் விபச்சாரம் என்கின்ற பாதாளத்தில் விழுந்து விடும் பெண்கள், அதிலிருந்து மீள நினைத்தாலும் செல்வக்குடியைச் சேர்ந்த மனிதர்கள் அதனை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. அப்பெண்களையும் ஏற்றுக் கொள்ளும் மனதை ஆண்கள் பெற வேண்டும் என்ற கருத்தையும், அதற்கு வலுசேர்ப்பதாகவும் தனது படைப்புகளில் விபச்சாரத்திலிருந்து விடுபட்டு நல்ல வாழ்க்கை வாழ விரும்பும் பெண்களை ஏற்றுக்கொள்ளும் ஆண்களைப் படைத்துக் காட்டியுள்ளார் அண்ணா. 'குற்றவாளி யார்?' என்ற சிறுகதையில் ஆண்களின் நயவஞ்சகத்தால் விபச்சாரப் படுகுழியில் விழுந்த கருப்பியை வேலன் ஏற்றுக்கொண்டு அவளைத் திருமணம் செய்து கொள்கின்றான். இதன் மூலம் கருப்பிக்கு மறுவாழ்வு தரும் நோக்கத்துடன் சமுதாயக் கட்டுப்பாடுகளை உடைத்தெறிந்து மாற்றத்தைக் காண விரும்பும் கதாபாத்திரமாக வேலனை அண்ணா படைத்திருக்கின்றார். இதனை, "வேலன், குற்றம் செய்த என்னை, கொடுமைக்கு ஆளான என்னை - காப்பாற்ற, காளி மீது ஆணையிட்டுக் கைபிடித்தான் ஆத்தா எதிரிலே. இதோ பார்! தாலிகூடக் கட்டினான். இந்த ஊரிலே இருந்தாத்தான் ஏளனமாகப் பேசுவாங்க. வா, நாம் வேறே ஊரு போவோம்; அங்குப் புருஷனும் பெண் ஜாதியுமாக வாழ்வோம்னு சொன்னான். புறப்பட்டோம்."[63] எனக் கூறும் கருப்பியின் கூற்று உணர்த்துகின்றது.

## சுயமரியாதைத் திருமணம்

தமிழரும், ஆரியரும் நேர் எதிர்ப் பண்பாட்டினர். தமிழர் களவு, கற்பு நெறியைப் போற்றிவர ஆரியரோ பிரமம், பிரசாபத்தியம் முதலான எண்வகை மணமுறையை வகுத்து வளர்த்தனர். இவற்றுள் பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்னும் முதல் நான்கு திருமண முறைகளே உயர்ந்தன; சிறப்புக்குரியன என்பர். இந்நான்குமே ஏற்பாடு செய்யப்பட்ட திருமணங்கள். இதில் ஆண் பெண்ணை விரும்புவது என்பதற்கோ அன்றிப் பெண் ஆணை விரும்புவது என்பதற்கோ சிறிதும் இடம் இல்லை. ஏனெனில் அத்திருமண முறைகளில் மணப்பெண் பருவம் அடையாதவளாக - குழந்தையாக - இருக்க வேண்டும் என்பது விதி. ஒரு பெண், தன்னைப் பெண் என்று உணர்வதற்கு முன்பே அவள் ஒருவனின் மனைவியாக்கப்பட்டாள்.

விருப்போர் ஒத்த இணையரே வாழ்வில் இணைவர். பெண் தான் விரும்பியவனும் தன்னை விரும்புவனுமான ஆணையே களவு முறையிலோ அன்றிக் கற்பு முறையிலோ துணைவனாக ஏற்பாள். அதனால்தான் ஆரியரின் கந்தர்வ மணமுறை ஓரளவு தமிழர் மணமுறையோடு ஒத்துள்ளது என்கிறார் தொல்காப்பியர். தமிழரின் மணமுறைகளின் வளர்ச்சி வாழ்வியல் நடைமுறைகளுக்கு ஏற்ப அமைந்தது.

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்

ஐயர் யாத்தனர் கரணம் என்ப"[64]

எனத் தொல்காப்பியர் குறிப்பிடும் தமிழரின் திருமண முறை மிக எளிமையாகவும், இயல்பாகவும் அமைந்ததாகும். இதனையே,

"உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை

பெருஞ்சோற்று அமலை நிற்ப, நிரைகால்

தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி

மனைவிளக் குறுத்து, மாலை தொடரிக்
கனைஇருள் அகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்
கேடுஇல் விழுப்புகழ் நாள்தலை வந்தென
உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலைஅவ் வயிற்று
வால்இழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை ஆக!' என,
நீரொடு சொரிந்த ஈர்இதழ் அலரி
பல்இருங் கதுப்பின் நெல்லொடு தயங்க,
வதுவை நல்மணம் கழிந்த பின்றைக்,
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து,
பேர்இல் கிழத்தி ஆக,' எனத் தமர்தர,......" [65]

என்கின்ற அகநானூற்றுப் பாடல் சுட்டுகின்றது. பந்தலிடல், புதுமணல் பரப்பல், மகப்பெற்ற மகளிர் நீர் கொண்டுவரல், நெல்லும் மலரும் தூவி நீராட்டல், புத்தாடை அணிவித்தல், கணவன் விரும்பும் பெண்ணாகுவாய் என வாழ்த்துதல், கணவனுடன் சேர்த்து வைத்தல், உணவளித்தல் போன்ற இவ் எளிய சடங்குகளைக் கொண்ட திருமண முறை மாறி 'மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத் தீவலம்' வந்து கோவலனும் கண்ணகியும் மணவாழ்வை ஏற்றதாகக் கூறுகிறது சிலப்பதிகாரம். இவ்வாறு ஆரிய மணமுறையை மெல்ல மெல்லத் தமிழருள் உயர்ந்த செல்வாக்குப் பெற்றோர் படிப்படியாக ஏற்றனர். இதன் வளர்ச்சி இன்று வேள்விகள் நடத்தி வேதங்கள் ஓதப் பார்ப்பனர்கள் தாலி எடுத்துக் கொடுக்கத் திருமணங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. நாடாளும் அரசர்களின் ஆதரவோடு கோவிலுள் நுழைந்த ஆரியப் பூசாரியர் அரசியலிலும் இடம்பிடித்து மனுதர்மத்தை மக்கள் மேல் திணிக்கத் தொடங்கினர். வேதநெறி தழைத்தோங்கத் தொடங்கியது. பிறப்பிலேயே வேற்றுமையைப் புகுத்தும் மனு தர்மம் ஆதிக்கம் பெற்றது. மனித நெறி மண்ணில் புதைக்கப்பட்டது. தமிழர்கள் ஒட்டுமொத்தமாகச் சூத்திரர்களாக்கப்பட்டனர். மனு தர்மத்தை ஏற்க மறுத்த தமிழர்களைச் சூத்திர, பஞ்சமர்களாக்கினர். தீண்டாமை, அண்டாமை, பாராமைக் கொடுமைகள் சுமத்தப்பட்டன. தமிழ் மண்ணில் நுழைந்த பிறமொழி ஆட்சிகள் ஆரியர்க்கு வாய்ப்பாக அமைந்தன; ஆங்கிலேய ஆட்சியில் கல்வி, பிறமொழி அறிவு போன்றவற்றில் சிறந்து விளங்கியதன் பயனாக அரசுப் பதவிகள் எல்லாவற்றிலும் நீக்கமற தம் விருப்பத்துக்கு விளையாடினர்.

ஆங்கிலேயரை எதிர்த்து உருவான காங்கிரசு இயக்கத்தையும் தங்கள் விருப்பம் போல் ஆட்டிப் படைத்தனர். இவர்களின் மனிதத் தன்மையற்ற, அறநெறி சாராத விழுமியமற்ற கொட்டத்தைத் தாங்க முடியாமல் மனித நெறி எனும் விதையை ஊன்றி அதனைப் பேணி வளர்த்தார் பெரியார். அதனால் தான் பெரியாரை, "மநுதர்மத்தை ஏற்றிருந்த மக்களிடையே மனித தர்மத்தை நினைவூட்டி வாழ்விலே ஒரு மாற்றளித்தார்கள்"[66] என்று பேராசிரியர் தி.வை.சொக்கப்பா பாராட்டினார்.

பெரியாரால் தொடங்கப்பெற்றது சுயமரியாதை இயக்கம் எனப்படும் தன்மான இயக்கம். அரசியலில் இட ஒதுக்கீடு வேண்டிய இவ்வியக்கம் கல்வி வேலைவாய்ப்பிலும் அதனை வற்புறுத்தியது. உண்ண, உடுத்த, நடக்க எனச் சமத்துவம் வேண்டி உழைத்த பெரியார் தமிழனுக்குத் தன்மான உணர்வை ஊட்டினார். உயிரினும் மேலானது தன்மானம். அதே நேரத்தில் தன்மானத்திலும் இனமானம் பெரிதென்று கூறி உழைத்தார். ஆரியரை அனைத்துத் துறையிலும் புறந்தள்ளி வெற்றி பெறுவதற்கான வழிகளைக் காட்டினார். பிறப்பு, இறப்பு, மணவாழ்வு நிகழ்ச்சிகளில் ஆரியரை அவர்தம் புரோகிதச் சடங்குகளை அண்டவிடாமல் தடுக்க முற்பட்டார். அதன் பொருட்டு அவர் அறிமுகப்படுத்தியது தான் 'சுயமரியாதைத் திருமணம்'.

சூத்திரர்க்கு மணமுறை இல்லை என்று மறுத்தார் மனு. அதையும் மீறி ஆரியர் தங்கள் வருவாயின் பொருட்டுச் சூத்திரர்க்கு மணம் நடத்த முன்வந்தனர். மண நிகழ்ச்சியினை நடத்த முதல் வருணத்தான் தான் என்ற தன்னகங்காரத்துடன் அமர்ந்தான் புரோகிதம் செய்வோன். மணமக்கள் முன் தீ வளர்த்தான். மணமகனுக்கு தருப்பைப் புல்லினால் பூணூலிட்டு, தற்காலிகமாகப் பார்ப்பனனாக்கினான். ஒன்றரை மணி நேரத்திற்குத் தான் மந்திரத்திற்கு வலிமை என்று கூறினான். மணமகளை ஆரியக் கடவுளர்க்கு மனைவியாக்கி, இறுதியாக புரோகிதம் செய்யும் தனக்கும் மனைவியாக்கி, கட்டக் கடைசியில் மணமகனுக்கு மனைவியாக்கினான். இந்த அசிங்கத்தை, ஆபாசத்தை அப்புறப்படுத்த நினைத்தார் பெரியார். ஆதலினால் மணமக்களைத் தமக்குச் சமமான மனிதர்களாக மதிப்பவரே மணத்தை முன்னின்று நடத்த வேண்டும் என்றார். இரண்டாவதாக வழக்கற்ற மொழியாம் சமற்கிருதத்தை விலக்கித் தம் தாய்மொழியாம் தமிழிலேயே மணமக்கள் வாழ்க்கை ஒப்பந்த உறுதி மொழிகளை ஏற்க வைத்தார். இருவகைப்பட்ட மண முறைகளில் ஒரு முறை பார்ப்பன ஆதிக்கத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். மற்றொரு முறை பகுத்தறிவையும் மானத்தையும் மனித நேயத்தையும் அடிப்படையாகக் கொண்டதாகும். சமுதாயத்தில் தாழ்த்தப்பட்டுக் கிடக்கிற சூத்திர பஞ்சமர் என்ற 100க்கு 97 மக்களின் நலத்தை முன்வைத்து நடத்தப்படுவதாகும்.

'தங்கத்தின் காதலன்' என்ற சிறுகதையில் பொன்னம்பலத்தால் கைவிடப்பட்ட தங்கத்தின் மகள் சுந்தரியைத் தாசியாக வைத்திருக்கும் திருமலைச்சாமிக்குத் திருமணம் செய்து வைக்கிறார் மாவட்ட ஆட்சித் தலைவர் பொன்னம்பலம். இவர்கள் இருவருக்கும் பொன்னம்பலம் சுயமரியாதைத் திருமணம் செய்து வைப்பதாகக் கதை முடிவு அமையும். மாவட்ட ஆட்சித் தலைவரே சுயமரியாதைத் திருமணத்தை நடத்தி வைப்பதாக அமைத்திருப்பது அண்ணாவின் படைப்புகளில் சமுதாய மாற்றத்தின் உச்சமாகும். இதனை, "மிஸ்.சுந்தரிக்கும், மிஸ்டர்.திருமலைச்சாமிக்கும் கலெக்டர் பொன்னம்பலம் சுயமரியாதைத் திருமணம் நடத்தி வைத்தார்."[67] என்பதன் வாயிலாக அறியமுடிகின்றது. இதன்மூலம் தான் சார்ந்திருந்த இயக்கத்தின் கொள்கையைத் தனது படைப்புகளில் வலியுறுத்திச் சமுதாய மாற்றத்திற்கு வித்திட்டார் அறிஞர் அண்ணா.

## தொகுப்புரை

தமிழகத்தில் ஐரோப்பியர் வரவு மாபெரும் மறுமலர்ச்சியை உருவாக்கியது. தமிழ்ச்சமுதாயத்தில் மட்டுமின்றி இந்தியச் சமுதாயத்தில் மறுமலர்ச்சியை உருவாக்கிய காலம் இருபதாம் நூற்றாண்டு. இம்மறுமலர்ச்சியானது அரசியல், அறிவியல் விளைவுகளால் உருவாக்கம் பெற்றது.

மாற்றம் என்ற சொல் பகை, வேற்றுமை, சொல், விடை, வஞ்சின மொழி, மாறுபட்ட நிலை, பரிகாரம் என்னும் பொருளைக் குறிக்கின்றது. மாறுதல் இன்றி மனித வாழ்க்கை இல்லை. மாற்றத்தின் வழி கிடைத்த முன்னேற்றத்தின் காரணமாகவே மனிதன் இன்றைய சிறந்த நிலையை அடைந்திருக்கின்றான்.

ஆங்கிலேயர்களின் வரவு இந்தியாவில் உணவு, உடை, பழக்கவழக்கங்கள் போன்றவற்றில் மாற்றத்தை உருவாக்கியது. சமுதாய மாற்றத்திற்கு எதிரான தடைகளாகத் தனிமனிதத் தேக்கம், தலைமைத் தேக்கம், சமுதாயத் தேக்கம் ஆகியவைகள் உள்ளன.

திராவிட இயக்கம் தங்கள் கொள்கைகளைப் பரப்ப நாடகங்கள், சிறுகதை, புதினம், கட்டுரை, கடிதம் போன்ற இலக்கிய வடிவங்களைப் பயன்படுத்திக் கொண்டது. இவ்விலக்கிய வகைகள் மூலம் சமுதாயத்தில் மாற்றங்களை உருவாக்கப் பாடுபட்டது.

மனிதனைப் பண்படுத்தி நல்வழியில் செலுத்துவது சமயம் ஆகும். மனிதனை மனிதன் கடவுளின் பெயரால் சுரண்டுவதற்கு ஏற்ற களமாக சமயத்தை யாரும் எண்ணிச் செயல்படக்கூடாது. அப்படி எண்ணிச் செயல்படும் போலிச்சமயவாதிகளையும் சமயத்தின் நோக்கத்தையும் மக்களுக்கு எடுத்துக்காட்டுகின்றார். சமயம் தொடர்பாக மக்கள் விழிப்புணர்வு கொள்ளச் செய்யும் பணியைத் தனது இலக்கியங்கள் வழி மேற்கொண்ட அண்ணா, சமயங்கள் கூறும் கடவுளரைப் பற்றியும், அக்கடவுளரால் தோன்றும் மூடப்பழக்கங்கள் பற்றியும் அவைகள் இச்சமுதாயத்தில் இருந்து அகற்றப்பட வேண்டும் என்பதைப் பற்றியும் மக்கள் தெளிவடையும் விதமாக எடுத்துரைக்கின்றார்.

சாதிகளால் உருவாகும் சிக்கல்களைக் கருத்தில் கொண்டு அண்ணா சாதி ஒழிப்பைத் தனது இலக்கியங்களில் படைத்துள்ளார். சாதிகளை ஒழிப்பதற்குக் கலப்பு மணம், காதல் மணம் போன்றவற்றை வலியுறுத்துகின்றார்.

பகுத்தறிவு என்பதற்குப் பகுத்தலின் பயனாய்ப் பெறப்படும் அறிவு என்பது பொருள். எந்தச் செயலையும் ஆராய்ந்து பார்த்து அறிவின் வழி விடை காண்பதே பகுத்தறிவு ஆகும். சமுதாயத்தில் நிலவும் மூடநம்பிக்கைகள் அனைத்தையும் பகுத்தறிவின் துணைகொண்டே அகற்ற முடியும் என்பதால் அத்தகைய பகுத்தறிவுச் சிந்தனைகளைப் பெரியாரின் வழிநின்று பரப்பும் பணியை அண்ணாவின் படைப்புகள் செய்கின்றன.

சோதிடம், கிரக பலன்கள், வழிபாட்டு முறைகள் போன்ற மூடநம்பிக்கைகள் தொடர்பான சிந்தனைகள் மக்கள் மனங்களில் இருந்து அகலும் நிலையைப் படைப்புகளில் படைத்துக்காட்டியுள்ளார்.

போலிச் சாமியார்களிடம் இருந்து மக்களைக் காப்பாற்றும் நோக்கில் அண்ணாவின் படைப்புகள் அமைந்துள்ளன. போலிச் சாமியார்களை நம்பி மோசம் போகாமல் மக்களைத் திருத்தும் பணியை அண்ணா படைப்புகள் வழி மேற்கொண்டுள்ளார்.

மக்களால் தோன்றும் புரட்சி, முதலாளித்துவம் ஒழிந்து மக்கள் அடிமைத் தளையிலிருந்து விடுபடுதல், மக்களைக் கவனிக்காத அரசியல்வாதிகள் குறித்த மக்களின் மனமாற்றம், நீதித்துறையில் நீதியை நிலைநாட்ட நீதிபதி வக்கீலாகும் நிலை போன்ற மாற்றங்கள் அண்ணாவின் படைப்புகளில் காட்டப்பட்டுள்ளன.

பெண்கள் விழிப்புணர்வுடன் வாழ வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தும் விதமாகப் பெண் பாத்திரங்களைக் கொண்டு பெண் விழிப்புணர்வை ஏற்படுத்துகின்றார். பெண்களுக்குச் சொத்துரிமை வேண்டும் என்ற சமுதாய மாற்றக் கருத்து வலியுறுத்தப்படுகின்றது.

அறிஞர் அண்ணா விதவைகளின் துயர் களைய விதவைகள் மறுவாழ்வு பெறுவதும், மறுமணம் புரிந்து கொண்டு வாழ்வதுமான மாற்றங்களைப் படைத்துக்காட்டியுள்ளார். விபச்சாரத்தில் ஈடுபட்டு வாழ்வை இழக்கும் பெண்களின் மறுவாழ்வை வலியுறுத்துகின்றார்.

பிராமணர்களின் ஆதிக்கத்திலிருந்து மக்களை விடுவிக்க அவர்களின் சடங்கு முறைகளிலிருந்து முதலில் விடுபட வேண்டும் என்ற நோக்கில் சடங்குகள் இன்றி நடைபெறும் சுயமரியாதைத் திருமணத்தை பெரியார் ஆதரித்தார். இதனை அண்ணா அவர்கள் தனது படைப்புகளின் மூலம் மக்களுக்குக் கொண்டு செல்லும் பணியைச் செய்துள்ளார். அந்த வகையில் சுயமரியாதைத் திருமணங்களைத் தனது படைப்புகளில் இடம்பெறச்செய்துள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. எஃப்.பாக்யமேரி, பண்ணன் புதினங்களில் சமுதாய மாற்றம், ப.14
2. நா.கதிரைவேற்பிள்ளை(ப.ஆ), தமிழ் மொழியகராதி, ப.1153
3. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.760
4. சு.சண்முகசுந்தரம், அறிஞர் அண்ணா, ப.54
5. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.888
6. மேலது, பக்.283-284
7. மேலது, ப.222
8. இரா.சேது, அண்ணாவின் படைப்புத்திறன், ப.74
9. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.640
10. இரா.சேது, அண்ணாவின் புனைகதைத் திறன், ப.52
11. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1, ப.223
12. திரு.வி.க, திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புகள் (முதல் தொகுதி), பக்.145-146
13. சுரதா, தேன்மழை, ப.87
14. அறிஞர் அண்ணா, வேலைக்காரி, ப.95
15. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.47
16. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.52
17. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.30
18. பெரியார், பொன்மொழிகள், ப.48
19. ஜி.இங்கர்சால், இரண்டு விழிகள், ப.36
20. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், (மூன்றாம் தொகுதி), ப.157
21. பதிவாளர் (ப.ஆ), சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பாட நூல், ப.47
22. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.620
23. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1, ப.149
24. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.444

25. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.75

26. மேலது, ப.299

27. மேலது, ப.366

28. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.84

29. மேலது, ப.127

30. மேலது, பக்.467-468

31. மேலது, ப.241

32. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.42-43

33. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.648

34. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.76

35. மேலது, ப.99

36. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.251

37. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.483

38. மேலது, ப.302

39. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1, ப.298

40. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.319

41. மேலது, ப.711

42. மேலது, ப.573

43. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.137

44. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, பக்.527-528

45. மேலது, ப.536

46. மேலது, ப.920

47. அறிஞர் அண்ணா, பார்வதி பி.ஏ., ப.104

48. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப.5

49. அறிஞர் அண்ணா, ரங்கோன் ராதா, ப.55

50. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1, ப.113

51. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.1011

52. இரா.சேது, அண்ணாவின் புனைகதைத் திறன், ப.26

53. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.100

54. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.1063

55. இரா.சேது, அண்ணாவின் புனைகதைத் திறன், ப.23

56. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.48

57. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, பக்.585-586

58. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.28

59. மேலது, பக்.95-96

60. மேலது, பக்.807-808

61. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1, ப.68

62. அறிஞர் அண்ணா, என் வாழ்வு, ப.190

63. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.429

64. தொல். 1091

65. அகநா. 86

66. க.நெடுஞ்செழியன் (ப.ஆ), பன்முக நோக்கில் பேரறிஞர் அண்ணா, ப.88

67. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.37

# இயல் - 5

## அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் சமுதாயக் கொள்கைகள்

இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த இணையற்ற மனிதர் பேரறிஞர் அண்ணா எனின் அது மிகையாகாது. தமிழால் அண்ணா புகழ் பெற்றார். அண்ணா தமிழுக்கும் தமிழர்க்கும் புகழ் தேடித் தந்தார். எந்தத் துறையாயிருப்பினும் அது பற்றிக் கருத்து சொல்லக்கூடிய அண்ணா ஒரு கல்விக்கடல். பற்பல அரும் இலக்கியப் படைப்புகளை மக்களுக்குத் தந்து இன்றும் புகழுடன் வாழும் மாபெரும் கலைஞர். மக்களின் உள்ளத்தைத் தொட்டெழுப்பும் சீரிய எழுத்தாற்றல் மிக்க எழுத்தாளர். எளிமையான தோற்றத்தால் தன் தொலைநோக்குப் பார்வையைக் கொண்டு பற்பல அரசியல் சாதனைகளைச் சாதித்த ஓர் அரசியல் மாமேதை. பல்லாயிரக்கணக்கான இளையோர்களின் வாழ்வில் அறிவுச்சுடரை ஏற்றிவைத்த ஞானதீபம். மூடப் பழக்க வழக்கங்களிலும், அறியாமை இருளிலும் மயங்கிக் கிடந்த தமிழ் மக்களைத் தன்னுடைய பகுத்தறிவுக் கொள்கைகளால் விழிப்புறச் செய்தவர். அவ்வகையில் தன் வாழ்வில் சமுதாய முன்னேற்றத்திற்கான கொள்கைகளை வகுத்துக் கொண்டு அதிலிருந்து பிறழாமல் தமிழர்கள் தன்மானத்துடன் வாழத் தன் இறுதிநாள் வரை செயல்பட்டவர்.

சமுதாயத் துறையிலே சீர்திருத்தம், பொருளாதாரத் துறையிலே மறுமலர்ச்சி, சமதர்மக் குறிக்கோள், அரசியலில் வடநாட்டு வல்லாண்மையினின்று விடுதலை போன்ற கொள்கைகள் மூலம் தமிழர் வாழ்வில் மாற்றம் ஏற்படுத்திய தலைமகன் தந்தை பெரியார் ஆவார். அவரின் கொள்கைகளாலும் செயல்பாடுகளாலும் ஈர்க்கப்பட்ட அறிஞர் அண்ணா அவர்கள் பெரியாரின் இயக்கத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். சமுதாயத்தில் விழிப்புணர்வையும் மாற்றத்தையும் ஏற்படுத்துவதற்கு உதவும் வகையிலே இலக்கியங்களைக் கருவிகளாக ஆக்கிக்கொண்டார்.

நாடகப் படைப்பாளராய், புதின ஆசிரியராய், சிறுகதையாளராய், கட்டுரையாளராய், கவிதை புனையும் பாவலராய், கடித இலக்கியக் காவலராய், சொற்பொழிவாளராய் படைப்புத் திறனையும், பகுத்தறிவுச் சிந்தனைகளையும் வெளிப்படுத்திய அண்ணாவின் ஆக்கங்கள் தமிழர்களின் நெஞ்சங்களில் இன்றும் அணையா விளக்காய் ஒளிவீசிக் கொண்டிருக்கின்றன.

அண்ணாவின் இலக்கியங்களில் தமிழர் நலம், தாய்மொழியின் மேன்மை, சமுதாயச் சீர்திருத்தம் ஆகியன கருப்பொருள்களாக விளங்கினாலும் மூலமாக விளங்குவது அவர் கண்டிருந்த திராவிட இயக்கமே ஆகும். திராவிட இயக்கத்தின் கருத்துகளைக் கலை வடிவங்களாக்கித் தமிழர்களைச் சிந்திக்கச் செய்தவர் அறிஞர் அண்ணா.

உயர்நிலையிலிருந்தவர்களே மேல்நிலையாளர்களாகவும், கதைத்தலைவர்களாகவும் விளங்கிய சமுதாயத்தில் சாமானிய மக்களின் சிக்கல்களை முன்னிறுத்தி இலக்கியப் படைப்புகள் ஆக்கி இயக்கம் வளர்த்தவர் அண்ணா. முப்பத்தைந்து ஆண்டுகளாக இயக்கப்பணிகளையும், இலக்கியப் பணிகளையும் மேற்கொண்டாலும் இரண்டும் ஒன்றுக்கொன்று முரண்படாமல் இணைந்து செல்வதையும் திராவிட இயக்கக் கருத்துகளை இலக்கியங்களில் வெளிப்படுத்தும் இயைபினையும் காணமுடிகின்றது. அவ்வகையில் அறிஞர் அண்ணாவின் புனைகதைகளின் வழி அவரது சமுதாயக் கொள்கைகளை ஆராய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

## அண்ணாவின் கொள்கைகள்

பேரறிஞர் அண்ணா, தந்தை பெரியாரின் பகுத்தறிவுக் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டு அவரது பாசறையில் பயிற்சி பெற்றவர். ஆகவே தந்தை பெரியாரைப் போலவே அண்ணாவும் தமிழரிடையே பகுத்தறிவுப் பிரச்சாரம் செய்வதையே தமது முதல் கொள்கையாகக் கொண்டிருந்தார்.

தந்தை பெரியாரின் சுயமரியாதை, பகுத்தறிவுக் கொள்கையைப் பரப்புவதே தனது தலையாய பணி என உறுதிபூண்டு, பெரியார் தலைமையில் சமுதாயப் பணியாற்றத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர். திராவிட முன்னேற்ற கழகம் என்ற இயக்கத்தைத் தொடங்கிய அண்ணா அவ்வியக்கத்தின் கொள்கைகளாக, "சமுதாயத்துறையிலே சீர்திருத்தம், பொருளாதாரத் துறையிலே சீர்திருத்தம், சமதர்மக் குறிக்கோள், அரசியல் வடநாட்டு ஏகாதிபத்தியத்தினின்று விடுதலை ஆகிய கொள்கைகள் தான் திராவிட முன்னேற்றக் கழகத்தின் கோட்பாடுகளாகும்."[1] எனக் குறிப்பிடுகிறார். அண்ணாவின் படைப்புகளிலும் இத்தகைய கொள்கைகளே மிளிர்வதைக் காணமுடிகின்றது. தன்மானம் பேணல், பகுத்தறிவுக் கொள்கை பரப்புதல், பிராமண எதிர்ப்பு, தமிழின உரிமை காத்திடல், இந்தித் திணிப்பு எதிர்ப்பு, சமுதாய மறுமலர்ச்சிச் சிந்தனை முதலிய கொள்கைகளின் மொத்த வடிவம் பேரறிஞர் அண்ணா ஆவார். "தலைவிதி - பூர்வ ஜென்ம பூஜா பலன் - பாவம் - புண்ணியம் என்பதெல்லாம் சாதி ஆதிக்கவாதிகள் பெரும்பான்மைச் சமூகத்தை அடக்கி ஒடுக்கி அவர்களை முன்னேறவிடாமல் தடுக்கச் செய்துவைத்த சூது, சூழ்ச்சி, சதி, மோசடி, பித்தலாட்டம்."[2] என்பதைத் தமிழருக்கு உணர்த்திடப் பெருமுயற்சி எடுத்துக் கொண்டவர் அண்ணா. குறைந்த காலமே அவர் முதலைச்சராய் இருந்தார் என்றாலும், தமிழ்நாடு பெயர் மாற்றம் - சுயமரியாதைத் திருமணங்களைச் சட்டப் பூர்வமாக்கியது; இந்திக்கு விடை கொடுத்தனுப்பி இருமொழிக் கொள்கையை அமலாக்கியது. உலகத் தமிழ் மாநாட்டைச் சீரும் சிறப்புமாக நடத்திக் காட்டியது போன்ற சாதனைகளை நிகழ்த்தியவர். தான் எடுத்துக்கொண்ட எந்தச் செயலையும் வெற்றிகரமாக முடித்துக் காட்டும் திறனையும் அதனையே தனது கொள்கையாகவும் கொண்டு செயல்பட்டவர் ஆவார். அவர், "எவ்வளவு அலட்சியப்படுத்தப்பட்டாலும், ஏளனத்துக்கு ஆளானாலும், எடுத்த காரியத்தை முடித்தே தீருவது என்ற திடசித்தமும், விடாமுயற்சியும் இருந்தால், வெற்றி கிடைத்தே தீரும்."[3] என்கிறார்.

## சமுதாயக் கொள்கை

வாழ்வின் ஒவ்வொரு செயல்பாட்டிலும் இன்னொருவரையோ, இயற்கையையோ சார்ந்து வாழ வேண்டியிருக்கிறது. மனிதனின் கூடி வாழும் இயல்பே சமுதாயத்தின் தோற்றத்திற்கு வித்திட்டது. மனிதன் நாகரிகம், பண்பாடு முதலானவற்றில் மாற்றங்களைக் கண்டு பல்வேறு துறைகளில் முன்னேறினான். மனிதர் பலர் கூடி வாழும் சமுதாய அமைப்பில் செய்யும் தொழில் அடிப்படையில் மக்களிடையே பாகுபாடு ஏற்பட்டது. ஆண்டான் - அடிமை, மேலோர் - கீழோர் என்று அமைந்த இப்பாகுபாடு சாதி ஏற்றத்தாழ்வுகளுக்கு வித்திட்டன. கல்வியும் செல்வமும் ஒரு குறிப்பிட்ட பிரிவினருக்கே உரியனவாயின. மூடநம்பிக்கைகள் துறைதோறும் வளர்ந்து காணப்பெற்றன. மக்களின் சிந்தனைகளை அவை முடமாக்கின.

இத்தகு இழிநிலைகள் பத்தொன்பது, இருபதாம் நூற்றாண்டுகளில் மிகுதியாகக் காணப்பட்டன. இந்நிலையில் சான்றோர் பலர் தோன்றி இவ்வேறுபாட்டைக் களைந்து சமுதாயத்தைச் சீர்திருத்த முனைந்தனர். அறிஞர் அண்ணாவும் இக்கட்டத்தில் சமுதாயச்

சீர்திருத்தக் கருத்துகளை மக்களுக்குத் தம் படைப்புகள் மற்றும் சொற்பொழிவுகள் மூலம் வழங்கினார். அண்ணாவின் எண்ணம், எழுத்து, சொல், செயல் யாவும் சமுதாய நோக்குடையனவாக அமைந்தன.

"தனிமனித உரிமைகளும் சமுதாய நலன்களும் முரண்படாத வகையில் தனிமனிதனுக்கும் சமுதாயத்துக்குமிடையில் சுமூகமான உறவுகள் இருத்தல் வேண்டும். வளையங்களாலான சங்கிலி போன்று தனி மனிதர்கள் கூட்டுறவால் அமைவதே சமுதாயம். வளையங்கள் பலவீனப்பட்டால் சங்கிலி அறுந்துவிடும். அவ்வாறே சமூகத்தில் அதன் அங்கமான தனிமனிதன் முக்கியத்துவம் பெறுகிறான். அவனுடைய நலனும் மேம்பாடும் ஒத்துழைப்பும் சமுதாயத்திற்குத் தேவையாகின்றது."[4] என்று சமுதாய அமைப்புப் பற்றிக் குறிப்பிட்ட அண்ணாவின் படைப்புகளில் பெண்விடுதலை, சாதி, சமயம், மூடநம்பிக்கை பற்றிய கருத்துகளை அதிகமாகக் காணமுடிகின்றது. சாதி, மத, இன, நிற, மொழி வேறுபாடுகள் இல்லாத ஒரு மனித சமுதாயம் உருவாக வேண்டும் என்பதே அண்ணாவின் சமுதாயக் கொள்கையாகும். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற கணியன் பூங்குன்றனாரின் கருத்தைத் தமது சமுதாயக் கொள்கைக்கு ஏற்றதாக அண்ணா கொண்டுள்ளார். மனிதர்களிடேயே உயர்வு தாழ்வு பாராது அனைவரும் சேர்ந்து ஒருவரை ஒருவர் சார்ந்து வாழும் வாழ்வே சிறந்த வாழ்வு என்பது அண்ணாவின் கருத்தாகும்.

சமுதாயத்திற்கு ஆற்றும் பணியே மிகச்சிறந்த பணியாகவும், தனது கடமையாகவும் எண்ணி ஆற்றிவந்தவர் அண்ணா. பெரியாரைத் தொடர்ந்து அவரும் சமுதாயச் சீர்திருத்தப் பணியையே செய்து வந்தார். "சமூகத்திலே கப்பிக் கொண்டுள்ள குருட்டு அறிவு! - இந்த மடமையும் குருட்டுத்தனமும் ஒழிய வேண்டும். . . ஒழிக்கப்பட வேண்டும். . . அதற்கு நான் இருக்க வேண்டிய இடம் லண்டன் அல்ல; இங்கு; என் நாட்டில்; தாய் நாட்டில்! என் நாட்டு மக்களிடம் ஜாதி குலம் சமயம் செல்வம் என்பனவற்றின் பேரால் இரும்புப் பிடியாக இருந்துவரும் மடமையைத் தொலைத்திட நான் பணியாற்றத் தீர்மானித்துவிட்டேன்...."[5] என 'வண்டிக்காரன் மகன்' குறும்புதினத்தில் வரும் சொக்கலிங்கம் பேசுவதாக அமைந்திருக்கும் இந்தக் கருத்து சமுதாயம் தொடர்பான அண்ணாவின் கொள்கையைப் பறைசாற்றுவதாய் அமைந்துள்ளது.

"ஜாதி, குலம், மதம் என்பனவற்றின் காரணமாகச் சமூகத்திலே விளைந்துள்ள கேடுகளைக் களைந்தெறிய வேண்டும்"[6] என்ற கொள்கையை ஏற்றுச் செயல்பட்டவர் அண்ணா. இதனாலேயே பெரும்பாலான படைப்புகளில் தனது கொள்கையை ஏந்திக் கொண்டுள்ள பாத்திரங்களைப் படைத்துக்காட்டியுள்ளார். அந்தப் பாத்திரங்களின் உரையாடல்களும் கருத்துகளும் பெரியார், அண்ணா மற்றும் அவர் சார்ந்திருந்த இயக்கத்தினுடைய கொள்கைகளை விளக்குவதாய் அமைந்துள்ளன.

அண்ணா இந்தச் சமுதாயத்தின் மீதுள்ள தன் பார்வையை, "இந்தச் சமுதாயத்தின் சித்திரங்கள், எனக்குப் புகட்டும் பாடம் இதுதான்; சமூகம், திடமுடன் யார் எதைச் செய்யினும் பொறுத்துக் கொள்ளும், தாங்கி, பதுங்கினால் அவர்கள் மீது பாய்ந்து அவர்களைப் பதைக்க வைக்கும்'......... பழக்கவழக்கமெனும் கொடுமையை, தீவிரமாக எதிர்த்தால்தான் முடியும்"[7] எனப் பதிவு செய்கிறார். இதன்மூலம் சமுதாயத்தில் எதைச் செய்தாலும் தயக்கமின்றிச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தையும் பழமையில் சிக்குண்டு தவிக்கும் சமுதாயத்தை மீட்கவேண்டும் என்ற நோக்கத்தையும் வெளிப்படுத்துகின்றார்.

ஏழைகளுக்குத்தான் பக்தியும் ஒழுக்கமும் தேவை எனக் கூறும் கருத்தை மறுக்கிறார் அண்ணா. பக்தியையும் ஒழுக்கத்தையும் நிரம்பப் பெற்றவர்கள் ஏழைகள்தான். உண்மையில்

அவை தேவைப்படுவது பணக்காரர்களுக்குத்தான் எனக் கூறுகிறார். "பக்தியும் ஒழுக்கமும் ததும்பும் மனம் கொண்டவர்கள் தாம் ஏழை எளியவர்கள். பாடுபடும்போதெல்லாம் பரமனை எண்ணிக் கொண்டுதான் இருக்கிறார்கள். பார வண்டியை மாடுபோல இழுத்துச் செல்லும் போதும் அவர்கள் பகவானை மறப்பதில்லை. அடிபட்டால் கூட 'இராமா' என்று துதிக்கிறார்கள். சும்மா இருக்கும் போதுகூட, அவர்கள் கடவுளை மறப்பதில்லை. சிவனே என்று சும்மா இருக்கிறேன் என்றல்லவா பேசுகிறார்கள். பக்தியும் ஒழுக்கமும் தேவைப்படுவது பணக்கார உலகுக்குத்தான்."[8] என்கிறார். இதன் மூலம் பக்தியையும் ஒழுக்கத்தையும் பணக்காரர்களுக்குத் தான் கற்றுக்கொடுக்க வேண்டும் என்ற தனது எண்ணத்தை எடுத்துரைக்கின்றார்.

அதேபோல ஏழைகள் செய்யும் குற்றங்களுக்குக் காரணம் பணத்தாசையோ அல்லது ஆடம்பர வாழ்வு வாழ வேண்டும் என்ற நோக்கமோ அல்ல, வறுமை எனக் கூறுகிறார். வறுமையின் காரணமாகவே ஏழைகள் திருட்டு முதலான செயல்களில் ஈடுபடுகிறார்கள் என்பது அவரது எண்ணம். இதனை, "ஏழைகள் செய்யும் குற்றங்களுக்குக் காரணம் அவர்களின் ஏழ்மை. ஆகவே தண்டிக்கப்பட வேண்டியது ஆட்களல்ல. பொருளாதார பேத அமைப்பு முறை."[9] என்ற அவரின் கருத்துப் புலப்படுகின்றது.

சமுதாயத்தில் கோயில் குடமுழுக்கு, திருவிழாக்கள், சடங்குகள், சாமியாடல் போன்ற நிகழ்வுகளுக்கான காரணம் ஒரு சிலரின் பிழைப்பாக அவை விளங்குவதால் தான் என அண்ணா குறிப்பிடுகிறார். அதுவும் வெறும் பிழைப்பு எனக் கூறவில்லை. வெட்கங்கட்ட சுரண்டும் பிழைப்பு எனக் கடுமையாக அவர்களைச் சாடுகிறார். அவர்களின் பிழைப்புக்காக மக்களை ஏமாற்றி வாழும் ஏமாற்றுக்காரர்களை மக்களுக்கு அடையாளம் காண்பிக்கும் இலட்சியத்துடன் அண்ணா தன் படைப்புகளைப் படைத்துள்ளார்.

## பெண்ணியக்கொள்கை

'ஆணும் பெண்ணும் சம உரிமையோடு வாழ்கின்ற சமுதாயத்தில் தான் முன்னேற்றம் ஏற்பட முடியும்' என்பது அண்ணாவின் எண்ணம். ஆளப்பிறந்தவர்கள் ஆண்கள் என்று கூறுகின்ற சமயங்கள் ஒழிக்கப்படவேண்டியவை என்று அவர் கூறியுள்ளார். 'பெண்கள் வெறும் கூட்டுக் கிளிகளாக இருக்கும் மட்டும் நாட்டு வாழ்வு நிமிராது, நல்ல நிலை ஏற்படாது' என்றே அவர் எண்ணினார்.

"சமூகத்திலும் வேலைத்தளத்திலும் குடும்பத்திலும் நிலவும் பெண் ஒடுக்கு முறை மற்றும் சுரண்டல் பற்றிய பெண்களின் உணர்வு நிலைகளும், இந்நிலையை மாற்றுவதற்குப் பெண்களும் ஆண்களும் எடுக்கும் உணர்வு பூர்வமான நடவடிக்கைகளும்"[10] என்பதைப் பெண்ணியத்தின் பரந்துபட்ட வரையறையாகக் கொண்டார் தேவதத்தா. "காலம் காலமாக அடிமைப்பட்டு வதைப்பட்டு வாடும் பெண்களை அடிமைத்தளையிலிருந்து மீட்டு அவர்களுக்குக் கல்வியின் மூலம் விழிப்புணர்வு ஊட்டி, சமூகத்தில் ஆண்களுக்கு இணையான மதிப்பைப் பெற்றுத் தருவதே பெண்ணியத்தின் நோக்கமும் செயற்பாடும் ஆகும்"[11] என்பது இரா.பிரேமாவின் கருத்து. பெண்களின் பிரச்சினைகளுக்குச் சமுதாயமோ அல்லது பாதிப்புக்குள்ளான பெண்களோ தீர்வு காணுவதைக் கருத்தில் கொண்டு அத்தகைய நோக்கில் அண்ணாவின் புனைகதைகளை அணுகும்போது அவரது பெண்ணியம் சார்ந்த கொள்கைகள் புலனாகும்.

அறிஞர் அண்ணா தம் புனைகதைகளில் சித்திரித்துக் காட்டும் பெண் பாத்திரங்கள் குறிப்பிடத்தக்கப் பண்புடையன. இக்குறிப்பட்ட சில பாத்திரங்களின் பண்புகள் அண்ணா

பெண்கள் மீது கொண்டுள்ள அக்கறையை வெளிப்படுத்துகின்றனவாக மட்டுமல்லாமல் பெண்கள் எவ்வாறு திகழ்தல் வேண்டும் என்ற அவரது இலட்சியத்தையும் வெளிப்படுத்துகின்றன. பெண்களின் உயரிய பண்புகளாகவும் குணநலன்களாகவும் பின்வருவனவற்றை அவரது படைப்புகளில் எடுத்துரைப்பர். அவையாவன,

1. பெண்கள் பகுத்தறிவு உடையவர்களாக இருக்க வேண்டும்.
2. பெண்கள் வேலைவாய்ப்பினை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.
3. பெண்கள் பண ஆசை இல்லாமல் வாழ்தல் வேண்டும்.
4. பெண்கள் கலப்பு மணத்தை ஆதரிக்க வேண்டும்.
5. பெண்கள் சமுதாய அக்கறையும் சீர்திருத்த நோக்கும் உடையவர்களாகத் திகழ்தல் வேண்டும்.
6. பெண்கள் துணிச்சலும் தன்னம்பிக்கையும் கொண்டுத் தடைகளை எதிர்த்து வெல்ல வேண்டும்.
7. பெண்கள் மனிதநேயம் உள்ளவர்களாக விளங்க வேண்டும்.

என்பனவாகும். இப்பண்புகளும் குணநலன்களும் அண்ணாவின் பெண்ணிய நோக்கினைப் புலப்படுத்தும்.

## பெண்விடுதலை

சமுதாயத்தில் ஆண்களுக்கு நிகரான எண்ணிக்கையில் வாழும் பெண்கள், குடும்ப அமைப்பிற்கு அடிப்படையாக விளங்குகின்றனர். ஆனால் அவர்களுக்குச் சமுதாயத்தில் சம உரிமை அளிக்கப்படவில்லை. பெண்கள் ஆண்களைச் சார்ந்து வாழ வேண்டும். அவர்கள் ஆண்களின் சொத்து; ஆண்களின் அடிமை; ஆண்களின் விருப்பு வெறுப்புகளுக்கேற்ற வாழ்க்கை மேற்கொள்ள வேண்டும்; தமக்கென்று தனியாக விருப்பமோ, வெறுப்போ, உரிமையோ பெற்றவர்களாக விளங்கக்கூடாது என்ற நிலை தொடர்ந்து வருகின்றது. பெண்களின் இந்நிலை குறித்துப் பெரியார், "ஆணின் நலத்துக்குப் பயன்படுவதற்கும், ஆணின் திருப்திக்கும், ஆணின் பெருமைக்கும் பெண் ஓர் உபகருவி என்பதல்லாமல் வேறு என்ன? ஓர் ஆணுக்கு ஒரு சமையல்காரி; ஓர் ஆணின் வீட்டிற்கு ஒரு வீட்டுக்காரி; ஓர் ஆணின் குடும்பப் பெருக்குக்கு ஒரு பிள்ளை விளைவிக்கும் பண்ணை; ஓர் ஆணின் கண் அழகிற்கும் மனப்புளகாங்கிதத்திற்கும் ஓர் அழகிய அலங்கரிக்கப்பட்ட பொம்மை என்பதல்லாமல் பெண்கள் பெரிதும் எதற்குப் பயன்படுகிறார்கள்."[12] எனக் கருத்தளிக்கிறார்.

சமுதாய அமைப்புகள் காரணமாகப் பெண்கள் பலவகைத் துன்பங்களை அடைகின்றனர். "இளமையில் தந்தையினாலும் பருவ காலத்தில் கணவனாலும் முதுமையில் மைந்தராலும் காக்கப்பட வேண்டியவர். ஆதலால் மாதர் எஞ்ஞான்றும் தன்னிச்சையாக இருக்கக் கூடாதவராவர்."[13] என மனுதர்மம் தெரிவிக்கிறது. தொடக்கத்தில் பெண்கள் குழந்தை மணம், உடன்கட்டை ஏறுதல், கைம்மைத்தன்மை ஆகிய கொடுமைகளுக்கு ஆளானார்கள். "திருமணத்திற்கு உரிய வயது முதலியவற்றின் மீது நம் நாட்டார் சிறிதும் கவலை செலுத்தியதில்லை. பால் மணமாறாச் சிறுகுழந்தைகள் கரத்தில் பழந்தந்து ஏமாற்றி மணவினை முடிக்க முந்திய தாய்தந்தையரும் இருந்தனர். இவர் தாய் தந்தையர் ஆவரோ."[14] என்று திரு.வி.க குழந்தை மணத்தை எதிர்க்கின்றார். பெரியார் மணக்கொடுமையை

எதிர்த்துப் போராடியவர்; தம் தங்கை மகள் 9 வயதில் திருமணமாகி 30 நாளில் கணவனை இழக்க, பிறகு அப்பெண் பருவமடைந்ததும் சமுதாய எதிர்ப்பைத் துச்சமாகக் கருதி அப்பெண்ணுக்கு மீண்டும் மணம் செய்வித்துப் புதுமை படைத்தார்.

பெரியாரின் கொள்கைகளைத் தன்நெஞ்சில் ஏற்றுச் செயல்பட்ட அண்ணாவும் பெண்களுக்கு எதிரான சமுதாயக் கட்டுப்பாடுகளை உடைத்தெறிய எண்ணினார். அதன் வெளிப்பாடுகளே இலக்கியங்களாக முகிழ்த்தன. அண்ணாவின் படைப்புகள் பெரும்பாலும் பெண்ணியச் சிக்கல்களை வெளிப்படுத்தும் விதமாகவும், அச்சிக்கல்களிலிருந்து பெண்கள் விடுபட்டுப் புதுவாழ்வு பெற்று வாழ்வதாகவுமே அண்ணா காட்டியுள்ளார். 'வேலைக்காரி' நாடகத்தில், "தாய்மார்களே! சகோதரிகளே! பெண்களின் விடுதலைக்காக நான் எப்பொழுதும் பாடுபடுவேன். நாம் எல்லோரும் சமம். எல்லோரும் ஒன்று என்ற முறைப்படி, தாழ்ந்த நிலையில் உள்ளவர்களைத் தகுந்த நிலையில் உயர்த்துவதற்கு நான் எப்பொழுதும் தொண்டு செய்வேன்"[15] எனச் சரசா என்ற பெண்ணின் வழியாகப் பெண்விடுதலை குறித்த அண்ணாவின் கொள்கையை அறியமுடிகின்றது.

பெண் விடுதலையை வலியுறுத்தும் அண்ணா அதனை அடைய, தங்களது வாழ்வைத் தாங்களே அமைத்துக் கொள்ளும் ஆற்றலைப் பெண்கள் பெற வேண்டும் என்ற கொள்கையை 'ரங்கோன் ராதா' புதினத்தில் வரும் ராதாவின் மூலம் கூறுகிறார். "நிலவுக்கு ஒளிதரும் சூரியன் இயற்கை நியதிப்படி, அளவும் காலமுமறிந்து ஒளி தருகிறான். பெண்ணுக்கு வாழ்வு அமைக்கும் ஆடவனோ எந்த நீதிக்கும் கட்டுப்பட்டவனல்ல அவன் இஷ்டம்! இது மாறவேண்டுமானால், பெண்களுக்குத் தங்கள் வாழ்வைத் தாங்களே அமைத்துக்கொள்ளக்கூடிய திறமை, வசதி, உரிமை ஏற்படவேண்டும்"[16] எனப் பெண்கள் வாழ்வின் முன்னேற்றம் குறித்த தனது கொள்கையை விவரிக்கிறார். இத்தகைய நிலையை அடையப் பெண்களுக்கான விழிப்புணர்வுப் பிரச்சாரப் படைப்புகளையும், சொற்பொழிவுகளையும் தந்துள்ளார். அதேபோல் பெண்விடுதலையில் முக்கியமானதான, கொடுமைப்படுத்தும் ஆடவரிடம் இருந்து விடுதலை பெறும் திருமண விடுதலையையும் அண்ணா 'பாவையின் பயணம்' நாடகத்தில் வலியுறுத்துகின்றார்.

## கைம்மை மறுமணம்

கைம்மை மற்ற எல்லாக் கொடுமைகளிலும் தலையாய கொடுமை. உடன்கட்டை ஏறுவதை விட இது கொடுமையானது. "உயிருடன் சுடப்பட்ட பெண்ணுக்கு ஒரு மணி நேரந்தான் கஷ்டம் இருந்திருக்கக் கூடும். ஆனால் அந்தப்படி நடவாமல் காப்பாற்றப்பட்ட விதவைப் பெண்ணுக்கு அவள் ஆயுட்காலம் முழுவதும் அங்குலம் அங்குலமாகச் சித்ரவதை செய்வது போன்ற கஷ்டத்தை விநாடிதோறும் அனுபவித்து வர நேரிடுகின்றதா? இல்லையா? என்றுதான் கேட்கிறேன்."[17] என்று கைம்மைக்கெதிராக வினா எழுப்புகிறார் பெரியார். பெண்களின் சமத்துவத்துக்குப் போராடிய பாரதிதாசன்,

"மாண்டவன் மாண்ட பின்னர் - அவனின்

மனைவியர் உள்ளத்தை

ஆண்டையர் காண்பதில்லை - ஐயகோ

அடிமைப் பெண் கதியே"[18]

எனக் கைம்மையின் நிலைக்குத் துயருறுகிறார். இப்படிப்பட்ட கைம்மை நிலையை இச்சமுதாயத்தை விட்டு அகற்றத் தன் எழுத்தையும் பேச்சையும் பயன்படுத்திப் போராடியவர்

அண்ணா. தன்னுடைய படைப்புகளில் கைம்மை மகளிரைப் படைத்து அவர்கள் படும் துயரங்களைப் படம்பிடித்துக்காட்டுகிறார். கைம்மை மகளிரின் துன்பத்தைப் போக்குவதற்கு ஒரே வழி அவர்களுக்கு மறுமணம் செய்வித்தல் மட்டுமே என்பதைத் தனது படைப்புகள் வழி வலியுறுத்துகிறார். "கட்டுக்களை அறுத்தெறி, சிறையை விட்டு வெளியே வா, நாட்டாரின் மூட ஏற்பாட்டை நீ மதியாதே என்றெல்லாம் ஒரு கிழவர் கூறினால், ஒரு காளைக்கு உணர்ச்சி பொங்காமலா இருக்கும்? கடிதத்துடன் சேர்த்துக் குடிஅரசுக் கட்டுரைகளையும் அனுப்பலானான். காதலுடன் காலக் கண்ணாடியையும் பெறவே ஏமலதா காதல் உள்ளத்துடன் அச்சத்தைத் துடைத்த அணங்குமானாள். இளைய உலகில் நடக்கும் அவை, கிழ வைதீக கனபாடிக்குத் தெரியாது. விதவைத்தனம் அவளிடம் தங்கி விட்டது என்று நம்பினார். அவள் அந்தச் சிறையை விட்டுத் தப்பித்துக் கொண்டு செல்லச் சிறகுகளை அடித்துக் கொண்டிருக்கும் கிளி என்பது அவருக்குத் தெரியாது."[19] என்ற அண்ணாவின் கருத்து, கைம்மை நிலையிலிருந்து பெண்கள் விடுதலை பெற வேண்டும் என்ற கொள்கை முழக்கத்தை வெளிப்படுகின்றது.

கணவனை இழந்து விதவையான பெண்களைத் தாலியை இழந்தவள் என்ற சொல்லால் குறிப்பதை அண்ணா எதிர்க்கிறார். ஏனெனில் தாலி கட்டுவதற்கு ஆள் இருக்கும் வரையிலும் தாலி இழந்தவள் எனக் கூறக் கூடாது என வலியுறுத்துவதை '1938-1940 ஒரு வசீகர வரலாறு' என்னும் சிறுகதையில் காணமுடிகின்றது. அச்சிறுகதையில், "தாலி இழந்தவளுக்குக் கல்யாணமா என்று தாத்தா காலத்துக் கதை பேசாதே. தாலி! கட்டுவதற்கு ஆள் இருக்கும் வரை தாலியை இழப்பது என்ற பதத்திலே பொருள் ஏது?"[20] என்பதனை தனது கொள்கையாக கொண்டிருந்ததால் தான் அண்ணா விதவைகளுக்கான மறுமணத்தின் அவசியத்தைப் பற்றிப் பல படைப்புகளில் படைத்துக்காட்டியுள்ளார்.

விதவை மறுமணத்தை வலியுறுத்தி எழுதப்பட்ட சிறுகதைகள் 'திறப்பு விழா', 'அவள் முடிவு' போன்றவையாகும். கணவனை இழந்த பெண் மீண்டும் மணம்புரியத் தடை இருக்கின்றது. ஆனால் மனைவியை இழந்த ஆண் மீண்டும் மணம் புரிந்து கொள்ளும் உரிமை உண்டு. இத்தகைய சமுதாய வேறுபாட்டு அமைப்பு முறையை எதிர்க்கும் பாங்கை அண்ணாவின் படைப்புகளில் காணமுடிகின்றது.

## வரதட்சணை

திருமணத்தில் வரதட்சணை என்பது சமுதாயத்தில் பொருளாதாரச் சிக்கலாகக் கிளர்ந்தெழுந்தது. மனித சமுதாயம் நாகரிகத்தின் முதல் படியில் காலெடுத்து வைத்த நாள் முதல் தோன்றிய பொருளாதாரச் சிக்கல், திருமணச் சிக்கலிலும் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டி வந்துள்ளது. வரதட்சணை முறையைக் 'குடும்ப வடிவத்தின் மீது எழுந்த முதல் சிக்கல் இது' என்கின்றார் எங்கெல்ஸ். 'பெண்வீட்டார் மணமகனுக்கு வரதட்சணை வழங்குதல் தமிழரின் மரபு அன்று' என்பதனைக் கவனத்தில் கொள்ள வேண்டும். வரதட்சணை என்ற சொல்லே தமிழ்ச்சொல்லன்று. வரன்+தட்சணை = வரதட்சணை. வரன், தட்சணை என்னும் இருசொற்களுமே வடமொழிச் சொற்கள். வரனாகிய மாப்பிள்ளைக்கு வழங்கப்படும் தட்சணை என்ற பொருளில் இச்சொல் வழங்கப்படுகின்றது. வரதட்சணை இல்லாத சமுதாயத்தை உருவாக்குவது என்பது அண்ணாவின் இலட்சியங்களுள் ஒன்றாக விளங்குவதை அவரது படைப்புகள் வழி அறியமுடிகின்றது. வரதட்சணையின் கொடுமைகளைத் தன்னுடைய இலக்கியங்களில் எடுத்துரைத்து அதிலிருந்து மக்கள் விடுபட வலியுறுத்துகின்றார். வரதட்சணைக் கொடுமை காரணமாக நல்லவன் திருடனாக மாறுகின்ற அவலநிலையை 'சோணாசலம்' கதையில் காட்டி, இக்கொடுமை

இச்சமுதாயத்தை விட்டு நீங்கவேண்டும் என வலியுறுத்துகின்றார். அதேபோல 'குமாஸ்தாவின் பெண்' என்னும் குறும் புதினத்தில் வரதட்சணை காரணமாக வாழ்வை இழக்கும் பெண்ணைப் பற்றி விவரிக்கிறார் அண்ணா. "இப்படிப்பட்ட நாடகங்களைப் பார்த்த பிறகாவது நம்ம குலத்திலேயிருந்து இந்த வரதட்சணைப் பேயை ஓட்டிவிட வேண்டாமா?"[21] என்பது போன்ற சிந்தனைகளை மக்களிடத்தில் கொண்டு செல்லும் ஊடகமாக அண்ணாவின் படைப்புகள் அமைந்துள்ளன. வரதட்சணையை இந்தச் சமுதாயத்தில் இருந்து அகற்ற வேண்டும் என்ற அண்ணாவின் கொள்கையின் வெளிப்பாடாக இத்தகைய கதைகள் விளங்குகின்றன.

## விபச்சார ஒழிப்பு

நாடகக்காரி, விலைமாதர், கணிகையர், நடனமாதர் ஆகியோரின் அவலநிலை அண்ணாவை வெகுவாகப் பாதித்துள்ளது. அவர்களைப் பற்றி நாடகங்களிலும் புதினங்களிலும் அடிக்கடி எழுதுவதிலிருந்து இதனைத் தெரிந்து கொள்ளமுடிகின்றது. இதனால் விபச்சார வாழ்க்கையை இச்சமுதாயத்தை விட்டு அகற்ற வேண்டும் என்ற தீரா வேட்கையுடன் செயல்பட்டவர் அண்ணா. தன்னுடைய பெரும்பாலான படைப்புகளில் விபச்சாரத்தின் தோற்றுவாயை எடுத்துச் சொல்லியிருக்கிறார். காதல் ஏமாற்றம், ஆண்களின் சூழ்ச்சி, வறுமை, தாசியர் குலம் ஆகியவற்றால் விபச்சாரம் தோன்றுகின்றது என்பதை அண்ணாவின் படைப்புகளில் இருந்து அறியமுடிகின்றது. இதனைச் சீர் செய்ய வேண்டும் என்ற கொள்கையுடன் இலக்கியங்களைப் படைத்துள்ளார் அவர். தேவதாசியரின் உலகையும் அவர்களுக்கு ஏற்படும் சிக்கல்களையும் 'என்வாழ்வு' புதினத்தில் ஆராய்ந்துள்ளார். இப்புதினத்தில் விமலாவைக் காதலித்தவன் மட்டும் அவளை ஏமாற்றாமல் திருமணம் செய்து கொண்டிருந்தால் விமலா அவளுடைய குலத்தொழிலில் இருந்து விடுபட்டுப் புதிய வாழ்வைத் தொடங்கியிருப்பாள். ஆனால் அவ்வாறு நிகழவில்லை. காலம் அவளை அவளது குலத்தொழிலுக்கே இட்டுச் சென்றது. இதனை, "....இந்த என் நிலைக்கு - ஏன் என்னைப் போன்று நாட்டிலிருக்கும் எத்தனையோ விமலாக்களுக்கும் சேர்த்துச் சொல்லுகிறேன். நாங்கள் மட்டுமா இதற்குக் காரணம். இந்த பாவத்திலே சரி பங்கு ஆணுக்கும் இருக்கிறது. இந்தக் கூட்டு வியாபாரத்தில் ஒருவருக்குத்தான் தண்டனை. சமூகத்தின் விசித்திரப் போக்கைப் பாருங்கள். உடற் கூறு அமைப்பால் பெண் பழிகாரி ஆகிறாள். ஆண் இதிலிருந்து தப்பித்துக் கொள்ளுகிறான்; . . . . . . . ஆணுக்கும் பெண்ணுக்கும், கற்பு பொது என்று ஆகாத வரை, என்னைப் போன்ற விமலாக்கள், தோன்றிக் கொண்டே தான் இருப்பார்கள்."[22] என்ற விமலாவின் கூற்று உணர்த்துகின்றது. விபச்சாரம் எந்த வழியில் தோன்றினாலும் அதை அனுமதிக்க முடியாது என்பதை அண்ணா தன்னுடைய கொள்கையாகக் கொண்டு செயல்பட்டுள்ளதை இப்புதினம் விளக்குகிறது. 'தங்கத்தின் காதலன்', 'ரங்கோன் ராதா', 'ஓர் இரவு' போன்ற கதைகளும் விபச்சார ஒழிப்பை வலியுறுத்துவனவாகப் படைக்கப்பட்டுள்ளன.

## பகுத்தறிவுக் கொள்கை

தந்தை பெரியாரின் அணுக்கத் தொண்டராக விளங்கிய அறிஞர் அண்ணா தமது ஒப்பற்ற இலக்கியங்கள் வாயிலாகப் பகுத்தறிவுக் கொள்கைகளைப் பரப்பினார். தந்தை பெரியாரின் குடிஅரசு நாளிதழிலும் பிற்காலத்தில் அவரே தொடங்கிய திராவிட நாடு கிழமையிதழிலும் அவர் எழுதிய தலையங்கங்களும் கட்டுரைகளும் அவரது பார்ப்பனிய ஆதிக்க எதிர்ப்பையும் பகுத்தறிவுக் கொள்கைகளையும் பறைசாற்றுகின்றன. மக்கள் யாவரும் பகுத்தறிவோடு வாழ்ந்தால்தான், சமுதாய முன்னேற்றத்தை நாட்டில் ஏற்படுத்த

இயலும் என அண்ணா கருதினார். புராணக் கதைகள் தமிழ் இலக்கியங்களில் இடம்பெற்றுத் தமிழினப் பண்பை, நாகரிகத்தை, பழக்கவழக்கங்களை மாற்றியுள்ள போக்கினை இவர் தமது பேச்சாலும் எழுத்தாலும் பல இடங்களில் வெளிப்படுத்தியுள்ளார். 'கம்பரசம்', 'ஆரியமாயை' போன்ற நூல்கள் இதற்குத் தக்கச் சான்றாகும்.

சமுதாயத் தொண்டர்கள் பகுத்தறிவுவாதிகளாக இருந்தால்தான் சமுதாயம் மறுமலர்ச்சி அடைய ஏதுவாக இருக்கும் என்பதில் முழுநம்பிக்கை கொண்டிருந்த அண்ணா, பெரியார் கூறிய கடவுள் மறுப்புக் கொள்கை மட்டுமே பகுத்தறிவு எனக் கொள்ளாது, எல்லாத் துறைகளிலும் பகுத்தறிவைச் செலுத்த வேண்டும் என்பதை வற்புறுத்தினார். அதனால் தான் கடவுள் இல்லை என்ற பெரியாரின் கருத்திலிருந்து சிறிது வேறுபட்டு, 'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்' என்ற திருமூலரின் கொள்கையை அண்ணா ஏற்றுக்கொள்ளத் தயங்கவில்லை.

'சந்த்ரோதயம்' நாடகத்தில் துரைராசு என்ற பாத்திரத்தின் வாயிலாகச் சமுதாயத்தில் தான் தொடர்ந்து வலியுறுத்தி வந்த பல்வேறு கொள்கைகளை வெளிப்படுத்தியுள்ளார் அறிஞர் அண்ணா. இந்நாடகத்தில் பண்டாரங்களை எல்லாம் உங்களுக்குப் பிடிக்காது என்று ஒருவன் கேட்பதற்கு, "பண்டாரங்களைப் பிடிக்கும். ஆனால் கடவுளின் பெயராலும், மதத்தின் பெயராலும், அளவுக்கு மீறிய சொத்துக்களை மடாலயம் என்ற பெயரால் அனுபவித்து வரும் அயோக்கியர்களைக் கண்டால் பிடிக்காது"[23] எனத் துரைராசு என்ற பாத்திரத்தின் வழியாகப் பண்டாரங்கள் குறித்த தனது பார்வையை வெளிப்படுத்துகிறார் அறிஞர் அண்ணா.

சமுதாயத்தில் பெண்கள் எப்படிப்பட்ட அறிவைப் பெற்றுத் திகழ வேண்டும் என அண்ணா கூறுமிடத்து வெறும் கதைப் புத்தகங்களை மட்டும் வாசித்து அதனால் பெறும் அறிவு மட்டும் போதாது பெண்கள் பகுத்தறிவையும் பெற்றிருக்க வேண்டும் என்கிறார். இதனை, "சரசாவின் அழகு வளர்ந்து கொண்டே வந்தது போலவே அறிவும் வளர்ந்து கொண்டே வந்தது. அறிவு என்றால், அல்லி அரசாணி மாலையும், நல்லதங்காள் புலம்பலும், அந்தகனை மணந்த அற்புத வள்ளியின் கதையும் படிப்பது என்றல்ல பகுத்தறிவு."[24] எனப் பெண்களும் இந்நாட்டில் பகுத்தறிவு பெற்றவர்களாக விளங்கவேண்டும் என்ற தனது கொள்கையை 'பாமா விஜயம்' சிறுகதையில் வலியுறுத்துகின்றார்.

கோவில்கள், கோவில்களில் பணிபுரியும் அர்ச்சகர்கள், இறைவன், இறைவனை வைத்து அதிகாரமும், ஆற்றலும் பெற்ற மடாதிபதிகள் இவர்களையெல்லாம் நம்பி மோசம் போகும் பக்தர்களாகிய மக்கள் - இவர்களைத் திருத்த அண்ணா அவர்கள் 'புதிய மடாதிபதி' என்ற நாடகத்தை நாட்டிற்கு வழங்கியுள்ளார். மடாதிபதிகளின் ஆதிக்கத்தை அறவே ஒழிக்க அல்லும் பகலும் பாடுபட்டார். மனித உருவிலிருந்து மக்களை ஏய்த்துப் பிழைக்கும் மடாதிபதிகளை ஒழிப்பதைத் தன்னுடைய கொள்கைகளுள் ஒன்றாகக் கொண்டு செயல்பட்டார். மடாதிபதி அருளாளர், மதவேடம் புனைந்து அலங்காரப் பீடத்தில் அமர்ந்து கொண்டு சீமான்களுக்கும், பக்தர்களுக்கும் ஆசி வழங்கிக் கொண்டும் எல்லையற்ற பொருட்களைக் காணிக்கையாகப் பெற்றுக் கொண்டும் வாழ்கிறார். இப்பூவுலகில் இன்பமும் விண்ணுலகில் இன்பமும் பெறுவதற்குரிய வழி இறைவனைப் போற்றுதலும், இச்சைகளைத் துறத்தலும் என்று பக்தர்கட்கு உபதேசம் செய்துவிட்டு, தான் மட்டும் வசந்த மண்டபத்தில் வேறு ஒரு பெண்ணோடு குலவிக் கொண்டு இருப்பதை இவ்வுலகிற்கு உணர்த்துகிறார் அண்ணா. இத்தகு மதவேடம் புனைந்து மக்களை ஏமாற்றும் மடாதிபதிக்கு எதிராகப் போலி மடாதிபதியை உருவாக்குகிறார். எறும்பினைப் போல் சுறுசுறுப்பும், தேனீக்களைப் போல ஓயா உழைப்பும் கொண்டு உழைத்து உழைத்துச் சேர்த்த பாட்டாளிகளின் பணத்தை உண்டு

உண்டு ஏமாற்றி வாழும் இவர்களைச் சாடுகிறார். போலி மடாதிபதிகளை மனிதனென்று கூட எண்ணுதல் கூடாது; மக்கள் சமுதாயத்தினின்றே விலக்கி விடுதல் வேண்டும் என்பது அண்ணாவின் கொள்கை. இதனை, ". . . எவனொருவன் ஊராரை ஏய்க்க மதவேடம் புனைந்து திரிந்து மதோன்மத்தனாக வாழ்கிறானோ அவனை நான் மனிதனென்று கூட மதிப்பதில்லை."[25] என்ற கூற்று உணர்த்துகின்றது.

சோதிடத்தின் மீது மக்கள் கொண்டிருக்கும் நம்பிக்கையினால் எவ்வளவு கொடுமைகள் சமுதாயத்தில் நிகழ்கின்றன என்பதையும் தம் படைப்புகளில் அண்ணா காட்டத் தவறியதில்லை. பகுத்தறிவு கொண்டு எண்ணிச் செயல்படுவதற்குப் பதிலாக சோதிடர்களின் வார்த்தையை முழுமையாக நம்பி மோசம் போன குடும்பங்களை 'ஓர் இரவு' என்ற நாடகத்தில் காட்டுகிறார். சூதாடல், கள் குடித்தல், குதிரைப் பந்தயத்திற்குப் போதல் முதலானவை குடும்பங்களைச் சீர்குலைக்கக் கூடியவை என்பது அண்ணாவின் கருத்து. இத்தீமைகளைச் செய்வதற்கும் மக்கள் சோதிடம் பார்க்கத் தவறுவதில்லை என்று கிண்டல் செய்கிறார். இந்நாடகத்தில் குதிரைப் பந்தயத்திற்குச் செல்லும் கோபால் நாளும் சகுனமும் பார்த்துப் போவதாகக் காட்டப்படுகிறான். கோபாலின் மூலம் மக்கள் மத்தியில் பரவியிருக்கும் மூடநம்பிக்கையை அண்ணா காட்டுகிறார். சனிக்கிழமை நடக்கும் குதிரைப் பந்தயத்திற்குப் போகின்றவன் கருப்புக் குதிரையில் பணம் கட்டினால் வெற்றி பெறலாம் என்று நம்புமளவிற்கு ஒரு பாத்திரத்தைப் படைத்து, அந்த நம்பிக்கை எந்த அளவிற்கு அறிவிற்குப் பொருத்தமற்றது என்பதனைத் தெளிவுபடுத்துகிறார். சனிக்கிழமை சனி பகவானுக்குரிய நாளென்றும் சனிபகவான் நிறம் கருப்பு என்றும், ஆகவே சனிக்கிழமைகளில் நடக்கும் பந்தயங்களில் கருப்பு நிறக் குதிரைகள் ஓடினால் அவற்றின் மீது பணம் கட்டினால் தமக்கு வெற்றி கிடைக்கும் என்று நம்பி மோசம் போகும் இளைஞர்களைக் காட்டி மூடநம்பிக்கையின் தீமையை விளக்குகிறார். "கட்டாயம் ஜெயிக்கும் ராஜு. நாளைக்கு சனிக்கிழமை, சனிபகவான் கருப்பு, அவர் வாகனம் காக்கை, அதுவும் கருப்பு, குதிரையும் அதே நிறம், கட்டாயம் ஜெயிக்கும்."[26] என எண்ணி, கட்டிய மனைவியிடம் எஞ்சியிருக்கும் கழுத்துச் செயினைக் கழற்றிப் போய் கருப்புக் குதிரையின் மீது கட்டி விட்டு இன்று சனிக்கிழமையாதலால் தனக்கு வெற்றி கிடைக்கும் என ஏமாறும் 'கோபால்கள்' இருக்கும் வரை இந்த நாட்டிற்கு ஏற்றம் இல்லை என்பதைக் குறிப்பாக அறிவுறுத்துகிறார்.

கோவில்கள் கட்டுவதும் தெய்வங்களை வழிபடுவதும் மக்களின் துன்பங்கள் நீங்குவதற்கே என்றால் இந்நேரம் இந்த நாட்டில் யாருக்கும் எந்தவொரு பிரச்சினைகளும் இல்லாது தீர்ந்திருக்க வேண்டும். அனைத்தும் தீர்க்கப்பட்டு மக்கள் அனைவரும் மகிழ்ச்சியாக இருந்திருக்கவேண்டும். ஆனால் அவ்வாறு இருக்கிறார்களா என்று பார்த்தால் இல்லை. இன்னும் பசி, வறுமை, நோய், திருட்டு, கொலை, ஏமாற்றுவேலை போன்றவைகள் நடந்து கொண்டு தான் இருக்கின்றன. இதற்குக் காரணம் மக்களிடம் பகுத்தறிவு இல்லாததால் ஏற்பட்ட விளைவுகள். அப்படிப்பட்ட பகுத்தறிவு சமுதாய நெறியாகவும் தனிமனித வாழ்க்கை முறையாகவும் ஆட்சி செய்ய வேண்டும் என்பது அண்ணாவின் கொள்கையாக விளங்குவதை அவரது படைப்புகள் வழி காணமுடிகின்றது.

"நாளாம், கோளாம், நட்சத்திரமாம், சகுணமாம், சாத்திரமாம் அத்தனையும் மனித முயற்சிக்குப் போடுகிற தடைக்கற்கள்."[27] என்பது போன்ற சோதிடம் குறித்த அண்ணாவின் கொள்கையை அவரது படைப்புகளில் காணமுடிகின்றது. நாத்திகம், கடவுள், மூடநம்பிக்கைகள் போன்றவற்றைப் பற்றிய அண்ணாவின் சிந்தனைகளை 'சொர்க்கவாசல்' என்னும் நாடகமும் எடுத்தியம்புகின்றது.

## சமயக்கொள்கை

சமயமானது மனிதனின் அறிவை அடியோடு கெடுத்துவிடுகிறது. மனிதர்களின் ஒற்றுமைக்குப் பதிலாகப் பிரித்துக் காட்டவே சமயம் உதவுகின்றது. சமயமானது மனிதனை ஒழுக்கத்தில் கவலை செலுத்தச் சிறிதும் கட்டாயப்படுத்துவதில்லை. சமயத்தில் பகுத்தறிவுக்குச் சிறிதும் இடமில்லை. கடவுளுக்கும் மக்களுக்கும் இடையில் தரகர்களை உண்டாக்கி எந்நிலையிலும் அவர்களை உயர்வாகக் காட்டுகின்றது. "மதமானது பூசைச் செலவு செய்யும் அளவுக்கு மோட்சமும் பாவ மன்னிப்பும் இருப்பதாகக் கூறுவது; சோம்பேறிப் பிழைப்புக்கும் கொடுமை செய்வதற்கும் மதம் இடம் கொடுக்கிறது."[28] என்ற பெரியாரின் வழியில் அண்ணாவும், மூடத்தனத்தை முடுக்கும் சமயத்தை நிர்மூலப்படுத்த முனைந்தார்.

"மதம் என்பது இந்த உலக வாழ்க்கையைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. அதன் கவனமெல்லாம் மறு உலகத்தைப் பற்றியதுதான்"[29] என்று குறிப்பிட்ட அண்ணா சமய நம்பிக்கை அற்றிருந்த தமிழர்களின் வாழ்க்கையில் ஆரிய சமயச் சிந்தனைகள் நுழைந்ததன் வாயிலாகத் தமிழர்கள் வீழ்ச்சியடைந்ததைத் தம் படைப்புகளில் விளக்குகிறார்.

அண்ணா சமயத்தைச் செம்மைப்படுத்துவதற்காகப் பணியாற்றியவர். சமயத்தில் புரையோடிப் போயிருக்கும் போலிகளைப் போக்க வேண்டும் என்று விரும்பியவர். "நமக்கு நாலு, ஆறு, நாற்பத்தெட்டு கண்படைத்த கடவுள்கள் வேண்டாம். நமக்கு ஒரே ஆண்டவன் போதும். உருவமற்ற தேவன்! ஊன் வேண்டாத சாமி, ஆடல்பாடல் அலங்காராதிகள், அப்பம் பாயாசம் அக்கார வடிசல் கேட்காத சாமி, அங்கே இங்கே என்று ஆளுக்கு ஆள் இடத்தைப் பிரித்து வைக்காத சாமி! அர்ச்சனை உண்டியல் என்று கூறி அக்கிரகாரத்தைக் கொழுக்க வைக்காத சாமி இருந்தால் போதும்."[30] என்ற கொள்கையுடையவர். "மக்களின் நல்வாழ்வுக்காகவும், மார்க்கத்தின் மாசு போக்கவும் பாடுபடும் நாங்களா காலிக்கூட்டம்"[31] என்ற அண்ணாவின் கருத்து சமயத்தைத் தூய்மையாக்க வேண்டும் என்ற கொள்கையைப் பறைசாற்றுகிறது.

பல தெய்வ வழிபாட்டை ஒழித்து, ஒருவனே தேவன் என்ற திருமூலர் கருத்தை உருவாக்க விழைந்தவர் அண்ணா. இதனை, "நாங்கள் நாத்திகரல்ல; ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்று உள்ளத்துறையும் உண்மையை உரைத்தோம்"[32] என்று தம் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். ஒரு கடவுள் வழிபாட்டு முறை வேண்டுமென்று நினைக்கும் அண்ணா அறிவோடு ஆற்றலோடு ஆபாசமற்ற கடவுள் இல்லை என வருந்துகிறார்.

சமுதாயம் எவ்வளவுதான் உயர்ந்தாலும், சமயத்தின் பெயரால் வேற்றுமைகளை வளர்த்துத் தங்களின் வாழ்வை வளப்படுத்திக் கொண்டவர்கள் உழைக்காது உயர்ந்தவர்களின் பொய் வேடங்களைக் களைந்தெறியும் நோக்கிலும், சமயத் தவறுகள் மண்டிக்கிடக்கும் சமுதாயத்தைச் சரிசெய்யும் போக்கிலும் அண்ணா தனது இலக்கியங்களைப் படைத்துள்ளார் என்பதை உணரமுடிகின்றது.

பிற சமயங்களைக் காட்டிலும் இந்து சமயத்தைக் கடுமையாகச் சாடுகின்றார். தமிழ்ச் சமுதாயத்தில் பிளவை ஏற்படுத்தி, பல்வேறு மூடப்பழக்கங்களைச் சமுதாயத்தில் ஊடுருவ விட்டு அதனால் இன்பம் காணுகின்ற கூட்டமான, இந்து சமயத்தைப் பின்பற்ற வலியுறுத்தும் வைதீகர்களை எதிர்க்க வேண்டுமானால் அவர்களது சமயத்தையும் எதிர்த்தாக வேண்டிய நிலையில் இந்து சமயத்தை எதிர்க்கிறார். சில படைப்புகளில் புத்த சமயத்தின் மேன்மையைக் கூறும் அண்ணா இந்து சமயத்தைத் தாழ்வாகவே தனது படைப்புகளில் சித்திரித்துள்ளார்.

கண்மூடித்தனமாக எதையும் எதிர்க்கும் பழக்கம் அண்ணாவிடம் இல்லை. எதையும் ஆதாரத்துடன் எடுத்துக்கூறுகிறார். இந்து சமயத்தின் மீது குற்றம் சுமத்தும் அண்ணா ஒவ்வொரு குற்றச்சாட்டுக்கும் தக்க ஆதாரங்களைக் காட்டுகிறார். அதன்மூலம் சமுதாயச் சீர்திருத்தம் என்ற தனது இலட்சியத்தை நோக்கி இலக்கியங்களைக் கொண்டு செல்கிறார்.

பெரும்பாலும் இந்து சமயக் கடவுளரையும் அக்கடவுளரைப் பற்றிய புராணக் கதைகளையும் கடுமையாக எதிர்க்கிறார். இவையனைத்தும் பொய் என்பதைத் தனது இலக்கியங்கள் வாயிலாக மெய்ப்பிக்கும் முயற்சியில் ஈடுபட்டு அண்ணா வெற்றி பெற்றிருப்பதைக் காணமுடிகின்றது. 'கைலாயம் வேண்டாம்' என்ற நாடகத்தில் மகாமகம் குளத்தில் குளிப்பதால் கைலாயம் செல்லலாம் என்ற எண்ணம் கொண்ட ஏழையின் மனதில் விழிப்புணர்வை ஏற்படுத்துகிறார். புராணங்களில் உள்ள பொய்களை எடுத்துக்காட்டி ஏழையின் சிந்தையைத் தெளிவுபடுத்துகிறார். மகாமகக் குளத்தின் தண்ணீர் அசுத்தம் நிறைந்ததாக இருப்பதைச் சுட்டிக்காட்டி இதில் குளித்தால் புண்ணியம் வராது நோய் தான் வரும் என்ற சிந்தனையையும், நாயன்மார்களின் கதைகளைக்கூறி அவற்றின் பொய்மைத் தனத்தையும் விளக்குகிறார். இந்து சமயச்சடங்குகளையும், புராணங்களையும் எதிர்க்கும் அண்ணாவின் கொள்கை இந்நாடகத்தில் வெளிப்படுகின்றது.

அண்ணா தான் சார்ந்திருந்த பெரியாரின் சுயமரியாதை இயக்கம், சமயம், கடவுள் போன்றவை பற்றிக் கொண்டிருந்த கருத்தைச் சமயபுரத்து மாரியம்மன் வாயிலாகவே கூற விழைகிறார். 'சமயபுரத்தம்மன் மான நஷ்ட வழக்கு' என்ற சிறுகதையில் சமயபுரத்தம்மன் கூறுவதாக அமைந்துள்ள பகுதியில், "சமயமாவது, புரமாவது, பூஜையாவது வினையைத் தீர்ப்பதாவது-அருளாவது ஐஸ்வரியம் தருவதாவது என்று பேசி, மதத்தை மடைமை என்றும், புராணத்தைப் புரட்டு என்றும் இதிகாசத்தை இழிவுப் பெட்டகமென்றும் சடங்குகளை மூடநம்பிக்கை என்றும், சாஸ்திரங்களைச் சூழ்ச்சிகளென்றும் பேசித் திரியும், புதுயுக ரட்சகர்களான சுயமரியாதைக்காரர்களின் எதிர்ப்பு என்னை இழிநிலைக்குக் கொண்டு வந்தது போலும்! அந்த ஆசாமிகள், சமயபுரத்தம்மையை நம்பி சக்கையாகாதே! உழைத்து உழைத்துப் பெற்ற பணத்தை ஊதாரித்தனத்துக்குச் செலவிடாதே! நடமாடும் கோயிலுக்குப் பூஜை செய். நயவஞ்சகர் காட்டும் பாதையில் செல்லாதே"[33] என்று கூறும் சுயமரியாதைக்காரர்களைப் பற்றிச் சமயபுரத்தம்மன் குற்றம் சுமத்தவில்லை. மாறாக, தன்மேல் பக்தி கொண்டவர்கள்தான் தனக்குத் துரோகம் விழைவிக்கிறார்கள் எனக் குற்றம் சுமத்துவதாக இச்சிறுகதையை அண்ணா படைத்துக்காட்டியிருக்கின்றார். இதன்மூலம் சமயம் சார்ந்த தம் இயக்கத்தின் கொள்கைகளை விளக்கிக்காட்டுவது புலனாகும்.

ஒரு வேளை வயிற்றுச் சோற்றுக்கு வழியில்லாதவன் எப்படிச் சமயங்களின் போதனைகளைக் காது கொடுத்துக் கேட்க முடியும். அதனால் முதலில் அவனது பசியைப் போக்கிய பின் அவனுக்குச் சமயத் தத்துவங்களைச் சொன்னால் தான் அவன் அதை உணர்ந்து கொள்ளமுடியும் என்ற கருத்தை அண்ணா, "இந்த இலட்சியங்கள் எழிலுள்ளனதான்! மார்க்க மணிகள்தான்! ஆனால் காலையில் எழுந்திருச்சிக் கஞ்சித் தண்ணி இல்லாமே கஷ்டப்படும் பாட்டாளி காணச் சகியாத இடத்திலே இருந்து கொண்டுபசியால் பரிதவித்து, ஒருவேளைச் சோறு எங்கிருந்து கிடைக்கும் என்பதறியாது தேம்பிக் கிடக்கும்போது, அவனுக்கு இந்தத் தேவவாக்கும், திவ்யபோதனையும்; ஆஸ்ரம இலட்சணமும் என்னய்யா விளங்கும்! எப்படி ஐயனே! அவன் அந்த மார்க்க தத்துவங்களின் போதனைகளை உணருவான்"[34] என 'மதுரைக்கு டிக்கெட் இல்லை' என்ற சிறுகதையில் ஆஸ்டின் என்னும் பாத்திரக் கூற்றில் வலியுறுத்துகிறார். இக்கருத்து அண்ணாவின் சமயம் சார்ந்த கொள்கையைப் பறைசாற்றுவதாய் அமைந்துள்ளது.

## அரசியல் கொள்கை

நாடு என்பது பல்வேறுபட்ட இனமக்களை உள்ளடக்கிய பகுதியாகும். அங்கு சமுதாய, பொருளாதார, இன, சாதி, சமய வேறுபாடுகள் நீங்கி அனைவரும் ஓரினமாக வாழவேண்டும். இதுவே ஒழுங்கு. ஆனால், இதனை மீறி அரசியல், இன அடிப்படையில் வேறுபாடுகள் காட்டப்படுமானால் முரண்பாடுகள் தோன்றும். இந்தியா ஆங்கிலேய ஆட்சியின் வல்லாண்மையிலிருந்து விடுதலை அடைந்து காங்கிரசு ஆட்சிப் பொறுப்பில் வந்தும், இத்தகைய வேறுபாடுகள் மறையவில்லை. ஆட்சியாளர்கள் காந்திய நெறியை மறந்து பகட்டு வாழ்க்கை மேற்கொண்டு நாட்டு மக்கள் நலனில் கவனம் செலுத்தவில்லை. அதனால் இன்னல் மேல் இன்னலைத் தாங்க முடியாத ஏழைகளின் வாழ்வு நலிந்தது; ஏற்றத்தாழ்வுகள் மிகுந்தன.

நாட்டின் வடபகுதி வளமடைந்தது. தென்பகுதி தளர்வடைந்தது. இத்தகைய நிலைமைக்கு நடுநிலைமையற்ற காங்கிரசு ஆட்சியே காரணம் என்று திராவிடத் தலைவர்கள் கருதினர். அவர்களுள் அண்ணா குறிப்பிடத்தக்கவர். தென்பகுதி மக்களின் நலிவிற்குக் காரணமான இனநலக் காங்கிரசு ஆட்சியை அகற்றும் எண்ணம் கொண்டு முறையான மக்களாட்சி நாட்டில் நடைபெற வேண்டுமென்பதற்கு அண்ணா முழுமூச்சாய்ச் செயலாற்றினார். வடநாட்டவரின் வல்லாண்மை அரசியல், திராவிடர்களை வடவருக்குப் பொருளாதார அடிமைகளாக மாற்றிடும் நிலையைக் காணப்பொறாதவரான அண்ணா, வடநாட்டின் கீழும் வடவர்களின் வல்லாண்மை ஆட்சியின் கீழும் அடிமை உணர்வோடு வாழ்ந்து வரும் திராவிடத் தமிழ் மக்களின் உணர்வைத் தூண்டும் வகையில் கருத்துகளை வெளியிட்டார். அண்ணாவின் அரசியல் கருத்துகளும், நெறிமுறைகளும் காங்கிரசை அதிகமாகச் சாடின.

இந்தியாவில் காங்கிரசு ஆட்சியின் செயல்பாடுகளைத் தனது படைப்புகளின் மூலமும் பேச்சுகள் மூலமும் மிகக் கடுமையாக விமர்சித்தார். தமிழகத்தில் காங்கிரசை ஆட்சியில் இருந்து அகற்றுவது அல்லது காங்கிரசு எதிர்ப்பு என்ற அண்ணாவின் கொள்கைகளை அவரது படைப்புகள் வழி அறியமுடிகின்றது. அதேசமயம் ஆள்வது குறித்து அண்ணாவின் கருத்தை ஆராயும் பொழுது ஆட்சியாளர் மக்களை ஆள்வது என்பது ஆள்வதல்ல. மக்கள்தான் ஆட்சியாளர்களை ஆள வேண்டும் என்ற கொள்கையைக் கொண்டிருந்தார். இக்கொள்கையை, "இரண்டே முறைகள்தான் உள்ளன உலகையாள்வதற்கு. ஒன்று நாம் மக்களை ஆள்வது, மற்றொன்று மக்கள் நம்மை ஆள்வது. நீர் சொல்லும் முறைப்படி காரியம் செய்தால் மக்கள் நம்மை ஆளத் தொடங்குவர் - மாளிகையும் இராது, அரண்மனையும் இராது."[35] என 'நான் மனிதனானேன்' என்ற சிறுகதையில் உணர்த்துகிறார். இதுவே உண்மையான மக்களாட்சியாகும் எனவும் கூறுகிறார். மக்களாட்சியும் மக்கள் புரட்சியும் இச்சமுதாயத்தில் தோன்ற வேண்டும் என்ற கொள்கையுடன் செயல்பட்டு வந்த அண்ணாவின் படைப்புகளில் இச்சிந்தனைகளை அதிகமாகக் காணமுடிகின்றது.

அரசாங்கத்தைப் பற்றிய தனது பார்வையை அண்ணா, "ஒரு நேர்மையான அரசாங்கம், மக்களுக்குச் செய்து தீர வேண்டிய கடமைகளை உதறித் தள்ளிவிட்டு, மக்களை மட்டும் அரசாங்கத்தைப் பலப்படுத்தும் பணியில் அவர்களுக்குள்ள கடமையை முன்தள்ளிப் பேசுவது, மாசடைத்துள்ள மனத்தின் மதிப்பற்ற வார்த்தைகள் என்றுதான் கூறவேண்டும். மக்கள் நலம் ஒன்றே குறிக்கோளாகக் கொண்டிருக்கும், அரசாங்கத்தை நடத்தும் எந்த நபரும் தான் தவறிய கடமையை, தான் மக்களுக்கு ஆற்ற வேண்டிய

பணியை, மறந்து மன்னித்துவிட்டு, தங்கள் தங்கள் கடைமையை மட்டும் செய்ய வேண்டுமென்று மக்களிடம் எதிர்பார்ப்பது கூடாது - நடவாது!”[36] என்கிறார்.

ஆட்சியைப் பிடிப்பதற்கு முன் அதைச் செய்வேன் இதைச் செய்வேன் என்று கூறி ஆட்சியைப் பிடித்த பின் அதைச் செய்வதும் செய்யாததும் எங்கள் விருப்பம் எனக் கூறிய காங்கிரசு ஆட்சியாளர்களைப் பற்றி மக்கள் தெரிந்து கொள்ளும் விதமாகப் படைக்கப்பட்டது ‘காங்கிரஸ் வாலா’ என்ற நாடகம் ஆகும். நீதிக்கட்சி ஆட்சியில் இருந்த போது நிலவரியைக் குறைக்க வேண்டும் என்று வலியுறுத்திய காங்கிரசு, ஆட்சியில் அமர்ந்ததும் அதனைச் செய்யாமல் அலட்சியப்படுத்தும் போக்கை காங்கிரசுக் கட்சி அமைச்சருக்கும் ஜஸ்டிஸ் கட்சி உறுப்பினருக்கும் இடையே நடக்கும் உரையாடலில் எடுத்துரைப்பர். இதனை,

“காங் மந்திரி: நான் வெட்கப்படவில்லை, உண்மையைச் சொல்லுகிறேன். இந்த நிலவரி விஷயம் இருக்கே இது மிகமிகப்பெரிசு. பாரம்பரியமாக இருந்து வருவது. நான் பார்த்தேன், என்னாலானவரையில் ஒன்றும் முடியவில்லை. இதை நான் வெட்கப்படாமல் சொல்லுகிறேன். ஆனால் இதைப் பற்றி நீர் பேசுவது ஏன்? குறைப்பதும், குறைக்காததும் எங்கள் விஷயம். நாங்கள் ஓட்டு வாங்கும்போது சொன்னதுதானே அது.

ஜஸ். கட்சி: ஆமாய்யா, ஆம்! ஓட்டு வாங்கும்போது திரித்த “கயிறு”தான். அதைத்தான் கேட்கிறேன். உங்கள் பேச்சு அன்று ஒரு விதம், இன்று ஒருவிதமாக இருக்கிறதே.

காங்.மந்திரி: ஒரு கதை சொல்லுகிறேன் கேளும். பச்சை ஓணான் இருக்கிறதே தெரியுமோ? அது அவ்வப்போது நிறத்தை மாற்றிக்கொள்ளும். அதைப்போல, நாங்கள் அவ்வப்போது ஒவ்வொரு விதமாக நடப்போம். அதை ஏன் செய்யவில்லை, இதை ஏன் செய்தாய் என்று கேட்க வேண்டாம்.”[37]

என்னும் உரையாடலில் விவரிக்கிறார் அண்ணா. இதன்மூலம் காங்கிரசுக் கட்சியின் செயல்பாட்டை மக்களுக்குத் தெரிவித்து மக்களைக் காங்கிரசுக்கு எதிராக மாற்றுவதையே தனது குறிக்கோளாகக் கொண்டு செயலாற்றியதை அறியமுடிகின்றது.

காங்கிரசுக் கட்சி எதைச் செய்தாலும் அதில் ஒரு சுயநலம் இருக்கும் என்பதை வலியுறுத்தும் விதமாக, “காங்கிரஸ் தலைவர்கள் சாமான்யமானவாளா! எந்தக் காரணத்தை நினைச்சுச் சேர்த்தா நமக்கென்ன! கருவேப்பிலை மாதிரி காரியத்துக்கு உபயோகப்படுத்திக் கொள்வோம். பிறகு தூக்கி எறிந்து விட்டால் போறது என்ற நினைப்பிலேதான், குமாரராஜாவைக் கமிட்டியிலே சேர்த்திருப்பா.”[38] எனக் குமாரராஜாவை கஸ்தூரிபாய் குழுவில் சேர்த்து அதன்மூலம் லாபக் கணக்கு பார்க்கும் காங்கிரசின் கயமைத் தனத்தை எடுத்துரைக்கிறார்.

மக்கள் மக்களாக வாழ வேண்டுமானால் அவர்களுடைய வறுமையைப் போக்க வேண்டும் என்ற கொள்கை ஆட்சியாளர்களுக்கு வேண்டும் என்பதை வலியுறுத்துகிறார். “கொலை - களவு நாட்டில் தவிர்க்கப்பட வேண்டுமானால், வறுமையை நாட்டை விட்டுத் துரத்தி அடியுங்கள். அப்பொழுது தான் மக்கள், மக்கட் பண்புடன் வாழ்வார்கள். அதற்கான நல்லாட்சியை நாட்டில் நிறுவுங்கள்.”[39] என ஆட்சியாளர்களுக்கு அண்ணா கூறுகின்றார். அண்ணா காலத்தில் ஆட்சி அதிகாரத்தில் இருந்த காங்கிரசு ஆட்சியாளர்கள் இத்தகைய கொள்கைகளைப் பின்பற்ற வேண்டும் என இதன்மூலம் வலியுறுத்துவதை அறியமுடிகின்றது.

தேர்தல் நேரத்தில் சமுதாயத்தில் பணத்தால் உயர்ந்த நிலையில் இருப்பவர்களுக்கு ஆசைகாட்டி அவர்களைத் தங்கள் பக்கம் இழுத்துக்கொள்ளும் காங்கிரசின் தன்மையை வெளிப்படுத்தும் விதமாக 'புதிய காங்கிரஸ்காரர்' என்ற நாடகத்தை அண்ணா படைத்துள்ளார். இதில் கள்ளுக்கடை நடத்தும் ஒருவரைத் தேர்தலுக்குத் தயார்படுத்தும் காங்கிரசுக்காரரின் செயலை,

"மண் : அதனாலேதான் சொல்றேன். இந்தத் தேர்தலிலே காங்கிரசுக்கு ஆதரவு காட்டி, வேலை செய்து காங்கிரசுக்கு வெற்றி தேடிக் கொடுங்க, பிறகு பாருங்களேன், நீங்க கூப்பிட்ட குரலுக்கு ஓடி வருது காங்கிரசு.

மு.க.க : கள்ளுக்கடை நடத்தின ஆசாமி இப்பக் காங்கிரசிலே சேருகிறானே என்று ஊர் ஒரு மாதிரியாப் பேசாதா. . .

மண் : வீணான சந்தேகம் உங்களுக்கு. உங்களைப் போன்றவங்க வேண்டிய பேர் இப்பக் காங்கிரசிலே வந்து சேர்ந்திருக்காங்க. . .

மு.க.க : என்னைப் பற்றி, உங்கத் தலைவர்களுக்கு நல்லபடி சிபார்சு சொல்லி வைக்கணும். .

மண் : பாருங்க என்னோட வேலையை, போகப் போகப் புரியும். உங்க மனசோட போட்டு வையுங்க. இந்தத் தேர்தலிலே காங்கிரசுக்கு வெற்றி ஏற்படும்படி வேலை செய்து காட்டுங்க. உங்களையே இந்தப்பகுதிக்குக் காங்கிரஸ் தலைவராக்கிக் காட்டுகிறேன். . ."[40]

என்ற உரையாடல் எடுத்துரைக்கும். இதன் முடிவில் கள்ளுக்கடைக்காரரைத் தனது பேச்சின் மூலம் அவருக்கு ஆசை காட்டி, காங்கிரசுப் பக்கம் இழுப்பதில் வெற்றி பெறுகின்றார். அதோடு காங்கிரசிலே தான் இதுபோன்ற தொழிலை மேற்கொண்டவர்கள் அதிகம் இருக்கின்றார்கள் என்ற குற்றச்சாட்டையும் கூறுகிறார் அண்ணா. இதே கருத்தை மையமாக வைத்து இயற்றப்பட்ட நாடகம் 'முதலாளித்துவ சோஷியலிசம்' என்பதாகும். 'பாகீரதியின் பந்தயம்' நாடகம் சேர்மன் பதவிக்கு நடக்கும் போட்டியில் காங்கிரசு வேட்பாளர்களுள் யார் அதிகப் பணம் கொடுக்கிறார்களோ அவர்களுக்குச் சேர்மனாகும் வாய்ப்பு இருப்பதை விளக்குகிறது. அதேபோல் தன்னுடைய சொந்தப் பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ளக் காங்கிரசுக் கட்சியில் சேர்ந்து கொள்பவர்களைப் பற்றிக் கூறும் நாடகம் 'பாங்கர் பணம் பெருத்தான்' என்பதாகும். 'கண்ணீர்த்துளி', 'காந்தி ஜெயந்தி', 'மொரார்ஜி விருந்து', 'சுயேச்சை ஆகிவிடுவேன்' போன்ற குறுநாடகங்கள் காங்கிரசை விமர்சிக்கும் வகையில் எழுதப்பட்ட நாடகங்களாகும். காங்கிரசைப் பற்றிப் பல நாடகங்களைப் படைத்துள்ளார் அண்ணா. அதற்கு, "தேர்தலுக்காக நாடாள்வோர் நாடகம் நடத்த ஏற்பாடு செய்யும்போது, நாம் இதுபோன்ற நாடகங்களை நடத்தியாக வேண்டுமல்லவா! நடத்தக் கூடியதில் இது ஒன்று; கோடிட்டுக் காட்டினேன். உன் நண்பர்களுடன் கலந்து பேசினால் வேறு பல நாடகங்கள் உருவாகும். நாடகமாடி நாட்டுக்கு அறிவிக்க வேண்டிய உண்மைகள், அரசியல் நிகழ்ச்சிகள் ஏராளமாக உள்ளன. அவ்வப்பொழுது தெரிவிக்கிறேன்."[41] எனக் காங்கிரசுக்கெதிரான கருத்துடைய நாடகங்களை இயற்றியதற்கான காரணத்தை 'பெரிய மனிதர்கள்' என்ற நாடகத்தின் வாயிலாகக் கூறுகின்றார்.

ஓட்டுக்குப் பணம் கொடுக்கும் பழக்கம் அண்ணாவின் காலத்திலேயே இருந்து வந்துள்ளதை அவரது கதைகளில் இருந்து அறியமுடிகின்றது. காங்கிரசுக் கட்சியின் ஓட்டுக்குப் பணம் கொடுக்கும் பழக்கத்தை எதிர்க்கிறார். மக்களை மயக்க ஒரு ஓட்டுக்கு இவ்வளவு எனப் பணம் கொடுத்து, தேர்தலில் வெற்றி பெற முயற்சிக்கும் செயலை எதிர்க்கும் அண்ணாவின் கொள்கையை 'பிரமநாயகம்' சிறுகதை எடுத்தியம்புகிறது.

வறுமையினால் ஒருவன் செய்யும் குற்றச்செயலுக்கு ஆட்சி செய்பவர்களே பொறுப்பேற்க வேண்டும் என அண்ணா வலியுறுத்துகிறார். "ஏழ்மையின் காரணமாக நல்லவன் தீயவன் ஆகிறான், அவனை அந்தக் கதிக்கு ஆளாக்கிவிடுவது சர்க்கார்தான்! பாரதியாரின் கோபம் இந்தப் பிரச்சினையில் அளவு கடந்து சென்று, உலகையே அழித்துவிடலாம் என்ற அளவுக்கு ஆத்திரத்தோடு முழக்கமிடச் செய்தது. தனியொருவனுக்கு உணவு இல்லை எனில் ஜெகத்தினை அழித்திடுவோம் என்றல்லவா பாடினார். பாரதியாரின் கோபம் உலகத்தோடு நின்றது. வள்ளுவரோ ஆண்டவனிடமே சென்று, அச்சமூட்டுகிறார், எச்சரிக்கிறார். பிச்சை எடுத்துத்தான் ஒருவன் பிழைத்தாக வேண்டும் என்ற நிலை இருக்குமானால், அப்படிப்பட்ட "உலகு இயற்றியானை" ஒழித்துக்கட்டுவோம் என்றே கூறுகிறார். உலகையோ உலகு இயற்றியானையோ ஒழித்துக் கட்டுமளவுக்கு ஆற்றல் வேண்டியது கூட இல்லை, குற்றம் பிறப்பதும் குணம் சிறப்பதும் சுற்றுச்சார்பைப் பொறுத்து இருக்கிறது என்ற உண்மையை, ஊராள்வோர் உணர்ந்து, மனிதனுடைய 'சுற்றுச்சார்பு' செம்மைப்படத்தக்க வகையில், காரியமாற்றினாலே போதும் - குற்றம் பெருமளவுக்குக் குறைந்துவிடும்"[42] என வள்ளுவரையும் பாரதியையும் துணைகொண்டு வறுமை நீங்க வேண்டும் என்ற அவர்களின் கொள்கையையே தன் கொள்கையாகவும் அடியொற்றிப் பின்பற்றி வருவது இதனால் அறியமுடிகின்றது.

## இனக்கொள்கை - திராவிடக் கொள்கை

திராவிட மொழிகள் பன்னிரண்டு. அவற்றுள் திருந்திய மொழிகள் ஆறு. அவற்றுள்ளும் வழக்கிலும், செய்யுளிலும் பயின்று வரும் திருந்திய மொழிகள் நான்கு. அவை தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகும். இந்த மொழிகளைப் பேசுகின்ற மக்கள் திராவிடர்கள் ஆவர். இவர்கள் வாழும் பகுதியே திராவிட நாடு. திராவிடர்கள் மொழியாலும், இனத்தாலும், இடத்தாலும் ஒற்றுமையுடையவர்கள். மேற்கூறிய மொழிகள் நான்கும் ஒரு மொழிக்குடும்பத்தைச் சேர்ந்தவைகளாதலாலும், இம்மொழிகள் பேசும் மக்கள் ஓரினத்தவராதலாலும், இவர்கள் வாழும் பகுதி தொடர்ச்சியாக ஒரு நிலப்பரப்பாய் அமைந்திருப்பதாலும் இதை ஒரு நாடு எனக் கருத இடமுள்ளது என்பது ஆராய்ச்சியாளர்களின் முடிபாகும். இந்நாட்டில் வாழ்பவர்கள் திராவிட மொழி பேசும் திராவிடர்கள் என்பதால் திராவிட நாடு எனப் பெயர் பெற்றது. இத்திராவிட நாட்டை ஆங்கிலேயர்கள் அவர்களுடைய நலனுக்காக இந்திய நாட்டுடன் இணைத்து வைத்திருந்தனர் என்பது ஆராய்ச்சியாளர் சுட்டும் குற்றச்சாட்டாகும்.

"எங்களது இலட்சியம் விடுதலை. அதாவது அன்னியக் கட்டுப்பாட்டுகள் அனைத்திலிருந்தும் விடுபடுதலாகும்."[43] என ஆங்கிலேயரிடம் அடிமைப்பட்டுக் கிடந்த அவல நிலையிலிருந்து விடுபட விடுதலை வீரர் விபின் சந்திரபால் எழுப்பியது இப்புரட்சிக்குரல். அதுபோல,

"அமைய வேண்டியது தனிஅரசு!

பெற வேண்டியது முழு உரிமை!

ஒழிக்கப்பட வேண்டியது வடநாட்டு ஏகாதிபத்தியம்!

விலக வேண்டியது டில்லிப் பேரரசின் பிடியிலிருந்து!"[44]

எனத் தம் விடுதலை பற்றிய கொள்கையை வெளிப்படுத்தி வலியுறுத்துகின்றார் அண்ணா. ஆனால் அண்ணா ஆங்கிலேயரிடம் இருந்து விடுதலை பெறுவதைக் காட்டிலும் மக்கள்

ஆரியரிடம் இருந்து விடுதலை பெற வேண்டும் என்ற சிந்தனையுடன் பெரியாருடன் இணைந்து பணியாற்றினார். இந்தியா விடுதலை அடைந்த பிறகு மைய அரசிலே வடநாட்டாருடைய பங்களிப்பே மிகுதியாக இருந்தது. இதனால் தென்மாநிலங்கள் கண்டுகொள்ளப்படவில்லை என்ற காரணத்தினால் ஏற்கனவே இங்கு இருந்த திராவிட நாட்டை இந்தியாவில் இருந்து பிரித்துத் தர வேண்டும் என்ற கோரிக்கை வலுப்பெற்றது. இக்கோரிக்கை திராவிட இயக்கத்தின் கொள்கையாகவே கொள்ளப்பட்டது. உலகில் எங்கெல்லாம் ஆதிக்க உணர்வு தலை தூக்குகிறதோ அங்கெல்லாம் அடிமையுணர்வு இருந்தே தீரும். எங்கெல்லாம் அடிமையுணர்வு மிகுந்து காணப்படுகிறதோ அங்கெல்லாம் ஆதிக்க உணர்வு செலுத்த ஒரு கூட்டம் இருந்து கொண்டுதான் இருக்கும். ஒருவரை ஒருவர் ஏய்த்து வாழும் நிலை இல்லாதிருக்கும் போதுதான் உலகம் சமநிலையை அடையும். மக்கள் கவலையில்லாமல் இருப்பர். பிறரை ஏமாற்றி வாழும் நிலை இல்லாமல் இருக்க வேண்டுமானால் தனியுடைமைச் சமுதாயம் ஒழிக்கப்பட வேண்டும். சமவுடைமை மலர வேண்டும். இந்நிலையை அடைய ஒவ்வொரு நாட்டு விடுதலை வீரர்களும் போராடுகின்றார்கள். ஆனால் அவர்களின் வெற்றி அவர்கள் மேற்கொள்ளும் முறையிலும், கொள்கை உறுதியிலுமே அடங்கியிருக்கிறது.

விடுதலை வீரர்கள் விடுதலைக்குப் பல்வேறு வழிகளை மேற்கொண்டு செயலாற்றுகின்றனர். பாரதி தனது கவிதையின் வழியிலே மக்களுக்கு எவ்வாறு விடுதலை உணர்வை ஊட்டினாரோ அவ்வகையில், அண்ணா முழங்கிய பேச்சும், அவர் எழுதிய எழுத்தும் அவர் காலத்தில் வாழ்ந்த, வீழ்ந்து கிடந்த தமிழ்ச் சமுதாயத்தைத் தட்டி எழுப்பி உணர்வு கொள்ளச் செய்தன.

திராவிடர் கழகத்தில் அண்ணாதுரை இடம்பெற்றிருந்த பொழுது, பெரியாரின் திராவிட நாடு கொள்கைக்கு ஆதரவு நல்கினார். திராவிட முன்னேற்றக் கழகத்தின் ஆரம்ப காலக்கட்டக் கொள்கையிலும் இது இடம்பெற்றிருந்தது குறிப்பிடத்தக்கது. இந்தியா மொழிவாரி மாநிலமாக அந்தந்த மாநில மொழிகளுக்கு முக்கியத்துவம் தரும் வகையில் கன்னடம், தெலுங்கு மலையாளம் எனச் சென்னை இராசதானியிலிருந்து (மெட்ராஸ் இராஜதானி) அந்தந்த மொழிவாரியான மாநிலங்கள் பிரிக்கப்பட்டு, தமிழர்கள் வாழும் பகுதி மதராஸ் மாநிலமாக உருவாக்கப்பட்டது. இதன் உள்ளார்ந்த உண்மையை அறிந்த பிறகு அண்ணாதுரை திராவிட நாடு திராவிடர்களுக்கே என்ற கோரிக்கையை கைவிட்டு தமிழ்நாடு தமிழர்களுக்கே என்று மாற்றினார்.

இந்திய சீனப் போர் இந்திய அரசியலமைப்பில் சில மாறுதல்களை உருவாக்கியது. இந்தியாவின் 16 வது திருத்தச் சட்டம் (பிரிவினைவாத தடைச்சட்டம்) பிரிவினைவாதத்தை முற்றிலும் தடைசெய்யும் விதமாகக் கொண்டுவரப்பட்டது. அதன் விளைவாக திமுக, திராவிட நாடு கோரிக்கையை வலியுறுத்துவதிலிருந்து தன்னை விலக்கிக் கொண்டது. திமுகவின் தனித்தமிழ்நாடு கோரிக்கை கிடப்பில் போடப்பட்டது. அதுமுதல் அண்ணாதுரை நடுவண் அரசின் இணக்கமான ஆதரவைத் தென்னிந்திய மாநிலங்கள் பெறும் விதமாகத் தன்னுடைய மாநில சுயாட்சிக் கொள்கையினை வலியுறுத்த ஆரம்பித்தார். தமிழகத்தின் மாநில சுயாட்சியைப் பெரிதும் வலியுறுத்தினார்.

தமிழகம் பல்வேறு இயற்கை வளங்களைத் தன்னகத்தே கொண்டு சிறப்புடன் விளங்குவது. பழங்காலந்தொட்டே பல்வேறு காரணங்களுக்காக வேற்று நாட்டவர் இங்கு வருகை புரிந்தனர். வேற்று நாட்டவரின் வருகையால் அவர்தம் இன, மொழி, பண்பாட்டுக் கூறுகள் தமிழர்களிடத்தில் தடம் பதித்தன. புதியனவற்றை ஏற்றுக் கொண்ட தமிழர்கள் பழமையை மறந்தனர்.

தமிழகத்தில் பல்வேறு இனங்கள் வந்து குடியேறின என்றாலும் பரவலாக அவ்வினங்களால் தாக்குண்ட தமிழினம் ஆரிய இனத் தாக்கத்தால் வெகுவாக வீழ்த்தப்பட்டு மீண்டும் எளிதில் எழ முடியாதபடி சாதி, சமயப் பிடிப்புகளிலும், மூடநம்பிக்கைகளிலும் மூழ்கடிக்கப்பட்டது. ஆரிய இனத் தாக்குதல்களுக்கு உள்ளான மக்களின் இயல்பு பார்ப்பனியமாகச் செயல்பட்டது. சமுதாயத்தில் உயர்ந்த நிலையில் உள்ள ஆரியர் அல்லாதவரிடமும் பார்ப்பனியத்தின் தன்மை வெளிப்பட்டது. பார்ப்பனியப் பண்புடையவர்களை அண்ணா வடவர்கள், ஆரியர்கள், பார்ப்பனர்கள் என்று சுட்டுகிறார்.

ஆரியத் தாக்கத்தால் சீரழிவிற்குள்ளான தமிழினம் மேலும் சீரழிவில் சிக்காமல் காக்கவும் வேற்று இனத்தவரின் தாக்குதலிலிருந்து தமிழர்களை மீட்கவும் தந்தை பெரியார் பணியாற்றினார். அவ்வழியில் செயலாற்றிய அண்ணாவும் தமிழின மீட்சியில் தனிக்கவனம் செலுத்தினார்.

தரணி மெச்ச வாழ்ந்த தமிழினம், இடையில் ஏற்பட்ட மதிமயக்கத்தால் தாம் யார் என்பதை உணராத இனமாக விளங்குவதையும், அதற்குக் காரணமாக விளங்கிய ஆரிய இன இயல்புகளையும் வடவர்களின் மேலாண்மையையும் அண்ணா தனது இலக்கியங்களில் பதிவு செய்துள்ளார். தமிழர்களைப் பற்றி இழிவாகப் பேசிய ஆரிய மன்னரான கனக விசயனை செங்குட்டுவன் வென்று கண்ணகியின் கோயிலைக் கட்ட அவர்களையே கல்சுமந்து வர வைத்து இழுத்து வரும் வேளையில், "வஞ்சனையைக் கக்கும் உமது கண்கள், எமது தமிழரின் கண்கள் உமிழும் வீரக் கனலால் குருடாகட்டும்! மலையெனத் திரண்டுள்ள எம் தமிழ் வீரரின் தோளைக் கண்டதும், அவர் தம் தாளிலே வீழ்ந்து, பணிய வாருங்கள். தமிழகத்தைத் தாழ்வாகப் பேசியவன் கதி என்னாயிற்று என்பதை உலகு உணரட்டும். கர்வம் பிடித்துத் தமிழரை ஏசிய நீங்கள் கல் சுமந்து வாரீர் தமிழகத்திற்கு. உங்கள் தலையிலே ஏற்றிவைக்கும் கல் கொண்டு, வீரப் பெண்மணி கண்ணகிக்குக் கோவில் கட்டுவோம். வீரர்காள், தமிழகத்தின் மானத்தைக் காத்த தோழரே, ஏற்றுங்கள் கல்லை, இந்தக் கயவர் சிரமீது. சுமக்கட்டும்! இந்தச் சூது தவிர வேறறியாக் கூட்டம்! தமிழகத்தின் புகழின் பாரம் தெரியட்டும்."[45] எனக் கூறும் வீரனின் வாயிலாக அண்ணா ஆரிய இனத்தின் கொட்டத்தைத் தமிழினம் அடக்கிய வரலாற்றைக் கூறி அதன்மூலம் தன் இனத்தைச் சிறப்பிக்கிறார்.

'பிரசங்க பூஷணம்' என்ற சிறுகதையில் தமிழரின் குணத்தையும் பிராமணர்களின் குணத்தையும் கூறுமிடத்து அண்ணாவின் இனக் கொள்கை வெளிப்படுகிறது. "பிராமணர்களைப் புகழ்ந்தே பேசிவிட வேண்டும். ஏன் தெரியுமா? நாம் தமிழர். ஆகவே நாம் என்ன செய்தாலும், எதைப் பேசினாலும், எப்படி நடந்து கொண்டாலும், நமது தமிழ் மக்கள் நம்மைக் கெடுக்கமாட்டார்கள். பிராமணர்களோ நமது இனமல்ல. ஆரியம் நுழைந்து நம்மவரை அடுத்துக் கெடுத்திருக்கிறது."[46] என்ற அண்ணாவின் கூற்று தமிழினம் மற்றும் ஆரிய இனம் குறித்த பார்வையைக் காட்டுகிறது. இதன் மூலம் தமிழினத்தின் சிறப்பை எடுத்துக்காட்டுகிறார்.

ஆண்களுக்கு அஞ்சி வாழும் பண்பு தமிழ்ப் பெண்களுக்கு உரியதல்ல என்ற கொள்கையை 'கலிங்கராணி' புதினத்தில் வரும் மருதவல்லியின் வாயிலாக உணர்த்துகின்றார். அதிலும் தமிழ்ப்பெண்ணான ஒரு நாட்டு அரசியின் வீரத்தை இதில் காட்டுகிறார். இக்கதையில் கரிமுகன் என்பவன் படைநடத்திச் சென்று அரண்மனையை முற்றுகையிட்டு அரசியை நேருக்கு நேர் சந்திக்கிறான். அச்சந்திப்பில் அரசியான மருதவல்லி, கரிமுகனைப் பார்த்து, "போரிடும் ஆண் மகனைக்கண்டு பெண் பதுங்குவது தமிழ்க்குலப் பண்பல்ல."[47] என்று கூறுகின்றாள். இக்கூற்று கரிமுகனிடம் அவள்

தனித்திருந்து பேச அவள் தயாராகும்போது அவளது தமிழ்ப்பண்பும் தகைசான்ற வீரமும் அடியோடு பட்டுப்போகவில்லை என்பதைக் காணமுடிகின்றது. இவ்வாறு தமிழரின் வீரத்தையும் தமிழ்ப்பெண்ணின் மாண்பையும் வெளிப்படுத்துகிறார்.

## ஆரிய எதிர்ப்பு

தந்தை பெரியார் தனிப்பட்ட முறையில் எந்தப் பார்ப்பனரையும் வெறுத்தவரல்லர். பார்ப்பனியக் கொள்கைகளே பிற இனங்களின் தன்மான உணர்வுக்குத் தடையாக இருக்கின்றன என்பதைத் தெளிவுபடுத்தினார். கொள்கைகள் மனிதர்களால் சமுதாயச் சூழ்நிலைக்கு ஏற்ப உருவாக்கப்படுகின்றனவே அன்றித் தானாக உருவாவதில்லை. உருவாக்கபட்ட கொள்கை கடுமையாக எதிர்க்கப்படும்போது அக்கொள்கைகளால் ஏற்றம் அடைவோரின் எதிர்ப்பு தோன்றத் தான் செய்யும்.

பார்ப்பனியக் கொள்கைகள் பார்ப்பனர்களின் உணர்வு கருதியனவாகவே அமையும்போது அவற்றின் எதிர்ப்பாளர்கள் பார்ப்பனர்களின் எதிர்ப்புக்கு உள்ளாகாமல் இருக்க முடியாது. திராவிட இன உணர்வு பெறப் பார்ப்பனியக் கொள்கைகள் வெகு விரைவில் திராவிடர்களின் உணர்விலிருந்து அகற்றப்படவேண்டும் என்றார் தந்தை பெரியார். அக்கொள்கைகள் ஒழிப்புப் பணியைப் பொறுத்த வரையில் தந்தை பெரியாரை ஓர் ‘அதிர்ச்சி வைத்தியம் செய்தவர்’ என்றார் அண்ணா. பெரியார் சீர்திருத்தப்பணி இவ்வாறு இருக்க அவரைப் பார்ப்பனச் சாதியினர் மிகப் பெரும் எதிரியாகக் கருதினர். இவர்களுக்கு அண்ணா நாங்கள் எதிர்ப்பது பார்ப்பனர்களை அல்ல என்றும் பார்ப்பனியத்தைத் தான் எதிர்க்கிறோம் என்றும் தெளிவுபடுத்துகிறார். அதோடு மனம் மாற்றம் பெற்ற பார்ப்பனர்களை உடன் இணைத்துக் கொண்டு பார்ப்பனியத்தை ஒழிக்கும் பணியில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டார்.

ஆரியத்தைத் தன் சுய லாபத்திற்காகவோ, தனிப்பட்ட வெறுப்பின் காரணமாகவோ அண்ணா எதிர்க்கவில்லை. அதோடு கண்மூடித்தனமாகவும் எதிர்க்கும் வழக்கம் கொண்டிருக்கவில்லை. பிற மக்களை அடிமைப்படுத்தும் நோக்கத்துடனும், சமுதாயத்தில் பல சடங்குமுறைகளையும் மூடப்பழக்கவழக்கங்களையும் பரப்பி வரும் நிலையையே எதிர்த்தார். அதனை, “சமுதாயக் கோளாறுகளை நீக்க வேண்டும், நீக்கினால், நாட்டிலே ஒற்றுமை ஏற்படும். அரசியல் அதிகாரம் நிலைக்கும். . . இந்தக் கோளாறுகளுக்கு மதப் போர்வை இருக்கிறது. எனவே இந்தப் போர்வையைக் கிழித்தெறிந்து விட வேண்டும். உண்மையான கடவுள் தன்மையும், சமுதாயத்தைக் கெடுக்கும் சேறு போக்கப்பட்ட சன்மார்க்கமும் தழைக்க வேண்டும். இதற்காக மக்களிடையே ஓர் விழிப்பு, எழுச்சி காண வேண்டும். இதைக் காணக் கபடக்கருத்து நிரம்பிய வர்ணாஸ்ரமம் தொலைக்கப்பட வேண்டும். வர்ணாஸ்ரமம் ஒழிய வேண்டுமானால், அதன் அரணான ஆரியம் அழிக்கப்பட வேண்டும்.”[48] என்ற அவரின் கூற்று ஆரியத்திற்கெதிரான கொள்கைக்கான காரணத்தைத் தெளிவுபடுத்துகின்றது.

வடக்கு வளர்கிறது, தெற்கு தேய்கிறது என்பது அறிஞர் அண்ணா அடிக்கடி பயன்படுத்திய ஒரு தொடர். ஆரிய இனத்தாரின் ஆதிக்கமே தமிழ் இனம் இழிவுபட்டதற்குக் காரணம் என்பது அண்ணாவின் கொள்கையாகும். ஆரிய நஞ்சின் கலப்பில் காரணந்தொட்டுப் பிறந்த சாதி ஆரிய ஆதிக்கத்தை வளம் பெறச் செய்தது. ‘புதிய சிந்தனைக்கும் கண்டுபிடிப்புகளுக்கும், அறிவியலுக்கும் பகையான சமயம் மனிதனை அடிமையாக்கும் வலிவுடையது,’ என்பது அறிஞர் இங்கர்சாலின் கருத்தாகும். இவர் கொள்கையை அடியொற்றியே அண்ணாவும் மூடநம்பிக்கைகளைப் பேணி வளர்க்கும்

சமயப்பிணியால் துடிக்கும் தமிழ்ச் சமுதாயத்தைத் திருத்த முயன்றார். அதற்கேற்பவே அண்ணா ஆரியத்தின் நச்சுத்தன்மையை விளக்க, 'தசாவதாரம்' போன்ற புதினங்களையும், 'சிவாஜி கண்ட இந்து ராஜ்ஜியம்' போன்ற நாடகங்களையும் படைத்தார். சிவாஜி கண்ட இந்து ராஜ்ஜியம் நாடகம் இந்தியா முழுவதையும் அச்சுறுத்திய ஆற்றல் மிக்க சிவாஜி, ஆரியத்தின் சூழ்ச்சிக்கு இரையான வரலாற்றை மையமாக வைத்து எழுதப்பட்டது. தமிழ்ச் சமுதாயத்தைச் செம்மையடையச் செய்ய வழிகாணும் படைப்பாக இதுபோன்ற படைப்புகளை அண்ணா மலரச் செய்துள்ளார்.

'சிவாஜி கண்ட இந்து ராஜ்ஜியம்' என்னும் நாடகத்தில் குளத்தில் குளித்ததால் பிராமணர் கூட்டம் பச்சை என்கின்ற பிற சாதியனை அடித்துத் துன்பப்படுத்திய நிகழ்வில் வரும் உரையாடலில்,

"ஆண்டி : பச்சை! என்ன நடந்தது? முரட்டு மாடு ஏதாவது இடித்துக் காயப்படுத்தினதா? வெறிநாய் மேலே விழுந்து கடித்ததா? கொள்ளைக்காரப் பசங்க தடியாலே தாக்கினாங்களா? அழாமே சொல்லு பச்சை.

பச்சை : ஆமாம்! முரட்டு மாடு தான் மேலே விழுந்து முட்டுச்சி. வெறி நாய்தான் கடித்தது. கொள்ளைக் காரனுங்கதான் என்னைத் தடியாலே தாக்கினாங்க.

ஆண்டி : இப்படி ஜன்னி கண்டவன் போலப் பேசினா நான் என்னான்னு நினைக்கிறது? முரட்டு மாடான்னா அதுக்கும் ஆமாங்கிறே! வெறி நாயான்னா அதுக்கும் ஆமாங்கிறே! கொள்ளைக்காரனுங்களான்னா அதுக்கும் ஆமாங்கிறே! நான் என்ன செய்யறது? யார் செய்தா இந்த அக்கிரமத்தை?

பச்சை : அந்தக் கும்பல்தான். ஆளை ஏச்சுப் பிழைக்குதே அந்தக் கூட்டந்தான்.

ஆண்டி : யாரு? ஐயமாரா?

பச்சை : அந்தப் பாழாய்போன பட்டாச்சாரிக் கூட்டந்தான்."[49]

எனப் பார்ப்பனர்களின் செயல்களையும், அதனால் பாதிக்கப்படும் மக்களின் நிலையையும் விவரிக்கிறார். இதுபோன்ற செயல்களிலிருந்து மக்களை விடுவிக்க வேண்டுமானால் பார்ப்பனர்களை மதித்து நடக்கும் பாங்கு இச்சமுதாயத்தை விட்டு அகல வேண்டும் என்ற நோக்கில் தன் படைப்புகளில் வரும் பார்ப்பனர்களைக் கடுஞ்சொற்களைப் பயன்படுத்திச் சாடுகிறார் அண்ணா. பார்ப்பனர்களின் பிடியில் இருந்து இச்சமுதாயத்தை விடுவிக்கும் அண்ணாவின் எண்ணம் இவ்வெதிர்ப்புகளின் வழி புலப்படுகிறது.

அண்ணா, உழைக்காமல் பிறர் உழைப்பில் வாழும் வஞ்சகர்கள் என பிராமணர்களைக் கூறுகிறார். பிராமணர்களின் உழைப்பை, ". . . . இவங்க இங்கே சொன்னது அவ்வளவும் புளுகு-அண்டப்புளுகு....மேதாவி, ஞானஸ்தன்னு, நம்ம ஜனங்க விவரம் தெரியாததாலே, புகழ்ந்துகிட்டு இருக்கிறாங்க....இவங்களெல்லாம் மேதாவியுமில்லே, மேலான குலமுமில்லே...ஏமாந்தவன் முதுகிலே ஏறிச்சவாரி செய்வதிலே கெட்டிக்காரனுங்க....பாடுபடாது வாழக் கத்துகிட்டவங்க....பார்க்கறயே கண்ணாலே, அவங்கள்ளே ஒரு ஆசாமியாவது, நாம் மாடு போல உழைக்கிறோம், நாய் போல அலைகிறோமே, அதுபோல, கஷ்டமான வேலை செய்கிறாங்களா. . . . . . . . குப்பை கூட்டறோம்-கட்டை வெட்டறோம்-மூட்டை சுமக்கிறோம்-கல் உடைக்கிறோம்-வண்டி இழுக்கிறோம்-படாதபாடுபட்டுப் பிழைக்கிறோம்.... . . . அவங்களோட வாழ்வைப் பாரேன்....அழுக்குப்படுதா நகத்திலே...."[50] என அண்ணா எள்ளுகிறார். இவர்களின்

இவ்வாழ்க்கை முறையை அண்ணா எதிர்க்கிறார். வயலிலே கிடந்து உழன்று உழைக்கின்றவனுக்கு உணவு இல்லாத நிலையில் எவ்வித உழைப்பையும் கொடுக்காத இவர்கள் மூன்று வேளை உணவுடன் சுகபோகமாய் இருப்பது கண்டு அண்ணா கோபம் கொள்கிறார்.

பிராமணர்கள் தாங்கள் சுகமாக வாழச் சமுதாயத்தில் பல செய்முறைகளைப் பழக்கிவிட்டுச் சென்றுவிட்டனர். அப்படிப்பட்ட செய்முறைகள் இன்று அவர்களின் வாழ்வாதாரமாகவும் இருந்து வருகின்றன. அவர்கள் பிழைப்பிற்காகச் செய்த ஏற்பாடுகள் இன்று சமுதாயத்தில் வளர்ந்து மக்களைச் சிந்திக்கக்கூடச் செய்யாமல் பின்பற்றும் பழக்கங்களாக உள்ளன. இப்படிப்பட்ட பழக்கங்களை இச்சமுதாயத்தை விட்டு அகற்ற வேண்டும் என்ற கொள்கையுடன் செயலாற்றிய அண்ணா அதே கொள்கையை மனதில் ஏற்றி இறுதி வரை செயலாற்றினார். இதனை, "நம்ம சந்ததிகளும் நாமும் சுகமா சாப்பிட்டுண்டு இருக்கச் செய்த ஏற்பாடுகளிலே இதுவும் ஒண்ணு. . ."[51] எனப் பிராமணப் பெண்மணியின் வாயிலாகவே பிராமணர்களின் சூழ்ச்சிகளை வெளிப்படுத்துகிறார்.

சமுதாயத்தில் நிலவும் இம்மாதிரியான கேடுகளைச் சீர் செய்யும் நோக்கில் பெரியார் பாடுபட்டு வந்தார். அவரின் திராவிட இயக்கம் தேர்தலில் போட்டியிடாது என்ற கொள்கையுடன் செயல்பட்டு வந்தது. இந்நிலையில் திராவிட இயக்கம் தேர்தலில் போட்டியிட வேண்டும் என்ற கருத்து தொண்டர்களிடத்திலே தோன்றியிருந்தது. அதிகாரத்தைப் பெற்றுவிட்டால் அனைத்தையும் சரிசெய்து விடமுடியும் என அவர்கள் நினைத்தனர். அவர்களின் எண்ணம் தவறு என்பதைச் சுட்டிக்காட்டும் விதமாக அண்ணா, "அரசியல் அதிகாரம் பெற்றுவிட்டால் போதும், ஆரியரின் ஆதிக்கத்தை அகற்றிவிட முடியும் என்று கருதுபவர் சிலருண்டு. மத, சமுதாயத் துறைகளிலே, பார்ப்பனருக்கு ஆதிக்கம் இருக்கு மட்டும், வெறும் அரசியல் அதிகாரத்தைக் கொண்டு, இனத்தை, மானத்தோடு வாழச் செய்ய முடியாது. அதுமட்டுமா? ஆரியரின் பிடி, மத சமுதாயத் துறைகளில் பலமாக இருக்கும்போது, ஆட்சித்துறை, நமது இனத்தவரிடம் இருந்து பயனில்லை. . ."[52] எனத் தெளிவுபடுத்துவதோடு, ஆட்சியிலும் ஆரியரின் தலையீடு இருக்கும் என்பதை எடுத்துக்காட்டி, அதனால் ஆரியத்தைச் சமுதாயத்தில் இருந்து அகற்றும் நோக்கில் அதற்கெதிரான கருத்துக்களை அண்ணா தனது படைப்புகளில் கூறுகின்றார்.

ஆரியத்தை எதிர்க்கிறேன் என்று கூறிக்கொண்டே எவை எவை ஆரியத்தன்மை மிக்கது எனத் தெரியாமல் அவைகளைத் தினந்தோறும் கடைபிடித்துக் கொண்டே வரும் பெரிய மனிதர்களைப் பற்றிக் கூறும் நாடகம் 'ஆலை ஆறுமுகம்' என்பதாகும். இந்நாடகத்தில் ஆரியம் என்பது பற்றித் தெரியாத ஆலை ஆறுமுகம் அதனை ஒழிக்க வேண்டும் என்று கூறும்பொழுது முத்துராஜன் அவருக்கு ஆரியத்தையும் ஆரியத்தை அவர் எப்படிக் கடைபிடித்து வருகிறார் என்பதையும் விளக்கிக் காட்டும் விதம் ஆரியத்திற்கு எதிரான அண்ணாவின் மனஓட்டத்தைக் காட்டுவதாய் உள்ளது. இதில் முத்துராஜனின் வாயிலாக அண்ணா, "நீர் வணங்குவது ஆரிய தேவனை. அதாவது ஆரியனால் கற்பிக்கப்பட்டு, ஆரியனை உயர்ஜாதியாக்கி நம்மைத் தாழ்ந்தவராக்கி, அதற்குப் பெயர் தர்மம் என்று கூறி, அந்தத் தர்மத்தினின்றும் தவறினால் நரகம் என்று மிரட்டும் தேவனை வணங்குகிறாய். ஆரிய வேத சாஸ்திரங்களுக்குக் கட்டுப்படுகிறாய். ஆரியச் சடங்கு - சட்ட திட்டங்களின்படி நடக்கிறாய், ஆரியனை, ஆச்சார்ய புருஷனாகக் கொண்டிருக்கிறாய், பிரார்த்தனை முதற்கொண்டு பிணப்பூஜை வரையிலே, ஆரியனைக் கொண்டே நடத்திக் கொள்கிறாய், இவ்விதம் ஆரிய தாசனாக இருந்து கொண்டே, அரசியலிலே ஆரிய ஆதிக்கம் கூடாது, அதை ஒழிக்க வேண்டும் என்று கட்சி கூட்டுகிறாய். இது

விந்தையல்லவா?"[53] என இயம்புகிறார். இதன்மூலம் ஆரிய எதிர்ப்பு என்பது வெறும் அரசியல் துறைசார்ந்து மட்டும் இருக்கக் கூடாது, ஆரியத் தன்மை எங்கெங்கு பரவிக்கிடக்கிறதோ எங்கெங்கு ஆதிக்கம் புரிகிறதோ அங்கெல்லாம் அதனை ஒழிக்க வேண்டும் என வாதிடுகிறார் அண்ணா.

தமிழகத்தில் ஆரியரின் வளர்ச்சி மற்றும் செயல்பாடுகள் தமிழ் அறிஞர்களைக் கவலைக் கொள்ளச் செய்தது. மன்னர்கள் கால ஆட்சியில் ஆரியத்தின் இத்தகு வளர்ச்சி நிலையை மன்னர்களிடம் எடுத்துக்கூறி அதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டும் என வலியுறுத்திய நிலை, மன்னர்களும் அறிஞர்களின் கருத்துக்கு மதிப்பளித்துத் தரும் பதிலுரைகள் போன்ற காட்சியை கலிங்கராணியின் புதினத்தில் அண்ணா படைத்துக்காட்டுகிறார். இதனை, "அரசே! இரண்டோர் நாட்களுக்கு முன்பு இங்கோர் ஆரியப் பண்டிதன் தனது கலை பற்றிப் பேசிடக் கேட்டீர். அவன் போன்றோர் செய்து வைத்தப் பிரசாரம், காலப்போக்கை கெடுத்து விட்டது என்பதே என் போன்றவர்களின் அபிப்பிராயம். தமிழகத்திற்கு ஆரியம் புதியதோர் ஆபத்தோ என்று நாங்கள் அஞ்சுகிறோம். . . . . . . . மன்னன் சற்றுநேரம் யோசித்து விட்டு, 'பெரியவரே! அஞ்சாதீர்! அவர்களின் கலை, நீர்மேல் எண்ணெய்போல் தமிழகத்தில் மிதப்பதை நானும் கண்டேன். நாளாவட்டத்தில் அதை நீக்குவோம்; இது உறுதி. ஆரியர் தமிழகத்திலே தமது ஆதிக்கத்தைப் புகுத்தார்; புகுத்த முயன்றால், கனகவிசயர் கண்ட கதியே காண்பர்'"[54] என்ற உரையாடல் தெளிவுபடுத்துகின்றது.

## கடவுட் கொள்கை

இந்திய வரலாற்றில் நெடுங்காலமாக ஆதிக்கம் செலுத்தி வரும் சமயம் மக்களின் கீழ்முகச் சக்தியாகச் செயல்பட்டு வருகின்றது. பகுத்தறிவு இயக்கம் மக்களைப் பின்தங்கச் செய்யும் சமய நம்பிக்கையை வேருடன் களைய முற்பட்டது. சமயத்தின் பெயரால் மக்கள் மனத்தில் மூடநம்பிக்கைகள் புகுத்தப்பட்டன. மக்களின் உயர்வு தாழ்வுகளுக்குச் சாதி நிலைக்களனாக இருந்தது. சமுதாயத்தில் மக்களிடையே புரையோடிப் போயிருக்கும் சகுனம், விதி, புராணக் கதைகள், சாதிப்பிரிவினைகள், மூடநம்பிக்கைகள் அனைத்தும் கடவுள் பெயரால் கற்பிக்கப்பெற்றன. மக்கள் மூடநம்பிக்கைகள் என்னும் கண்மூடிப் பழக்கவழக்கங்களிலிருந்து விடுபட வேண்டுமாயின் கடவுள் என்ற கொள்கையை மறுக்க வேண்டும்; மறக்க வேண்டும் என்னும் பெரியாரின் கருத்துக்களை அண்ணா தம் படைப்புகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

அண்ணாவின் கடவுட் கொள்கை என்பது அவர் சார்ந்திருந்த திராவிட இயக்கத்தின் கொள்கையாகவே இருந்துள்ளது. பெரியாரின் சுயமரியாதை இயக்கமோ, திராவிடர் கழகமோ அரசியல் கட்சிகளல்ல. ஒரு கட்டத்தில் சுயமரியாதை இயக்கம் 'தென்னிந்தியர் சமதர்மக் கட்சி' யாக உருவாக இருந்தது. பின்னர் அத்திட்டம் கைவிடப்பட்டது. அறிஞர் அண்ணா திராவிடர் கழகத்தையே அரசியல் கட்சியாக்க முயன்றார். அம்முயற்சிக்குப் பெரியார் துணை நின்றார் இல்லை. எனவே சுயமரியாதை இயக்கமும் திராவிடர் கழகமும் தமிழக அரசியலை வழிநடத்திய, நடத்துகிற பகுத்தறிவு நாத்திக இயக்கங்கள். ஆகவே அதற்குக் கடவுட் கொள்கை பற்றிய தெளிவு இருந்தாக வேண்டும்.

ஆனாலும் இவ்விரு இயக்கங்களும் அதன் தொடக்கக் காலத்திலேயே கடவுட் கொள்கைகளைப் பிரகடனம் செய்யவில்லை. பெரியார் 1967இல் தஞ்சை விடயபுரத்தில் கடவுட் கொள்கைக்கான முழக்கங்களை வெளியிட்டார். பெரியாரை, குடிஅரசு வெளியீடுகளின்படி ஆய்ந்தால் அவர் கடவுள் நம்பிக்கையாளராக, சமய

சீர்திருத்தக்காரராக, சமுதாயச் சீர்திருத்தக்காரராக, அதற்குப் பின்னர் பகுத்தறிவாளராக, இறுதியாக நாத்திகராகத் தம்மைப் பிரகடனப்படுத்திக்கொள்கிறார். பேரா. ந.இராமநாதன் பெரியாரைப் 'பிறவி நாத்திகர்' என்று குறிப்பிடுவார். பெரியார் 1930களிலும் 1940களிலும் பகுத்தறிவு மற்றும் நாத்திகக் கொள்கைகளுக்கு ஆட்பட்டார் எனினும் அவற்றை அவர் அதிகாரபூர்வமாக 1967இல் தான் அறிவிக்கிறார். அண்ணாவின் நிலை பெரியாரைப் போன்றது அல்ல. அவர் திராவிடர் கழகத்தையே அரசியல் கட்சியாக்க முனைகிறார். 1944இல் சேலம் மாநாட்டுத் தீர்மானத்தின் பிற்குறிப்பில் அவரது மனம் புலப்படும்.

திராவிடர் கழகம் அரசியல் கட்சியாக மாறி அதிகாரத்தைக் கைப்பற்றி, கொள்கைகளைச் செயல்படுத்த வேண்டுமென்பதுதான் அண்ணாவின் திட்டம். ஓர் அரசியல் கட்சி மக்களிடம் செல்லும்போது சமயம், கடவுள் போன்ற கருத்துகளில் எச்சரிக்கை தேவையாகிறது. ஆகவே அவர் 'ஒருகடவுள் உணர்ச்சியைப்' பற்றிக் கூறுகிறார். இதிலிருந்து அப்போதைய திராவிடர் கழகத்திற்கு ஒருகடவுள் உணர்ச்சி என்கிற ஒரு கொள்கை இருந்து வந்து இருக்கிறது. அண்ணாவின் நோக்கம் என்பது திராவிடர் கழகத்தை மக்கள் இயக்கமாக மாற்ற வேண்டும். ஆகவே அப்போதே அண்ணா இரண்டு விதக் கருத்துகளை முன்வைத்தார். பகுத்தறிவு வாதம் நாத்திகமல்ல என்பது ஒன்று. திராவிடர் கழகம் தேர்தலுக்கு நிற்க மக்கள் அனுமதியைக் கோர வேண்டும் என்பது மற்றொன்று.

பெரியாரின் நாத்திகக் கொள்கைக்கு மாற்றாக அறிஞர் அண்ணா 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' எனும் முழக்கத்தை வைக்கவில்லை. இரண்டு முழக்கங்கள் அறிவிக்கப்பட்ட காலக்கட்டங்களும் அதன் நோக்கங்களும் வெவ்வேறானவை. ஆனால் திராவிட இயக்கத்தின் அடிப்படைக் கொள்கையை அடையவே அவை அறிவிக்கப்பட்டன. ஒன்று வெளிப்படையாகவும் மற்றொன்று உத்தியாகவும் அறிவிக்கப்பட்டன. தி.மு.க.வின் கொள்கை, குறிக்கோள், கோட்பாடு, திட்டம் ஆகியவற்றில் கடவுட் கொள்கை பற்றி எதுவும் தெரிவிக்கப்படவில்லை. ஆனால் 'பகுத்தறிவு' பற்றிய குறிப்பு உண்டு.

பெரியார் தமது பகுத்தறிவு இயக்கத்தை அதன் வளர்ச்சிப் போக்கில் நாத்திக இயக்கமாக அறிவித்தார். முன்னர் குறிப்பிட்ட ஒருகடவுள் உணர்ச்சி திராவிடர் கழகமாக இருக்கின்றபோது, 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பதாக அண்ணா தமது உரையாடல்களில் அமைத்தார். திரைப்படங்களிலும், நாடகங்களிலும் எழுதிக்காட்டினார். தம்பிக்குக் கடிதங்களிலே வரைந்தார். இதற்குக் கட்சியில் விளக்கங்கள் அளிக்கப்பட்டன.

ஒரு மாநாட்டிற்குத் தலைமையேற்ற ஈழத்தடிகள், 'நாம் நாத்திகர்களுமல்ல ஆத்திகர்களுமல்ல பகுத்தறிவுவாதிகள்' என்றார். நாவலர் நெடுஞ்செழியனிடம், "திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்தோர் 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்று கூறுவதன் பொருள் என்ன?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர் 'ஒன்றே குலம்' எனும் போது ஒரே ஏதுவின் கீழ்க்கூடும் மக்கள் பிறப்பினால் ஏற்றத்தாழ்வு கொள்ளாமல் ஒரு குலமக்களாய்த் திகழும் மனித குலத்தைக் குறிப்பிடுகிறோம் என்றும், 'ஒருவனே தேவன்' எனும் போது மனித சமுதாயம் போற்றி ஏற்றுக் கொள்வதற்குரிய நல்லறிவாகிய 'அறிவை'க் குறிப்பிடுகின்றோம் என்றும் விடை அளித்தார்."[55] நாவலரின் இவ்விளக்கம் அண்ணாவின் இக்கொள்கைக்கு மிகப் பொருத்தமான சிந்தனையாக இருப்பதைக் காணமுடிகின்றது.

இதற்குப் பின்னர் 1956இல் அண்ணா - வினோபா சந்திப்பு நடைபெறுகிறது. உங்கள் சமுதாயக் கொள்கை என்ன என்று வினோபா கேட்கிறார். 'ஒன்றே குலமும் ஒருவனே

தேவனும்' எனத் திருமூலரின் பெயரைக் குறிப்பிட்டே அண்ணா பதிலளித்தார். அப்போது அண்ணா தமது பகுத்தறிவு நோக்கை விட்டுவிட்டு அம்முழக்கத்தைக் கூறவில்லை.

ஆகவே பெரியார் கொள்கைக்கும் முழக்கங்களுக்கும் எதிரானதல்ல அண்ணாவின் முழக்கம். திராவிட இயக்கத்தின் அடிப்படைக் கொள்கையான, 'வர்ணங்கள் அற்ற, சாதிகள் அற்ற, தமிழியம் சார்ந்த, பகுத்தறிவுடன் கூடிய சமதர்ம சமுதாயம் அமையப்பாடுபடுவது' என்பதற்கான 'உத்தியே' அண்ணாவின் முழக்கம். அது பெரியார்க்கு எதிரானது என்று திரித்துக் கூறுவது அண்ணாவைப் பெரியாரிடம் இருந்து பிரிக்கும் முயற்சியாகப்படுகிறது.

அண்ணாவின் கடவுட் கொள்கையை அறிந்து கொள்ள 2.1.1949 அன்று திராவிடநாடு இதழில் அண்ணா அவர்கள் எழுதிய கட்டுரை உதவும். இக்கட்டுரையில், "ஒருவன் ஒரு பொருளை உண்டென்று கூறுவானாயின், அவன் அப்பொருளைக் கண்டிருத்தல் வேண்டுமன்றோ. எனவே, ஒருவனால் காணப்பட்டு, மற்றவர்களால் காணப்படாத ஒன்றைக் கடவுள் என்பது மத நூலார் கொள்கைக்கே மாறுபட்டதாகும். எப்படியென்றால், காண முடியாதது எதுவோ அதுவே கடவுள் என்பது மத நூலார் கொள்கை. எனவே, காண முடியாதது எது என்று ஆராயுமிடத்து, எது இல்லாததோ அதுவே காணமுடியாததுமாகும் என்ற உண்மை பெறப்படுகின்றது"[56] என்ற அண்ணாவின் கூற்று இடம்பெற்றிருந்தது. இக்கூற்றில் 'எது இல்லாததோ அதுவே காணமுடியாதது' என்னும் தொடர் கடவுள் இல்லை என்ற அண்ணாவின் கருத்தைத் தெளிவாக்கும்.

"கடவுள் என்றால் மனம், வாக்கு, காயம், என்பனவற்றைக் கடந்தவர் என்று பொருள்."[57] எனக் கடவுள் என்பதற்கு அண்ணா விளக்கம் கூறுவர். "மனமே கோயிலாம், நல்லெண்ணமே பூஜையாம், சேவை செய்வதே அபிஷேகமாம், .....நடமாடும் தெய்வங்களுக்குச் செய்யணும் சாமி, அதை மறந்துவிட்டு, கோயிலுக்குக் கொட்டினா புன்யமில்லை"[58] என்றும் கூறுகிறார் அண்ணா. இதன் மூலம் அவருடைய கடவுட் கொள்கையை அறியமுடிகின்றது. மக்களுக்குத் தொண்டு செய்வதே உண்மையான பக்தியாகும் என்ற கொள்கையுடனும், சமுதாயத்தில் கடவுள் பெயரால் நடக்கும் மடமைத்தனத்தை ஒழிக்க வேண்டும் என்ற இலட்சியத்துடனும் அண்ணா செயல்பட்டுள்ளார்.

சாதி - சமய பேதங்களுக்குக் காரணம் மக்களிடம் மண்டிக் கிடக்கும் பல்வேறு கடவுளர்களின் மீதுள்ள நம்பிக்கையும், உருவ வழிபாட்டில் இருக்கும் நம்பிக்கையுமேயாகும். அறிவுக்குப் பொருத்தமான நம்பிக்கை வைத்து அந்நம்பிக்கையின் மீது வாழ்வினை அமைப்பதன்றிக் கண்மூடித்தனமாகக் கடவுள் நம்பிக்கை என்ற பெயரில் கண்டவற்றின் மீதும் நம்பிக்கை வைத்து மோசம் போவதை வெறுப்பவர் அண்ணா. இக்கொள்கையை 'நன்கொடை' என்ற நாடகத்தில் மன்னன் கூறுவதாக அமைக்கிறார். இதனை,

"ச: ஆமாம்? அவா. நாஸ்தீகப் பிரச்சாரம் செய்துதான் நாட்டைக் குட்டிச்சுவராக்கிண்டிருக்கா. . .

ம: கடவுளைக் கும்பிட வேண்டாம் என்றா சொல்கிறார்கள்?

ச: இது கடவுளா, அது கடவுளா, ஆறுமுகமா, ஆனைமுகமா, பசு கடவுளா, பாம்பு கடவுளா, கண்டது அத்தனையும் கடவுள் தானா - என்று பேசறாளே, அது நாஸ்தீகம்தானே. . .

ம: அது எப்படி நாஸ்தீகமாகும். . . கடவுளே கூடாது என்றால்தானே நாஸ்தீகம். . .

ஐ: ஆமாம். . . அது உண்மைதான். . .

ம: கடவுள், கடவுள் என்று கூறிக் கொண்டு கண்டதைப் பூஜிப்பது கூடாது என்கிறார்கள். இதை நாஸ்தீகம் என்கிறீர்."[59]

என்ற உரையாடல் உணர்த்தும். இதில் அண்ணா உருவ வழிபாட்டையும் கண்டதைக் கும்பிடும் பழக்கத்தையும் சாடுவதைக் காணமுடிகின்றது.

பசியால் ஏழைகள் வாடும்போது தெய்வத்திற்கு என்றோ ஒரு நாள் சுற்றி வருவதற்கு பல லட்சம் செலவழித்து வெள்ளி ரதத்தைக் காணிக்கையாகச் செலுத்தும் செல்வச் சீமான்களை அண்ணா விமர்சிக்கிறார். இவர்களைப் போன்றவர்களுக்குக் கடவுளின் அருள் நிச்சயம் கிடைக்காது என்றும் கடவுள் இவர்களின் வேண்டுதலை ஏற்கமாட்டான் என்றும் கூறுகிறார். இவ்வாறு கூறுவதால் கடவுள் உண்டென்ற கருத்தை அண்ணா ஏற்றுக்கொண்டவர் என்று பொருளாகாது. கடவுளை ஏற்றுக்கொண்டவர்கள் கடவுளின் அருளைப் பெற வேண்டும் என நினைக்கின்றவர்களையும் அதற்காக அஞ்சுகிறவர்களையும் இத்தகைய செயலில் ஈடுபடாது மக்கள் சேவையில் ஈடுபட வைப்பதே அவரின் நோக்கமாகும். அதனால் தான் இல்லாத கடவுள்களையும் ஒரு கருவியாகப் பயன்படுத்த எண்ணி அண்ணா தன் படைப்புகளில் படைத்துக்காட்டியிருக்கின்றார். 'வெள்ளி ரதம்' என்ற சிறுகதையில், ஏகாம்பரேசுவரரும், உமாதேவியாரும் பேசிக்கொள்ளும் படியான உரையாடல் இத்தகையதாக இருக்கின்றது. இதில் மக்கள் துன்புறும் நிலையில் வெள்ளி ரதம் காணிக்கை செலுத்தும் அன்பர்களைப் பார்த்து ஏகாம்பரேசுவரர், "யார் ஏழையின் துயரைத் தீர்க்க முன்வராமல் நடமாடும் தெய்வத்தை வழிபடாமல், இருக்கின்றனரோ, அவர்களை, நாம் நமது அருளைப் பெரும் அருகதையற்றவர் என்று ஒதுக்கித் தள்ளிவிடுவோம்."[60] என்று கூறுகிறார். இதில் உண்மையான பக்தி எது என்பதைக் கடவுளைக் கொண்டே விவரிக்கின்றார்.

"ஆறுமுகமும் வேண்டாம், மும்முகமும் வேண்டாம், ஆண்டவன், அன்பர் நெஞ்சிலுறையட்டும்"[61] என்பதே அண்ணா சார்ந்திருந்த இயக்கம் வலியுறுத்தும் கொள்கையாகும். இதை வலியுறுத்தியே 'ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்போம்', 'மக்களுக்குச் செய்யும் தொண்டே மகேசனுக்குச் செய்யும் தொண்டு' போன்ற சொற்றொடர்களை அண்ணா தனது படைப்புகளிலும் சொற்பொழிவுகளிலும் பயன்படுத்தினார். மகேசனை விட மக்கள் தான் எங்களுக்கு முக்கியம் என்ற கொள்கையை 'கடவுளின் கவலை' என்ற சிறுகதையில் வெளிப்படுத்துகின்றார்.

உயிர்ப்பலி கூடாது என்ற கொள்கையைக் கொண்டிருந்த அண்ணா கோவில்களில் ஆடுகள் பலியிடுவதை எதிர்க்கிறார். அவரின் இக்கொள்கையை, தான் வலியுறுத்துவதை விட, எந்தத் தெய்வத்துக்கு ஆடு பலியிடுகிறார்களோ அந்தத் தெய்வம் வந்து தடுத்துக் கூறினால் சிறப்பாக இருக்கும் என விரும்பிய அண்ணா 'மனித மந்தை' என்ற சிறுகதையில் மந்தைவெளி மாரியம்மனுக்குக் காணிக்கையாக ஆடுகளை வெட்ட இருக்கும் நிலையில் மாரியம்மன், "வெட்டாதீர்கள் ஆடுகளை வெட்டினால், வைசூரி போட்டு ஊரையே அழித்துவிடுவேன். நீங்களாடா, என் பக்தர்கள் - நீங்கள் மகா பாதகர்கள்! என் பெயரே மந்தவெளி அம்மன் இந்த மந்தைகளைக் காப்பது என் கடமை. நீங்களோ, இரண்டு ஆடுகளைக் கொண்டு வந்து எனக்கு வெட்ட வந்து விட்டீர்களே. துட்டர்களே! எனக்கு படைக்க நீங்கள் யார்? என் பசி போக்கிக் கொள்ள எனக்கு சக்தியில்லையா? ஆடு வேண்டுமானால் எனக்கு எடுத்துக் கொள்ளத் தெரியாதா?"[62] எனக் கூறுவதாக அமைத்திருக்கின்றார் அண்ணா. இதன்மூலம் உயிர்ப்பலியை ஆண்டவனே கூட விரும்பமாட்டார் என்ற கருத்தையும், உயிர்ப்பலி கூடாது என்கின்ற அண்ணாவின் கொள்கையையும் காணமுடிகின்றது.

மக்களின் மதி மாற்றத்தால் புராணங்கள் இதிகாசங்கள் போன்றவற்றில் வரும் கடவுள்களை எல்லாம் வழக்கொழியச் செய்ய வேண்டும் என்பதை வலியுறுத்தும் விதமாக சப்பானில் நடைபெற்ற நிகழ்வுகளை அடிப்படையாக வைத்து 'குமாரி சூரியா' என்ற சிறுகதையை வடித்துள்ளார் அண்ணா. இச்சிறுகதையில் சப்பானில் புராணங்கள் அடிப்படையில் பின்பற்றி வந்த கடவுளர்களை எல்லாம் முன்னாள் கடவுளர்கள் என மக்கள் புறக்கணித்துவிட்ட செய்தியையும் அத்தகைய மாற்றம் தமிழ்ச் சமுதாயத்திலும் நடைபெறவேண்டும் என்ற எண்ணத்தையும் அண்ணா எடுத்துரைக்கிறார்.

## சாதி எதிர்ப்புக் கொள்கை

மக்கள் சமுதாயத்தின் முன்னேற்றத்திற்குப் பெரும் தடைகளாய் விளங்குவனவற்றுள் சாதி குறிப்பிடத்தக்கது. மற்ற நாடுகளைக் காட்டிலும் இந்தியாவில் சாதியின் பாதிப்புகள் அதிகமாகத் தென்படுகின்றன. மக்களை மண்டியிட வைக்கும் ஆற்றலும் ஆளுமையும் நிறைந்ததாகச் சாதி விளங்குகிறது.

சாதி வேறுபாடு நிலைப்பதற்கும் வகுப்புக் கொடுமைகள் வளர்வதற்கும் நிரந்தரமான ஏற்பாட்டைப் பார்ப்பனர்களே செய்துள்ளனர் என்னும் கருத்துடைய பெரியாரின் வழியில் அண்ணா, திராவிடச் சமுதாயம் சாதித் தளையிலிருந்து மீள வேண்டும் என்ற நோக்கில் படைப்புகளை உருவாக்கினார். ஆரியர்களின் நால்வருணப் பாகுபாட்டின் வழியாகக் கிளைவிட்டுச் சமுதாயத்தை ஆட்டிப் படைக்கும் சாதிகளை வேரோடு களையவும், ஆரியர்களின் தன்னலப் போக்கை எடுத்தியம்பவும் தம் படைப்புகளைப் பயன்படுத்தினார். நாலு சாதிகளை உருவாக்கி அதனுள் பிராமணர் தான் உயர்ந்தவர் என்றும், மற்றவர்கள் அவர்களுக்குக் கீழ் உள்ளவர்கள் என்றும் உள்ள நிலையைக் கண்டித்தும், சமுதாயத்தில் ஆண்டவன் அருள் பெற அறநெறி தேவையே ஒழிய, ஆரியர்களின் காலைக் கழுவி அந்த நீரைப் பருகுவது அவசியமற்றது எனவும் தெளிவுபடுத்துகிறார்.

சாதி ஒழிப்பு என்ற உடன் பார்ப்பனர் எதிர்ப்பு மட்டுமே அதில் இருக்கும் என்று பலர் கருதுவர். ஆனால் பார்ப்பனர்களை எதிர்க்கவில்லை அண்ணா. பார்ப்பனியத்தைத் தான் எதிர்க்கிறார். பார்ப்பனியம் எது என்பதற்கு அவரே, "எட்டிப் போடா சூத்திரப்பயலே! என்ற ஐயர் பேச்சும் ஆரியம் தான்! படையாட்சிக்கு இவ்வளவு உயர்வா? என்று கேட்கும் கேள்வியும் ஆரியம் தான்! மறவர் முன்பு மட்டு மரியாதையோடு நட! தேவர் வருகிறார் எழுந்து நில்! நாடார் அழைக்கிறார் ஓடிவா! செட்டியார் கேட்கிறார் தட்டாமல் கொடு! என்று ஆரியம் பார்ப்பனியம் பலப்பல முறைகளில்"[63] என விளக்கமும் தருகிறார். பார்ப்பனியத்தை எதிர்ப்பது மட்டுமே அவரது நோக்கமல்ல. தீண்டாமை, அடிமைத்தனம் போன்றவை எந்த வடிவில் இருந்தாலும் அதனை எதிர்க்கும் பாங்கு அண்ணாவின் படைப்புகளில் தெரிகின்றது.

திருமணம் புரிந்து கொள்வதற்குச் சாதி தடையாக இருக்கின்றது. அடிமைகளாய் நடத்துவதற்கு மட்டுமல்லாமல் சாதி சமுதாயத்தில் பலவாறு சிக்கல்களை உருவாக்குகிறது. "ஜாதி சனியனைக் கண்டு மிரண்ட எத்தனையோ பேர் தமக்கு உகந்தவரை மணம் புரிந்து கொள்ளாது, அவர்கள் வாழ்வைக் கெடுத்து அவர்களை விபச்சாரிகளாக்கினர்"[64] எனச் சாதியால் உருவாகும் பிரச்சினையைக் கூறி அப்படிப்பட்ட சாதி இச்சமுதாயத்தை விட்டு அகல வேண்டும் என்ற தனது கொள்கையை விளக்குகிறார்.

இயற்கை வழிபாடு கொண்ட திராவிட சமயம் சமண, பௌத்த, ஆரிய சமயங்களின் தாக்குதலால் பின்னடைவு அடைந்தது. இந்நிலையில் சமண, பௌத்தச் சமயங்களை ஒழிக்க

வேண்டிய நிலையும் ஆரிய சமயத்திற்கு உண்டானது. ஆரியர்களின் வைதீகச் சமயம் இப்போட்டியில் தம்மை நிலைநிறுத்திக் கொள்ள, திராவிட சமயத் தெய்வங்களான முருகன் முதலானோரை ஏற்றுக்கொண்டது. இவ்விரு சமயம் சார்ந்த தெய்வங்களுக்கும் இடையே உறவு முறையைக் கொடுத்து ஒவ்வொன்றாக இணைத்தது. இவ்வுறவு முறையின் காரணமாக எண்ணற்ற தெய்வங்களின் வகைப்பாட்டிற்குத் திராவிட சமயம் ஆட்பட்டது. ஆகவே திராவிட சமயத்தில் பல வகையான தெய்வ நிலைகள் காணப்படுகின்றன. இத்தகைய வகைப்பாட்டினை எதிர்த்து அண்ணா அவர்கள் தெய்வ நிலையிலும் மக்களுக்கு ஓர் ஒருமைப்பாடு வேண்டும் என வலியுறுத்துவது அவரின் படைப்புகளில் காணமுடிகின்றது. 'நாம் அனைவரும் திராவிடர் நம்மில் யாதொரு பாகுபாடும் இல்லை' என்று கூறி வருணாசிரம தர்மத்தை ஒழிக்கப் பாடுபட்டார்.

அண்ணாவின் 'வேலைக்காரி' நாடகத்தில் சாதியின் பெயரால் விரோதித்தும், காதல் மணத்திற்குத் தடை ஏற்படுத்தியும் இருக்கும் சமுதாய அமைப்பு முறையைச் சாடுகிறார். அந்நாடகத்தின் இறுதியில் சிக்கலை உருவாக்குவோரே மனம் திருந்தி, "பணத்திமிரும் ஜாதித் திமிரும் ஒழிய வேண்டும் என்றும், 'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்' என்றும் நாட்டு மக்களுக்கு உரைப்போம்."[65] என்றுரைப்பதிலிருந்து அண்ணாவின் கொள்கை முழக்கத்தைக் காணமுடிகின்றது.

அண்ணாவின் 'சிங்களச் சீமாட்டி' என்னும் படைப்பு சாதி உணர்வு எவ்வண்ணம் ஒரு படித்த இளைஞனின் வாழ்வைச் சீர்குலைத்து விடுகிறது என்பதனை விளக்குகிறது. தான் காதலித்த பெண்ணைச் சாதியின் பெயரைச் சொல்லித் திருமணம் செய்து கொள்ளாது தவிர்க்கும் சங்கரன், பின் தன் வாழ்வில் அதிகமான துன்பங்களைச் சந்தித்து விட்டு இறுதியில் மனம் திருந்துகின்றான். முடிவில் தனது பழைய காதலியே அவனுக்கு அடைக்கலம் தருகின்றாள். சாதி உணர்வால் படித்த இளைஞனின் வாழ்வில் ஏற்பட்ட விளைவுகளை இக்கதை சித்திரிக்கின்றது.

## சுதந்திரம் பற்றிய கொள்கை

'பார்வதி பி.ஏ.' புதினத்தில் ஆங்கிலேயரிடமிருந்து நாட்டை மீட்டு இந்தியர்களுக்குத் தருகின்றோம் எங்களுக்கு உதவி புரியுங்கள் என்று கேட்கின்றார் ஜப்பானியன். இதற்கு இக்கதையில் வரும் பார்த்திபனும் உடந்தையாகச் செயல்படுகின்றான். ஆனால் குமார் இதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கின்றான். இந்தச் செயலுக்குத் தன்னால் ஒத்துழைக்க முடியாது என்று சொல்லிவிடுகின்றான். இந்நேரத்தில் ஆண்டியாக வரும் பிரமநாயகம் சுதந்திரம் பற்றிய கருத்தைத் தெரிவிக்கின்றார். இக்கருத்து அண்ணாவின் சுதந்திரம் பற்றிய கொள்கையாகவே விளங்குகின்றது. பிரமநாயகத்தின் வாயசைவிலே அண்ணாவின் குரல் ஒலிக்கின்றது. "சுதந்திரம் மேன்மையானது. அதைப் பெறுவது நமது பிறப்புரிமை. அதைத் தர மறுப்பது கொடுமை...... சுதந்திரத்தைப் பெற முயலாத மக்கள் மனித உணர்ச்சியே இல்லாதவர்கள். சுதந்திரத்தைப் பெற சகல முயற்சிகள் எடுக்க வேண்டியதுதான். ஆனால் ...... சுதந்திரம் தானமாக வரக்கூடாது. அதைப் பெறவும், பெற்றதை நாம் பிறரிடம் இழந்து விடாதபடி, பாதுகாத்துக் கொள்ளும் திறமும் வேண்டும்"[66] என்ற உரையாடல் மூலம் ஆங்கிலேயரிடம் இருந்து விடுதலை பெற்று அதை ஜப்பான் போன்ற பிற நாடுகளிடம் இழந்து விடக் கூடாது என்பதை வலியுறுத்துகின்றார். மேலும் விடுதலை பெற்றவுடன் இந்த நாட்டை நிர்வகிக்கும் திறனைப் பெற வேண்டும் என்கிறார். சுதந்திரம் பற்றிய கொள்கைகளில் பெரியாரும் அண்ணாவும் இருவேறு கருத்தைக் கொண்டிருந்தனர் என்பதை அவர்கள் வரலாற்றின் மூலம் அறியமுடிகின்றது. இருவருக்கும் இந்தியா சுதந்திரம்

பெற வேண்டும் என்பதிலே எந்தவொரு கருத்து வேறுபாடும் இல்லை. ஆனால் ஆங்கிலேய அரசு இந்தியாவிற்கு அளித்த சுதந்திர காலம் என்பதிலே தான் வேறுபாடு கொண்டனர். இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு உகந்த காலம் இது இல்லை என்றும் ஆட்சி அதிகாரம் அனைவருக்கும் சமமாகப் போய்ச் சேர்வதற்கும் இந்திய மக்கள் இன்னும் விழிப்படையவும், பக்குவமடையவும் ஆங்கிலேயர்கள் இன்னும் சிறிதுகாலம் இங்கு இருக்க வேண்டும் என்பதே பெரியாரின் கருத்து. ஆனால் அண்ணா அவர்களோ ஆட்சி நடத்தவும், அதிகாரத்தை அனைவருக்கும் சமமாகப் பகிர்ந்தளிக்கவும், அதனை ஏற்றுக் கொள்ளும் அளவிற்கு இச்சமுதாயம் விழிப்புணர்வையும் பக்குவத்தையும் பெற வேண்டும் என்ற தனது சிந்தனையை இப்புதினத்தின் வாயிலாகத் தெளிவுபடுத்துகின்றார்.

## திருமணக் கொள்கை

அண்ணா தனது படைப்புகளில் கூறும் திருமணம் பற்றிய செய்திகளில் இருந்து அவரின் திருமணம் சார்ந்த கொள்கைகளை அறியமுடிகின்றது. திருமணம் என்பது பெரும்பாலும் இருமணங்களின் சங்கமமாக இருக்கவேண்டுமே தவிர நிர்பந்தத்தின் உறைவிடமாக இருக்கக் கூடாது. இதனை, "கலியாணம் என்பது, கட்டளையாக இருக்கக் கூடாது. நிர்ப்பந்தமாக இருத்தலாகாது. பரஸ்பர அன்பும், சம்மதமும் இருக்க வேண்டும். காதலர் கருத்து ஒருமித்து வாழ்வதே இன்பம்"[67] என வலியுறுத்துகிறார். வயோதிகத் திருமணம், பொருந்தாத் திருமணம் போன்றவற்றை எதிர்க்கின்றார். அதே சமயம் விதவை மறுமணம், சுயமரியாதைத் திருமணம் போன்றவற்றை ஆதரிக்கின்றார். இக்கொள்கைகள் யாவும் அண்ணா சார்ந்திருந்த இயக்கத்தினுடைய கொள்கைகளாக விளங்கியனவாகும். குறிப்பாக, பெரியார் இக்கொள்கைகளை வலியுறுத்திப் பிரச்சாரங்கள் செய்து வந்தார். பெரியாரின் கொள்கைகளை மக்களிடத்தில் கொண்டு செல்லும் பணியை அண்ணா படைப்புகள் வழி மேற்கொண்டார்.

வயோதிகத் திருமணம் செய்து கொள்வது அப்பெண்ணின் வாழ்வை இன்னலுக்கு இட்டுச் செல்லும் என்பதை அறிந்த அண்ணா தனது படைப்புகளில் இத்தகைய திருமணங்களை எதிர்க்கின்றார். "இளமங்கையைப் படுகிழவருக்கு மணமுடிப்பது தவறு என்ற கொள்கையை மறுப்பார் கிடையாது"[68] என 'இரக்கம் ஒரு பயணம்' என்ற நாடகத்தில் வரும் கருத்து அவரது கொள்கையைப் பறைசாற்றுவதாய் அமைந்துள்ளது. அவரின் பெரும்பாலான படைப்புகள் பொருந்தா மணத்தை எதிர்க்கும் விதமாகவே அமைந்துள்ளன. அதேபோல கலப்பு மணம் விதவையர் மறுமணம் போன்றவற்றை ஆதிரிக்கின்ற தன்மையை அவரது புனைகதைகளில் காணமுடிகின்றது.

பெரியார், தனது 75ஆம் வயதில் 26 வயது மணியம்மையைத் திருமணம் செய்து கொண்டார். இதை அண்ணா மிகக் கடுமையாக எதிர்த்தார். இச்செயல் பெரியாருடைய கொள்கைக்கும் தான் சார்ந்திருக்கும் இயக்கத்தின் கொள்கைக்கும், தனது கொள்கைக்கும் எதிரானது என்பதை வலியுறுத்திப் பெரியாரை விட்டு அண்ணா விலக வேண்டிய சூழலை ஏற்படுத்தியது. தனது கொள்கைகளுக்கு எதிராகத் தனது தலைவரே செயல்பட்டாலும் தவறு எனச் சுட்டிக்காண்பித்தார். கொள்கைக்காகத் தனது தலைவரையே இழக்கத் துணிந்த செயல் போற்றுதற்குரியதாகும். இன்று கட்சிகளுக்காகவும், பணத்திற்காகவும் கொள்கைகளை விடத்தயாராக இருக்கின்றவர்களுக்கு அண்ணா ஒரு பாடமாக அமைகின்றார்.

## மொழிக்கொள்கை

தமிழ் நிலத்தில் தனி ஆட்சி நடத்தி வெளிநாடுகளிலும் கால்கொண்டு இன்றளவும் தமிழர்களின் வாழ்க்கை வழியாகவும் இயல், இசை, கூத்து என்னும் முத்தமிழாக மானுடத்தின் பொதுச் சிந்தனையையும் உணர்வையும் வகைவகையாக விளக்கும் திறன் வாய்ந்த செம்மொழியாகவும், தொன்மை மிகு இலக்கியச் செல்வத்தாலும் இலக்கண நுட்பத்தாலும் வேறு எம்மொழிக்கும் மேலாகப் பண்பாட்டு மொழியாகவும் விளங்கும் தமிழ் சோழர், பாண்டியர் வீழ்ச்சிக்குப் பின் தேக்க நிலையை அடைந்தது.

உயர்தனிச் செம்மொழியான தமிழில் தொல்காப்பியர் காலத்திலிருந்தே பிறமொழிகளின் தாக்குதல் இருந்து வந்தது. எனினும் போசளர், முகம்மதியர், நாயக்கர், மராட்டியர், ஆங்கிலேயர் முதலான அயலவர்களின் படையெடுப்பால் தமிழ்மொழி தாழ்நிலையை அடைந்தது. ஆட்சியாளர்களின் ஆதரவின்மையால் தமிழ்மொழி வளர்ச்சி தடைப்பட்டதுடன், தன்னிலை திரிந்து கேடும் அடைந்தது. வல்லாண்மை செலுத்திய தமிழரல்லாத பிற ஆட்சியாளர்கள் அவர்தம் மொழியையும் கலையையும் பண்பாட்டையும் தமிழ் மக்களிடம் திணித்தனர்.

இருபதாம் நூற்றாண்டில் ஆரிய வல்லாண்மையின் வடிவமாகத் திகழ்ந்த வடமொழி தமிழில் மிகுதியும் கலப்பதை உணர்ந்த அண்ணா, மைய ஆட்சியாளர்களின் இந்தி மொழித் திணிப்பும் அத்தகையச் சீர்கேட்டை மீண்டும் தமிழுக்கு ஏற்படுத்திவிடும் எனக் கருதினார். தமிழைத் தூய்மைப்படுத்தி முதன்மைப்படுத்தும் நோக்கில் வடமொழி, இந்தி மொழித் திணிப்புகளை எதிர்த்தார். இவ்வாறு மொழி குறித்த அண்ணாவின் கருத்துகள் அவரது படைப்புகளில் காணப்படுகின்றன.

"மொழி என்பது மனிதனுக்கு இயற்கையாக அமைந்த ஒன்றன்று; மனிதன் தானே அமைத்துக் கொண்ட கருவியாகும். மனிதர்கள் இன்ன ஒலிக்கு அல்லது இன்ன ஒலித் தொகுதிக்கு இன்ன பொருள் என்று முடிவு செய்வதால் மொழி உண்டாயிற்று."[69]

"தட்பவெப்ப நிலைக்கு ஏற்ப மொழி உருவாக்கப்படுகிறது."[70] என்னும் கருத்துடையவர் அண்ணா. அவ்வாறு உருவாக்கப்பட்ட மொழியை வெறும் கருவியாகக் கருதாமல் "மொழியன்றோ ஓர் இனத்தின் விழி"[71] என்று எண்ணினார். மேலும் அவர் மொழியை "இனத்தின் பண்பையும் நாட்டின் வரலாற்றையும் எடுத்துக்காட்டி வீரம் ஊட்டவல்ல தாய்"[72] என்றும் போற்றுகிறார்.

மொழி மாந்தன் நினைப்பவற்றை மற்றவருக்கு எடுத்துக் கூறும் ஒரு தொடர்புக் கருவியே, அதற்கு மேல் மொழிக்கு முதன்மை கொடுப்பது பேதமை என்று பலர் எண்ணுகின்றனர். ஆனால் ஆழ்ந்து நோக்கின் தமிழர் போன்ற பல நூற்றாண்டுகளாகத் தாய்மொழிக் கல்வியறிவு கூட இல்லாமல் ஒடுங்கிக் கிடக்கும் மக்கள் சமூகத்திற்கு, மொழி ஒரு தொடர்புக் கருவி மட்டுமல்ல அதற்கும் மேலானது என்பதை உணர்ந்த அண்ணா மொழி அழியாமல் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற எண்ணம் கொண்டிருந்தார்.

ஒருவன் தன்னுடைய தாய்மொழியின் மீதுபற்றுக் கொள்வது இயற்கையாக அமைந்த ஒன்றாகும். யார் தடுத்தாலும், யார் மறுத்தாலும் தமிழ்மொழிப் பற்று குன்றி விடாது. இயற்கையாகத் தோன்றும் மொழிப்பற்றினை வளர்ப்பதற்குத் தூண்டுகோல் தேவைப்படும். அண்ணாவிற்கு அப்படிப்பட்ட தூண்டுகோல்கள் பச்சையப்பன் கல்லூரியிலும், அந்தக் கல்லூரியின் தமிழ்ப் பேராசியர்களாக இருந்த கந்தசாமி, மணிதிருநாவுக்கரசு ஆகியோராலும் கிடைத்தது.

"நமக்குக் கிடைத்திருக்கின்ற தாய்மொழியைப் பிற மொழிகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கின்ற நேரத்தில் பிற மொழியாளர்களெல்லாம் பார்த்து இவ்வளவு எழிலுள்ள மொழியா உங்களுடையது? இவ்வாறு ஏற்றம் படைத்த இலக்கியமா உங்களிடத்தில் உள்ளது? இவ்வளவு சிறந்த இலக்கணத்தையா நீங்கள் பெற்றிருக்கிறீர்கள்? ஈராயிரம் ஆண்டு காலமாகவா இந்த மொழி சிதையாமல் சீர்குலையாமல் இருந்து வருகிறது என்று ஆவலுடன் சிலரும் ஆயாசத்துடன் பலரும் பொறாமையோடு சிலரும் பொச்சரிப்பிலே பலரும் கேட்கத்தக்க நல்ல நிலையிலேதான் தமிழ்மொழி இருக்கின்றது."[73] என்று மற்றவர்கள் கூறுவதைக் கேட்கும் போது யாவருக்குமே மொழிப்பற்று ஏற்படத்தான் செய்யும். தமக்கு ஏற்பட்ட மொழிப்பற்று மற்றவரும் பெறும் வகையில் அண்ணா பல்வேறு முயற்சிகள் மேற்கொண்டார். முதலாவதாகத் தமிழின் மீது பிறமொழிகள் ஆதிக்கம் செலுத்தி அதன் தனித்தன்மையை அழிக்க முற்பட்டதைத் தடுக்க நினைத்தார். அதன் விளைவாகத் தனித்தமிழைக் காப்பாற்றவும் வடமொழிக் கலப்பில் தாக்குண்டு போன தமிழைக் கேட்கவும் முயன்றார்.

தமிழில் பிறமொழிச் சொற்கள் கலப்பது தேவையற்றது. அறிவியலும் தொழில்நுட்பமும் வளர்ந்து விட்ட இக்காலத்தில் பிறமொழிச் சொற்களைக் கலக்காமல் எழுதுவது இயலாத ஒன்று எனக் கூறுபவர்களுக்கு, "உலகில் உள்ள மொழிகளில் தமிழ்மொழி ஒன்றுதான் பிறமொழிச் சொற்களை எந்த ஏதுவைக் கொண்டும் இரவல் வாங்காமல் தனித்து இயங்கக் கூடியதென்பதையும் எந்தவிதமான புதுச்சொற்களுக்கும் சொற்களை ஆக்கிக்கொள்ளும் திறமை தமிழ்மொழி ஒன்றுக்கு மட்டுமே உண்டு."[74] என்பதையும் உறுதியாகக் கூறுகிறார்.

பிறமொழிச் சொற்களைத் தமிழில் கலந்துதான் எழுதவேண்டும். அப்போதுதான் தமிழ் வளர்ச்சியடையும் என்று கூறுபவர்களைத் தமிழ்ப்பகைவர்களாகக் கருதினார். தமிழுக்கு உண்மையான ஆபத்து அதன் பெயர் சொல்லி வாழ்பவரிடமிருந்துதான் வருகிறது என்றார். தமிழ் ஏற்றம் பெற வேண்டுமாயின், தேவையற்ற நிலையில் தமிழில் பிறமொழிச் சொற்களைக் கொண்டு வந்து கலக்காமல் எழுத வேண்டும். "ஒரு மொழி பிறமொழிச் சொற்களைக் கடன்வாங்கிக் கொள்வதால் அம்மொழி வளர்ச்சியுறுமே அன்றி ஒருபோதும் கெட்டுவிடாதென்றும் சொல்லப்படுகிறது. இதில் ஓரளவு உண்மை இல்லாமலும் இல்லை."[75] என்ற கருத்தை அண்ணா ஏற்றுக்கொள்கிறார். ஆனால், அதனுள் அவர் நில்லாமல் தமிழ் தனக்கு வேண்டிய எல்லாச் சொற்களையும் தன்னகத்தே கொண்டுள்ளது. கால மாறுதலுக்கு ஏற்பப் புதுப்புதுச் சொற்களை உருவாக்கிக் கொள்ளும் ஆற்றலும் திறமையும் தமிழுக்கு உண்டு என்று உறுதியாகத் தெரிவிக்கிறார்.

அண்ணா தனித்தமிழில் எழுத வேண்டும், பேச வேண்டும் என்பதை இலட்சியமாகக் கொண்டிருந்தாலும் அவராலேயே தனித்தமிழைப் பயன்படுத்த இயலாமல் போனது. அதற்குக் காரணம், மணிப்பிரவாள நடை வழக்கில் இருந்த காலத்தில் தாம் பயின்றதுதான் என அவரே விளக்கம் தந்துள்ளார். எல்லா நிலைகளிலும் தமிழே முதன்மை பெற்று வடமொழியின் வல்லாண்மையிலிருந்து தமிழ் விடுபட வேண்டும் என்று கருதிய அண்ணா ஆரியத்தின் காரணமாக விளங்கும் வடமொழியின் வாழிடமாகத் திகழும் கோவில்களில் தமிழ் நுழைய வேண்டும் என்று நினைத்தார். கோவில்களில் தமிழில் வழிபாடு நடைபெறுவதற்காகப் பாடுபட்டார்.

தமிழ்மொழியின் ஏற்றத்திற்குத் தம் வாழ்நாளின் பெரும்பகுதியைச் செலவிட்ட அண்ணா, தமிழ்மொழி மைய அரசின் ஆட்சிமொழியாக விளங்க வேண்டும் என்று விரும்பினார். "நம்முடைய ஊனோடும் உயிரோடும் இரண்டறக் கலந்துவிட்ட தமிழ்மொழிக்கு

உரிய ஏற்றத்தைத் தருவோம். தமிழ்மொழி அதற்குரிய இடத்தை அடையும்வரை ஓயமாட்டோம்”[76] என இறுதிவரை போராடினார்.

ஒரு மொழி உயர்நிலையை அடைய வேண்டுமானால் அது ஆட்சி மொழியாக வேண்டும். அப்பொழுதுதான் அம்மொழியும், அம்மொழி பேசும் மக்களும் வளமடைவர். "எந்த மொழியும் ஏற்றம் பெற்று வாழ வேண்டுமானால் மக்களின் மதிப்பைப் பெற்று வளர வேண்டுமானால், அம்மொழி அரசாங்க அலுவல் மொழியாகவும் அமைதல் வேண்டும். என்பது அரிச்சுவடி. தமிழ் இவ்வாறு வளம் பெற்றதாகத் திகழ்வதற்குக் காரணம், முன்னாளில் முடியுடை வேந்தர்களும் தமிழையே துரைத்தனமொழியாகக் கொண்டிருந்தனர். தமிழுக்கு ஆட்சியாளர்களின் மொழி என்ற உரிமை நிலை இருந்ததால்தான் உயர்நிலை அடைந்தது.”[77] தமிழ்மொழி மேலும் சிறப்படைய வேண்டுமானால் அது ஆட்சி மொழியாக வேண்டும் என்ற கருத்தினைக் கொண்டிருந்தார் அண்ணா.

சென்னை மாநிலச் சட்டமன்றத்தில் கல்வி அமைச்சராக இருந்த சி.சுப்பிரமணியம், இந்தி-ஆங்கிலம் ஆகிய இரண்டுமே ஆட்சிமொழிகளாக நீண்ட காலத்திற்கு நீடித்திருக்கும், இருமொழிகள் திட்டத்தை தமிழக அரசு மைய அரசுக்குத் தெரிவித்திருப்பதாக 1960 ஆம் ஆண்டு செப்டம்பர் 5 ஆம் நாள் அறிவித்தார். இந்த இருமொழிக் கொள்கையை அண்ணா ஏற்கமறுத்து ஆங்கிலம் மட்டுமே ஆட்சிமொழியாக நீடிக்க வேண்டும் என்றார். "வெளிநாட்டினருடன் இணைப்புக் கொள்ள எந்தமொழி பணியாற்றுகிறதோ அதே மொழி அதே இணைப்புப் பணியை இந்தியாவிற்குள்ளும் செய்யும் ஆற்றல் பெறுகிறது. இரு இணைப்பு மொழிகள் தேவை என்று கூறுவதை பெரிய பூனை செல்வதற்கு பெரிய வழி சுவரில் இருக்கும்போது, பூனைக்குட்டி செல்ல இன்னொரு வழிசெய்ய வேண்டும் என்பதற்கு ஒப்பானதாகும். பூனைக்கு என்ன வழியோ அது பூனைக்குட்டிக்கும் வழியாகும்.”[78] என்ற கருத்தின் மூலம் இரண்டு ஆட்சிமொழிக் கொள்கை தேவையற்றது என்பதை விளக்கினார் அண்ணா. இருந்தபோதிலும் இந்திய அரசின் ஆட்சிமொழியாக இந்தி அறிவிக்கப்பட்டுவிட்ட நிலையில் தமிழகத்தில் இந்தி நுழைவினைத் தடுக்கும் இடைக்கால ஏற்பாடாக இருமொழிக் கொள்கையை ஏற்கும் நிலைக்குத் தள்ளப்பட்டார்.

1967-ல் அண்ணா முதலமைச்சாரான பின்னர் தில்லியில் செய்தியாளர்களிடையே பேசுகையில், "ஆங்கிலம், இந்தி இரண்டுமே ஆட்சிமொழிகள் என்பதை உறுதிப்படுத்தும் வகையில் அரசியல் சட்டத்திருத்தம் கொணரப்பட வேண்டும் இது ஒன்றுதான் மொழிப்பிரச்சனைக்கு நிரந்தரமான தீர்வாக இருக்க முடியும். இதைவிடக் குறைந்த எதுவும் தென்னாட்டு மக்களுக்கு குறிப்பாகத் தமிழ்நாட்டு மக்களுக்கு மனநிறைவைத் தராது.”[79] என்று அறிவித்தார். இதன் ஒருபகுதியாகத் தான் அண்ணா முதல்வரானதும் தமிழகத்தில் இந்தியை நுழையவிடக் கூடாது என்ற நோக்கில் தமிழும் ஆங்கிலமும் தமிழகத்தின் ஆட்சிமொழியாக இருக்கும் என ஆணை பிறப்பித்தார்.

## சமத்துவக் கொள்கை

பெரியாரின் பாசறையில் பயின்ற அண்ணா பெரியாரின் கொள்கை மறவராக விளங்கினார். பெரியாரின் கொள்கைகளோடு பெரும்பான்மையும் ஒத்துப் போகும் அண்ணா சமத்துவ சமுதாயத்தைப் படைத்துக்காட்டப் பாடுபட்டார். நாட்டில் அனைவரும் சமம் என்ற நிலை உருவாக வேண்டும் என்பதை ஆணித்தரமாகத் தனது படைப்புகளில் படைத்துக் காட்டியவர் அண்ணா. ஏழை-பணக்காரன், முதலாளி-தொழிலாளி, ஆண்டான்-அடிமை போன்ற நிலைகள் இந்நாட்டை விட்டு அகலவேண்டும் என ஒவ்வொரு நாளும் எண்ணிச் செயல்பட்டவர். அதற்காகத் தனது எழுத்தையும், பேச்சையும் பயன்படுத்திக் கொண்டார்.

ஏழைகளின் உழைப்பை உறிஞ்சி அதன் மூலம் கொழுக்கும் அதிகார வர்க்கத்தினரின் ஆணவத்தை ஒடுக்க வேண்டும். உழைக்கும் வர்க்கத்தினரின் வறுமையை அறியமாட்டாதவராகவும், அறிந்தும் அந்த ஏழைகளுக்கு உதவ முன்வராதவராகவும் உள்ள செல்வந்தர்களைப் பார்த்து, "உழைப்பை உறிஞ்சுபவன்! போகிறான் பார்! அந்த ஜென்மங்களை நாம் கொழுக்க வைக்கிறோம்"[80] என உழைக்கும் மக்கள் புரிந்து கொள்ளும் நிலையை அடைய வேண்டும் என்ற தனது கனவை இதில் பிரதிபலிக்கின்றார்.

'தர்மம் தலை காக்கும்' என்னும் நாடகத்தில் செட்டியாரிடம் வேலை பார்க்கும் தொழிலாளி அந்தக் கடையில் இருந்து இல்லை என்று கேட்டவருக்கு ஒரு வெல்லத்தைத் தானமாகக் கொடுத்ததை அறிந்த செட்டியார் அவனை வேலையை விட்டு நீக்குகின்றார். அதே செட்டியாரிடம் ஆடிட்டர் வந்து சங்கீத சபாவுக்கு நிதி கேட்கும் பொழுது வேறு வழியில்லாமல் பணம் கொடுக்கும் செட்டியாரின் செயலைச் சான்றாக வைத்துக் கொண்டு அண்ணா, "தர்மம் கொடுக்கும் நிலையில் ஒருவனும், அதை வாங்கியே வாழ வேண்டிய வேதனையில் இன்னொருவனும் நாட்டில் நீடிக்கும் வரை வறுமை வீசுவது மட்டுமல்ல, வாழ்வே சோபிக்காது! ஏழையும் பணக்காரனும், இருப்பவனும்-இல்லாதவனும் இருந்து கொண்டுதான் இருப்பார்கள். 'தர்மம் தலைகாக்கும்' என்ற சொல் சுயநலமிகளின் சூதுக்குத்தான் பயன்படும்; மக்கள் வாழ்வுக்கல்ல!"[81] எனத் தானத்தைப் பற்றியும் வறுமையைப் பற்றியும் சிறப்பாகப் பதிவு செய்துள்ளார். செல்வச் செழிப்பு உருவாக மட்டுமல்ல, முதலாளிகளின் பிடியில் இருந்து தொழிலாளியை மீட்க வறுமை நிலை ஒழிய வேண்டும் என்ற அண்ணாவின் கொள்கையையும் இது பறைசாற்றுகின்றது.

'இருவர்' என்ற சிறுகதையில் இரத்தினம் என்ற கதாபாத்திரத்தின் வழி, சமுதாயத்தில் இருக்கும் ஏற்றத்தாழ்வுகளைச் சுட்டிக் காண்பிக்கின்றார் அண்ணா. "ஆண்டவனே, நீதானே யாவரையும் படைத்தாய், அதில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்று ஏன் படைத்தாய்? ஏழை பணக்காரன் என ஏன் உண்டாக்கினாய்? எல்லோரும் இன்புற்றிருக்கும் ஏற்ற வழியை, நீ ஏன் செய்யவில்லை."[82] என்கிறார். உலகைப் படைத்தவன் இறைவன் என்ற கருத்தில் அண்ணாவுக்கு உடன்பாடு இல்லை. ஆனால் தன்னுடைய படைப்புகளில் சமுதாயத்தில் இருக்கும் மாந்தர்களைப் படைக்கும் பொழுது அவர்களின் மனநிலையில் எழும் கேள்விகளையும் குற்றச்சாட்டுகளையும் எடுத்துக்காட்டும் விதமாகவே இவ்வாறான உரையாடல்களையும் கருத்துகளையும் படைப்புகளில் வைத்துள்ளார். இக்கருத்துகள் யாவும் சமுதாயத்தில் ஏழை பணக்காரன், உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்கின்ற வேற்றுமைகள் நீங்கி அனைவரும் ஒற்றுமையுடன் வாழ வேண்டும் என்ற அண்ணாவின் கொள்கையையே தாங்கி நிற்கின்றன.

ஏழைகள் தங்கள் வாழ்வுரிமைக்காகப் போராட முன்வரவேண்டும். இல்லையேல் பணக்காரர்களால் மேல்வர்க்கத்தினரின் அடக்குமுறைக்குப் பலியாகிவிடுவர் என்பதை, "ஏழை என்பதை மறந்து, மனிதன், ஆகவே நீதி நியாயத்துக்காகப் பாடுபட வேண்டியவன், அக்கிரமத்துக்கு அடிபணியாமலிருக்க வேண்டியவன் என்ற உணர்வு இருந்தால்"[83] எவரும் ஏழைகளைச் சீண்ட நினைக்க மாட்டார் என்ற அண்ணாவின் கருத்து ஏழைகளின் உரிமை தொடர்பான அவரின் பார்வையைப் புலப்படுத்துகின்றது.

ஏழை பணக்காரன் இருவருக்குமுள்ள வேறுபாட்டை அண்ணா தனது 'நாக்கிழந்தார்' சிறுகதையில், "பணமெனும் கோட்டைக்குள் பதுங்கிக் கொள்வான். பாட்டாளியை வாட்டி வதைப்பான், பஞ்சாங்கத்தைக் கூட்டாளியாகக் கொள்வான், ஆள்வோனுக்கு அடி பணிவான், இவன் பெயர் சீமான். எதிர்க்கத் தெரியாத கோழை; இங்கிதம் தெரியாத வாழை;

இவன் பெயர் ஏழை."[84] என எடுத்துரைக்கிறார். ஏழைக்கும் பணக்காரனுக்குமான மிக எளிய விளக்கத்தை இதில் அளிக்கின்றார்.

ஏழை பணக்காரன் என்று இரு சாதிகள் கூடாது என்பது அண்ணாவின் இலட்சியமாகும். எல்லோரும் மனித சாதி என்பது அண்ணாவின் வாதம். சாதி உருவாவதற்குப் பணமும் ஒரு காரணமாக அமைகிறது என்பதை எடுத்துக்காட்டி ஏழை என்றும், பணக்காரன் என்றும் இரண்டு சாதிகள் உருவாகிவிட்டதை எண்ணிச் சஞ்சலப்படுகிறார். பணமிருப்பவன் உலகையும் ஆளலாம் என்னும் நிலையையும், பணமில்லாதவன் தங்குவதற்குக் கூரையுமின்றித் தவிக்கும் நிலையையும் கண்டார். இதனை, 'ஓர் இரவு' நாடகத்தில் சொர்ணம் கருணாகரத் தேவரிடம், "ஏழை என்றும் பணக்காரனென்றும் இரண்டு ஜாதி இல்லாமல், ஒரே ஜாதியாக இருந்தால், எனக்கும் இந்த எண்ணம் உண்டாகாது."[85] என்று கூறும் கூற்று இவ்வுலகில் மனித சாதி என்கின்ற ஒரு சாதி மட்டும் தான் திகழ வேண்டும் என்னும் அண்ணாவின் கொள்கையை வலியுறுத்துகின்றது. பணக்கார சாதி ஏழை சாதியைத் துன்புறுத்தும் நிலை கண்டு ஏழையின் துயர் நீக்க ஏழையை ஒன்று சேர்க்கிறார். ஏழைகள் முன் பணக்கார சாதி பனிந்து விடும் நிலைகாணத் துடிக்கும் அண்ணா இதைப் பண்போவியமாகப் படைத்துள்ளார்.

"பெண் அடிமை என்பதற்கு உள்ள காரணங்கள் பலவற்றில் சொத்துரிமை இல்லாதது என்பது மிகவும் முக்கியக் காரணம் என்பது நமது அபிப்ராயம்."[86] எனப் பெண்கள் அடிமைப்படுத்தப்படுவதற்குரிய காரணங்களுள் ஒன்றாகச் சொத்துரிமைப் பிரச்சனையைக் கருதுகிறார் பெரியார். பெண்களுக்குச் சொத்தில் பங்கு கிடையாது என்று இருந்த நிலையில் மாற்றம் வேண்டும் என்ற பெரியாரின் கொள்கை வெளிப்பாட்டை அண்ணா இலக்கியமாகத் தந்துள்ளார். பெண்களுக்குச் சொத்துரிமை இல்லாததால் ஆண்களின் இறப்பிற்குப் பின்னரோ அல்லது ஆண்களால் ஏமாற்றப்பட்ட நிலையிலோ பெண்களின் வாழ்வு சீர்கேடு அடைகிறது. 'குமாஸ்தாவின் பெண்' என்னும் கதையில் காந்தாவின் மூலமும் 'என்வாழ்வு' என்னும் கதையில் கமலாவின் மூலமும் பெண்கள் உரிமையுடன் வாழச் சொத்துரிமை தேவை என்பதை வலியுறுத்துகின்றார்.

பெண் தன்னைச் சுற்றிப் படர்ந்திருக்கும் சமுதாயத் தளைகளைக் களைவதன் வாயிலாகவே மகிழ்ச்சியான வாழ்வை அமைத்துக் கொள்ள முடியும் என்பதைத் தம் படைப்புகளில் வலியுறுத்துகிறார் அண்ணா. பெண்களின் நிகழ்கால அவலங்களைக் காட்டுவதோடு மட்டுமல்லாமல் எதிர்கால வாழ்விற்கும் வழிகாட்டுவதன் வாயிலாக,

"ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக

வாழ்வம் இந்த நாட்டிலே."[87]

என்ற பாரதியின் அடிகளை உயிரோட்டம் நிறைந்ததாக மாற்றுவதற்கு அண்ணா முயன்றுள்ளமை தெரிகிறது. இதன் மூலம் பெண்களுக்குச் சொத்தில் மட்டுமல்லாது அனைத்திலும் சமஉரிமை தரப்பட வேண்டும் என்ற அண்ணாவின் கொள்கையைக் காணமுடிகின்றது.உழைப்பவனுக்கே நிலம் சொந்தமாக வேண்டும் என்ற கொள்கை 'செவ்வாழை' சிறுகதையின் வழி அறியமுடிகின்றது. உழைக்காதவர்கள் நிலத்தில் கால் வைக்காதவர்கள் அந்நிலத்தில் உரிமை கொண்டாடக் கூடாது என்பதையும் வலியுறுத்துகின்றார். இதே கருத்தை வலியுறுத்தும் விதமாக அமைந்த அண்ணாவின் படைப்புகள் 'அறுவடை' என்ற சிறுகதையும் 'கண்ணாயிரத்தின் உலகம்' என்கின்ற நாடகமும் ஆகும். இவற்றிலும் உழைப்பவனுக்கே நிலம் சொந்தமாக வேண்டும் என்ற அவரின் கொள்கை வெளிப்படுகின்றது. ஏழைகளை வாட்டி வதைக்கும் முதலாளித்துவத்தை

'ரொட்டித்துண்டு' சிறுகதையின் வாயிலாக எதிர்க்கிறார். இக்கதைகளில் ஏழைகளை முதலாளித்துவப் பிடியில் இருந்து விடுபட வைக்கும் புரட்சிக் கருத்துகள் நிரம்பியிருக்கின்றன. ஒவ்வொன்றும் அண்ணாவின் சமத்துவக் கொள்கைக்குச் சான்று பகர்கின்றன.

அண்ணா தன் பேச்சு, எழுத்து, பணி ஆகியவற்றின் வாயிலாகத் தமிழ் இலக்கிய உலகில், தமிழக அரசியல் தளத்தில், தமிழ்ச் சமுதாயக் களத்தில் புதிய மறுமலர்ச்சியை மீட்டுருவாக்கத்தைக் கொண்டுவர இறுதிவரை முயன்றவர்; உழைத்தவர். அவர் வாழ்ந்த நேற்றும், அவரைப் பற்றிப் பேசும் இன்றும், தொடர்ந்து பேச இருக்கின்ற நாளையும் மக்களால் மறக்க இயலாதவர். அந்தப் பிணைப்பை அப்துல் ரகுமான்,

"இறந்த காலத்தை

எழுத்தினால் எழுப்பினாய்;

நிகழ் காலத்தின்

நிசங்களைப் படம் பிடித்தாய்;

வருங்காலப் பூக்களுக்கு

வார்த்தை விதை தூவினாய்;

மூன்று வகைக் காலத்தை

முடிச்சிட்டு வைத்திருந்த

வினைத்தொகை நீ!"[88]

என்று உள்ள நெகிழ்வோடு போற்றுகிறார். கவிஞரின் இவ்வைர வரிகள் மூலம் அண்ணாவின் கொள்கைகளை அறிந்துகொள்ள முடிகின்றது. தனது இலக்கியங்களின் வாயிலாகத் தமிழர்களின் வாழ்வு எத்துணை சிறப்பு மிக்கதாய் இருந்தது என்பதையும், ஆரியர்களின் வரவால் தமிழினம், தமிழ் நாகரிகம், தமிழர் வாழ்வு எவ்வாறு சிதைக்கப்பட்டது என்ற இறந்த கால வரலாற்றையும் தனது எழுத்திலும் பேச்சிலும் எடுத்துரைத்தார். அதன்பின் நிகழ்காலத்தில், சமுதாயத்தில் நிகழ்ந்து கொண்டிருந்த சிக்கல்களையும் மக்கள் படும் அவலங்களையும் எடுத்துக்காட்டுகின்றார். தமிழர்களின் வாழ்வு மீட்கப்படவும், சமுதாயத்தில் நிலவும் அவலங்களைப் போக்கவும் எதிர்காலத்தில் மாற்றத்தை உருவாக்கும் சிந்தனைச் சிதறல்களைத் தனது இலக்கியத்தின் வாயிலாகவும் மேடைப்பேச்சின் வாயிலாகவும் எடுத்துரைக்கின்றார். அவ்வாறு தான் வலியுறுத்தி வந்த சமுதாய மாற்றங்களைத் தமிழக முதல்வராகப் பொறுப்பேற்றவுடன் செயல்படுத்திக்காட்டியுள்ளார். ஆகமொத்தம் அண்ணாவின் படைப்புகளை நோக்கும் பொழுது தமிழ்ச் சமுதாய முன்னேற்றமே அவரின் அடிப்படைக் கொள்கையாக விளங்கியுள்ளமை புலப்படுகின்றது.

## தொகுப்புரை

சமுதாயத்துறையிலே முன்னேற்றம், பொருளாதாரத் துறையிலே மறுமலர்ச்சி, சமதர்மக் குறிக்கோள், அரசியலில் வடநாட்டு வல்லாண்மையிலிருந்து விடுதலை போன்ற கொள்கைகளோடு செயல்பட்டு வந்த பெரியாரின் வழியில் அண்ணாவும் செயல்பட்டு வந்தார். பெரியாரின் கொள்கைகளை மக்களிடத்தில் கொண்டு சேர்க்க இலக்கியங்களைப் பயன்படுத்தினார்.

தனது கொள்கைகளையும் இயக்கத்தின் கொள்கைகளையும் எடுத்துச் சொல்வதே முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தாலும் அவரின் படைப்புகள் இலக்கியத் தரத்தில் மிகச் சிறந்து விளங்குவதைக் காணமுடிகின்றது. பெண் விடுதலையைத் தனது முக்கிய நோக்கமாகக் கொண்டு செயல்பட்டுள்ளார். பெண்களுக்கு இச்சமுதாயம் முழுச் சுதந்திரத்தை அளிக்க வேண்டும் என வலியுறுத்துகின்றார். பெண்களின் சுதந்திரத்தன்மை நாட்டை மேன்மையடையச் செய்யும் என்று அவர் நம்பினார்.

பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளான பொருந்தா மணம், கைம்மை நிலை, வரதட்சணைக் கொடுமை, விலைமகளிர் போன்றவற்றை இச்சமுதாயத்தில் இருந்து அகற்ற வேண்டும் என்ற கொள்கைகள் அவரது படைப்புகளில் காணப்படுகின்றது.

கடவுள் மறுப்புக் கொள்கையைக் கொண்டிருந்த அண்ணா இந்நாட்டில் வழிபடும் கடவுளர்களின் எண்ணிக்கைக் கண்டு வியப்புறுகிறார். அத்தனை கடவுளையும் வணங்கி ஏமாறும் மக்களை நினைத்து வருந்தும் அவர் மக்களின் இந்த அறியாமையைப் போக்க விழைகிறார். தெய்வம் உண்டு என்ற மக்களின் நம்பிக்கையை அகற்றுவது என்பது மிகப்பெரிய சவாலாக இருந்தது. அதனால் கண்டதையும் கும்பிடும் நிலையிலிருந்து முதலில் மக்களை மாற்ற முயலுகிறார். இதன் காரணமாக ஒரே கடவுள் என்ற கோட்பாட்டை வலியுறுத்துகின்றார்.

மூடப்பழக்கவழக்கங்களிலிருந்து மக்களை விடுபட வைக்கும் நோக்கில் சோதிடம், கோயில்களில் நடைபெறும் சடங்கு முறைகள், போலிச்சாமியார்கள், புராணக் கதைகள் போன்றவற்றைக் கடுமையாக எதிர்க்கின்றார். அதன்மூலம் மக்களுக்கு பகுத்தறிவுச் சிந்தனைகளை ஊட்டி மூடப்பழக்கத்திற்கு அடிமையாகாத நிலையை உருவாக்க விழைகின்றார்.

தமிழர்களின் சிறப்பு ஆரியர்களாலே தான் சீர்கெட்டுப்போனது என்பதையும், ஆரியர்களின் சூழ்ச்சியால் தமிழர்கள் தங்களது பெருமைகளை அறியமுடியாதவர்களாக இருக்கின்ற சூழலையும் விளக்குகிறார். தமிழர்கள் தங்கள் பெருமைகளை அறிதல், ஆரியர்களின் தன்மையை உணர்தல், தமிழினத்தைச் சிறப்பித்தல், ஆரியத்தை எதிர்த்தல் ஆகிய கருத்துகள் அண்ணாவின் படைப்புகளில் காணப்படுகின்றன.

ஏழை - பணக்காரன் என்னும் உயர்வு தாழ்வு நிலை, சாதி வேறுபாடு போன்றவை ஒழிந்து அனைவரும் ஒற்றுமையுடன் வாழ வேண்டும், உழைக்கின்றவனுக்கு ஒரு காணி நிலமாவது சொந்தமாக இருக்க வேண்டும் என்னும் கொள்கைகள் அண்ணாவின் படைப்புகளில் வெளிப்படுகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. பா.உதயக்குமார், அறிஞர் அண்ணாவின் சிறுகதைத்திறன், ப.54
2. க.நெடுஞ்செழியன் (ப.ஆ), பன்முக நோக்கில் பேரறிஞர் அண்ணா, ப.23
3. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.511
4. அரு.சின்னசாமி, அண்ணா ஒரு சரித்திரம், ப.51
5. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-4, ப.81
6. மேலது, தொகுதி-2, ப.266
7. மேலது, தொகுதி-1, ப.67
8. மேலது, தொகுதி-3, ப.113
9. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.181
10. க.நெடுஞ்செழியன் (ப.ஆ), பன்முக நோக்கில் பேரறிஞர் அண்ணா ப.24
11. மேலது, ப.24
12. வே.ஆனைமுத்து (ப.ஆ) பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், தொகுதி-1, ப.127
13. திருலோக சீத்தாராம் (மொ.பெ.ஆ), மனுதர்ம சாஸ்திரம், ப.262
14. திரு.வி.க., பெண்ணின் பெருமை, ப.202
15. அறிஞர் அண்ணா, வேலைக்காரி, ப.17
16. அறிஞர் அண்ணா, ரங்கோன் ராதா, ப.134
17. வே.ஆனைமுத்து (ப.ஆ) பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், தொகுதி-1, ப.139
18. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1, ப.109
19. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.45
20. மேலது, ப.167
21. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1, ப.129
22. அறிஞர் அண்ணா, என் வாழ்வு, பக்.190-191
23. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.43
24. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.24
25. அண்ணாவின் நாடகங்கள், புதிய மடாதிபதி, ப.299
26. அறிஞர் அண்ணா, ஓர் இரவு, ப.15

27. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.586

28. ஈ.வே.ராமசாமி, பிரகிருதிவாதம் அல்லது மெட்டீரியலிசம், பக்.10-12

29. அண்ணா, புராணமதங்கள், ப.14

30. அண்ணா, ஆரியமாயை, ப.23

31. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-2, ப.55

32. திராவிடநாடு, 6.8.1961

33. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, பக்.655-656

34. மேலது, பக்.221-222

35. மேலது, ப.337

36. மேலது, ப.541

37. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள் தொகுதி-2, ப.20

38. மேலது, ப.29

39. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.536

40. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.511

41. மேலது, ப.437

42. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, பக்.795-796

43. அ.சக்ரவர்த்தி, அண்ணாவின் விடுதலைச் சிந்தனைகள், ப.8

44. மேலது, ப.8

45. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.228

46. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, பக்.209-210

47. பேரறிஞர் அண்ணா, கலிங்கராணி, ப.161

48. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.154

49. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.273

50. மேலது, ப464

51. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.76

52. மேலது, ப.170

53. மேலது, ப.161

54. பேரறிஞர் அண்ணா, கலிங்கராணி, ப.30

55. http://www.kalachuvadu.com/issue-111/page72.asp

56. http://www.kalachuvadu.com/issue-111/page72.asp

57. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1, ப.276

58. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப81

59. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.283

60. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.568

61. மேலது, ப.545

62. மேலது, ப.617

63. அண்ணா, தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், முதற்பகுதி, பக்.224-225

64. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.36

65. அறிஞர் அண்ணா, வேலைக்காரி, ப.96

66. அறிஞர் அண்ணா, பார்வதி பி.ஏ., ப.157

67. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1, ப.194

68. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.128

69. ம.ப.பெரியசாமித்தூரன் (தொ.ஆ), தமிழ்க்கலைக்களஞ்சியம், தொகுதி எட்டு, ப.544

70. அண்ணாவின் மொழிக்கொள்கை, அ.இராமசாமி, ப.58

71. மேலது, ப.58

72. மேலது, ப.58

73. அண்ணா, அண்ணாவின் சட்டமன்ற சொற்பொழிவுகள், 3ஆம் பாகம், பக்.129-130

74. ச.வைத்தீசுவரன், அண்ணாவின் படைப்புகளில் திராவிட இயக்கக் கொள்கைகள், ப.63

75. திராவிடநாடு, 20.06.1948

76. கோ.இளங்கோ (தொ.ஆ), அண்ணாவும் அழகுத்தமிழும், ப.16

77. திராவிடநாடு, 21.05.1950

78. கோ.இளங்கோ (தொ.ஆ), அண்ணாவும் அழகுத்தமிழும், ப.37

79. நம்நாடு, 3.10.1967

80. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.319

81. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2, ப.236

82. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.640

83. அண்ணா பரிமளம் (தொ.ஆ), அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-4, ப.11

84. அண்ணா பரிமளம் (தொ.ஆ), பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி, ப.79

85. அறிஞர் அண்ணா, ஓர் இரவு, ப.57

86. பெரியார், பெண் ஏன் அடிமையானாள், ப.64

87. பாரதியார், விடுதலை, பாரதியார் கவிதைகள், ப.207

88. அப்துல் ரகுமான், விதைபோல விழுந்தவன், ப.14

# முடிவுரை

தமிழ்ச் சமுதாயத்தைப் புணரமைக்க வேண்டுமென்று முனைந்த எழுத்தாளர்களுள் முக்கிய இடத்தைப் பெறுபவர் அறிஞர் அண்ணா. இவர் மூடநம்பிக்கையின்பால் மூழ்கிக் கிடந்த சமுதாயத்தில் மறுமலர்ச்சியையும், பொருளாதார முரண்பாடுகளால் கொண்டிருக்கும் நியாய வாதங்களைக் களைந்து சமத்துவச் சிந்தனையையும் அரசியல் நெறிவழியே உருவாக்க முடியும் என்று முனைந்தவர். தம் பேச்சாலும் எழுத்தாலும் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனைகளை வழங்கியவர்.

எழுத்தாளன் என்பவன் காலத்தை எதிரொலிப்பவனாக மட்டுமல்லாமல், அவன் புதிய காலத்தை உருவாக்குபவனாகவும் தனக்குள் ஒரு வாழ்க்கைத் தத்துவத்தையும் சமுதாயக் கோட்பாட்டையும் கொண்டு தன் எழுத்தில் பிரதிபலிப்பவனாகவும் விளங்குதல் வேண்டும். அவ்வகையில் இலக்கியத்தின் இலக்கே சமுதாய மாற்றத்தை உருவாக்கித் தருவதுதான் என்று நம்பியவர் அறிஞர் அண்ணா. எனவே தான் அவர் சமுதாயப் போக்கையும் அரசியல் நிலைகளையும் சிறுகதை, புதினம், குறும்புதினம், நாடகம், கவிதை, கடிதம், கட்டுரை ஆகிய பல்வேறு இலக்கிய வடிவங்களைக் கொண்டு சித்திரித்துக் காட்டியுள்ளார். நீதிக்கட்சியின் இனஉணர்வு, தன்மான இயக்கத்தின் பகுத்தறிவு, திராவிடர் கழகத்தின் கோட்பாடுகள், திராவிட முன்னேற்றக் கழகத்தின் போக்குகள் ஆகியவற்றைத் தம் படைப்புகளில் பதிவு செய்துள்ளார். மறுமலர்ச்சிக் கண்ணோட்டம் நிறைந்த அறிஞர் அண்ணா சமயம், புராணம், கடவுள், சமயப் போலித்தன்மை, பெண்ணுரிமை, ஆரிய எதிர்ப்பு, மேல்தட்டு மக்களின் ஏய்ப்பு, முதலாளித்துவத்தின் சுரண்டல் தன்மை ஆகியவற்றைப் பாடுபொருளாகக் கொண்டு தன் படைப்புகளைப் படைத்துள்ளார். சமுதாயச் சூழலைக் கருவாக்கிய அண்ணா, தன் வாழ்க்கையின் நிகழ்வுகளையும் உருவகக் கதைகளாகப் படைத்துள்ளார்.

தமிழகத்தில் ஆரியர்களின் வரவுக்குப் பின்னர் தோன்றிய சாதி அமைப்பு முறை பிராமணர்களை உயர்ந்தவர்களாகவும் பிற இனத்தவரைத் தாழ்ந்தவராகவும் காட்டியது. இந்த ஏற்றத்தாழ்வு, சமுதாயத்தில் அனைத்துச் செயல்களிலும் காணப்பட்டது. பிராமணர்கள், வசதி படைத்த செல்வச் சீமான்கள் ஆகியோர் தங்களைக் காட்டிலும் தாழ்ந்த இனத்தைச் சார்ந்த மக்களை அடிமைகளாகவே நடத்தினர். செல்வச் சீமான்களாக இருந்தாலும் பிராமணர்கள் அவர்களையும் தாழ்த்தப்பட்டவர்களாகக் கருதினர். சாதி ஏற்றத்தாழ்வு தீண்டாமைக்கு வழிகோலியது. கல்வியைப் பெறுவதிலும் இவ்வேற்றுமைகள் காணப்பட்டன. பிராமணர்களும் செல்வந்தர்களும் மட்டுமே கல்வியைப் பெற முடிந்தது. அக்கல்வி நிலையங்களிலும் தீண்டாமை காணப்பட்டது. பெண்களின் நிலைமை சொல்லொணாத் துயரம் உடையதாக இருந்துள்ளது. வரதட்சணைக் கொடுமை, கைம்மை நிலை, குழந்தை மணம், பொருந்தா மணம், வயோதிகத் திருமணம், தேவதாசி முறை போன்ற பல பிரச்சினைகளையும் துன்பங்களையும் சந்திப்பவர்களாகப் பெண்கள் வாழ்ந்துள்ளனர். இப்படிப்பட்ட சூழலில் 1920-ல் தொடங்கி 1937 வரை ஏறத்தாழ 17 ஆண்டுகள் நடைபெற்ற நீதிக்கட்சியின் ஆட்சியில் சமூகநீதிக்கான ஆணைகள், சமஸ்கிருத ஆதிக்கத் தகர்ப்பு, பெண்களுக்கான உரிமைகள், பிரதிநிதித்துவம், கல்வித்துறையில் சீர்திருத்தங்கள் உள்ளிட்ட சமுதாய மாற்றங்களுக்கான திட்டங்கள் நடைமுறைப்படுத்தப்பட்டுள்ளன. திராவிட இயக்கத்தின் அடிப்படைக் கொள்கைகளும் இவைதான். ஆங்கிலேயரின் இரட்டையாட்சி முறையில் மிகக்குறைந்த சட்ட அதிகாரங்களை வைத்துக்கொண்டு நீதிக்கட்சி தனது திட்டங்களையும் சட்டங்களையும் நிறைவேற்றியுள்ளது. இது மிகப்பெரிய சாதனையாகக் கருத வேண்டும். நீதிக்கட்சிக்குப்

பிறகு ஆட்சிப் பொறுப்பை ஏற்ற காங்கிரசு இயக்கத்தின் குலக்கல்வித் திட்டம், இந்தி மொழித் திணிப்பு போன்ற செயல்பாடுகளால் போராட்டங்கள் தோன்றின. காங்கிரசில் இருந்து வெளியேறி சுயமரியாதை இயக்கம் கண்ட பெரியார், இராசாசிக்குப் பின் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற காமராசரின் செயல்பாடுகளால் ஈர்க்கப்பட்டு காமராசரை ஆதரித்தார். இந்நிலைப்பாடு அறிஞர் அண்ணா அவர்கள் 1967-ல் ஆட்சிப் பொறுப்பை ஏற்கும் வரையிலும் தொடர்ந்தது. நீதிக்கட்சியின் தலைமைப் பொறுப்பை ஏற்றுச் செயலாற்றிய பெரியார் நீதிக்கட்சியின் பெயரைத் திராவிடர் கழகம் எனப் பெயர் மாற்றம் செய்தார். பெரியாருக்கும் அண்ணாவுக்கும் பல நிலைகளில் தோன்றிய கருத்து வேறுபாடுகள் அண்ணாவைப் புதிய இயக்கம் காணச் செய்தன. இருவருக்கும் இடையே சில கருத்து வேறுபாடுகள் இருந்தாலும் தனிப்பட்ட விதத்தில் ஒருவர் மீது ஒருவர் அன்பு கொண்டிருந்தனர். அரசியல் இயக்கச் செயல்பாடுகளில் தன்னை இணைத்துக் கொண்டு செயல்பட்ட அண்ணா எழுத்துலகிலும் காலூன்றினார். இக்காலக்கட்டத்தில் வளர்ந்து வந்த இலக்கிய வகைகளான சிறுகதை, புதினம், நாடகம், கவிதை, கட்டுரை, கடிதம் போன்றவற்றின் மூலம் சமுதாய அவலங்கள், அரசியல் அவலங்கள் போன்றவற்றை மக்களுக்கு விளக்கினார். மக்களிடத்தில் எளிதாகக் கருத்துக்களைக் கொண்டு சேர்க்கும் வாயில்களாக இலக்கியங்கள் திகழ்ந்தன. ஆகவே அண்ணா தன் இயக்கக் கொள்கைகளையும் நாட்டில் நிகழும் நிகழ்வுகளையும் மக்களிடத்தில் கொண்டு சேர்க்கும் பணியை இவ்விலக்கியங்கள் வாயிலாகச் செய்துள்ளார்.

அண்ணா தம் காலச் சமுதாயத்தில் கண்மூடித்தனமாகப் பின்பற்றப்பட்டு வந்த பழக்கவழக்கங்களைச் சுட்டிக்காண்பித்து, அவற்றில் மக்களுக்குத் துன்பம் விளைவிக்கின்ற பழக்கவழக்கங்களை மாற்றத்திற்கு உட்படுத்தி, சமுதாய முன்னேற்றத்திற்கு எவை எவை தேவையோ அவற்றைச் சமுதாய மதிப்புகளாக மக்கள் பின்பற்ற வேண்டும் என அண்ணா தன் படைப்புகள் வழி வலியுறுத்தியுள்ளார். காதலைப் பற்றிக் கூறுமிடத்து விதவையின் காதல், தாசி குலப் பெண்களின் காதல் போன்றவை ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தியுள்ளார். கடவுள், சாதி போன்ற மதிப்புகளினால் உண்டாகும் பிரிவினைகள் நீங்க அவற்றைச் சமுதாயத்தில் இருந்து அகற்ற முனைந்துள்ளார். குடும்பம் உருவாகக் காரணமாக அமையும் திருமணம் எனும் மதிப்பு பெரும்பாலும் சாதியத் திருமணமாக விளங்கிற்று. இதனை அண்ணா தன் படைப்புகள் மூலம் கலப்புத் திருமணமாக மாற்ற விழைந்துள்ளார். அதேபோல் கணவனை இழந்த விதவைப் பெண்களுக்கு மறுவாழ்வு ஏற்படும்படியான விதவை மறுமணங்கள் நடைபெற வேண்டும் என விரும்பும் அறிஞர் அண்ணா மனதுக்கும், வயதுக்கும் பொருத்தமில்லாத திருமணங்களை எதிர்க்கின்றார். ஆடவர்கள் சமுதாயத்தில் தன் செல்வாக்கை வெளிப்படுத்தும் விதத்தில் பலதார முறை, வைப்பாட்டி முறை போன்றவற்றைப் பின்பற்றினார்கள். இவற்றைச் சமுதாயத்தில் இருந்து அறவே நீக்க வேண்டும் என்கிறார் அண்ணா. உயிரைக் காட்டிலும் ஒழுக்கமே பெரிதென வாழ்ந்த சமுதாயம் அவ்வொழுக்கங்களிலிருந்து விலகிச் செல்லாமல் நல்லொழுக்கப் பாதையில் பயணிக்க வேண்டும் என வலியுறுத்தும் அண்ணா, நேர்மை, கடமை, இரக்கம், கொடை போன்ற பண்புகள் மனிதரின் குணநலன்களில் ஒன்றாக இயல்பாகவே அமைய வேண்டும் என்கிறார். அதுவே சமுதாய வளர்ச்சிக்குத் துணையாக விளங்கும் எனவும் கருதுகிறார். இதன் அடிப்படையில் சமுதாய முன்னேற்றத்திற்கு ஊறு செய்கின்றவைகள் ஒழிந்து, ஊக்கம் அளிக்கின்ற செயல்கள் சமுதாய மதிப்புகளாகத் திகழ வேண்டும் என்ற அறிஞர் அண்ணாவின் எண்ணம் அவரின் புனைகதைகளில் வெளிப்பட்டுள்ளது. அண்ணாவின் புனைகதைகளில் காணப்படும் ஊழல், திருட்டு, சூதாட்டம், குடிப்பழக்கம், தீமை, கொடுமை, ஒழுக்கமின்மை, பாவம், விரோதம் போன்ற

எதிர்மதிப்புகள் எக்காலத்தும் எதிர்மதிப்புகளாகவே விளங்க வேண்டும் என்ற நோக்கம் அண்ணாவின் படைப்புகளில் காணப்படுகிறது.

சாதியப்பாகுபாடு, கடவுள், பொருந்தா மணம், பலதாரமுறை, வைப்பாட்டி முறை, தாசி முறை, குழந்தை மணம் போன்றவற்றை நேர் மதிப்புகளிலிருந்து எதிர் மதிப்புகளாக்க அண்ணா பாடுபட்டுள்ளார். எதிர்மதிப்புகளாக விளங்கிய காதல், கலப்பு மணம், கைம்பெண் திருமணம் போன்றவற்றை நேர் மதிப்புகளாக ஆக்க முனைந்துள்ளார்.

தனிமனிதச் சிக்கல்கள், சமயச் சிக்கல்கள், போலிச்சாமியார், சாதி, தீண்டாமை, அரசியல் மோசடி, முதலாளித்துவம், ஏழை பணக்காரன் வேறுபாடு, வறுமை, மூடநம்பிக்கை, ஆணாதிக்கம், பெண்ணியச் சிக்கல்களான வரதட்சணைக் கொடுமை, பொருந்தாமணம், விலைமகளிர் அவலம், கைம்பெண் கொடுமை, கல்விச் சிக்கல்கள், நீதித்துறையில் உள்ள சிக்கல்கள், ஏமாற்றுக்காரர்களின் ஏமாற்றுத்தனம், சூதாட்டம், போலி விளம்பரம், சோதிடம், முதியோரின் சிக்கலகள், உளவியல் சிக்கல்கள் போன்றவை அண்ணாவின் படைப்புகளில் காணப்படும் சமுதாயச் சிக்கல்களாகும். பாலுணர்வு என்பது ஆண் பெண் இருவருக்கும் உரியது. ஆணுக்கு விருப்பம் போல் வாழ அனுமதி வழங்கிப் பெண்ணை ஒரு வரையறைக்குள் நிறுத்த முயலும் சமுதாயத்தின் சட்டாம் பிள்ளைத்தனம் அர்த்தமற்றது என்பதை இவரது படைப்புகள் உணர்த்துகின்றன.

பெரியார் எடுத்துரைத்த, இன்றைய பெண்ணியச் சிந்தனையாளர்கள் வலியுறுத்துகின்ற பல சிந்தனைகளின் கற்பனை வடிவமாக அறிஞர் அண்ணாவின் படைப்புகள் காட்சியளிக்கின்றன. பெண் கற்பு நெறி தவற அவள் வாழும் சமுதாயச் சூழலே வழியமைத்துக் கொடுக்கும் உண்மையைத் தைரியத்துடன் அண்ணாவின் படைப்புகள் எடுத்துரைக்கின்றன. பெண்ணுக்குச் சமஉரிமை, பொருளாதாரச் சமநிலை, பெண்ணின் உணர்வுக்கு மதிப்பளித்தல், கற்பென்னும் நெறியை ஆண் பெண் இருபாலரும் ஒரு நெறி நின்று கட்டிக்காத்தல் இவையே அறநெறி சார்ந்த ஒழுக்க வாழ்வுக்கு வழி வகுக்கும் என்ற கருத்துக்களின் மூல வடிவமாக அண்ணாவின் கதைகள் திகழ்கின்றன. ஆவதும் பெண்ணாலே; அழிவதும் பெண்ணாலே என்ற கருத்து நிலைக்கு மாற்றாக, ஒரு பெண் ஒழுக்கமாய் வாழ்வதும், வழி தவறி வீழ்வதும் ஆண்களின் ஒழுக்க நடத்தையால் தீர்மானிக்கப்படுகிறது என்ற உண்மையை அழுத்தமாய் அவரின் படைப்புகள் கூறி நிற்கின்றன.

உழைப்பவர்க்குச் சொந்த நிலம் இல்லாத நிலையே வறுமை தோன்ற முக்கியக் காரணம் ஆகும். பண்ணையாளர்களின் பண்ணைகளில் அடிமைகளாய் வாழும் வாழ்க்கை முறைகளையும், அவர்களின் எண்ணங்களையும் பிரதிபலிப்பதாக அண்ணாவின் புனைகதைகள் விளங்குகின்றன. சாதியச் சமூகத்தால் கட்டுண்டு கிடந்த தமிழ்ச் சமுதாயத்தின் அவல நிலையைப் பிரதிபலிப்பதாகவும் அமைந்துள்ளன. பெண்ணியக் கொடுமைகளான வரதட்சணைக் கொடுமை, விதவையர் அவலம், பொருந்தா மணத்தால் ஏற்படும் துன்பம், விலைமகளிர் அல்லல் போன்றவை அறிஞர் அண்ணாவின் படைப்புகளில் மிகுதியாகக் காணப்படும் கருப்பொருள்களாகும். அவ்வாறே மூடநம்பிக்கைகளால் பாழ்பட்டுப் போன சமுதாயத்தைப் பற்றியும் அதிகமாகப் பகர்கின்றன. ஆணாதிக்கச் சமுதாயத்தில் பெண்களும், முதலாளித்துவத்தின் பிடியில் உழைப்பாளர்களும் சிக்கித் தவித்த நிலையையும், அடித்தட்டு மக்களின் பிரச்சினைகளையும் தாங்கி நிற்கின்ற கருவூலமாக அண்ணாவின் படைப்புகள் திகழ்கின்றன.

சமுதாயத் தடைகளும், கறைகளும் நீங்கப் பெற்ற சமுதாயத்தில் இயல்பாகவே சமுதாய மாற்றம் நிகழும். அச்சமுதாய மாற்றத்தால் கல்வித் தளங்களில் மாணவர், ஆசிரியர், தலைமையாசிரியர், நிர்வாக அதிகாரி ஆகியோரின் பண்பட்ட போக்குகள் நிகழும். பெண்களின் கல்வி, கற்பு, திருமணம் ஆகிய வாழ்க்கையரங்குகளில் நிறைவு பொலியும். பகுத்தறிவு செறிந்த வாழ்வியல் நெறிகளில் பொதுவுடைமை சிறக்கும். மகேசன் பணியினும் மக்கள் பணியே இன்றியமையாதது என்ற உணர்வு முகிழ்க்கும்; கண்மூடிப் பழக்கமெல்லாம் மண்மூடிப் போகும்; சாதியின் சதுராட்டம் மறையும்; சமத்துவ சமுதாயம் உதயமாகும். இத்தகைய சமுதாய மாற்றங்கள் நிகழப் பெற்றால் அந்நாடு சமுதாய முன்னேற்றம் அடையும் என்பது திண்ணம். மூவாயிரம் ஆண்டுகளாக வேரூன்றியுள்ள மூடநம்பிக்கைகள் அரசாங்க அளவில்கூடப் பரவிக் கிடக்கின்றன. இம்மூடநம்பிக்கைகளைப் பகுத்தறிவின் துணைகொண்டு போக்கிச் சமுதாய மாற்றம் காணல் வேண்டும். உலகம் வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கிறது. ஆனால் மனித உள்ளங்கள் இன்னும் பழைய மதிப்புகளில் சிக்கித் தவிக்கின்றன. பழமை வாய்ந்த மூடத்தனத்திலிருந்து மக்களை மீட்க தந்தை பெரியார் சமயம் தொடர்பான நம்பிக்கைகளை எதிர்த்து இந்துப் பண்பாடு, இந்து சமயம் ஆகியவற்றின் அடித்தளங்களையே தகர்க்கும் முயற்சியில் ஈடுபட்டார். தந்தை பெரியாரை அடியொற்றிய அண்ணா அவர்கள் பகுத்தறிவின் மூலம் சமுதாய மாற்றத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

பெண்கள் ஆணுக்கு நிகராக விளங்க வேண்டுமாயின் வரதட்சணை, கற்புக்கொள்கை, விதவைக் கொடுமை முதலான இடர்ப்பாடுகள் நீங்க வேண்டும். விதவை மறுமணம், காதல் மணம், கலப்பு மணம் முதலானவை வரவேற்கப்பட வேண்டும் என்ற கருத்தினை வலியுறுத்துகின்றார். இதன்கண் மனிதனை விலங்கிலிருந்து உயர்த்தும் முயற்சியைப் பகுத்தறிவு துணை கொண்டு செயல்படுத்த முனைந்து வெற்றியும் பெற்றுள்ளார்.

அண்ணா படைத்துக்காட்டும் சமுதாயத்தில் ஆண் - பெண், ஆண்டான் - அடிமை, மேல்-கீழ் என்ற வேற்றுமைகள் நீங்கப் பெற வேண்டும்; மக்கள் அனைவரும் கல்வி பெற்றுச் சிந்தனையறிவுடையவர்களாகத் திகழ வேண்டும்; சமுதாய அமைப்பில் உள்ள சாதி, சமய வேறுபாடுகள் முழுமையாக, மறைதல் வேண்டும்; இந்நிலைகள் மாற்றம் பெற்ற புதியதொரு சமுதாயத்தை உருவாக்க உதவும் கருத்துக்கள் காணப்படுகின்றன. இவற்றின் மூலம் அண்ணா, தம் புனைகதைகளில் ஏற்றத் தாழ்வுகளற்ற சமத்துவ சமுதாயத்தைப் படைத்துக் காட்டியுள்ளார். காலந்தோறும் மாறும் மக்களின் மனநிலைக்கு ஏற்ப கருத்துக்கள் ஊட்டப்பட வேண்டும் என உணர்ந்த அண்ணா தன் படைப்புகளின் முடிவில் வாசகர்கள் சமுதாயப் பிரச்சினையைத் தன்னுடன் எடுத்துச்செல்லும் வண்ணம் படைப்புகளை அமைத்துள்ளார்.

சமுதாயவியல், பொருளியல், அரசியல் அடிப்படையில் சமுதாயம் வாழ்கின்றது. சமுதாய அடிப்படையில் நோக்கும் போது மக்களில் பலர் பிறர் காட்டிய வழியில் சென்று இடர்ப்படுகின்றனர். இதற்குத் தனிமனிதரும் தலைமையும் சமுதாய அளவுகளில் நிகழும் தடைகளும் காரணிகளாகின்றன. இத்தடைகள் நீங்கப் பெற்று மக்கள் சக்தி பெருகும் போது மாற்றம் பெற்ற சமுதாயம் உருவாகும். அண்ணாவின் படைப்புகள் அனைத்தும் சமுதாய மாற்றத்தையே ஆதாரமாகக் கொண்டவை. அண்ணா போன்ற விழிப்புணர்வுவாதிகளின் விருப்புகள் இன்று நிறைவேறியுள்ளன என்பது உண்மை. சமுதாயம் பல மாற்றங்களோடு முன்னேறி வருகின்றது. இது இவரது படைப்புக்குக் கிட்டிய வெற்றியேயாகும்.

தமிழ்ச் சமுதாயத்தின் நிலை, நீதிக்கட்சியின் இனநலப் பணி, பெரியாரின் பகுத்தறிவுச் சிந்தனை, அவற்றைப் பரப்ப முயன்றமை, கல்வியால் பெற்ற உலகப் பார்வை

முதலியன இணைந்த அண்ணாவின் வாழ்க்கைப் பின்னணியின் தாக்கம் அவரது புனைகதைகளில் கதைக் கருக்களாகவும், பாத்திரப் படைப்புக்களாகவும் அமைந்துள்ளன.

அண்ணாவின் சமுதாயப் படைப்புகளை அதன் கருப்பொருள் அடிப்படையில், நில உடைமைக்காரர்களையும், சமய ஏய்ப்புக்காரர்களையும், முறையற்ற அரசியல்வாதிகளையும் அடையாளம் காட்டுபவை; மூடநம்பிக்கைகளைச் சாடுபவை; பகுத்தறிவு இயக்கம் சார்ந்த கருத்துக்களை எடுத்துரைப்பவை; பெண் அடிமைத்தனத்தைச் சாடுபவை; விதவைமணம், கலப்புமணம், காதல் மணம் ஆகிவற்றை ஆதரிப்பவை; சாதி, சமயப் பிளவுகளைக் கண்டிப்பவை எனப் பாகுபடுத்தலாம். இவற்றைக் கொண்டு நோக்கும் பொழுது சமுதாய முன்னேற்றம், பெண் உரிமை, இன உணர்வு, மொழிப்பற்று, பகுத்தறிவு, சமத்துவ சமுதாயம், புராண மறுப்பு போன்றவை அண்ணாவின் கொள்கைகளாக விளங்குவதைக் காணமுடிகின்றது.

ஒட்டு மொத்தமாக அறிஞர் அண்ணா என்ற அரசியல் தலைவரை ஒரு குறிப்பிட்ட கொள்கையை உடையவர் என்ற கூட்டிற்குள் அடைக்கமுடியாது. தனது கொள்கையைத் தன் இயக்கத்தின் வளர்ச்சிக்காக மாற்றிக் கொள்கிறார். இயக்கத்தின் கொள்கையை நாட்டின் நன்மைக்காகத் தியாகம் செய்கிறார். ஆனால் ஒரு படைப்பாளராகச் சமுதாயச் சீர்திருத்தம், சமுதாய முன்னேற்றம் என்ற மக்களுக்கான கொள்கையை அவர் எதற்காகவும் விட்டுக்கொடுக்கவில்லை. இவையே அண்ணாவைப் பிற படைப்பாளர்களிடம் இருந்து தனித்துவமிக்கவராகக் காட்டுகின்றன. எனினும் மேடைப்பேச்சாளர், அரசியல் தலைவர், முதல்வர் போன்ற புகழ் ஒளியில் படைப்பாற்றல் மிக்க எழுத்தாளர் அண்ணா என்னும் உண்மை அதிக வெளிச்சம் தராமல் அடங்கிப்போனது என்பதையும் மறுக்கமுடியாது. எதுவாக இருந்தாலும் அண்ணாவின் புனைகதைகள் அவர் காலச் சமுதாயத்தை மட்டுல்லாமல் அவருக்கு முன் விளங்கிய சமுதாயத்தையும் பிரதிபலிக்கும் காலக் கண்ணாடியாகத் திகழ்கின்றதோடு, மக்களின் அறியாமையைப் போக்கும் பகுத்தறிவுக் களஞ்சியமாகவும் விளங்குகின்றன என்பது இவ்வாய்வின் முடிபாகும்.

## மேலாய்வுக் களங்கள்

1. வரலாற்றியல் நோக்கில் அறிஞர் அண்ணாவின் படைப்புகள்.
2. சமுதாய உளவியல் நோக்கில் அறிஞர் அண்ணாவின் படைப்புகள்.
3. பெண்ணிய நோக்கில் அறிஞர் அண்ணாவின் படைப்புகள்.

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்


1. அண்ணா பரிமளம் (தொ.ஆ) **பேரறிஞர் அண்ணாவின் சிறுகதைத் தொகுதி,** பூம்புகார் பதிப்பகம், 63, பிரகாசம் சாலை (பிராட்வே), சென்னை, மு.ப:2001.

2. அண்ணா பரிமளம் (தொ.ஆ), **அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-1,** கலிங்கராணி பதிப்பகம், 71/21, கிழக்கு ஜோன்ஸ் சாலை, சைதாப்பேட்டை, சென்னை, மு.ப : 2008.

3. அண்ணா பரிமளம் (தொ.ஆ), **அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-2,** கலிங்கராணி பதிப்பகம், 71/21, கிழக்கு ஜோன்ஸ் சாலை, சைதாப்பேட்டை, சென்னை, மு.ப : 2008.

4. அண்ணா பரிமளம் (தொ.ஆ), **அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-3,** கலிங்கராணி பதிப்பகம், 71/21, கிழக்கு ஜோன்ஸ் சாலை, சைதாப்பேட்டை, சென்னை, மு.ப : 2008.

5. அண்ணா பரிமளம் (தொ.ஆ), **அண்ணாவின் குறும்புதினங்கள், தொகுதி-4,** கலிங்கராணி பதிப்பகம், 71/21, கிழக்கு ஜோன்ஸ் சாலை, சைதாப்பேட்டை, சென்னை, ம.ப : 2009.

6. அண்ணாதுரை.சி.என் **பேரறிஞர் அண்ணாவின் நாடகங்கள், தொகுதி-1,** பூம்புகார் பதிப்பகம், 63, பிரகாசம் சாலை (பிராட்வே), சென்னை, மு.ப: 1998.

7. அண்ணாதுரை.சி.என் **பேரறிஞர் அண்ணாவின் நாடகச் சித்திரங்கள், தொகுதி-2,** பூம்புகார் பதிப்பகம், 63, பிரகாசம் சாலை (பிராட்வே), சென்னை, இ.ப : 2000.

8. அண்ணாதுரை. சி.என் — **செவ்வாழை சிறுகதைத் தொகுதி,**
பூம்புகார் பதிப்பகம்,
63, பிரகாசம் சாலை (பிராட்வே),
சென்னை, நான்காம் பதிப்பு : 2012.

9. அறிஞர் அண்ணா — **வேலைக்காரி,**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கார் தெரு, பாரிமுனை,
சென்னை, ஏழாம் பதிப்பு : 2009.

10. அறிஞர் அண்ணா — **என் வாழ்வு,**
பூம்புகார் பதிப்பகம்,
63, பிரகாசம் சாலை (பிராட்வே),
சென்னை, மூ.ப : 2001.

11. அறிஞர் அண்ணா — **ரங்கோன் ராதா,**
பூம்புகார் பதிப்பகம்,
63, பிரகாசம் சாலை (பிராட்வே),
சென்னை, மு.ப : 2002.

12. அறிஞர் அண்ணா — **பார்வதி பி.ஏ.,**
பூம்புகார் பதிப்பகம்,
63, பிரகாசம் சாலை (பிராட்வே),
சென்னை, மு.ப : 2001.

13. அறிஞர் அண்ணா — **ஓர் இரவு,**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கார் தெரு, பாரிமுனை,
சென்னை, ஐந்தாம் பதிப்பு : 2007.

## துணைமைச் சான்றாதாரங்கள்

14. அண்ணா — **புராண மதங்கள்,**
தையல் வெளியீடு,
ஏ-4, முதல் தளம், 252, செல்லப்பா தெரு,
குயம்பேட்டை, சென்னை, மு.ப : 2008.

15. அண்ணா — **தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள்,**
பூம்புகார் பதிப்பகம்,
63, பிரகாசம் சாலை (பிராட்வே),
சென்னை, இ.ப : 1983.

16. அண்ணா — **அண்ணாவின் சட்டமன்ற சொற்பொழிவுகள் 3-ம் பாகம்,** பூம்புகார் பதிப்பகம், 63, பிரகாசம் சாலை (பிராட்வே), சென்னை, மு.ப : 1984.

17. அண்ணா பரிமளம் — **பேரறிஞர் அண்ணாவின் தன் வரலாறு,** பாரதி பதிப்பகம், உஸ்மான் சாலை, தியாகராய நகர், சென்னை, 1997,

18. அப்துல் ரகுமான் — **விதைபோல விழுந்தவன்,** நேஷனல் பப்ளிஷர்ஸ், 2, வடக்கு உஷ்மான் சாலை, தியாகராயர் நகர், சென்னை, ஏழாம் பதிப்பு : 2014.

19. அய்யாசாமி.அ — **அண்ணா நெடுங்கதைகளில் மகளிர் நிலை,** அன்னை முத்தமிழ்ப் பதிப்பகம், 96, பெரியார் சாலை, பாலவாக்கம், சென்னை, மு.ப : 2013.

20. அருணன் — **தமிழகத்தில் சமூக சீர்திருத்தம் இரு நூற்றாண்டு வரலாறு,** வசந்தம் வெளியீட்டகம், 69/24ஏ, அனுமார் கோவில் படித்துறை, சிம்மக்கல், மதுரை, ஐந்தாம் பதிப்பு : 2013.

21. அறிஞர் அண்ணா — **ஆரியமாயை,** திராவிட முன்னேற்றக் கழகம், அண்ணா அறிவாலயம், 367 & 369, அண்ணா சாலை, சென்னை, மு.ப : 2012.

22. ஆறுமுகம்.ப — **அறிஞர் அண்ணாவின் தமிழ்க்கொடை,** பூம்புகார் பதிப்பகம், 127, பிரகாசம் சாலை (பிராட்வே), சென்னை, இ.ப : 2009.

23. ஆறுமுகம்.ப — **அண்ணா ஓர் அறிவாலயம்,** பூம்புகார் பதிப்பகம், 127 (63), பிரகாசம் சாலை (பிராட்வே), சென்னை, இ.ப : 2010.

